KVC0021.

Vol XIV 1935-1936



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு.

பதினான்காம் சிலம்பு

இதழாசிரியர் கூட்டத்தலைவர்
மா. வே. நெல்லையப்ப பிள்ளை
அவர்கள். பி. ஏ.

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்.

யுவ-தாது ௵

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.
Tinnevelly and Madras

*All Rights Reserved]*

*[Price Rs. 3 8 0*

‘செந்தமிழ்ச் செல்வி’ இதழாசிரியர்

கூட்டத்து உறுப்பினர்கள்

**(Editorial Board Members)**

தலைவர்

1. திருவாளர் M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B.A ,
   *பென்ஷன் தாசில்தார், சிந்துபூந்துறை.*

—

2. ,, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L.,
   *தலைவர், மணிவாசக மன்றம், திருநெல்வேலி.*
3. ,, பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்,
   *தமிழாசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம்.*
4. ,, துடிசைக்கிழார் A. சிதம்பரனாரவர்கள்
   *ரிட்டையர்ட் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், கோவை.*
5. ,, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்,
   *தமிழாசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம்.*
6. ,, T. S. கந்தசாமி முதலியாரவர்கள், B.A.,
   *வழக்கறிஞர், சாத்தூர்.*
7. ,, ஆ. கார்மேகக் கோனாரவர்கள்,
   *தலைமைத் தமிழாசிரியர், அமெரிக்கன்கல்லூரி, மதுரை.*
8. ,, வித்வான் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள்,
   *தலைமைத் தமிழாசிரியர், செயிண்ட் சேவியர் காலேஜ், பாளையங்கோட்டை.*
9. ,, அ. மு. சரவண முதலியாரவர்கள்,
   *தமிழாசிரியர், லாலுகுடி.*
10. ,, காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளையவர்கள், B.A.,
    *தருமபுரவாதீன வித்துவான், சென்னை.*

# உள்ளுறை

[*இக் குறியிடப்பட்டவை இத் தொகுதியில் முடிவுபெறாது தொடர்வன.]

## படங்கள்




சிலம்பு-கச] யுவ—ஆவணி [பரல்-க

## திருவாசகம்

### கண்டபத்து

இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா வானந்த மணிகொடில்லை கண்டேனே.

பதவுரை:—

இறப்பதற்கே காரணமாய்—(இந்த அருமை மானுடப் பிறவி உலக வாழ்வில் பெறுதற்குரிய பேரின்பப் பெரும் பயனை அடையாமல்) வீணே சாதற்றன்மையை அடைதற்கு ஏற்ற வழியில்,

இந்திரியவயம்—மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளின் வயப்பட்டு,

மயங்கி—அதனல் உலக வாழ்வு இன்பமே நிலையுள்ளது என மயங்கி அறிந்து,

அந்தரம் திரிந்துபோய்—அம்மயக்க அறிவு பற்றிச் சிந்தை வேறுபாடுடையவனாய்ப் பலவகை உலக போகங்களைத் தேடுதலிலும், நுகர்தலிலும் உழன்று சென்று,

அருநரகில் வீழ்வேற்கு— முடிவில் கடத்தற்கு அரிய நிரயத்தில் வீழ்ந்து துன்பமடைய இருப்பவனாகிய எனக்கு,

சிந்தைதனைத் தெளிவித்து—(அவ்வாறு நான் இறந்து நிரயத் துன்பம் அடையாதபடி) எனது சிந்தையானது மயக்க அறிவினின்று நீங்கிச் சிவமே மெய்ப்பொருள் என்று உணரும் தெளிந்த அறிவை அடையும்படி செய்து,

சிவம் ஆக்கி—அவ்வாறு தெளிந்த எனது சிந்தையில் தன்னுடைய எண் குணங்களையும் பதிவித்து அதனை மலம் முற்றிலும் நீங்கிய சிவத் தன்மையை உடையதாகும்படி செய்து,

எனை ஆண்ட—ஆண்டவனாகிய தான் என்னைத் தனது அடிமையாகக் கொண்டு பேரின்பம் அருளிய,

அந்தம் இலா ஆனந்தம்—முடிவில்லாத பேரின்பப் பொருளாகிய சிவபெருமானை,

அணி கொள் தில்லை—அழகு பொருந்திய திருத்தில்லைத் தலத்தில்,

கண்டேன்—நான் (எனது அகக்கண்ணினாலே) நேரே பார்த்து உணர்ந்தேன்.

விளக்கவுரை :—

இறப்பதற்கே காரணமாய்—பேரின்பப்பேற்றையே நாடி சிவபெருமானது அருளைத் துணையாகக்கொண்டு ஒழுகாமல் உலகபோக நுகர்வுகளையே தேடி நுகர்ந்தொழுகுதலின் பயனாக உலக வாழ்வு முடிவில் கூற்றுவனால் உடலானது உயிரினின்றும் பிரிக்கப்பட்டு இறத்தலும், இறந்தபின் துறக்க நிரயங்களிற் சென்று பின், பிறத்தலும் திண்ணமாதலின் பிறப்பதற்கே காரணமாய் என்றார். ஏகாரம் தேற்றத்தைக் குறிக்கிறது.

இந்திரியவயம்—இந்திரியம்=பொறி; ஐந்து அறிவுக் கருவிகள் (ஞானேந்திரியங்கள்.) ஐம்பொறிகள், மனம் அகங்காரம் புத்தி சித்தம் ஆகிய அந்தக்கரணங்கள் வாயிலாகவும், அந்தக்கரணங்கள் ஆன்மாவினாலும் தொழிற்படுதலினால் இந்திரியவயப்படுதல் என்பது ஆன்மா மேல்நோக்காது கீழ்நோக்கி அந்தக்கரணங்கள் ஐம்பொறிகள் ஆகிய இவை உலகபோக நுகர்ச்சியைத் தேடிச் செல்லும் வழியே செல்லுதல் ஆகும்.

மயங்கி—மயக்க அறிவை உடையவனாகி. சிவத்தை அடையும் பேரின்பமே நிலையாயுள்ள மெய்இன்பம் என அறியும் அறிவுக்கு வேறாக உலகவாழ்வுச் சிற்றின்பமே நிலையான இன்பமெனத் திரிவுபட அறிதல் மயக்க அறிவு ஆகும்.

அந்தரமே திரிந்து—அந்தரம்=வேறுபாடு. அஃது இங்கே மயங்கி அறிதலாகிய வேறுபாடுடைய சிந்தையைக் குறிக்கிறது. பின்னே கூறப்படுகிற தெளிந்த சிந்தைக்கு எதிரிடையான சிந்தை. ‘வேறு சிந்தையிலாதவர் தீவினை—கூறுசெய்த குழகன்’’ என்று திருநாவுக்கரசு அடிகள் (134—4) தேவாரப் பாட்டிற் கூறியிருத்தல் காண்க. ஆன்மா இறந்தபின் முதலாவது நிரயம் சென்று பின் துறக்கம் புகுதல் மரபு ஆதலின், அந்தரம் என்ற சொல்லுக்கு வான் அல்லது வானுலகம் என்ற பொருள் கூறுதல் பொருந்தாது. திரிதல் என்பது எந்த உலக

போகம் நிலையான இன்பம் பயக்கும் என்று ஓயாது ஒன்றை விட்டொன்று பற்றி உழலுதல். அந்தரமே என்ற சொல்லின் கடையிலுள்ள 'ஏ' அசை.

அருநரகில் வீழ்வேற்கு—நிரயத்துன்பத்தினின்று நீங்குதல் அரியது ஆதலின் அரும் நரகு என்றார்.

வீழ்வேன்—உயர்திணை ஆண்பால் ஒருமைத் தன்மை எதிர்கால வினையாலணையும் பெயர். வீழ்வேற்கு—வீழ இருப்பவனாகிய எனக்கு.

சிந்தைதனைத் தெளிவித்து—சிந்தையைத் தெளிவித்தல் என்பது சிவபெருமான் ஆன்மாவுக்குத் தனது அருட்பேரொளியைக் காட்டி அதன்கண் அடங்கி நிற்கும்படி செய்தல். இதனால் ஆன்மாவுக்கு முற்றிலும் மலநீக்கம் உண்டாகிறது. இது சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறாய் நின்று காட்டும் உதவியாகும். ஆன்மாவினது தெளிந்த சிந்தையில் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்துநிற்கிற சிவம் ஆன்மாவினுடன் அத்துவிதமாய்க் கலந்து விளங்கி நிற்றலால் 'சிந்தைதனைத் தெளிவித்து' என்றார். "சிந்தையினுள்ளே தெளியவல்லார்க்குச் சிந்தையினுள்ளே சிவனிருந்தானே" என்று திருமூலர் 2853-வது திருமந்திரப் பாட்டிற் கூறியிருத்தல் காண்க.

சிவம் ஆக்கி—சிவம்=சிவத்தன்மை. சிவமாகுதல்=சிவத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை அடைதல். மலத்தன்மை முற்றிலும் நீங்கிய ஆன்மாவுக்குச்சிவபெருமான், முற்றுணர்வு முதலிய தன்னுடைய எண் குணங்களையும் ஆன்மாவினிடத்திற் பதியச் செய்தலால் சிவத்தன்மை உண்டாகிறது. ஆன்மா இவ்வாறு சிவத்தன்மை அடைந்த பின்பே சிவனுடைய பேரின்பம் நுகருதற்குத் தகுதியுடையதாகின்றது. இது சிவபெருமான் ஆன்மாவோடு உடனாய் நின்று விடயப்பொருளாகிய தன்னைக் காணச்செய்யும் காணும் உதவியா லுண்டாகிறது. இத்தகைய சிவத்தன்மையைச் சிவபெருமான் தமக்கு உண்டாக்கினன் என்பார், சிவமாக்கி என்றார்.

எனை ஆண்ட—'என்னை' என்ற சொல் 'எனை' எனக் குறுகியது. 'ஆளுதல்' என்பது ஆண்டவன் ஆகிய சிவபெருமான் அடிகளை அடிமையாகக்கொண்டு ஆண்டு பேரின்பம் அருளியதைக் குறிக்கிறது.

அந்தமிலா ஆனந்தம்—இறவாத பேரின்பம் (நிரதிசய இன்பம் Infinite Bliss) அளவில் அடங்காது நுகருந்தோறும் மேலும் மேலும் பெருகி வளர்தலால், 'அந்தமிலா ஆனந்தம்' என்றார். 'ஆனந்தம்' என்ற சொல் இங்கே ஆனந்த உருவன் ஆகிய சிவபெருமானைக் குறிக்கிறது.

கண்டேன்—காணுதல் என்பது இங்கே அகக்கண்ணாற் கண்டு தம்முள்ளே உணர்தலைக் குறிக்கிறது. 'ஏ' அசை.

இந்தப் பாட்டில் சிந்தை தெளிவித்தல், சிவமாக்கல், ஆண்டு (பேரின்ப மளித்தல்) ஆகிய மூன்றும் முறையே ஆன்மாவோடு பிரிவறக் கலந்துநிற்கும் சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறாய் நின்று காட்டும் உதவியையும், உடனாய் நின்று காணும் உதவியையும் ஒன்றாய் நின்று பேரின்ப மருளுதலையுங் குறிக்கின்றன. இம்மூன்றும் சிறப்பியல் அத்துவித நிலைகள். இம்மூன்று அத்துவித நிலைகளும் 'இன்றெனக்கருளி' என்ற முதற் குறிப்புப் பாட்டிலும் பல திருவாசகப் பாட்டுக்களிலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

---

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

### திருமுதுகுன்றம்—திருவிருக்குக் குறள்

**மணியார் முதுகுன்றைப்—பணிவாரவர் கண்டீர்**
**பிணியாயின கெட்டுத்—தணிவா ருலகிலே.**

பதவுரை:—

மணியார் முதுகுன்றை—அழகு நிறைந்துள்ள திருமுதுகுன்றம் என்ற திருப்பதியில் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கின்ற சிவபெருமானை,

பணிவார் அவர்—எவர் அன்போடு உள்ளம் நா மெய்களால் தொழுவாரோ அவர்,

உலகில்—இவ்வுலகிலே,

பிணியாயின கெட்டு—ஆணவம் வினை மாயை என்னும் மூன்று மலங்களின் கட்டிலிருந்து நீங்கி,

தணிவார்—பெருமிதமின்றி அடங்கிப் பிறரிடம் தாழ்மையாந் தன்மையுடன் ஒழுகுவார்.

விளக்கவுரை:—

மணியார் முதுகுன்றை—மணி=அழகு; ஆர்தல்=நிறைதல். முதுகுன்று என்பது திருமுதுகுன்றம் என்ற திருப்பதி. அஃது இக்காலத்தில் விருத்தாசலம் என்ற வடமொழிப் பெயரால் வழங்கப்படுகின்றது. முதுகுன்றம் என்ற சொல் இங்கே திருமுதுகுன்றத்தில் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கின்ற சிவபெருமானைக் குறிக்கிறது.

பணிவார் அவர்—பணிதல் என்ற தமிழ்ச்சொல் எவர்க்கும் தாழ்மையாந்தன்மையோடு மனம் நா மெய்களால் நலஞ்செய்து ஒழுகுதலைக் குறிக்கிறது. "எல்லார்க்கும் நன்றாம் பணிதல்" என்றார்

தெய்வப் புலமைத் திருவள்ளுவர். அஃது இங்கே அடிமையாகிய உயிர்கள் ஆண்டவனுகிய இறைவனை அவனது பெருமையையும் தங்களுடைய சிறுமையையும் நினைந்து தன்முனைப்பின்றி மனதால் நினைந்து உருகியும், நாவால் வாழ்த்தியும், மெய்யுறுப்புக்களால் எட்டுறுப்பு வணக்க முதலியன செய்தும் தொழுதலைக் குறிக்கிறது.

கண்டீர்—முன்னிலை அசைச்சொல்.

பிணியாயின—பிணி=கட்டு. பிணி என்பது உயிர்களைக் கட்டுவனவாயுள்ள ஆணவம் வினை மாயை என்னும் மும்மலங்கள். 'கெடுதல்' என்பது உயிர்களைக் கட்டுதலினின்றும் நீங்குதல்.

தணிவார்—'தணிதல்' என்பது தாழ்தல். பெருமிதமின்றி அடங்கியிருத்தல். மேலே கூறப்பட்ட பணிதலும் தணிதலும் ஒருபொருட் சொற்கள். இறைவனை வணங்கி மலப்பிணிப்பு நீங்குதல் பற்றி மக்கள் பிறரிடத்தில் பெருமிதமின்றி ஒழுகுவார் என்பது கருத்து.

இந்தப் பாட்டில் திருஞானசம்பந்த அடிகள் இறைவனை மெய்யன்போடு தொழுகிறவர்கள் மலப்பிணிப்பினின்றும் நீங்கி அவன் வீற்றிருக்கின்ற எல்லா உயிர்களிடத்தும் அன்புடன் ஒழுகி நலஞ்செய்து உலகில் வாழ்வார் என்ற உண்மையைக் கூறி அருளினர். ஏனையோர் அங்ஙனம் ஒழுகி வாழார் என்பது தானே போதரும். இந்த உண்மைக்கு இக்கால உலகிலுள்ள பெரும்பான்மையர் சான்றுகளாய் அமைந்துள்ளார்.

--மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

பொய்யாக மருள்கொண்டு ஆடும் பொல்லாத மாந்தர்களே உயிர்ப் பலியிடவேண்டும் என்று சொல்லிப் பழிக்குந் தீவினைக்கும் ஆளாகி இவ்வுலகத்திலும் மேலுலகத்திலுஞ் சிவபெருமானல் ஒறுக்கப்படுகின்றார்கள்.

—மறைமலையடிகள்.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும்

(சிலம்பு கக: பரல் கஉ: ௩௪௯-ம் பக்கத் தொடர்ச்சி)

### கங்கைப்படலத்தில்.

நகர் நீங்கிக் கங்கையாற்றங்கரை வந்துற்ற கம்பராம னுக்கு ஆங்குவதிந்த முனிவர்கள்

காயுங் கானிற் கிழங்குங் கனிகளும்
தூய தேடிக் கொணர்ந்தனர் தோன்றனீ
ஆய கங்கை யரும்புன லாடினை
தீயை யோம்பினை செய்யமு தென்றனர்.—15.

ஆனால் கொடுவந்து கொடுத்தோர் முனிவரர்களாகை யினாலே, அவர்கள் உண்ணும் மரவகையுணவை யுதவினரென இதனால் உணரத்தக்கதேயன்றி ஊனை உதவியிருந்தால் கம்பராமன் வேண்டாமென்றிருப்பானோ என்பதற்குச் சான் றாகாதெனச் சொல்ல இடமுண்டு. ஆனால் அதே கங்கைப் படலத்தில் குகனெனும் பெயர் நாவாயான் மீன்காணிக்கை யுடன் வந்து கம்பராமனைக் கண்டபோது.

இருத்தியீண் டென்னலோடு மிருந்தில னெல்லைநீத்த
அருத்தியன் றேனுமீனு மமுதினுக் கமைவதாகத்
திருத்தினென் கொணர்ந்தேனென்கொல் திருவுள
மென்னவீரன்
விருத்தமா தவரைநோக்கி முறுவலன் விளம்ப லுற்றான். 41.

என்னென்று விளம்பலுற்றான்?

அரியதா முவப்பவுள்ளத் தன்பினா லமைந்தகாதல்
தெரிதரக் கொணர்ந்த வென்றால் அமிழ்தினுஞ்
சீர்த்தவன்றே
பரிவினிற் றழீஇயவென்னிற் பவித்திர மெம்மனோர்க்கும்
உரியன வினிதினாமு முண்டனெமன்றோ வென்றான். 42

அதாவது மீனூனை வாயாலுண்ணாமல் உள்ளத்தாலுண் டானென்ப.

இதனாலும் கூடக் கம்பராமன் ஊனுணாதவனென்று கோடற்குப் போதாது, முனிவர்கள் முன்னிலையில் ஊனுண் ணக் கூசினானென்று எண்ணற்கிடனுண்டு.

ஆனல் குகப்படலத்தில் பிறன் கூற்ருக, என்னை? பரதன் கூற்ருக,

இயன்றதென் பொருட்டினுலிவ் விடருனக் கென்றபோழ்தும்
அயின்றனை கிழங்குங்காயும் அமிர்தென வரியபுல்லில்
துயின்றனை யெனவும்ஆவி துறந்திலென் சுடருங் காசு
குயின்றுயர் மகுடஞ்சூடும் செல்வமுங் கொள்வன்யானே.—40.

கம்பராமன் கிழங்குங்காயும் உண்டு வதிந்ததாக இருக்கிறது. ஆனல் பரதனுக்குக் கேள்வியாற் றெரிந்ததே யன்றி நேராகத் தெரிந்த தன்ருகலின் கேள்விச் சான்று சான்ருகா (Hearsay evidence is no evidence) என்று கொள்ளற் கிடனுண்டு.

இன்னும் அணுக்கத்தனை இலக்குவன் கூற்றைக் கேட்போம்.

கிட்கிந்தைப்படலத்தில் வருவலென்றுறுதிகூறிச்சென்று மதுவுண்டு வெறிகொண்டு காலந்தாழ்த்த சுக்கிரீவனை யழைக்கச் சீற்ற மேற்கொண்டு சென்றணைந்த இலக்குவனுக்குத் தன் னினைவு வரப்பெற்ற சுக்கிரீவன் தான் நுகர்வகை யுணவு இலக்குவனுக்கு அளித்தலும், இலக்குவன்

"பச்சிலை கிழங்கு காய்பா னுங்கிய
மிச்சிலே நுகர்வது வேறுதா னென்று
நச்சிலே னச்சினே னுயினு யுண்ட
எச்சிலே யதுவிதற் கேது வில்லையால்"

என்றும்

"அன்றியு மொன்றுள தைய யானினிச்
சென்றனென் கொணர்ந்திடை திருத்தி னலது
நன்றுணக் கோமக னுகர்வ தாதலால்
இன்றுறை தாழ்த்தலு மினிதன் ருமென்ருன்" 115

இக்கூற்றுகளில் மரவகையுணவே இராம இலக்குவர் காட்டிலருந்தின ரென்பதை மேலும் மேலும் வற்புறுத்தப் பட்டிருக்கிறது.

## பண்டை ஆரிய ஒழுக்கம் ஊன்றின்பதேன்பது.

8. உண்மையில், வால்மீகி காலத்தில் வடநாட்டில் ஆரிய வகுப்பின் நால்வகைச் சாதியாரும், ஊன்தின்னும் வழக்கம் மாத்திரமல்ல, தென்புலத்தார் (பிதுரர்கள்) களுக்கும் ஊன்வைத்துப் படைக்கும் வழக்கத்தினர் என்பதும், ப்ராஹ்மணர் முதலாயினேர் இன்னின்ன ஊன் தின்னலாம், இன்னின்ன தின்னலாகாதென்பதும், தென்புலத்தாருக்கு

எந்தெந்த ஊன் அவி கொடுத்தால் எத்தனை யெத்தனை ஆண்டுகளுக்கு அவர்களுக்கு ஆறுதலுண்டு என்பதும்போன்ற விவரங்கள் மனுஸ்ம்ருதி முதலிய நூல்களில் சொல்லியிருப்பது நுங்கட்குத் தெரியுமன்றோ? அன்றியும் இராமன் ப்ராஹ்மணனுமன்று. அக்காலத்திலும் இக்காலத்திலும் பிற்காலத்திலும் ஊன் தின்ற தின்கிற தின்னும் க்ஷத்திரியனன்றோ ?

வெள்ளக்கணக்கான அரக்கர் படைகளைக் கொல்லப் போன இராம இலக்குவர் மரவகையுணவு உண்டனரென்று கம்பன் புளுகுவானேன்? ஓரிடத்திற் புளுகியதா? அல்ல.

"பொய் சொல்லின் பொருந்தச் சொல்" என்னும் வழக்கிற்கு ஏற்க, யான் முன் எடுத்துக் காட்டியவாறு புளுகத் துவக்கிய கம்பன் தன் இராமாயண நெட்டிலும் பொருந்தப் புளுகிக் கொண்டு போகின்றனனா? அல்லது

"மூவரானவர் தம்முளு முந்திய நாவினருரையின்படி" சொல்லிப்போகின்றனனா, நீங்களே பாருங்கள்.

இராமன் ஊன்றின்பதில் ஊக்கமுடையவனேன்பது வால்மீகி வாய்மை மொழி.

9. வால்மீகியோ உள்ளதை உள்ளபடியும் உணர்ந்ததை உணர்ந்தபடியும் கூறும் வாய்மையுடையவர். அதனாற்றான் இயற்கை நவிற்சி அவர் நூலிற் பொலிகின்றது.

அயோத்யாகாண்டத்தில் 20-வது சர்க்கத்தில் காட்டிற்குப் போம்படிக் கைகேசியால் ஏவப்பட்ட இராமன், நேர்ந்ததின்னும் உணராதிருந்த தன் அன்னை கோசலையிடம் சென்று,

"*மக்களில்லாக் காட்டில் பதினான்கு ஆண்டுகள் வதியப் போகின்றேன், துறவியைப்போல ஊனைவிட்டுத் தேன் வேர் கனிகளால் உயிர்வகித்திருக்க வேண்டியே பேரரையர் (தசரதர்) இளவரசுப்பட்டத்தைப் பரதனுக்குக் கொடுத்து விட்டார்"

என்று உற்றதுணர்த்தினன்.

இக்கூற்றிலும், இளவரசுப்பட்டம் போனதை முதல் சொல்லாமல், காட்டில் வதிய வேண்டியதையும் ஊன்றின்பது போனதென்பதையும் முன்னர் மொழிந்தபடியால் இராமனுக்கு இளவரசுப்பட்டம் போனதைவிட ஊன்றின்பது போனது பெரிதாக உறுத்திற்றென்று வெறுங்குறும்பினர்

* அயோத்தியாகாண்டம் 52-வது சர்க்கம்; சுலோகம் 102

பழிப்பர். அஃதன்று; தனக்குற்ற இடுக்கணைத் தாய்க் குணர்த்தவந்த இராமன், இடி வீழ்த்துவதுபோல எடுத்த எடுப்பில் இளவரசுப்பட்டம்போயிற்றென்றால், அத்தாய் எவ்வளவு வருந்துவள்! அவ்வாறு திடுக்கென்று வருத்தம் தோன்றாதபடி, காட்டிற்குத் தான் போவதை முன்சொல்லிக் காட்டில் மக்களில்லாத் தன்மையைப் பின்னுணர்த்தி, துறவிகள்போல ஊன்மறுக்க வேண்டியதை அதன்பின்னுணர்த்தி, வேறு யார்க்குமல்ல அடுத்த மகனாகிய பரதனுக்கென்று துவக்கி, மகாராசா என்று தொடர்ந்து, எதுபற்றி யென்றெழும் ஐயப்பாட்டை யுண்டாக்கி, அதன்பின் இளவரசுப்பட்டத்தைப் பற்றியென்றுணர்த்தி, இறுதியில் கொடுத்து விட்டார் என்று கோசலை மனதை வருத்த மேற்கும் வண்ணம் சிறுகச் சிறுகப் பண்படுத்தி மொழிந்த அருமை யழகு வால்மீகியின் கவித்திறத்தையும் வாய்மையையும் காட்டும்.

ஆனால், ஊன்றின்பதை ஒழிக்க வேண்டியதாகக் கோசலை மனதைப் பண்படுத்த வேண்டிக் கூறியதை யன்றி உள்ளபடி ஊன்றின்பதை இராமன் முதலிய மூவர் நீக்கினரென்று வால்மீகி புளுகினாரல்லர்.

நாட்டிற் கிடைக்கும் ஊனைவிடக் காட்டிற் கிடைக்கும் ஊன்றான் பல்வேறு வகையதென்றும், நோயற்றதென்றும், சுவையுற்றதென்றும், தரையிற் படர்ந்து கிடக்கும் உப்பும், உதிர்ந்து கிடக்கும் சருகும், நெருப்புண்டாக்கக் காடெங்கும் கிடைக்கும் சக்கிமுக்கிக் கல்லும் கொண்டு, அடுவதற்குப் பாண்டங்களும் வேண்டாமல், இப்பெருங் குழுவிற் குவங் துறைவோர் நாளொன்றிற்குச் செலுத்த வேண்டிய சிறு தொகை ஒரு ரூபாவும் வேண்டாமல், நெருப்பில் வாட்டி வயிறாறத் தின்னக்கூடியதென்றும் வேடராயிருந்து நன் குணர்ந்து பின் மகரிஷியான வால்மீகிக்குத் தெரியாததல்ல.

வெள்ளக்கணக்கான அரக்கர்களைக் கொல்லச் செல்லு மிவர்கள் ஆட்டு மாட்டுத் தினி தின்று சென்று ஆற்றக் கூடியது மல்லவென்றும் வால்மீகி யுணராதாரல்லர். நாடு விட்டுக் காடு புகுந்த முதனாள் உணவிற்கு இராமன் முதலிய மூவர் என்ன செய்தார்களென்பதுபற்றி வால்மீகி வாய்மை புகல்கின்றார்:—

"*அவர்கள் அவ்விடத்தில் பன்றி, கலைமான், புள்ளிமான், கருப்புக் கலைமான் ஆகிய நான்கு பெரிய விலங்குகளைக் கொன்று, சிறந்த அவைகளை எடுத்துக்கொண்டு உண்ண

* அயோத்தியா காண்டம் 52-வது சர்க்கம்: ஸ்லோகம் 102

விரும்பியவர்களாய் விரைவான காலத்தில், காட்டரசாய் நிற்கும் ஆலமரத்தினடிக்குச் சென்றார்கள்."

அவ்வாறு கூறுவதிலும் வால்மீகி ஊன்றிற முணர்ந்தவராகையினாலே, மிகுதியாக வபை (வயிற்றடிக்கொழுப்பு) யை உடையதும் வாட்டிய ஊன் வெண்ணெ போன்று வாயிற் கரையும் மென்மையுடையதுமாகிய பன்றியை (வராகம்) முதற் கண்ணும், அடுத்தபடியான கலைமானை (ருஷ்யம்) யதன்பின் னும், தசையை உலர வைத்துப் பின்னுண்ணக் கூடியதும் தாழ்வாய்த் தசைநார்களுக்குப் பயிற்சி கொடுப்பதுமாகிய புள்ளிமான் (ப்ருஷதம்) கருப்புக் கலைமான் (மஹாருரும்)களை அதன் பின்னும் முறையே வைத்துக் கூறினாரென்க. ஆனால் அவ்வழகு நுங்கட்குத் தெரியவே தெரியாதென்பது சொல்ல வேண்டுமோ?

அன்றியும் உள்ளுறைப் பொருள் அழகும் வைத்துக் கூறினாரென்னலாம். எற்றெனின், தன் முன் அவதாரமாகிய வராகத்தைச் சுட்டி இராமனையும், கண்ணழகிய கலைமானைச் சுட்டிச் சீதையையும், புள்ளிமானைச்சுட்டி மயக்கவந்த மாரீசனையும், கருப்புக் கலைமானைச் சுட்டிக் கரிய இராவணனையும் குறித்தாரென்று கொள்ளவும் அமையும்.

கம்பன் புளுகியது முழுக்குற்றமானால் அதிற்பாதியாவது உங்கள் சைவபரம்பரைக்குண்டு. அதாவது, அவன் புளுக ஊக்கிய குற்றம் (Abetting) உங்களுடையது; ஏனெனில், கம்பன் காலத்தில் மிதந்து பரவியிருந்த நுங்கள் பரம்பரையார் கம்பன் நூலைப் படித்து வாய் புண்ணாகாதபடி, கேட்டுச் செவி புண்ணாகாதபடி, நினைத்து மனம் புண்ணாகாதபடி இராமனையே கம்பன் சைவனாகப் புளுகியிருத்தல் கூடும்.

உங்களுக்கினிக்கப் பொய்யுரை கம்பன் புகன்றதை,

"பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்று "போற்றவும் போற்றுவீர்"—அதைக் குற்ற மென் றெடுத் தியம்பும் என்னைத் "தூற்றவும் தூற்றுவீர்"

ஆனாலும் உங்கள் இறைவன் சிற்றத்திற்கும் அஞ்சாத தமிழர் வழித்தோன்றிய யான் உங்கள் சிற்றத்திற்கும் அஞ்சாது கம்பன் புளுகியது "குற்றம் குற்றமே" என்பேன்.

அவன் பொய்மை நன்மை பயப்பதற்கு மாறாக அளவற்ற தீமை பயந்ததென்று கண்கூடப்படுத்த வேண்டிய சான்றுகளுண்டு.

கம்பராமன் அசாத்திய குண ராமனுகக் கம்பனுல் புளுகப் பெற்றுனேன்பது.

10. ஊன்திண்டி ராமனேக் கம்பன் சைவ ராமனுக்கியது மாத்திரமா? வால்மீகி வாய்மை தவருது வரைந்த இயற்கைக் குணங்களுடைத் தாயிருந்த சாத்திய ராமனேக் கம்பன் புளுகில் செயற்கை யெல்லேயையும் கடந்த அசாத்திய ராமனுக்கினன்.

எடுத்துக் காட்டுகள் இரண்டொன்று இயம்பல் சாலும்.

கைகேசி சூழ்வினேப் படலத்தில்

முடி சூடுவதற்கென வந்துகொண்டிருந்த இராமன் முன், கைகேசி தோன்றி,

ஆழிசூ ழுலகமெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைகடாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கானநண்ணிப் புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின்வாவென் றியம்பின னரச னென்றுன். 107

அடுத்த ஓரையில் நாடாள்வோமென வரும் இயற்கை ராமனுக்குத் திடுக்கென்று பதினன்கு ஆண்டுகள் காடாளப் போவென்று சொன்னது மாத்திரமல்ல, தரையில் விழும்படியான சடைகள் தாங்க வேண்டியதொன்றும், அணித்தில் கடிமணம் புரிந்த இளங்காளே, தவம் மேற்கொள்ள வேண்டிய தொன்றும், இன்னபிறவுமான கொடுங் கடுங்கட்டளேகளேக் காதிற் கேட்ட கம்பராமன் எவ்வாறிருந்தானெனக் கம்பன் பச்சைப் புளுகு புளுகுவதி யாதெனின்,

கைகேசி சூழ்வினேப் படலத்தில்

இப்பொழு தெம்மனோரா லியம்புதற் கெளிதோ யாரும்
செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்புபின்பவ் வாசக முணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்தசெந்தா மரையினே வென்ற தம்மா. 108

தெருளுடை மனத்துமன்ன னேவலிற்றிறம்ப வஞ்சி
இருளுடை யுலகந்தாங்கு மின்னலுக் கியைந்து நின்றுன்
உருளுடைச் சகடம்பூண்ட வுடையவ னுய்த்த காரே
அருளுடை யொருவனீக்க வப்பிணி யவிழ்ந்த தொத்தான். 109

மன்னவன் பணியன்றுகி னும்பணி மறுப்ப னேவென்
பின்னவன் பெற்றசெல்வ மடியனேன் பெற்ற தன்றே
என்னினியு றுதியப்பா லிப்பணி தலேமேற் கொண்டேன்
மன்னெளிர் கானமின்றே போகின்றேன் விடையுங்
கொண்டேன். 110

என்று கம்பன் புளுகிலுதித்த அசாத்திய ராமன் "அப்போ தலர்ந்த செந்தாமரை முகத்துடன்" விடைகொண்டு சென்றானும். அம்மட்டுமன்று; கம்பராமனும் கம்பகோசலையும் அளவளாவிய பெரும்புளுகையும் கேளுங்கள்.

நகர் நீங்குபடலத்தில் கம்பராமன், கோசலை கோயிலில்,

குழைக்கின்ற கவரியின்றிக் கொற்றவெண் குடையு மின்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம்பின் னிரங்கி யேக
மழைக்குன்ற மனையான் மௌலி கவித்தனன் வருமென் றென்று
தழைக்கின்ற வுள்ளத் தன்னாள் முன்னொரு தமியன் சென்றான்.

அதுகண்டு கம்ப கோசலை :—

புனைந்திலன் மௌலி குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்தில னென்கொலென்னு மையத்தா ணளின பாதம்
வனைந்தபொற் கழற்கால் வீரன் வணங்கலுங் குழைந்து வாழ்த்தி
நினைந்த தென்னிடையூ றுண்டோ நெடுமுடி புனைதற் கென்றாள்.

அதாவது, அப்போ தலர்ந்த ராமத் தாமரையை இள ஞாயிற்றின் கதிர்கள் பனிநீர் கலந்து தாவக் குளிர்ந்த கோசலை தாமரை கேட்டனளாம்.

கோசல "மங்கையம் மொழி கூறலும்" கம்பராம "மாணவன்

செங்கை கூப்பிநின் காதற் றிருமகன்
பங்கமில் குணத் தெம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின்றா னென்றான்" 4

அது கேட்ட குளிர்தாமரைக் கம்பகோசலை

"முறைமை யன்றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைகுணத் தவ னின்னினு நல்லனால்
குறைவி லன்னெனக் கூறின ளால்வர்க்கும்
மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினாள்" 5

ராமன் கோசலை இயற்கையுணர்ச்சிகளை வால்மீகி உள்ளதுள்ளபடி நவிலுகின்றாரேனல்.

11. கம்பன் புளுகு இவ்வாறாக "மூவரானவர் தம் முளு முந்திய நாவினர்" வாய்மையே கூறும் வால்மீகி சொல்வது கேளுங்கள்.

"இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்"

வால்மீகியின் மாண்பு.—

"செயற்கைப்பொருளை ஆக்கமின்றி கூறல்"

கம்ப சூத்திரம்.—

# சொக்கட்டான்

[இராவ்சாஹிப் C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்]

சொக்கட்டான் என்பது ஒரு சூதாட்டக் கருவி. சூதாட்டம் எல்லாத் தேசங்களிலும் எல்லாக் காலங்களிலும் இருந்திருக்கிறது. இந்தக் காலத்தில் தான் ஏற்பட்டது, இன்னார் தான் இதனை ஏற்படுத்தினர்கள் என்று சொல்லமுடியாது. மனிதனுடைய குணத்தில் நல்லது கெட்டது என்ற இரண்டுமுண்டு. கெட்டது என்ற வகையில் மோசடி, பேராசை, முதலியவை உண்டு. யாதொரு உழைப்பும் அடையாமல் பொருள் தொகுக்க வேண்டும் என்றும், பிறருடைய பொருளை எந்த வகையிலாவது தான் கொள்ளல்வேண்டும் என்றும் இயல்பாகக் கெட்ட மனிதனுடைய எண்ணத்தில் தோன்றுவதுண்டு. அவ்வகை எண்ணத்தை நிறைவேற்றுவதற்காக மனிதன் பலவகைச் சூழ்ச்சிகளை ஆராய்ந்து பார்ப்பான். அவ்வகைச் சூழ்ச்சிகளில் முதன்மையானது சூது. நேர் வழியில் நின்று பொருளைச் சம்பாதிக்க முடியாமல் போனாலும், எதிரில் நின்று பகைவனை வெல்லமுடியாமல் போனாலும், வஞ்சனையாலே தன் வினைகளை முற்றுப்பெறுவிக்க மனிதன் எண்ணுவதுண்டு. மெய்ப்பொருள் நாயனாரை நேராகப் போர்முனையில் வெல்லமுடியாத முத்திநாதன் என்பவன் வஞ்சனையாகச் சிவனடியார் வேடம் பூண்டு, கத்தியைக் கவளிகையில் ஒளித்து வைத்துக்கொண்டு அவரிடம் தான் உபதேசிக்க வந்ததாகச் சொல்லி, அவர் வணங்கும்போது குத்திக் கொன்று விட்டான். இதனால் நேரில் வெல்லமுடியாதவன் சூதாகத் தன் காரியத்தை அடையும் வகையை அறிகிறோம். மேலும் துரியோதனாதிகள் பாண்டவர்களைப் போரில் வெல்ல முடியாததைக் கண்டு தங்களுடைய மாமனாகிய சகுனியின் உதவியாலே சூதாட்டம் ஆடச் செய்து நாடுநகரம் முதலியவற்றை எல்லாம் கவர்ந்துகொண்டதைப் படித்திருக்கிறோம். புஷ்கரன் நளன்மீது எதிர்த்துச் செல்ல அஞ்சிச் சூதாட்டத்தினால் அவன் நாட்டினைக் கவர்ந்ததையும் வாசித்திருக்கிறோம். ஆகவே வஞ்சனையாகப் பொருள்களைக் கவர்ந்து கொள்வதும் அதற்காகச் சூதாட்டத்தைப் பயன்படுத்திக் கொள்வதும் பழையகாலம் முதற்கொண்டு வழங்கிவந்த செய்கைகளாகும். இவ்வகை வஞ்சனை செல்வர்களிடத்திலும் ஏழைகளிடத்திலும் இருக்கக் காணலாம். நாகரிகம் பெற்ற சாதியார்களிலும் நாகரிகமில்லாத காட்டுமிராண்டிகளிடத்திலும் இருக்கக் காணலாம். ஆகவே, சூதின் உற்பத்தி மனிதனுடைய இயல்புகளிலுள்ள கெட்ட தன்மையே ஆகும்.

சூதாட்டத்தில் ஆடப் பயன்படும் கருவிக்குச் சொக்கட்டான் என்று பெயர். இதனைக் கவறு, தாயக்கட்டை, பாய்ச்சி, பாச்சிகை, சொக்கட்டான்காய், வல் முதலான பல மொழிகளால் தமிழில் வழங்குகிறார்கள். இவற்றில் கவறு என்பது புலவர்கள் அதிகமாய் எடுத்தாளும் சொல்லாகும். வில்லிபுத்தூரார், புகழேந்திப் புலவர் முதலான பெரும்புலவர்கள் கவறு என்னும் சொல்லை எடுத்தாண்டு கவறாடுதலுடைய கொடுந்தன்மையை வெகு உருக்கமாக எடுத்துக் காட்டி இருக்கின்றனர். கவறாடுதலின் தீமைகளைப் புகழேந்தியார் சொல்லியிருக்கும்,

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதன் மறுத்த லிவைகண்டாய்—போதிற்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

அறத்தை வேர்கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து.

உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவும்
ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து.

இவ் வெண்பாக்களில் கண்ட உருக்கமான உரையைக் காட்டிலும் சிறந்தவொன்றை வேறு யாரால் எடுத்துக்காட்ட முடியும்? மேலும், எத்தனை நல்ல குணத்தோடு இருந்தவன் எனினும் சூதிற்புகுந்த பிறகு அதை விட்டு விலக முடியாமல் அதில் அவன் சிக்கிக்கொள்ளுவான். தோற்றவன் தான் செய்தது தவறு என்று தெரிந்தும் இனிமேல் வெற்றியடைய முடியும் என்ற மனோபாவனையால் ஆட்டத்தை விட்டு விலகாமல் தவிப்பான். தருமபுத்திரன் சூது தவறானது என்று தெரிந்தும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோற்றுவந்தான்; இறுதியில் எவராலும் நினைக்கவுமுடியாதபடி தன் மனைவியையும் பணயம் வைத்துத் தோற்று விட்டான். சூதாட்டத்தைவிட மனிதனைப் பிடித்துந்தும் வன்மை ஒன்றை வேறு எங்கு காண்போம்? கள்குடித்தல் தீது தீது என்று தெரிந்தும் அதன்மீது குடிப்பவனுக்கு எவ்வாறு விருப்பம் அதி

கரிக்குமோ, அவ்வாறே சூதாடுபவனுக்கும் விருப்பம் மிகும். இதனையே வில்லிபுத்தூரார்,

'மருவரும்பு யத்தலங்கள் மாமன்வெல்ல மன்னருள்
வெருவருங்க ளிற்றினானு மேல்விருப்ப மிஞ்சினான்'

என்று விருப்பம் மிஞ்சுவதை அழகாக எடுத்துக்காட்டுகின்றார். சூதாட்டத்தில் எல்லாம் தோற்று ஓட்டாண்டியாகப் போகும் மனிதனுடைய மனோபாவமும், பரிதாப நிலையும் பாண்டவரிடத்தில் காணலாம். தன் மனைவியைப் பிறனொருவன் மானபங்கம் செய்வதைக் கண் எதிரில் பார்த்திருந்தும் சிறு விரலையும் அசைக்க முடியாத கேவல நிலைமையிற் சிறப்புப்பெற்றபோர் மன்னர்கள் இருந்தால், இதைவிட நெஞ்சழிவிற்கு வேறு என்ன காரணம் இருக்கிறது? பாண்டவர்கள் இக்கதியை அடைந்ததை அறிந்த இக்காலத்து மக்களும் சூதாட்டத்தில் தம் வாழ்நாள் முழுவதும் கழிப்பது வியப்பாகத் தோன்றுகிறதல்லவா? மிகக் கேவல நிலைமையைச் சூதாட்டத்தின் காரணத்தினால் அடைந்த அறம் தெரிந்த தருமபுத்திரன், பின்னால் விராட ராஜனுடன் ஏன் சூதாட வேண்டும்? அவ்வாறிருக்கையில், சாதாரண மனிதர்கள் சூதாட்டத்தில் சிக்கி அலைமோதுவதில் என்ன ஆச்சரியம்? இதே சூது மனிதனைக் கவர்ந்து கொண்டிருக்கும் மோகத்தின் சக்தியை வெளிப்படுத்துகிறது.

மேலே சூதாட்டக் கருவிகளின் பெயர்களைக் கொண்ட பதங்கள் பல கூறினோம். ஒரு பொருளுக்கு இத்தனைப் பதங்கள் ஏற்படுவதே அப்பொருள் கொண்ட ஆட்டம் மக்களிடத்தில் அதிகமாகப் பரவியிருந்தது என்பதற்குச் சான்று ஆகும். பொதுமக்கள் பாச்சிகை, சொக்கட்டான் என்ற பதங்களைப் பொதுவாக வழங்குகின்றார்கள். புலவர்கள் வல் என்ற பதத்தினாலும் அதைக் குறித்திருக்கிறார்கள்.

சூதாட்டக் கருவியின் பெயர்கள் நிகண்டுகளிலும் அகராதிகளிலும் அதிகமாகப் பிரயோகிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். சூதிற்கு வடமொழியில் 'த்யூதம்' என்று பெயர். அப்பதத்திலிருந்தே தமிழ் மொழியாகிய சூது என்பது வந்தது எனலாம். *பாச்சிகை என்பதும் வடமொழியிலிருந்து வந்தது தான். சொக்கட்டான், கவறு, வல் என்ற இவைகள் தூய தமிழ் மொழிகள். சோணாடு

* பாச்சிகை என்பது பாய்ச்சு என்பதிலிருந்து பிறந்த தமிழ்ச் சொல்லாதல் வேண்டும். சொக்கட்டான் ஆடுங்கால் "நன்றாகப் பாய்ச்சிப் போடு" என்று கூறும் வழக்காற்றை நோக்குக.

என்ற பதம் தெலுங்கு. மற்ற இந்திய மொழிகளிலும் இக் கருவியின் பெயரைக் காணலாம். சொக்கட்டான் மணையை (பலகை) ஹிந்தியிலும், பாரசிகத்திலும் 'சௌபட்' (चौपड़) என்பார்கள். பாரசிக நாட்டிலும் அரேபியாவிலும் இவ்வாட்டம் மிகுதியாக இருந்தது. 'பாகோ பாஹர்' என்று சொல்லும் நான்கு சந்நியாசிகள் கதையில் 'சௌபட்' என்னும் இந்த ஆட்டத்தைப்பற்றிக் கூறியிருக்கிறது. மேலும் 'குலே பகாவலி' என்று சொல்லும் பாரசிகக் கதையிலும் நான்கு அரச புத்திரர்கள் லக்பேஷ்வா என்ற ஒரு தாசியிடம் சூதாடித் தம் பொருளை எல்லாம் தோற்று விட்டதாகக் காண்கிறோம். இந் நூலினால் அநேக நூற்றாண்டுகளுக்கு முந்தியே முகம்மதிய நாடுகளில் சொக்கட்டான் விளையாட்டு இருந்ததை அறியலாம்.

ஆங்கிலத்தில் சூதாடும் கருவிக்கு (Dice) டைஸ் என்று பெயர். அக்கருவிகள் எலும்புகளாலும் தந்தத்தினாலும் செய்யப்படும். அவைகள் கன அளவை கொண்டவைகள். ஒவ்வொன்றிற்கும் 6 சதுரங்கள் உண்டு. ஒன்று முதல் ஆறு வரை கரும்புள்ளிகள் பொறித்திருப்பார்கள். சாதாரண சூதாட்டத்தில் இரண்டு கருவிகளைக் கொண்டு ஆடுவார்கள். ஆடினவர்கள் அக்கருவிகளைக் குலுக்கி நிலத்தில் எறிவார்கள்; அதில் சொன்ன தொகை விழுந்தால் அவன் ஜெயிப்பான். இல்லாவிடில் தோற்பான். இதற்காகப் பந்தயங்கள் கட்டுவதுண்டு. மனிதனுடைய புத்தியை உபயோகப் படுத்தாமல் எதிர்ச்சையாக முடிவு ஆவதனால் இதனைச் சூது என்பார்கள். இங்கிலாந்திலே இக்கருவிகளை உபயோகிக்கும்போது ஒரு சிறு பெட்டியில் அவைகளைப்போட்டுக் குலுக்கி எறிவதுண்டு. கருவிகள் ஒழுங்கான அளவோடு செய்யப்பட்டிருந்தால் இன்னது தான் விழும் என்று எவனாலும் சொல்ல முடியாது. ஆனால் ஏமாற்றுவதற்காகச் சிலர் ஒருபுறங் கனமாகவும் மற்றொரு புறம் இலேசாகவும் கருவிகளைச் செய்வதுண்டு. அவ்விதம் செய்வதினால் மோசடி அதிகமாகும். இதனைத் தடுப்பதற்காக இங்கிலாந்து தேசத்திலே ஜார்ஜ் IV அரசன் காலத்தில் Act 9 Chap. 18 என்ற ஒரு சட்டத்தை ஏற்படுத்தினார்கள். அச்சட்டத்தின்படி சூதாட்டக் கருவிகள் ஒரு ஜோடிக்கு 20 ஷிலிங்கு வரியிட்டு, அதன்மேல் முத்திரை வைக்கவேண்டும் என்றும், அவ்விதம் முத்திரை யிடாத கருவிகளை உபயோகித்தால் பெரும் அபராதம் விதிக்கப்படும் என்றும், விதிக்கப்பட்டது. என்றாலும் சட்ட விரோதமாகச் சூதாட்டக் கருவிகள் அநேகம் செய்யப்பட்டன. ஆகவே 1862-ல், சூதாட்டக் கருவிகளின் மீதிருந்த வரியை எடுத்து விட்டார்கள்,

(தொடரும்)

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## திருவள்ளுவர்

[ஆசிரியர் மறைமலையடிகளார்]

(சிலம்பு-கரு, பரல்-க௨, ௩௰0-ம் பக்கத்தொடர்ச்சி)

இனித் திருவள்ளுவனாரோடு ஒரு வயிற்றிற் பிறந்த கபிலர் என்னும் அந்தணர் பெருமான் தமது வரலாற்றினைத் தங்குடியினரான பார்ப்பனருக்குத் தெரிப்பான் வேண்டி இயற்றிய அகவலில்,

"அருந்தவ மாமுனி யாம்பக வற்குக்
கருவூர்ப் பெரும்பதிக் கட்பெரும் புலைச்சி
ஆதிவ யிற்றினில் அன்றவ தரித்த
கான்முளை யாகிய கபிலனும் யானே,
என்னுடன் பிறந்தவர் எத்தனை பேரெனில்,
ஆண்பால் மூவர் பெண்பால் நால்வர்,
யாம்வளர் திறஞ்சிறிது இயம்புவல் கேண்மின்!
ஊற்றுக் காடெனும் ஊர்தனிற் றங்கியே
வண்ணார் அகத்தினில் உப்பை வளர்ந்தனள்,
காவிரிப்பூம் பட்டினத்திற் கள்விலைஞர் சேரியில்
சான்றூர் அகந்தனில் உறுவை வளர்ந்தனள்,
நரப்புக் கருவியோர் நண்ணிடு சேரியிற்
பாணர் அகத்தினில் ஔவை வளர்ந்தனள்;
குறவர் கோமான் கொய்தினைப் புனஞ்சூழ்
வண்மலைச் சாரலில் வள்ளி வளர்ந்தனள்,
தொண்டை மண்டிலத்தில் வண்டமிழ் மயிலையில்
நீளாண்மை கொளும் வேளாண் மரபுயர்
துள்ளுவ ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்,
அரும்பார் சோலைச் சுரும்பார் வஞ்சி
அதியன் இல்லிடை அதியமான் வளர்ந்தனன்,
பாரூர் நீர்நாட் டாரூர் தன்னில்
அந்தணர் வளர்க்க யானும் வளர்ந்தேன்."

என்று தம் தாய்தந்தையர் ஆதியும் பகவனும் ஆவரெனவுந், தம்முடன் பிறந்தவர் உப்பை உறுவை ஔவை வள்ளி எனப் பெண்பால் நால்வரும், வள்ளுவர் அதியமான் கபிலர் எனத்

தம்மைச் சேர்த்து ஆண்பால் மூவரும் ஆவரெனவுங் கூறும் இதனினும் மிக்கதொரு சான்று பிறிதின்மையிற் றிருவள்ளுவரின் பெற்ருேர் ஆதியும் பகவனுமே யென்றலிற் சிறிதும் மாறுபாடில்லை யென்க.

இனி, இக்கபிலரகவல் எளிய தமிழ்நடையில் இயற்றப் பட்டிருத்தல்கொண்டுங், கபிலர்க்குப்பூணூல்இட ஒருப்படாத பார்ப்பனக் குழுவினர்க்கு அறிவு தெருட்டல்வேண்டிச் சிறு பிள்ளையாயிருந்த கபிலர் இதனைச் செய்தாரென வழங்குங் கதை நம்பத்தகாததாயிருத்தல் கொண்டும் இது கபிலராற் செய்யப்பட்டதன்றென்றும், இஃதொரு "கட்டுநூல்" என்றுங் கூறினருமுளர். இக்கபிலரகவல் இயற்றப்பட்டதற்குக் காரணங் கூறுங் கதை நம்பத்தகாததுபற்றி இந்நூலையே கட்டு நூலென்றல் ஆராய்ச்சியுணர்வில்லாதார் கூற்ருகும். கல்வி நலம் மனநலம் ஒழுக்கநலம் முதலியவற்றை நோக்காது, இந்நலங்கள் இல்லாரையும் பிறப்பளவில் உயர்த்துதலும், இந்நலங்கள் உடையாரையும் பிறப்பளவில் இழிவுபடுத்துதலுஞ் செய்துபோந்த அஞ்ஞான்றைப் பார்ப்பனமாந்தர்க்கு அறிவு கொளுத்தும் பொருட்டாகவே இவ்வரியநூல் கபிலரால் இயற்றப்பட்டதென்பதுமட்டும் மறுக்கப்படாததாகும்; இதற்கு அகச்சான்ருகப்போந்த,

"பார்ப்பன மாந்தர்காள் பகர்வது கேண்மின்!
இறந்தவராய் உமை இல்லிடை யிருத்திப்
பாவனை மந்திரம் பலபட உரைத்தே
உமக்கவர் புத்திரர் ஊட்டின போது
அடுபசி யாற்குலைந் தாங்கவர் மீண்டு
கையேந்தி நிற்பது கண்டதார் புகலீர்!
அருந்திய உண்டியால் யார்பசி கழிந்தது?
ஒட்டியர் மிலேச்சர் ஊணர் சிங்களர்
இட்டிடைச் சோனகர் யவனர் சீனர்
பற்பல நாட்டினும் பார்ப்பார் இலையால்;
முற்படைப் பதனில்வே ருகியமு றைமைபோல்
நால்வகைச் சாதி இந்நாட்டில்நீர் நாட்டினீர்!
மேல்வகை கீழ்வகை விளங்குவது ஒழுக்கால்;
பெற்றமும் எருமையும் பிறப்பினில் வேறே,
அவ்விரு சாதியில் ஆண்பெண் மாறிக்
கலந்து கருப்பெறல் கண்ட துண்டோ?
ஒருவகைச் சாதியாம் மக்கட் பிறப்பினில்
இருவகை யாகநீர் இயம்பிய குலத்துள்
ஆண்பெண் மாறி யணைதலும் அணைந்தபின்

கருப்பொறை யுயிர்ப்பதுங் காண்கின் றிலிரோ?
எந்நிலத் தெந்தவித் திடப்படு கின்றதோ
அந்நிலத் தந்தவித் தங்குரித் திடுமால்,
மாறிவே ருகும் வழக்கம்ஒன் றிலையே;
பூசுரர்ப் புணர்ந்து புலைச்சியர் ஈன்ற
புத்திர ராயினோர் பூசுரர் அல்லரோ?
பெற்றமும் எருமையும் பேதமாய்த் தோன்றல்போல்
மாந்தரிற் பேதமாம் வடிவுளவர் கண்டுளார்?
வாழ்நாள் உறுப்புமெய் வண்ணமோடு அறிவினில்
வேற்றுமை யாவதும் வெளிப்பட லின்றே;
தென்றிசைப் புலையன் வடதிசைக் கேகிற்
பழுதற ஓதிப் பார்ப்பான் ஆவன்;
வடதிசைப் பார்ப்பான் தென்றிசைக் கேகின்
நடையது கோணிப் புலையன் ஆவன்;
அதாஅன்று
சேற்றிற் பிறந்தசெங் கழுநீர்போலப்
பிரமற்குக் கூத்திவயிற்றிற் பிறந்த வசிட்டரும்,
வசிட்டர்க்குச் சண்டாளி வயிற்றிற்பிறந்த சத்தியரும்,
சத்தியர்க்குப் புலைச்சிதோள் சேர்ந்துபிறந்த பராசரும்,
பராசர்க்கு மீன்வாணிச்சி வயிற்றிற்பிறந்த வியாசரும்
வேதங்கள் ஓதி மேன்மைப் பட்டு
மாதவர் ஆகி வயங்கின ரன்றோ?''

என்னும் அக்கபிலரகவலின் அடிகளே அவ்வுண்மையைப் புலப்படுத்துவனவாம். சாதிவேற்றுமையென்பது இறைவனது அமைப்பிலேயே வடிவ வேறுபாடுடைய விலங்கினங்களுக்கே யல்லாமல், வடிவ வேறுபாடு சிறிதும் இல்லா மக்களுக்கு இசையாதென்பதை, மேற்போந்த அடிகளில் ஆசிரியர் கபிலர் எத்துணை நுட்பமாக எடுத்துக்காட்டியிருக்கின்றார்! ஆவும் எருமையும் இயற்கையமைப்பிலேயே எவ்வளவு வேறுபட்ட வடிவம் வாய்ந்தனவாயிருக்கின்றன! ஆவும் எருமையுந் தத்தஞ் சாதியினுள்ள ஆணையே கூடிக் கருவுறுகின்றன அல்லாமல் மாறிக்கூடிக் கருப்பெறல் இல்லையன்றே! மற்று, மக்களெல்லாரும் ஒரே யியற்கை யமைப்பினை யுடையராயுஞ், செயற்கையாக வகுக்குப்பட்ட சாதிமுறையில் அடங்காது ஆண்பெண் மாறிக் கலந்து கருவுற்று அதனை உயிர்ப்பவராயும் இருத்தலை யறியாதார் யார்? இறைவன் இயற்கையமைப்பிலேயே பார்ப்பனரை வகுத்தனனென்று அவர் கட்டிவிட்ட புராணகதை கூறுவது உண்மையாயின், இந்நிலவுலகத்தின் ஒருசிறு பகுதியாகிய இவ்விந்தியநாட்டின் மட்டுமே

யன்றி, மற்றை நாடுகள் எல்லாவற்றின்கண்ணுமுள்ள மற்றை எல்லாமக்கட் குழுவுகளினும் பார்ப்பனச்சாதியானது காணப் படுதல் வேண்டும்; மற்று, ஒட்டியர், மிலேச்சர், ஊணர், சிங்களர், சோனகர், யவனர், சீனர் முதலான மக்கட் கூட் டத்தாரிற் பார்ப்பனச்சாதி காணப்படாமையின் அவரது புராணக்கூற்று வெறும்பொய்யேயல்லால் உண்மையன்று என ஆசிரியர் அதனை எடுத்துக்காட்டி விளக்கிய திறம் பெரிது! பெரிது! மேலோர் கீழோர் என வழங்கும் வழக்கெல்லாம் அவரவர்தம் ஒழுக்கத்தின் உயர்வானும் இழிபானும் உண்டா யின பான்மையை "மேல்வகை கீழ்வகை விளங்குவது ஒழுக் கால்'' என்றுஞ், "சிறப்புஞ் சிலமும் அல்லது, பிறப்பு நலங் தருமோ பேதையிரே'' என்றுங் கபிலர் அறிவுறுத்தினாற் போலவே, இவர்தந் தமையனார் திருவள்ளுவரும்,

"ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்''

என்றும்,

"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்''

என்றும்,

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யால்''

என்றும்,

"மேலிருந்தும் மேலல்லார் மேல்லலர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்''

என்றும் அருளிச் செய்திருத்தல் நினைவிற் பதிக்கற்பாற்று.

மேற்காட்டியவாற்றால் இக்கபிலரகவல் என்னுஞ் சிறந்த தமிழ் நூல், சாதியிறுமாப்புக் கொண்டு, தம்மவரல்லாத பிற ரிற்றோன்றிய சான்றோரை யெல்லாம் இழித்துக்கூறி, அவரது அறிவின் பயனை மக்கள் பெறவொட்டாது தடைசெய்யும் பார்ப்பனவகுப்பினர்க்கு அறிவு தெருட்டும் பொருட்டு ஆக் கப்பட்டதொன்றாதல் தெற்றென விளங்குதலின், இதனைக் கட்டுநூலென்றார் உரை மெய்ம்மை யுணராக் கட்டுரையே யாமென்க.

மேலும், ஊற்றுக்காட்டில் உப்பை என்னுந் தம் தமக்கை யார் பிறந்து ஒரு வண்ணாரகத்தில் வளர்ந்தமையுங், காவிரிப் பூம்பட்டினத்திற் கள்விற்பார் சேரியில் தம் மற்றொரு தமக்கை

யாரான உறுவை பிறந்து ஒரு சான்றார் வீட்டில் வளர்ந்தமையும், அப்பட்டினத்திலேயே யாழ் பயிலும் பாணச்சேரியில் ஓர் யாழ்ப்பாணரில்லில் தம் மற்றொரு தமக்கையாரான ஔவையார் வளர்ந்தமையும், வள்ளிமலையில் தினைப்புனஞ் சூழ்ந்த மலைச்சாரலில் தம் மற்றொரு தமக்கையாரான வள்ளி பிறந்து ஒரு குறவர் தலைவன் வீட்டில் வளர்ந்தமையுந், தொண்டை மண்டிலத்தின் கண்ணதான திருமயிலாப்பூரில் தந் தமையனாரான திருவள்ளுவர் பிறந்து ஒரு துளுவ வேளாளரிடத்தில் வளர்ந்தமையும், வஞ்சிமாநகரிற் றம் மற்றொரு தமையனாரான அதியமான் பிறந்து அதியமான் இல்லில் வளர்ந்தமையுங், கடைமுறையாக எல்லார்க்கும் இளவலாகிய தாந் திருவாரூரிற் பிறந்து ஓர் அந்தணர் இல்லில் வளர்ந்தமையும் நிகழ்ந்தன நிகழ்ந்தாங்கு எடுத்துக்கூறும் இவ்வுண்மை நூலைக் கட்டு நூலென்றார் உரையே பெருங்கட்டா யிருக்கின்றது!

மேலுந், தம்மை யுயர்த்தி மற்றை யெல்லா வகுப்பினரையும், வேசிமக்கள் அல்லது அடிமைகள் எனப் பொருள்படுஞ் "சூத்திரச்" சொல்லால் வழங்கும் பார்ப்பனரின் நூல்களாகிய "மிருதி"களையும் "புராணங்களை"யும் "வேதங்களை"யும் பார்ப்பனர்கள் தாமே எழுதி வைத்துக்கொண்டு, அவைகளைத் தாமெழுதிய நூல்கள் என்றால் அவற்றுள் நடுவிகந்து சொல்லியவைகளைப் பிறர் நம்பாரெனக் கருதி, அவைகளெல்லாம் இறைவன் அருளிச் செய்தவைகள் என்று அவர்கள் கட்டி விட்டாற் போல, இக்கபிலரகவல் நூலில் உலக வியற்கை மக்களியற்கைக்கு வேறாய் நடுவிகந்து கட்டிச் சொல்லப்பட்டது ஏதேனும் ஒரெட்டுணையாயினும் உண்டா? ஒருசிறிது மில்லையே. இக்கபிலரகவலிற் சொல்லப்பட்ட அறங்கள் அத்தனையும் எல்லா மதத்தவரானும் எல்லா மக்கட் பிரிவினரானும் உவந்தேற்றுக் கொள்ளப்படும் விழுப்பம் வாய்ந்தனவாயிருத்தல், அதன் மேற்காட்டிய பகுதிகளால் விளங்குவதொடு பிற்காட்டப்படும் பகுதியானும் நன்கு விளங்குதல் காண்க.

"மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ?
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ?
மாநிலஞ் சுமக்க மாட்டே னென்னுமோ?
கதிரோன் சிலரைக் காயே னென்னுமோ?
வாழ்நான்கு சாதிக் குணவு நாட்டினுங்
கீழ்நான்கு சாதிக் குணவு காட்டினுமோ?
திருவும் வறுமையுஞ் செய்தவப் பேறுஞ்
சாவதும் வேறிலை தரணி யோர்க்கே.
குலமும் ஒன்றே, குடியும் ஒன்றே,

இறப்பும் ஒன்றே, பிறப்பும் ஒன்றே,
வழிபடு தெய்வமும் ஒன்றே யாதலால்,
முன்னோர் உரைத்த மொழி தவறுமல்
எந்நா ளாயினும் இரப்பவர்க் கிட்டுப்,
புலையுங் கொலையுங் களவுந் தவிர்ந்து
நிலைபெற அறத்தின் நிற்பதை அறிந்து,
ஆணும் பெண்ணும் அல்லதை உணர்ந்து,
பேணி யுரைப்பது பிழையெனப் படாது.''

என்னும் இப்பகுதி எத்துணை மேதக்க அறவுரை பொதிந்த தாய் எந்நாட்டவரானும் எக்கொள்கையினரானும் பொன்னே போற் போற்றற்பாலதா யிருக்கின்றது? கநு அ அடிகளே யுடைய இக்கபிலரகவலிற் பொதிந்துள்ள அறிவுரைகளத் தனையுந், திருக்குறளிற் போந்த அறவுரைகளோடு ஒத்து, அவற்றினுஞ் சுருக்கமுடையனவாய்ப், பயில்வோருள்ளத்திற் பசுமரத்தாணியெனப் பதியுங் கூர்மை வாய்ந்து திகழ்கின்றன. இத்துணைச் சிறந்த அறவுரை பகரும் ஒரு விழுமிய நூலை ஒருவர் பொய்யாகக் கட்டி, அதனைக் கபிலர் பெயராற் புனைந்து விட்டாரென்னும் பொய்யுரையினும் மிக்கதொரு புளுகுரையினை யாண்டுங் கண்டிலேம்.

மேலும், ஒருவர் தம்மை யுயர்த்துதற் பொருட்டுப் பொய்யான பல கதைகளைக் கட்டி ஆக்கியதொரு நூலாயின் அதனைக் கட்டு நூலென்றல் வாய்வதேயாம். மற்று, இக்கபிலரகவலின் ஆசிரியராகிய கபிலரோ தம் அன்னை புலைச்சி யென்றும், அவள் ஒரு முனிவரைக் கூடித் தம்மை யுள்ளிட்ட எழுவர் மக்களைப் பயந்தனளென்றும்; அவருள் ஒருவர் வண்ணாரகத்திலும், மற்றொருவர் கள்விற்பார் சேரியிற் சான்றார் வீட்டிலும், மற்றொருவர் பாணரில்லத்திலும், பின்னுமொருவர் குறவர் குடிசையிலும், ஏனையொருவர் தொளுவவேளாள ரகத்தினிலும், வேறொருவர் அதியமான் இல்லிலுந், தாம் அந்தணரகத்திலும் வளர்ந்தனரென்றுந் தமது பிறப்பினிழிபையுந், தம்முடன் பிறந்தாரிற் பலர் இழிந்த குலத்தாரிடம் வளர்ந்த இழிபையுந் தினைத்தனையும் ஒளியாமல் நிகழ்ந்தவற்றை நிகழ்ந்த வாறே எடுத்துரைக்கும் பொய்யா நாவிற் சான்றோராகிய கபிலர் பெருமான் ஆக்கிய இவ்வுறுதி நூலைக் கட்டு நூலென்றார் உரையே பெரியதொரு பொய்க்கட்டாம். இது கட்டு நூலாயின், எழுவரின் இழிந்த பிறப்பும், அவர் பெயரும், அவர் பிறந்த ஊரும், அவர் வளர்ந்த இடமும், அவரிற் பெரும்பாலார் வளர்ந்த இழிந்த குடியும், எல்லா மக்களுயிர்க்கும் உறுதி பயக்கும் விழுமிய அறவுரைகளும் இதன்கட்

சொல்லப்படுமோ வென்று நடுநின்று ஆராய்ந்து காண வல்லார்க்கு, இதனைக் கட்டு நூலென்று கரைந்தார் பார்ப்பனரும் அவர் வழிப்பட்டார் சிலருமே யல்லால், ஏனைப் பொய்யா நாவினர் அங்ஙனஞ் செய்யா ரென்பது தெற்றென விளங்கா நிற்குமென்க. (தொடரும்)

---

# கானல் வரி

[பண்டிட் அ. நடராச பிள்ளையவர்கள்]

ஐம்பெருங் காப்பியங்களு ளொன்றாகிய சிலப்பதிகாரம் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழினை விளக்கிச் செல்லும் முதன்மைவாய்ந்த நூலென்பது, அறிஞர்கள் பலரு மறிந்த வொன்றாகும். அதன்கண், அக்கால மக்கள் இசைத் தமிழையும், நாடகத் தமிழையும் எங்ஙனம் எழிலுறக் கொண்டு வாழ்ந்தனர் என்பதற்குப் பல சான்றுகள் பல்கி யுள்ளன. அவற்றுள், கானல் வரி, வேட்டுவவரி, ஊர்சூழ் வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை என்றவைந்துஞ் சிறந்து காண்பனவாம். அவை முறையே நெய்தல், பாலை, மருதம், முல்லை, குறிஞ்சி என்ற ஒழுக்கங்கள் நிகழும் நிலத்தில் வாழும் மக்களின் மனப் போக்கினையும், இசையமைப் பினையும், நாடக வெழிலையும் எடுத்தியம்புவனவாம். குரவை யாவது அவ்வந் நிலமக்களாகிய உயர்ந்தோர்மாட்டு நிகழ்ந்த அகப்பொருட் போக்காகிய அன்பினையோ, அன்றிப் புறப் பொருட்போக்காகிய வெற்றியினையோ பொது மக்கட்குப் புலனுமாறு பாடியாடிக் காட்டும் பண்புடைக் கூத்தாம். இஃது எழுவரேனும், எண்மரேனும், ஒன்பதின்மரேனும் கைகோத்து ஆடுவதாகும். வரியாவது அவ்வந்நிலத்து நிகழ்ந்த உயர்ந்தோர் செய்தியை அவர் பிறந்த நிலத்தியல்பு கொண்டும், அவர்தம் தொழில் கொண்டும் விளக்கி, ஆடிப் பாடும் இசைப் பாக்களாலாகிய நாடகவமைப்பாம். இது நடர்கள் சிலர் சேர்ந்து நின்று மொழியாடலை மேற்கொண்ட இசைப் பாக்களாற் பாடி நடிப்பதாகும். இதனைக் கண்கூடுவரி முதலாகப் பலதிறப் படுப்பர். அவற்றைக் கட்டுரையிறுதியிற் காண்பாம்.

இனி, யாம் எடுத்துக்கொண்ட கானல் வரியினை ஆராய் வாம். இது சிலப்பதிகாரத்திற் புகார் காண்டத்தின் உட்

பகுதிகள் பலவற்றில் ஏழாவதாகக் காணப்படுகின்றது. இப்பகுதி கடல் விளையாட்டினைக் காணச்சென்ற மாதவியும், கோவலனும் பாடிய அகப்பொருட் டுறைகளைக்கொண்டு, அக்கால நெய்தனில மக்கள் பாடிவந்த இசைப்பாட்டுக்களின் போக்கையும், நாடகவமைப்பினையும் இயம்பவல்லதாக விருக்கின்றது. 'கானல் வரி,' என்பது கடற்கரைச் சோலையின்கண் நிகழ்ந்த அகப்பொருட் செய்திகளை நாடகமாக அமைத்துப் பாடிவரும் ஒருவகை இசைப் பாட்டு எனப் பொருள்படும். இது பெரும்பாலும் கலிப்பாவாலும், அதன் இனப்பாவாலும் பாடப்பெறும்.

கானல் வரியாகிய இந்நாடகத்தினில் அகப்பொருட்குரிய தலைவன், தலைவி, பாங்கன், தோழி முதலோர் நடர்களாகத் தோன்றுவர். நிகழ்விடம் கடற்கரைச் சோலையும் அதன் பக்கங்களுமாம். அகப்பொருட் டுறைகட்கு இன்றியமையாப் பாட்டுடைத்தலைவன் நாடகத்தின் முதற்கட் புகழ்ந்து கூறப்படுவன். அக்கூற்றே, முகமுடைவரி எனவுரைக்கப்படும். இதன்கண், பாட்டுடைத் தலைவன் புகழினை அவன் நாட்டு யாற்றினோடு சேர்த்துக் கூறுதலின், முகமுடைவரி எனற்பாலது ஆற்று வரி எனப்பெயர் பெறலாயினது. பின்னர், நாடகம் நிகழும் நிலத்தையும், அதனைச்சார்ந்த ஊரினையும் சிறப்பித்துக்கூறும் சார்த்துவரி கூறப்படும். அதனை முகச் சார்த்துவரி எனவுங்கூறுவர். பின்பு கானல் வரி கைக்கொள்ளப்பெறும். அக்கானல் வரியினை நிலைவரி, திணைநிலைவரி, துள்ளல்வரி, முரிவரி, கானல்வரி என ஐவகையாகப் பிரித்தல் மரபு. இவை ஆண்பாலராகிய தலைவன், பாங்கன் முதலோர் கூற்றுக்களாகிய ஆண்பாற் கானல் வரியாம். கோவலன் பாடிய கானல்வரிப் பாக்கள் இம்முறையினையே பின்பற்றி யுள்ளன.

இனி, தலைவி, பாங்கி முதலோர் கூற்றுக்களாகிய பெண்பாற் கானல் வரியானது ஆற்று வரி, சார்த்து வரி, திணைநிலை வரி, மயங்குதிணை நிலைவரி, சாயல் வரி, முகமில் வரி என அறுவகையாகப் பகுத்துக் கூறப்பெறும். மாதவி பாடிய கானல் வரிப்பாக்கள் இம்முறையினையே பின்பற்றியுள்ளன. ஆற்று வரியினையும், சார்த்து வரியினையுமொன்றாக்கி இணை நிலைவரி எனக் கூறுவாருமுளர். அகப்பொருட் டுறைகளின் அமைப்பினைத் திருக்கோவையார் முதலிய நூல்களிற் கூர்ந்து நோக்குவார்க்கு அஃதொரு நாடகவமைப்பே என்பது நன்கு புலனும். ஆதலின், இக்கானல் வரியிற் காணப்பெறும் பாக்களும் அம்முறையாகவே கடற்கரைச்

சோலையினும், அதனை யடுத்த விடங்களினும் நிகழ்ந்த காதற் கதையினை நாடகமாக வமைத்து, அக்கால மக்கள் பாடி வந்தனரென்பதும், அதில் வரும் ஆண்பாற் கூற்றுக்களைக் கோவலன் தனியாக எடுத்து முதற்கட் பாடினுன் என்பதும், அவனைப் பின்தொடர்ந்த மாதவி பெண்பாற் கூற்றுக்களைத் தனியே பிரித்தெடுத்துப் பாடலாயினு ளென்பதும் ஈண்டுக் கருத வேண்டுவனவாம்.

கடல் விளையாட்டினைக் காணப்புறப்பட்ட கோவலன் அரச வாகனமாகிய அத்திரி (கோவேறு கழுதை)யினும், மாதவி கோவால வண்டியினுமாக அமர்ந்து திருமகளின் இருப்பிடமாகிய பீடிகைத்தெருவைப் பின்னிட்டுக் கடந்தனர். கடல்வளமாகிய முத்து, சிப்பி, பவளம், சங்கு முதலிய வற்ருற் கவினுற்ற நகர வீதிகள் பல அவர்களால் கடக்கப் பட்டன. மரக்கல வழியே வந்து வாணிகிய மணற்றிடரிற் றங்கிய பிறநாட்டார் சேரிகள் பலவற்றை அவர்கள் பார்த்துச் சென்றனர். இவ்விதமாக அவ்விருவரும் நெய்தலங்கானலை நெருங்கினர். அங்குக் காவிரிப்பூமாநகர மக்கள் பலர் கண் கொள்ளாக் காட்சியாய்ச் சூழ்ந்து, எங்கும் நிறைந்திருந்தனர். மாதவியும், கோவலனும் காவிரிப் பேரியாற்றின் கரையினை யடுத்ததும், கடலினது புலால் நாற்றத்தைப் போக்கவல்ல மடலவிழும் மலரையுடைய தாழை மரங்கள் வேலிபோற் சூழப் பெற்றதும், புன்னைமரநிழல் பொருந்தியதுமான வோரிடத்தை யணுகினர். ஏவலர் அங்குள்ள புதுமணற் பரப்பினிடத்தே ஓவியக் கூடாரமொன்றிட்டு, அதன்கண் வெண்கால் அமளி மேற்கட்டுடன் அமைத்து அழகு செய்தனர்.

கோவலனும், மாதவியும் அதன்கட் புகுந்து அமர்ந்திருந்தனர். மாதவியின் தோழியாகிய வயந்தமாலை தன் கையோடு கொணர்ந்திருந்த யாழினேடு, மாதவி பக்கலில் வந்து நின்ருள். அவ்யாழ் அழகிய உறையிலிடப் பெற்றும், மலரால் அழகு செய்யப்பட்டும், மணமகளிரினைப் போன்றும் காணப் பட்டது. அதனை மாதவி வணக்கத்துடன் வாங்கி, பண்ணல் முதலிய எண்வகைக் கலைத்தொழில்களாற் சுரங்களை எழுப்பி, மரகதமணிக் கணையாழிகளணிந்த மெல்லிய விரல்களால்யாழ் நரம்புகளை வார்தல், வடித்தல் முதலிய எண்வகை இசைக் கரணங்களா லொலித்து இசையினை ஒழுங்கு படுத்தினுள். பின்பு, அவள் அவ்யாழைக் கோவலன் கையிற் கொடுத்து, 'காதல! யான் நின்பணிப்பின்றி யாழ் வாசித்தல் தக்க தொன்றன்று; நின்னை வாசிக்கும்படி ஏவுதற்கும் தகுதியுடையேனல்லேன். ஆகலின், நின்பணி யாதென எதிர்பார்க்கின்

றேன்,'' என இயம்பினள். யாழினைப் பெற்றுக் கொண்ட கோவலன் மகிழ்வுடன் கானல் வரிப்பாக்கள் பாடத்தொடங்கினன். முதற்கண், அவனல், பின்வரும் ஆற்று வரிப்பாக்கள் பாடப்பெற்றன:—

திங்கண்மாலை வெண்குடையான் சென்னிசெங்கோலதுவோச்சி,
கங்கை தன்னைப் புணர்ந்தாலும், புலவாய் வாழி! காவேரி;
கங்கைதன்னைப் புணர்ந்தாலும், புலவாதொழிதல் கயற்கண்ணய்!
மங்கைமாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி, காவேரி. (க)

மன்னுமாலை வெண்குடையான் வளையாச்செங்கோலதுவோச்சி,
கன்னி தன்னைப் புணர்ந்தாலும், புலவாய்வாழி! காவேரி;
கன்னி தன்னைப் புணர்ந்தாலும், புலவாதொழிதல் கயற்கண்ணய்!
மன்னுமாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி. (உ)

உழவரோதை, மதகோதை, யுடைநீரோதை தண்பதங்கொள்
விழவரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி! காவேரி;
விழவரோதை சிறந்தார்ப்ப நடந்ததெல்லாம் வாய்காவா
மழவரோதை வளவன்றன் வளனேவாழி காவேரி. (ங)

(க). கயல் மீன்களைக் கண்களாகக் கொண்டிருக்கும் காவிரி யென்னுங் காரிகையே! மதியினைப்போன்று, மாலைகள் தாழப்பெற்ற வெண்கொற்றக்குடையினையுடைய சோழ மன்னன் தனது செவ்விய அரசாட்சியை வடநாடுகளிற் செலுத்தி, கங்கையென்னுங் கட்டழகியை மணம்புரிந்து கொண்டாலும், காவேரியாகிய நீ சோழன்பால் ஊடல் கொண்டு உலராது வாழ்வாய்; நீ அங்ஙனம் வாழ்க்கையை மேற்கொள்ளுதற்குக் காரணம் நின்போன்ற மண்ணுலக மங்கையர்களின் மாபெருங்கற்பேயாம் என்று தெரியலானேன், ஆகலின், காவேரியே: நீ நீடூழி வாழ்வாயாக.

(உ). கயலாகிய கண்களைக்கொண்ட காவிரிப்பாவையே! நிலைபெற்ற மாலைகள் நீண்டு நாலப்பெற்ற நிகரிலாவெண் கொற்றக் குடையினைக்கொண்ட சோழன் திறம்பெறத் தனதாட்சியைத் தென்னடுகளிற் செலுத்திக் குமரியென்னும் கன்னியினைக் கூடிப்புணர்ந்தாலும், அவன்பால் வெறுப்புக் கொள்ளாது வாழ்கின்றய்; அதற்குக் காரணம் நிலைபேறுற்ற நெஞ்சினைக்கொண்ட நேரிழைமார்களின் நிகரிலாக்கற்பே யாம் எனத்தெரியலானேன்: ஆகலின், காவேரியே, நீ நீடூழிவாழ்வாயாக. (கன்னி—குமரியாறு)

(ங). காவிரிச் செல்வி! நிலங்களை யுழுகின்ற மள்ள ரோசையும், நீர்பாய்கின்ற மதகிளெலியும், புதுப்புனலாடு வார் புரியுங்கலியும் பொங்கி ஆரவாரிக்கும்படி நீ சோணாட்டு டே தொடர்ந்து சென்று வாழ்கின்றாய்; நீ அங்ஙனம் வாழும் அவ்வாழ்க்கைகட்கெல்லாம் பின்வாங்கலில்லாப் பெருவீரர் களின் பெருமுழக்க மிக்க செம்பியனது ஆட்சிச் சிறப்பே முதலாம்: ஆகலின், காவேரியே, நீ அவன் சிறப்பை எண்ணி வாழ்வாயாக.

இம்மூன்று பாக்களும் அகப்பொருட்டுறை நாடக மாகிய கானல்வரிக்குரிய பாட்டுடைத்தலைவனாகிய வளவனது சிறப்பினைக் கூறுமுகத்தான் முகம்போன்று முன்னிருத் தலின், 'முகமுடைவரி,' எனப்பட்டன. இவற்றின்கண் சோணாட்டுக் காவிரியாற்றினை வளவன் புகழோடு மாட்டிக் கூறுதலின், இவை, 'ஆற்றுவரி,' எனவும் பெயர் பெற்றன. இவற்றில், காவிரியின் இயல்பு கூறுமுறையான் கண்ணகியின் கற்பு மேம்பட்டுக்காணுமாறும், அது, பின்னர், கோவலன் மாதவியினை மறந்து போதற்கு கொளு கொம்பாமாறும் கூர்ந்து காண்க. வளவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது அக்கால மக்கள் அரசனைக் கொண்டாடும் அன் பின் தூய்மையை அறிவுறுத்தற்கென்க. வளவன் வடபுலத் தினையும், தென்புலத்தினையும் தன்னாட்டோடு சேர்த்து ஆட்சி செய்யினும் அரசியல் விரிந்தகாரணமாக வேற்படும் பாதுகாப்புக் குறைவினை அணுகவிடா ஆண்மையுள்ளான் என்பார், "கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய்," என்றும், "கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய்," என் றும் நயம்படக் கூறினர். வளவர்களின் அரசியற் சிறப்பா லேயே காவிரி, சோணாடு முழுவதிலும் பல கால் கொண்டு சென்று பண்படுத்திய தென்பார், "நடந்ததெல்லாம் வாய் காவா மழவரோதை வளவன்றன் வளனே," என வலியுறுத்த லாயினர். (காவேரி—கவேரன் புதல்வி.)

(தொடரும்)

---

# வடமொழி சென்ற தென்சொற்கள்

[பண்டித திரு. ஞா. தேவநேயப் பாவாணர்]

(சிலம்பு ௧௪ பரல் ௧௦-௪௨௧-ம் பக்கத் தொடர்ச்சி)

இராக்கன், இராக்கி என்னும் பெயர்கள் முறையே ஆண் பாற்கும் பெண்பாற்கும், இன்னும் தென்னாட்டில் சில வகுப் பார்க்குள் இடப்படுகின்றன.

இராக்கதர் பண்டைக்காலத்திலேயே தமிழ் நாட்டி லிருந்ததால், அவரைக் குறிக்கும் பெயரும் தமிழி லிருத்தல் வேண்டும்.

இராசன் அரசு--அரசன்—ராஜன்.

அரம்=அழித்தல். See அரன், அரம்—அரசு.

அரன்=தெய்வம், சிவன்,

அரசு+அன்=அரசன்=தேவன் போன்றவன்.

அரசு=தலைமை. மரங்கட்குள் தலைமையானது அரசமரம்.

தேக்கு, கருங்காலி முதலியவை உறுதியாயிருப்பினும் அரசுபோல் ஓங்கி வளர்வதில்லை.

'ஆல் போற்படர்ந்து அரசுபோ லோங்கி' என்னும் உலகியல் திருமணவாழ்த்தை நோக்குக.

ஆலமரம் அதிகமாய்ப் படரினும், விழுதூன்றியபின் அடி தளர்ந்துபோம். அரசு ஓங்கிவளர்ந்து நெடுநாளிருக்கும். அதனல் பிள்ளையார் கோயில், மணவறை, பட்டஞ்சூட்டு' விழாவகம் முதலியவற்றில் அரசங்கன்றையே நடுவர்.

அரசு, பூவரசு என்பன ஓரின மரங்கள். மேனாட்டார் இலை வடிவொப்புமை பற்றிச் சில மரங்களை ஓரினமாக்கினற் போலப் பண்டைத்தமிழரும் இலைவடி வொப்புமைபற்றி அர சையும் பூவரசையும் ஓரினமாக்கினர். பூவையுடைய அரசு பூவரசு. அரசமரத்திற்குப் பூவின்மை யறிக.

அரசன் என்னும் தென் சொல்லே ராஜன் என்று வட மொழியில் திரியும். அரசன் என்பதை ராஜன் என்னும் வட சொற்றிரிபாகத் தடுமாறக் கூறுவர் மொழி நூல் அறியாதார் சிலர். அரசு, பூவரசு என்னும் மரப்பெயர்கள் ஆரிய வருகைக்கு முன்பே தமிழ்நாட்டில் வழங்கிய பழந் தமிழ்ப்பெயர்கள் என்பதையேனும் அவர் அறிவாராக.

அரசன்—ராஜன், Sans, ராஜ் (இந்துஸ்தானி)

ராஜன்—இராஜன்—இராசன் (தற்பவம்)

ராஜ்யம்—ராச்சியம்—இராச்சியம்.

ராஜன் என்னும் சொல்லினின்று Rego, regent, region, regicide, regular முதலிய ஆங்கிலச் சொற்கள் பிறக்கும்.

அரசன்—அரைசன், அ—ஐ போலி.

அரைசன்—அரையன், ச—ய போலி.

அரையன்—ராயன் Sans. Roy; Eng. Vice-Roy.

ராயர் என்பது அரசரையும் ஒரு பார்ப்பனக் குடியையும் உணர்த்தும்.

இராசகாரியம், இராச சின்னம், இராஜஸ்ரீ, இராசநீதி, இராசராசன், இராசவசீகரம், இராசவீதி, இராசாக்கினை, இராசாதிகாரம், இராசாதிபதி, இராசாத்தி, இராசாளி முதலிய தொடர்மொழிகளெல்லாம் அரசகாரியம், அரச சின்னம் முதலிய செந்தமிழ்த் தொடர்களின் திரிபுகளே யென்றறிந்து கொள்க.

இராத்திரி, இராத்திரம்.

இரா + திரி = இராத்திரி. இரா + திரம் = இராத்திரம். திரம் என்பது ஒரு விகுதிச் (Suffix) சொல்.

C. F. சாயுந்திரம்—சாய்ந்திரம்.

திரம்—திரி

இரா—இருண்டிருப்பது. இருமை = கருமை, இரண்டு, இரவு என்னும் பெயர்கள் ரண்டு, ராவு என்று திரிந்தாற் போல, இராத்திரி, இராத்திரம் என்னும் பெயர்களும் ராத்ரி, ராத்ரம் என்று திரியும்.

உசிதம். உசிதம் = உயர்வு, உகரச்சுட்டடியாய்ப் பிறந்தது.

லட்சணம். லக்ஷணம், லக்ஷ்யம் என்னும் வடசொற்கள் இலக்கணம், இலக்கியம் என்னும் தென்சொற்களின் திரிபென்பதைத் ‘தமிழ்ப்பொழி’லில் விரிவாகக் கூறியுள்ளேன். ஆண்டுக் காண்க.

லட்சம். இலக்கம்—லக்ஷம்.

தமிழிலுள்ள எண்ணுப்பெயர்களெல்லாம் உகரவீற்றன என்று கொண்டு, தமிழர்க்கு ஆதியில் 100 வரையில்தான் எண்ணத்தெரிந்ததென்றும், 999 வரையில்தான் தமிழிலக்க

மென்றும், ஆயிரம், இலக்கம், கோடி என்னும் பெயர்கள் வடசொற்களென்றும் சிலர் கூறுகின்றனர். வானநூல் கணிதநூல் முதலிய கலைகளில் எத்துணையோ வல்லுநரும் சிற்றிலக்கம், பொன்னிலக்கம் முதலிய அளவைகளையும் ஆய்தக்குறுக்கம் மகரக்குறுக்கம் முதலிய மாத்திரை நுணுக்கங்களையும் அறிவதில் நுண்மாண் நுழை புலத்தினரும், வெள்ளம், ஆம்பல் முதலிய பேரெண்களைக் குறிப்பிட்டாண்டவருமான முன்னைத் தமிழர்க்கு மூன்று தானங்கட்குமேல் எண்ணத்தெரியாது என்பது எங்ஙன் பொருந்தும்?

'ஆயிரக்கிளவி வரூஉங்காலை' எனத் தொல்காப்பியத்துட் கூறியிருப்பதால், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே ஆயிரம் என்னும் எண்ணும் அதன்பெயரும் தமிழ்நாட்டில் வழங்கியிருந்தமை அறியப்படும்.

இலக்கமென்பது ஒரு பெரிய இலக்கம் (எண்).

கோடி என்பது கோடி (கடைசி) யெண்.

இலக்கம் தமிழ். lakh Eng. லக்ஷம் Sans.

கோடி தமிழ். கோட்டி, Sans. குடோடு Arabic, crore, Eng.

லௌகீகம். உலகம்—லோகம்—லௌகிகம்.

உலகு + அம் = உலகம்.

உலகு = உலப்பது: உலத்தல் = அழிதல்.

'காலமுலகம்' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால், உலகம் என்னும் சொல் தொல்காப்பியருக்கு முன்பே தமிழ் நாட்டில் வழங்கியதென்றும், செந்தமிழ்ச்சொல் என்றும் அறியப்படும்.

உலகம் என்பதன் திரிபாகிய லோகம் என்னும் சொல் வடமொழியில் லௌகிககம் எனத் தத்திதாந்தமாகும்.

சாமம். சமம்—சாமம்.

இரவு மூன்று சமபாகமாகப் பகுக்கப்பட்டதினால், ஒவ்வொரு பாகமும் சாமமெனப்பட்டது.

ஒரு சாமம் பத்து நாழிகை.

சாமம்—யாமம், ச—ய போலி.

மூன்று சாமங்களும் முதற்சாமம், நடுச்சாமம், கடைச்சாமம் என உலகவழக்கினும், மாலையாமம், நள்ளியாமம், வைகறையாமம் எனச்செய்யுள் வழக்கினும் கூறப்படும்.

யாமம் என்பது சிறப்பாக நடுச்சாமத்தைக் குறிக்கும்.

சின்னம். சின்னம்=அடையாளம்.

'சின்னம் அல்லாக் காலையான'

'எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியும்'

எனச் சின்னம் என்பது கலிப்பாவின் ஒருறுப்புப் பெயராகத் தொல்காப்பியத்துட் கூறப்பட்டிருப்பதால் தமிழ்ச் சொல்லாத லறியப்படும்.

குடை, கொடி முதலியவை அரச அடையாளங்களாதலின் சின்ன மெனப்படும்.

அரச சின்னங்களைப்பற்றிக் கூறும் செய்யுள் சின்னப்பூ.

சின்னம்—Sign (Eng.) ஒருவரின் அடையாளமாகிய கையெழுத்து. Sign—signal.

தானம். தா+அநம்=தாநம்—தானம்.

தா பகுதி, அனம் விகுதி.

தா என்னும் தமிழ்ப்பகுதியே லத்தீனில் do என்றும். இந்துஸ்தானியில் தேவ்என்னும் திரியும். தானம்-donum, Lat, donation, Eng.

தேவதை. தேய்—(தேய்வு)—தேவன்.

தேய்வு—(தேய்வம்)—தெய்வம். தேவு—தே.

தேய்த்தல்=உரசுதல், கடைதல்.

மூங்கில்கள் ஒன்றோடொன்று உரசுவதாலும், மக்கள் தீக்கடை கோலாற் கடைவதாலும் நெருப்புண்டாகும்.

பொருள்கள் தேய்வதால் உண்டாவது தேயு.

தேய்+உ=தேயு; தேயு—தே—தீ.

தேய்—தே. தே+உ=தேவு தேவு+அன்=தேவன். தீப்போல்வது தெய்வம்.

தேவு—Theos. Gr.; Deus. Lat.; Deity; Eng.

தேவு—தேவம்—தேவதம்—தேவதை. தெய்வம்—தெய்வதம்.

பரிபாகம். பரு—பரி, மிகுதிப்பொருளுணர்த்தும் உபசர்க்கம்.

பகு+அம்=பாகம், முதனிலை திரிந்த விகுதி பெற்ற தொழிற்பெயர்.

பகு+தி=பகுதி—பாதி.

பகு+அல்=பகல்—பால்.

பகு+ஐ=பகை.

பகு+அம்=பக்கம் } பகுதியிரட்டித்து விகுதி பெற்ற
பகு+அல்=பக்கல் } தொழிற் பெயர்.

பகு+பு=பகுப்பு.

பகு—வகு. வகு×ஐ=வகை—அகை.

பகு—பகிர். வகு—வகிர். வகு×பு=வகுப்பு.

பகு—பா. பா+தி=பாத்தி.

பாத்து+இடு=பாத்திடு, இடு துணைவினை.

பாத்திடு—பாத்தீடு—பாதீடு, முதனிலைதிரிந்த தொழிற் பெயர்.

பாதம். பதி+அம்=பாதம், முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற் பெயர்.

நிலத்திற் பதிவது பாதம்.

முகம். மூசு மூசு என்பது மூச்சுப்பற்றிய ஒலிக்குறிப்பு.

மூசு மூசு என்று உயிர்ப்பது மூச்சு.

மூச்சுவிடும் உறுப்பு (மூச்சி)—மூஞ்சி.

மூச்சு—மூக்கு=1. மூச்சுவிடும் உறுப்பு 2. மூக்கிலுள்ள மலம்.

---

## தமிழிற் பிறமொழிக் கலப்பு

தன் இயற்கைச் சொற்களால் அமைந்ததாகிய தமிழிற் பிற மொழிச் சொற்களைப் புகுத்துதல் எது போலிருக்கின்றதென்றால், எல்லா வுறுப்புகளும் அமைந்த அழகியதோர் உடம்பில் உள்ள உறுப்புகளை வெட்டி எறிந்துவிட்டு, வேறு மண்ணாலும் மரத்தாலுஞ் செயற்கையாக அவ்வுறுப்புகள்போற் செய்து அவற்றை அதன் கண் ஒட்ட வைத்துப் பார்த்தலுக்கே ஒப்பாயிருக்கின்றது. மயிர், குஞ்சி, கூந்தல் முதலிய தமிழ்ச் சொற்களை விடுத்து 'ரோமம்', 'சிகை' என்னும் வடசொற்களையும் உடம்பு, தலை, சென்னி, முகம் முதலியவற்றை நீக்கிச் 'சரீரம்', 'சிரசு', 'வதனம்' என்பவற்றையுங், கண், காது, செவி, மூக்கு என்பவற்றுக்கு 'நயனம்', 'கர்ணம்', 'நாசி' என்பவற்றையும், மிடறு, கழுத்து என்பவற்றுக்குமாறாகக் 'கண்டம்' என்னுஞ் சொல்லையுந், தோள், கை முதலியன இருக்கப் 'புஜம்', 'கரம்' என்பவற்றையும் கொண்டுவந்து நுழைத்தல், அவ்வத் தமிழ்ச் சொற்களாகிய உறுப்புகளை வெட்டி எறிந்துவிட்டு, அவைபோன்ற வேனை மொழிச் சொற்களைக் கொணர்ந்து அத்தமிழ் உடம்பின்கண் ஒட்ட விடுதலையே போல்கின்றதன்றோ? —மறைமலையடிகள்.

# அறிவியற் பகுதி - Science

## ஞாலநூல் (Geology)

[திரு. S. நடராஜன் அவர்கள் B. A.]

(சிலம்பு-கஉ : ௫அச-ம் பக்கத் தொடர்ச்சி)

### 2. இரண்டாம் அதிகாரம்

### மலைமாட்சி!

நிலப்பரப்பு, கெடுதல், திரிதல், தோன்றல், இயற்கை காற்று, நீர், நெருப்பு வகையாய் ஆற்றும் பணி.

1. கண்ணகல் ஞாலத்தின் நிலப்பகுதியின் எழில் நலங்களை எடுத்துக் காட்டுவது மாண்புறு மலையேயாம். மலை மாட்சியில் இன்புறாத கற்றோரும், மற்றோரும், இளையோரும், முதியோரும் உளரோ! இத்தகைய மலை நிலையாயுள்ளது என நாம் தவறாக எண்ணுகின்றோம். மேகங்கள் எவ்வாறு நிலையற்ற வடிவந்தாங்கி ஆகாயத்தில் சஞ்சரிக்கின்றனவோ, அவ்வாறே இம்மாண்புறு மலைகளும் ஞாலத்தின் மேற்பரப்பில் ஒரோர் காலத்தே ஒரோர் உருத் தாங்கித் திகழ்ந்து பின்னர் மறைந்து ஒழிகின்றன. நம் பண்டைத் தமிழகத்தை அழகு படுத்திய குமரிக்கோடும், குமரியாறும், எழ்தெங்க, எழ்பனை நாட்டுச் சமவெளிகளும் பயிர் நிலங்களும் இற்றைநாட் கடல் வாய்ப்பட்டவன்றோ? உண்மையை ஆராயுமிடத்துப் பெருமிதத்துடன் மேகத்தைத் தாங்கி நிற்கும் மலைகளும் பள்ளத் தாக்குகளும், நிலப்பரப்பும், நதி யோரச் சமவெளிகளும் நிலையாய் இருப்பனவல்ல. இவைகள் இயற்கை யென்னும் காலனின் ஏவலாளர்களால் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு நொடியும் தேய்க்கப்பட்டு நாளாவட்டத்தில் குறைந்து இறுதியில் அழிவுறுகின்றன. உலகிற் பெரிய மலையாகிய இமயமலையும் இவ்வாறு தேய்வுற்றுக் குறைந்து ஒரு காலத்து இல்லாது போகலாம்.

2. ஞாலம் தனி உருவெய்தி ஞாயிற்றைச் சுற்றத் தொடங்கிய காலந்தொட்டு இற்றைவரை, கடல்களும் நிலப் பரப்புகளும் பல மாறுதல்களைக் கண்டுள்ளன. அக்காலத்தே தோன்றி வளர்ந்து வாழ்ந்துவந்த மரஞ்செடி கொடி இனங்கள் பலவும், பறவை இனங்கள் பலவும், விலங்கினங்கள் பல

வும் பிற்காலத்தே வாழக்கூடாது இறந்தொழிந்தன. மாறி மாறி நிகழும் தட்பவெப்ப நிலையும்; காற்று, பனி, மழையும்; ஊற்று, சிற்ருறு, ஆறும்; கடலில் நிகழும் நீர் ஏற்றம், வற்றம், அலை, நீரோட்டமும்; மண்கம்ப கடற்கம்ப அதிர்ச்சியும் எரிமலைத் தோற்றமும்; மரஞ்செடி கொடிகளும் பிற உயிர் இனங்களும் தோன்றிவாழ்ந்து மடிவதும், மின்சாரத்தாதுப் பொருள்கள் மாறுவதும், ஞாலத்தின் மேற்பரப்பில் மாறுதல்களை உண்டாக்கிவருகின்றன. இம்மாறுதல்கள் ஓய்வின்றிஇடைவிடாது நிகழ்கின்றன. இயற்கை இத்தொழிலை எவ்வாறு நடத்துகின்றது எனக் கூறுவாம்.

3. ஞாலத்தின் அமைப்பிலேயே இம்மாறுதல்கள் ஏற்படும் தன்மை இருக்கின்றது. ஓரிடத்தில் நம் கண்ணிற்குப் புலப்படாமலும்,பிறிதோரிடத்தில் நம் கண்ணிற்குப்புலப்படும்படி தெளிவாயும் மாறுதல்கள் நிகழ்கின்றன. இம்மாறுதல்களுக்குக் காரணம் (1) காற்று (2) நீர் (3) ஞாலத்தில் வாழும் உயிர்கள் (4) தாதுப்பொருள்கள் (5) ஞாலத்தின் வயிற்றில் இருக்கும் நெருப்பு முதலியனவாம்.

4. (அ) ஞாலத்தைச் சூழ்ந்து கொண்டிருப்பது காற்று. காற்ருல் ஞாலத்தின் மேற்பரப்பில் ஏற்படும் மாறுதல்களைப் பரக்கக் காணலாம். ஞாலத்தின் பல பகுதிகள் காற்ருல் சின்னபின்னமாக்கப் படுகின்றன. கடற்கரை ஓரங்களில் ஆடித் திங்களில் உலவச்செல்லும் மக்கள் காற்று மணலைப் பெரிதும் வாரி இறைப்பதைக் கண்ணுற்றிருக்கலாம். பெருங்காற்று வீசும்போது மணல் போன்ற கெட்டியாகத் தரையுடன்பிணைக்கப்படாத பல பொருள்களைத் தூக்கிச்சென்று அருகிலுள்ள மலை குன்று முதலியவைகளின்மேல்மோதி அவைகளை உடைத்துப் பொடிப் பொடியாக்குகின்றது. மணல் மேடுகளின் தோற்றம் மாற்றத்திற்குக் காரணம் காற்றே யன்ருே? ஆசியா ஆஃப்ரிக்கா முதலிய கண்டங்களில் காணப்படும் பெரிய பாலைவனங்களில் இருந்து கிளம்பும் மணற்காற்று (Sand drift) மிக வேகமுள்ளது. பக்கத்துள்ள பாறைகளைத் துகளாக்குகின்றது. மணற்காற்ருல் ஏற்படும் மணல்மேடுகளை நம் நாட்டுக் கடற்கரைகளில் (இராமேச்சுரத்தில்) காணலாம். ஆனல் ஆஃப்ரிக்காவிலுள்ள மணற் குன்றுகளுடன் (Sand dunes) இவற்றை ஒப்பிட்டு நோக்கலாகாது. திண்டுக்கல்லுக்குச் சுமார் 30 கல் தூரத்திலுள்ள கொன்றங்கி என்னும் மலை காற்ருல் தினந்தோறும் குறைக்கப்பட்டு வருகிறது. அம் மலை ஒரு கோபுரம்போல் காணப்படும். அதன் அருகில் செல்பவர்களுக்குக் காற்றின்வேகமும் கற்கள் காற்றில் பறப்பதும்

தெரியவரும். காற்றால் பாறைகள் துளைக்கப்பட்டுச் சின்ன பின்னமாக்கப்படுகிறது.

(ஆ) ஞாலத்தின் குளிர்ச்சியான மண்டலங்களில் அடிக்கும் பனிக்காற்றும் பாறைகளை உடைத்துத் தள்ளுகின்றது. பாறைகளில் உள்ள வெடிப்புகளிலும், துளைகளிலும் மழை ஈரம் உட்சென்று, பின்னர் காற்றால் குளிரும்போது பாறைகளை உடைத்துத் தள்ளுகின்றது. தண்ணீர் பனிக்கட்டியாக உறையக் கூடிய மண்டலங்களில் பொதுவாக இக்காட்சி நிகழக்கூடியது. இப் பனிக்காற்றாலும், மலை, குன்று, பறம்பு, இறுகிய நிலங்கள் நிலை தடுமாறுகின்றன. இமயமலை போன்ற உயர்ந்த மலைச் சிகரங்களில் உறைந்து கிடக்கும் பனியானது வெப்ப காலங்களில் பனியாறாக மாறிக் கீழிறங்கும்போது மலைகளை உடைத்துச் சின்ன பின்னப்படுத்துகின்றது. இப் பனியாறுகளில் பனிக்கட்டிகள் கற்பாறையென மிதந்து வருவதையும், வரும் வழியிலுள்ள பெரும் பாறைகளை உடைத்து இழுத்துக் கொண்டு வருவதையும் காணலாம்.

(இ) காற்று, பிராணவாயு, உப்புவாயு, கரியமிலவாயு என முப்பெரும் பூதங்களால் ஆய ஒரு கலவையாம். இப் பூதங்களின் இயற்கைக் குணமே பாறைகளின்மீது வீசும்போது அவைகளைத் தேய்க்கும் எல்லா விதப் பாறைகளையும் காற்றினுள்ள இப்பூதங்கள் சிதைவுறுத்தும். சிறப்பாக கரியமில வாயு சுண்ணாம்பு சம்பந்தமான பாறைகளையும், பிராணவாயு இரும்பு சம்பந்தமான பாறைகளையும், உப்பு வாயு பிற பாறைகளையும் பாதிக்கின்றன. உறுதியான கற்பாறைகளும் காலப் போக்கில் இம் முப்பெரும் பூதங்களால் குறைபடுகின்றன.

(ஈ) மரஞ் செடி கொடிகளும் பிற உயிரினங்களும் தோன்றி வாழ்வதற்குக் காற்று இன்றியமையாதது. புல் பூண்டுகளும் உயிர் இனங்களும் நிலப்பரப்பைப் பெரிதும் மாற்றுகின்றன. காற்றுச் சிறப்பாக மழை பெய்வதற்கு ஏதுவாகிறது. இம் மழையால் சிற்றாறு, ஊற்று, ஆறு முதலியன ஏற்பட்டு நிலப் பரப்பை அழிக்கின்றன.

5. (1) காற்றைப்போல் நீரும் நிலப்பரப்பைக் கெடுக்கின்றது. அழித்தல் வேலையை நீர் நிலப் பகுதிகளின் எல்லாப் பக்கங்களிலும் ஓய்வின்றிச் செய்துவருகின்றது. நீர், மழை, ஊற்று, ஆறு, கடல், நீர் ஏற்றம், வற்றம், அலை ஆய உருத்தாங்கி நிலப் பரப்பைச் சிதைத்த வண்ணமா யிருக்கின்றது. இறுகாத கடற்கரை ஓரங்களிலும், மண்போட்டு உயர்த்திய மண் மேட்டு

களிலும் மழைநீர் தரையை ஆழமாக அறுத்துச் செல்வது கண்கூடு. சிற்றாறுகளும், ஆறுகளும் மலைகளினின்றும் இறங்கி வரும்போது மலைகளைக் குடைந்து கற்களை உருட்டி மணலாக்கிக் கடல் கொண்டு சேர்க்கின்றன. இமயமலையானது சிந்து, கங்கை பிரமபுத்திர நதிகளால் அறுக்கப்பட்டு அதன் பாறைகள் மணலாக மாறி அராபிக் கடலிலும், வங்காளக் குடாக் கடலிலும் தூவப்படுகின்றன. காவேரி, கோதாவரி ஆய தென்னாட்டு நதிகளும் மேற்குத் தொடர்ச்சி மலைகளின் கருங்கற் பாறைகளை இழுத்து மணலாக்கிக் கடலில் வீசுகின்றன.

(2) பூமியில் இருந்து மேல் கிளம்பிவரும் ஊற்றுகளும் மருந்துப் பொருள்களைத் தம்முட் கொண்டு உள்பாகத்தை அரித்து மேற்பாகத்தையும் கெடுக்கின்றன. வெந்நீர் ஊற்றுகளில் (Thermal Springs) உள்ள நீர் கரியமிலவாயு கலந்துள்ளதால் இந்நீர் பூமியின் அடியில் இருக்கும் பாறைகளைக் கரைத்து விடுகிறது. மேல் வரும்பொழுதும் பூமியின் சத்துக்களை மேலே கொணர்ந்து படியவைத்து மாறுதல்களை உண்டாக்குகிறது.

(3) கடலின் (Current) நீரோட்டங்களும், நீர் ஏற்ற வற்றமும் (Tides) அலைகளும் கடற் கரைகளையும் கரை ஓரமுள்ள கற்பாறைகளையும் குடைந்து இடித்துத் தள்ளுகின்றன.

(தொடரும்)

---

# வடிவுதிருந்த அறிவு வளர்ந்த வகை

[திரு. க. ப. சந்தோஷம் அவர்கள், B.A.,L.T.]

(சிலம்பு-கஉ: பரல்-கஉ: ருஅக-ம் பக்கத் தொடர்ச்சி)

இப்பொழுது மக்கள்பால் விளங்கும் கடமை என்ற உணர்ச்சியைப்பற்றியும் ஒழுங்குபட வாழ்தல் (Decency) என்பது குறித்தும் சில கூறுவேன். இவை வடிவும் அறிவும் இசைந்து வளரும் வளர்ச்சியை யொட்டியே வருவன. மக்களைத் தவிர்த்த வேறு உயிர்களில் இவை காணப்படாமைக்குக் காரணம் உணவின் வேறுபாடேயாகும். உணர்ச்சிக்கேற்ப உணவு திருந்துவதை ஆராய்வோம். உயிர்வகைகள் எல்லாவற்றிலுங் கீழ்நிலையிலுள்ள ஓர் உயிரின் உணவு எத்தன்மைத்தாயிருக்கும்? எல்லாவற்றினுங் கீழான உயிர் மண்ணையே தின்னவேண்டும். இதை விளக்குமாறு, எடுத்துக்

காட்டுகள் எளிதிற் கிடைக்கக்கூடிய நிலையிலிருந்து தொடங்குவோம். செடிகளை முதலில் எடுத்துக்கொண்டு, அவற்றிலிருந்து கீழே உயிரற்றுக் கிடக்கின்றவற்றையும், மேலே மக்களையும், அவர்களுக்கு மேம்பட்ட நிலையையும் ஆராய்வோம். செடிகளின் உணவு யாது? மீன்கள் தின்பதென்ன? பாம்புகளுக்கும் புழுக்களுக்கும் இரை யாது? நாற்கால் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் தீனி யாது? இங்ஙனம், உயிர் வகைகளூ உண்பதென்னவென்று கேட்குங்கால், மக்கள் எதை உண்கின்றார்கள் என்ற கேள்விக்கும் நாம் விடை காணவேண்டும். மக்களின் உணவாவது யாது? என்று கேட்க நான் நாணுகின்றேன். எதற்கெனின், அவர்கள் வையகத்திலுள்ள உயிர்கள் அடங்கலுந் தின்கின்றவற்றை எல்லாம் உண்கின்றார்கள்.

மரஞ் செடிகொடிகளுக்கு உணவு, மரஞ் செடிகொடிகளேயாம். சாணம், சாம்பல் முதலிய உரங்கள் மரக்கறியின் மாறுதல்களே. இலையையும் உரமாயிடுவதுண்டு. இதை நோக்குங்கால், மரஞ்செடி கொடிகள் தங்களைத் தாங்களே உண்கின்றன என்பது வெளியாகின்றது. ஆதலின், ஒருயிர் தன்னைப்போன்ற மற்றொன்றை இரையாக்கிக்கொள்வதிலேயே உணவின் வளர்ச்சி தொடங்குகின்றது. உணவின் வளர்ச்சியில் அடுத்தபடி இன்னதென்று பார்ப்பதற்கு மீன்களை உற்றுநோக்குவோம். மீன்கள் இடுகின்ற முட்டை எல்லாம் பொரிந்து சிறு மீன்களாகி வளருமாயின், நீண்டகன்ற பெருங்கடலும் அவற்றிற் கிடமளிக்கப் போதியதாகாது. கடலே மீன்மயமாயிருக்கும். இது கருதலளவையாற் பெறப்படும். இவ்வுண்மை காண்டலளவைக்கு எட்டுமாறும் யான் செய்திருக்கின்றேன். யான் சிறுவயதில் எங்கள் நிலங்களிலுள்ள கிணறுகளிலுங் குளங்களிலும் நீந்தித் திரியும் மீன்களை ஊன்றி நோக்குவது வழக்கம். நிலமும், குளமும், கிணறும் ஆகியவையே இளவயதில் யான் பயின்ற பல்கலைக் கழகமாயிருந்தன. இரண்டு மீன்களிலிருந்து பன்னூறாயிரம் மீன்கள் தோன்றும். ஆயின், இவை எப்படி மறைந்து போகின்றன? இவற்றைத் தோற்றுவித்த பெரிய மீன்களே அதிவிரைவில் குஞ்சுகளைப் பிடித்துத் தின்று விடுகின்றன. இதைக்கண்டபின், நாம் விரும்புமாறு மீன்களைப் பெருகச் செய்யும் வகையை யான் அறிந்துகொண்டேன். பெருமீன்கள் இடும் முட்டைகளிலிருந்து சிறு மீன்கள் தோன்றியவுடனே, ஈன்ற மீன்களை அகற்றிவிடுக. இவ்வாறு செய்யின் ஓரளவினவாய சிறு மீன்கள் ஒன்றைவிட ஒன்று ஆற்றல் மிகுந்து மற்றவற்றை விழுங்கா. ஒரு கிணற்

தில் இவ்வாறு செய்துபார்த்தபொழுது, பல்லாயிரக்கணக் காய் மீன்கள் பெருகியதனால் நீரோடு மீன்களையும் இறைக்கும் நிலைமை ஏற்பட்டது. ஈன்ற மீன்கள் அவற்றைத் தின்னுந் தொழிலை மக்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

தாழ்ந்த நிலையிலுள்ள உயிர்களில் பெரியவை சிறிய வற்றை விழுங்குவதே உணவு முறையாயிருக்கின்றது. மீன் களைவிட உயர்ந்தபடியிலுள்ள உயிர்களது உணவின் தன் மையை ஆராய்வதற்குப் பன்றியை எடுத்துக்காட்டாகக் கொள்வோம். (ஈண்டு அவையிலிருந்த ஒருவர் எழுந்து 'பன் றியை ஏன் நீங்கள் ஓர் அறிவிலா விலங்கிற் கெடுத்துக்காட் டாகக் கொள்கின்றீர்கள்?' என்று கேட்டார். இக்கேள்விக்கு விடை கூறும்பொருட்டு நான் மற்றொரு வினா எழுப்பினேன். தொல்காப்பியத்தில் ஒரு வினாவிற்கு மற்றொரு வினா விடை யாய் அமைதல் கூடும் என்று கூறப்பட்டிருக்கின்றது.

'வினாவுஞ் செப்பே வினாவெதிர் வரினே'

இதைக் கருத்திற்கொண்டு யான் அவரை நோக்கி, 'பல்வேறு விலங்குகளை அவற்றின் இயற்கைக்கு மாறுபட்ட பலதொழில் களைச் செய்யுமாறு பயிற்றுவித்து விளையாட்டுக்காட்டுங் குழாங்களில் (circus) பன்றியைத் தாங்கள் யாண்டேனுங் கண்டதுண்டோ' என்று வினவினேன். மக்கள் தம் உயர்ந்த அறிவின் துணைகொண்டு, சிறிப் பாய்கின்ற காட்டு விலங்கு களை எல்லாம் பழக்கித் தாம் கருதிய தொழிலைச் செய்யுமாறு அவற்றிற்குப் பயிற்சி யளிக்கின்றனர். பன்றி இவ்வாறு பயிற்றப்படாமையின், அஃது அறிவில் மிகத் தாழ்ந்த தென் பதற்கு ஐயமுண்டு கொல்!)

பல்வேறு உயிர்களின் உணவைக் கூர்ந்து பார்க்கத் தொடங்கினோம். பன்றிக்கு மேலுள்ள புலால் உண்ணும் விலங்குகளைப் பார்ப்போமாயின், அவை தாம் ஈனுங் குட்டி களைத் தின்பதில்லை என்பதையும், தங்களிலிருந்து வேறுபட்ட சிறிய உயிர்களைக் கொன்று தின்னும் என்பதையுங் காண் கின்றோம். இதுவே உணவு வளர்ச்சி முறையில் இரண்டாவது படியாகின்றது. இவ்வளர்ச்சியில் மூன்றாவது படி புல்மேயும் விலங்குகளில் வெளிப்படுகிறது. இவை வேறு உயிர்களைக் கொன்று தின்பதில்லை. ஆனால், இவற்றின் குட்டிகள் தாய்ப் பாலைக் குடிக்கின்றன. தாய்ப்பால் என்பது புலால் தொடர் பில்லாததென் றுரைத்தல் சாலாது. புல்லுண்ணும் உயிர்கள் புலால் உண்ணும் உயிர்களைவிட உயர்ந்திருக்கின்றன வென் பதை யறிகின்றோம். ஆயினும், இவை புற்பூண்டுகளை ஒருங்கே

அழித்து விடுகின்றன வென்பதை நாம் நினைவில் வைக்க வேண்டும். இனி, இதற்குமேலுள்ள நிலைக்குச் செல்வோம். இந்நிலையிலுள்ளவை பறவைகளாம். இவைகள் புல்லுணிகளை விட அறிவிற் சிறந்திருக்கின்றன. எவ்வாறெனின், இவை பெரும்பாலுங் காய்கனிகளை உண்டு வாழ்கின்றன. காய் கனிகளைத் தங்களுக்கு உணவாகத் தரும் செடி கொடிகளை இவை அழிப்பதில்லை; பழங்களை உண்டு அவற்றிலுள்ள கொட்டைகளை எருவாயால் இவை கழித்து விடுகின்றன. இங்ஙனம் இவை செய்வது ஓர் இயற்கை உணர்ச்சியால் உந்தப்பட்டென்க. (புலால் உண்ணும் பறவைகளும் உள. இவற்றைப்பற்றி ஒன்றுங் கூறாது விட்டது பெரும் பான்மை யான பறவைகள் புலால் உண்பதில்லை என்பதுபற்றிப் போலும்). இங்ஙனம் மீனிலிருந்து மக்கள்வரையிலும் அதற்கு மேலும் அறிவின் வளர்ச்சி உணவின் வளர்ச்சியோடு பொருந் திக் கிடக்கின்றதென்பதை அறிகின்றோம்.

மக்களுக்கும் பிற உயிர்களுக்குமுள்ள பெரியதொரு வேற்றுமை யாதெனின், அவர்கள் ஒரு பிறப்பிலேயே மற் றெல்லா உயிர்களின் நிலைகளையும் பெற்று அவற்றிற்கு மேலான நிலைமையை அடைகின்றார்கள். ஒரு மகன் ஒரு பிறப்பிலேயே மரம், விலங்கு, பறவை, குரங்கு ஆகிய இவற் றின் பிறப்புகளை ஊடுருவிச் சென்று மக்கள் நிலையை எய்தி அதற்கு மேற்பட்ட ஓர் நிலையின் அறிவையும் உடையவனா கின்றான். மற்ற உயிர்கள் மக்களைப்போல் வேறு பல் உயிர் களின் நிலையைக் கடந்து செல்லமாட்டா. மக்கட்பிறவி ஒன்றுக்குத்தான் அத்தன்மை உண்டு. ஆதலின், மக்களது உணவு தம்மைப்போன்ற பிற உயிர்களைத் தின்னும் நிலையி லிருந்து சிறிது சிறிதாகத் திருந்தி, மரக்கறியுண்ணும் நிலையை யடைந்திருக்கிறது. ஒரு குழவி தாயின் பாலையுண்பது தன்னைப் போன்ற ஓர் உயிரை உண்பதேயாகும். அறிவியல் வகையில் நோக்குங்கால், பாலுண்பது இதைத்தவிர வேறொன்று மாகாது. வைதிகராகிய பலர், கண்ணாடிக்குப்பிகளில் அடைத்து விற்கப்படும் புலாற்சாற்றை உட்கொள்ள மறுப்ப தில்லை. ஒரு கோழியைக் கொன்று சமைப்பது அவர் களுடைய உளத்தைப் புண்படுத்துந் தன்மையதாயிருக் கின்றது. ஆனால், மருத்துவர்கள் கோழிக்குஞ்சினின்றும் இறக்கிய சாற்றை மருந்தாக உண்ணவேண்டுமென்று கூறுங் கால் இதற்கவர்கள் உடன்படுகின்றார்கள். பாலுண்பதும் இதுபோன்ற ஒரு நிகழ்ச்சியே. இந்த நிலையிலிருந்து சிறிது சிறிதாக மக்கள் முன்னேற்ற மடைந்து கலப்பற்ற மரக்கறி யுணவை உட்கொள்ளும் நிலையில் மேலான நாகரிகம் பெற்ற

வர்களாகின்றார்கள். மரக்கறியுணவை யுண்ணும் ஒரு திறத்தார் முதன் முதல் தமிழகத்தில் தோன்றினர். மற்றவர்கள் இந்த நல்வழக்கத்தை நம்மிடமிருந்து கற்றுக்கொண்டனர்.

எல்லாங் கடந்த பொருளின்—கடவுளின்—தன்மைகளில் மற்றொன்றை உய்த்துணர உங்கள் உள்ளும் ஆற்றலை வழங்குமின். ஓர் உயரிய நல்லெண்ணம் தோன்றுமாயின், கிறித்தவராயினும், இந்துவாயினும், முகம்மதியராயினும், யாராயினுஞ்சரி, நோன்பு கைக்கொள்வது வழக்கமாயிருக்கிறது. நோன்பு நாளில் மரக்கறியுணவையுமகற்றி நீர் மாத்திரம் அருந்துகின்றோம். முகம்மதியருள் நீர் அருந்துவதும் விலக்கப் படுகிறது. இந்த நோன்பு நிலை, மக்கட் பிறவிக்குமேலான ஒரு நிலையை எய்தும் பொருட்டு இயற்கை உணர்ச்சியால் தூண்டப்பட்டு நாம் மேற்கொள்ளுகின்ற ஒரு முறையாகும். மேலான ஒரு நிலையை எய்துதற்கு உணவு சுருங்கவேண்டுமென்பதை நாம் உணர்கின்றோம். தவஞ் செய்வோரும், தத்துவம் உணர்வோரும் உடம்பும் உயிரும் ஒன்றியிருத்தற்கு வேண்டிய அளவே உணவை உட்கொள்கின்றனர். மகாத்மா காந்தி இவ் உண்மையைத் தம் வாழ்க்கையில் நன்கெடுத்துக் காட்டியிருக்கின்றனர். மகாத்மா காந்தியைக் காட்டிலும் பேரளவில் இதை உலகுக் கொடுத்துக் காட்டியவர் நாகபட்டினத்து யோகியாவர்; இவர் சிலவாண்டுகள் எத்தகைய உணவுமின்றி உயிரோடிருந்தார். அயர்லாந்து நாட்டு மெக்ஸ்வீனி (Mac Sweeny) அறுபத்தேழுநாள் நீரின்றி வேறொன்றும் அருந்தாது உயிரோடிருந்ததை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். இந்த நீண்ட பட்டினியும் தமிழுலகத்து முன்னோர் சிலர் நிகழ்த்திய 'வடக்கிருத்தல்' என்னும் செய்திக்கிணையாகாது. வடக்கிருத்தல் என்பது நோன்பிருந்து உயிர் துறத்தல். சிறந்த தமிழ்ப் புலவருள் ஒருவராகிய கபிலர், தமது நண்பனாகிய பாரி எனும் வள்ளல் தன் மகளிர் இருவரைத் துணையின்றி விட்டு மாண்டனனாக, அம் மகளிர்க் கேற்ற கணவரைத் தேடிக் கொடுப்பது தமது கடமை என்று அங்குமிங்கும் அலைந்து தேடினர். இது நிறைவேறாது போகவே, புலனழுக்கற்ற அப்புலவர், வடக்கிருந்து இவ்வாழ்வை நீத்தனர். வடக்கிருத்தல் என்னும் இச்செய்தி ஒருவரது நாணுடைமை புரைபட்ட பொழுது உணவு நீக்கி உயிர் துறக்கும் ஓர் ஒழுக்கமாகும். தமிழ்ச் சான்றோரால் பின்பற்றப்பட்ட இச்சீரிய ஒழுக்கத்தை இக்காலத்துள்ள தமிழ் மக்கள் மறந்தார்கள். தமிழ் அகராதிகளிலும் இச் சொற்றொடர் காணப்படவில்லை.

இதனால் நாமறிவது என்னவெனின், மக்களினும் மேம்பட்ட நிலையை அடைதற்கு உணவு பெரிதும் சுருங்க வேண்டுமென்பதேயாம். இதைக் கடவுள் நிலைக்குச் செலுத்துங்கால், கடவுள் எதையும் எக்காலத்தும் உண்பதாகாது என்பது வெளியாகிறதல்லவா? (தொடரும்)

---

## தமிழ் அளவைநூற் சொற்கள்

[திரு. மா. பாலசுப்பிரமணியம், M. A.]

(சிலம்பு-கரு: பரல்-கஉ: ௯அஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

(உரிமை ஆக்கியோர்க்கு)

54. சொரூபலக்ஷணம்—தற்சிறப்பியல்பு
55. தடஸ்தலக்ஷணம்—சார்சிறப்பியல்பு
56. அதத்துவியா விருத்தலக்ஷணம்—பிரிவு சிறப்பியல்பு
57. பிரமை—உண்மை யறிவு—Right knowledge
58. பிரமிதி—உண்மை யறிவு—Right knowledge
59. பிரமாதா—அளந்தறிவான்—Knower
60. ஆக்ஷேபம்—தடை—Objection
61. சமாதானம்—அமைவு—Answer
62. ஸந்தேஹம்—ஐயம்—Doubt
63. விபரீதம்—திரிபு—Error
64. யதார்த்த அநுபவம்—உண்மை யறிவு (பிரமை)—Right knowledge
65. அயதார்த்த அநுபவம்—இன்மை யறிவு—False knowledge
66. பிருதிவி—மண்; நிலம்—Earth
67. அப்பு—நீர்; புனல்—Water
68. தேயு—தீ; அனல்—Fire
69. வாயு—வளி; கால்—Air
70. ஆகாயம்—வெளி—Space
71. காலம்—பொழுது—Time
72. திக்கு—திசை—Direction
73. ஆத்மா—உயிர்—Soul
74. மனம்—உள்ளம்—Mind
75. உருவம்—வடிவம்—Shape
76. இரசம்—சுவை—Taste
77. கந்தம்—நாற்றம்—Smell
78 பரிசம்—ஊறு—Touch

79. சங்கை—எண்—(சங்கியம்)—Number
80. பரிமாணம்—அளவு—Measure
81. பிரதக்த்வம்—வேற்றுமை—Disjunction
82. சம்யோகம்—கூட்டம்—Conjunction
83. விபாகம்—பிரிவு—Division
84. பரத்வம்—முன்மை—Proximity
85. அபரத்வம்—பின்மை—Remoteness
86. குருத்வம்—திண்மை—Solidity
87. திரவத்வம்—நெகிழ்ச்சி—Fluidity
88. ஸ்நேகம்—நட்பு—Cohesion
89. ஸப்தம்—ஒலி—Sound
90. புத்தி—அறிவு—Intelligence
91. சுகம்—இன்பம்—Happiness
92. துக்கம்—துன்பம்—Sorrow
93. இச்சை—காமம்—Love
94. தவேஷம்—வெகுளி—Hatred
95. பிரயத்னம்—முயற்சி—Effort
96. தர்மம்—அறம்—Spiritual benefit
97. அதர்மம்—மறம்—Spiritual demerit
98. சம்ஸ்காரம்—நினைவு—Memory
99. சக்தி—ஆற்றல்—Potency
100. சாத்ரிஸ்யம்—ஒப்பு—Similarity
101. உத்க்ஷேபனம்—எழும்பல்—Springing up
102. அவக்க்ஷேபனம்—வீழ்தல்—Falling down
103. ஆகுஞ்சனம்—வளைதல்—Bending
104. பிரசாரணம்—நிமிர்தல்—Stretching
105. கமனம்—நடத்தல்—Walking
106. பரசாமான்யம்—மிகுதிப் பொதுமை—Wide generality
107. அபரசாமான்யம்—மிகுதியில் பொதுமை—Limited generality
108. பிராகபாவம்—முன்னின்மை—Antecedent Non-existence
109. பிரத்வம் சாபாவம்—அழிவுபாட்டின்மை—Destructive Non-existence
110. அத்யந்தாபாவம்—முற்றுமின்மை; முழுதுமின்மை—Absolute Non-existence
111. அந்யோன்யாபாவம்—ஒன்றினொன்றின்மை—Mutual Non-existence
112. ஸ்மிருதி—நினைவு—Recollection

113. அநுபவம்—அறிவு—Experiential knowledge
114. பிரத்யக்ஷம்—காட்சியறிவு; காட்சி—Perception & Perceptual knowledge
115. அநுமிதி—கருதலறிவு—Inferential knowledge
116. உபமிதி—உவமையறிவு—Analogical knowledge
117. சாப்தம்—உரையறிவு—Testimonial knowledge
118. அநுமானம்—கருதல்—Inference
119. உபமானம்—உவமை—Analogy
120. சப்தம்—உரை—Verbal Testimony
121. காரியம்—ஆக்கம்—Effect
122. காரணம்—ஆக்கமுன்—Cause
123. கரணம்—சிறப்பாக்கமுன்—Special cause
124 சமவாயி காரணம்—உடனிலையாக்கமுன்--Inherent cause
125. அசமவாயி காரணம்—உடனிலையா வாக்கமுன்—Non-inherent cause
126. நிமித்த காரணம்—இயக்கவாக்கமுன்—Operation or Efficient Cause
127. சவிகல்பகப் பிரத்யக்ஷம்—நுண்ணியற் காட்சி
128. நிர்விகல்பகப் பிரத்யக்ஷம்—பிண்டக் காட்சி—பருவியற் காட்சி
129. இந்த்ரியம்—புலன்—Sense-organ
130. ஸன்னிகர்ஷம்—யாப்பு—Relation
131. ஸம்யோகம்—பொருத்தம்—Contact
132. ஸம்யுக்த ஸமவாயம்—பொருத்தவியைபு
133. ஸம்யுக்த ஸமவேத ஸமவாயம்—பொருத்த வியைபு ளியைபு
134. ஸமவாயம்—இயைபு—Inherence
135. ஸமவேதஸமவாயம்—இயைபு ளியைபு
136. விசேஷண விசேஷ்யபாவம்—பண்பு பொருளியாப்பு
137. பராமர்ஸம்—ஆராய்ச்சி
138. வியாப்தி—நிறைவு
139. விஸிஷ்டம்—அடுத்துள்ளது
140. பக்ஷதர்மதம்—துணிபொருண்மை
141. ஸஹகார்யநியமம்—உடனுக்கமுறை
142. ஸ்வார்த்த அநுமானம்—தன்பொருட்டுக் கருதல்
143. பரார்த்த அநுமானம்—பிறர்பொருட்டுக் கருதல்
144. லிங்கம்—குறி
145. பஞ்சாவயவ வாக்யம்—ஐயுறுப்புத்தொடர்—Syllogism

(தொடரும்)

## வரலாற்றுப் பகுதி: History & Biography

திருவனந்தபுரம்

### திரு. தி. முத்துக்குமாரசுவாமிப்பிள்ளை B A., அவர்கள்

பண்டைத் தண்டமிழ் நாட்டினுளொன்றான சேரநாட்டுத் திருவனந்தபுரத்திற் செறிந்து சிறந்த, வேளாண் குலமக்களில் கல்வியறிவாற்றல்களிற் றலைசிறந்து விளங்குபவர் மூவர். அவர்கள் மனோன்மணிய நாடக நூலாசிரியர் திருவாளர். பெ. சுந்தரம்பிள்ளையவர்கள். எம். ஏ.; திருவாளர். தி முத்துக்குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள், பி. ஏ., இப்பொழுது விளங்கும் இசைத்தமிழ்ச் செல்வர் திருவாளர். தி. இலக்குமணப்பிள்ளை அவர்கள் பி. ஏ.

பல்பெருங்கலைகளில் வல்லுநராகித் தென்னிந்தியா முழுதும் புகழ்படைத்திருந்து காலஞ்சென்ற திருவாளர். T. முத்துக்குமாரசுவாமிப்பிள்ளை அவர்கள், வலியமேலெழுத்து திருவாளர். M. திரவியம் பிள்ளை அவர்களின் மூத்தபுதல்வரும், இசைத்தமிழ்ச்செல்வர் திருவாளர். T. இலக்குமணப்பிள்ளை அவர்களின் தமையனுரும் ஆவர்.

இவர் சைவவேளாள குலத்தில் உயரிய குடும்பத்தில் திருவனந்தபுரம் சாலைத் தெருவில் 1856-ம் ஆண்டிற் பிறந்தார். சிறு ஆண்டில் "ஆண்டியப்பன்" என்ற செல்வப் பெயர் பூண்டு சாலைத் தெருவில் ஒரு தமிழ்ப்பள்ளிக்கூடத்தில் தமிழ்ப்பயின்றார். சிறந்த வடமொழிப் பண்டிதராகவும் சோதிடராகவும் விளங்கிய காலஞ்சென்ற திருவாளர் தாணுப்பிள்ளை யவர்களிடம் மாணவராயிருந்து வடமொழியினும் மலையாளத்திலும் தேர்ச்சிபெற்றார். இதுவுமன்றி, திருவனந்தபுரம் சைவப்பிரகாச சபை நிறுவிய சிறந்த தமிழறிஞரும் வக்கீலு மாயிருந்த திருவாளர் . M. சாமிநாத பிள்ளை அவர்கள் முதன்முதல் அவ்விடம் ஆங்கிலக் கல்லூரியில் தமிழ்ப்பண்டிதராயிருக்க, அவர்களிடமும், திருவாளர். சாமிநாததேசிகர் அவர்களிடமும் தமிழ்ப்பயிற்சி பெற்று வந்தனர். தமது பன்னிரண்டாவது ஆண்டுமுதல் திருவனந்தபுரம் ஆங்கிலக் கல்லூரியில் ஆங்கிலங் கற்கத் தொடங்கி F. A., B. A., பரீட்சைகளில் முதலாவதாகத் தேறினார்.

மாணவராயிருக்கும்போதே ஆங்கிலத்தில் மிகுந்த புலமையுற்றுப் புகழ்பெற்றார். இவர் மேல் வகுப்புக்களில் மாணவராயிருக்கும்போது, நூல்கள் கற்றுக்கொண்டது பரீட்சையிற் றேறவேண்டுமென்ற ஒரே கருத்துக்கொண்டு

மட்டுமன்று; ஒவ்வொரு கலையினும் தேர்ச்சிபெற வேண்டு மென்ற விழுமிய நோக்கத்தோடேயேயாம்.

அக்காலத்தில் கல்லூரித்தலைமையாசிரியரா யிருந்த, மிஸ்டர். ராஸ் எம். ஏ., டாக்டர் ஹார்வி எம். ஏ., எல். எல், டி., என்னும் இரண்டு பெரியார்களும், இவர் கல்வித்திறமையை வியந்து, இவரை மிகவும் பாராட்டி வந்தார்கள். இவர் எழுதிய ஆங்கில நடையை வியந்து இவரை "இள மேக்காலே" (Young Macaulay) என்று டாக்டர் ஹார்வி துரைமகனார் புனைந்துரையாக அழைப்பதுண்டு. இவர் 1878-ம் ஆண்டு பி. ஏ. பட்டம் பெற்றனர்.

அந்த ஆண்டிலேயே பாளையங் கோட்டையில் C. M. S. கல்லூரியில் முதல் உதவியாசிரியராய் அமர்ந்து, பின்பு அவ்விடம் (Hindu High School) இந்து உயர்தரப்பள்ளியில் தலைமையாசிரியராயினர். அப்பள்ளிக்கூடத்தையும் பெரு முயற்சி செய்து மேனிலைக்குக் கொண்டுவந்தனர். பாளையங் கோட்டையில் "ரெவ-ஷாப்டர்." "ரெவ—லாஷ்," (Rev. Schaffter, Rev. Lash), என்ற இரண்டு ஐரோப்பிய கனவான்களின் நன்மதிப்புப்பெற்று, அவர்களின் வேண்டுகோட்கிணங்கி அவ்விடம் ("Young Men's Association") இளைஞர் சங்கத்தில் பல விரிவுரைகள் நிகழ்த்தியுள்ளார்கள். அவற்றில் எழுதி வாசிக்கப்பட்ட (1) Faith and Experience (2) Cosmos not Chaos. (3) The unknown என்னும் தலைப்புடைய மூன்று விரிவுரைகள் இப்போதும் உள்ளன. திருநெல்வேலியில் "கல்வி" என்னும் பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தியபோது திருநெல்வேலி டிஸ்டிரிக் கலெக்டர் மிஸ்டர் ஜே. பி. பென்னிங்டன் (Mr. J. B. Pennington) என்ற புகழ்பெற்ற துரைமகனார் அவைத்தலைமை பூண்டனர். அவர் பிள்ளை அவர்களின் சொற்பொழிவையும் புலமையையும் மிகவும் பாராட்டிப் பேசினர்.

1882-ம் ஆண்டுத் தொடக்கத்தில் பிள்ளை அவர்கள் திருநெல்வேலி இந்து கல்லூரி (Hindu College) யில் திருவாளர் P. சுந்தரம்பிள்ளை, எம். ஏ. அவர்களுக்குப் பதிலாக சில காலம் (Principal) தலைமையாசிரியராக இருந்தார்கள். அவ்வருடத்தில் திருவனந்தபுரம் ஆங்கிலக் கல்லூரியில் (Professor of Philosophy and Logic) வேலைபார்த்து வந்த திரு. P சுந்தரம்பிள்ளை அவர்கள் உசூர் பிறவகைசிரஸ்ததாராகச் சென்றபோது, அவ்வேலைக்குப் பிள்ளை அவர்கள் கொல்லம் ஆண்டு 8-12-82-ல் ஏற்படுத்தப் பெற்றார்கள். அவ்வேலையை மேற்கொள்ளத் திருவனந்தபுரத்துக்குப் புறப்படுந் தறுவாயில் திருநெல்வேலியில் பிள்ளை அவர்களுடைய நண்பரும்

வியப்பாளரும் கூடிப்படித்தளித்த ஒரு சிறந்த பிரிவு மொழிப் பத்திரத்தில் அவர்களுடைய கல்விவளத்தையும், மதிநுட் பத்தையும், ஆசிரியத் திறமையையும் சான்றாண்மையையும் வியந்து கூறி மகிழ்ந்தார்கள். திருவனந்தபுரத்தில் தமது புதிய வேலையை 5-2-83-ல் ஒப்புக்கொண்டார்கள். அவ் வேலையை மூன்றுவருடம் பார்த்துவரும்போது, ஆங்கிலம், கணக்கு, சரித்திரம் முதலிய பாடங்கள் கற்பிக்கும் ஆசிரியர் சிறிது காலம் ஓய்வு எடுத்துப்போகையில் அந்தப் பாடத் தைக் கற்பிப்பதற்குப் பிள்ளையவர்களே தெரிந்தெடுக்கப் படுவார்கள்.

1887-ம் வருடத்தில் பிள்ளையவர்கள் திருவிதாங்கூர் இரண்டாம் இளமன்னராகிய அசுவதி திருநாள் மன்னர் அவர்களுடைய ஆசிரியர் (Tutor) ஆக ஏற்படுத்தப் பெற்றார் கள். அவ்வேலையை மிகத்திறமையாகப் பார்த்து வந்ததால் அந்தமன்னருடைய நன்மதிப்பும் அன்பும் வாய்க்கப் பெற் றார்கள்.

1889-ம் ஆண்டு ஜனவரித் திங்களில் திருவனந்தபுரம் திவான் பேஷ்காருடைய உதவியாளரும் முதற்படி மாஜிஸ்ட் ரேற்றுமாக (Assistant to the Dewan Peishkar and First class Magistrate)ப் பிள்ளையவர்கள் ஏற்படுத்தப் பெற் றார்கள்.

அவ்வேலையில் அமர்ந்திருந்தபோது இடையிடையே இளமன்னரின் படிப்புக்காரியத்தையும் கவனிக்க வேண்டி யிருந்தது. பின்பு, கோட்டையம், பத்மனுபபுரம் இவ்விடங் களில் அதே வேலையிலும், 1890-ம் வருடத்தில் சிலமாத காலம் ஆலப்புழை கம்மர்ஷியல் ஏஜன்டினுடைய அஸிஸ் டன்டாகவும் (Assistant to the commercial agent and first class magistrate) வேலை பார்த்து வந்தனர். கோட் டையத்திலும் நாகர் கோவிலிலும் இருக்கும்போது பூக்கள் (Flowers) செடிநூல் (Botany) மனிதப்பொறுப்பு (Human Responsibility) என்னும் பொருள்கள் பற்றிப் பல சொற் பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார்கள். 1894-ல் திருவனந்த புரத்துக்குச் சில பெருமக்களால் அழைக்கப்பெற்று கரமனை யில் "இளைஞர் பரஸ்பர மேம்பாட்டுக்ககழம்" (Young men's Mutual Improvement circle) என்னும் அவைக்கண்ணே "பயிற்சி" (Culture) என்னும் பொருள்பற்றி ஒரு சிறந்த சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அன்று தலைமை தாங்கிய திருவனந்தபுரம் கல்லூரிக் கணக்குப்பேராசிரியர் (Professor of Mathematics) டாக்டர் மிச்சல் (Dr. Mitchall) துரை, மகனர் சொற்பொழிவைப் பற்றி வியந்து கூறும்பொழுது

சொற்பொழிவாளர் "மனிதரைச் சினம் முதல் பெரு வரை" (உலகமுழுதும் என்றபடி), மேற்பார்வையிட்டார் (Surveyed mankind from China to Peru) என்றுரைத்தார். அன்று அச்சொற்பொழிவைக் கேட்கவந்திருந்த பிரிட்டிஷ் ரெஸிடெண்ட் 'கிரிக்' என்னும் ஐரோப்பியப் பெருமகன் (Mr. Grigg., the British Resident) அத்துணை விழுமிய அறிவு நிரம்பிய சொற்பொழிவுகளை மக்களின் நன்மைக்காக நிகழ்த்துவித்தலால், அக்கழகத்திற்கு ஒரு பெருந்தொகையை நன்கொடையாக அளித்தனர்.

பற்பல கலைகளிலும் அறிவு வளரச் செய்து கொண்டு, ஆயிரக்கணக்காய்ப் புத்தகங்கள் படித்துச் சிறிதும் தமக்கு ஓய்வு கொடாமலிருந்த காரணத்தால், பிள்ளையவர்களுக்கிருந்த மூலநோய் மிகுந்து கடைசியாகக் காய்ச்சல்கண்டு பல மருத்துவர் முயற்சியாலும் நலப்படாமல் 1897-ம் வருடம் ஆகஸ்டுத் திங்கள் 1 நாளில் தனது 41-வது அகவையில் பூதவுடம்பு நீத்துப் புகழுடம்பு பெற்ளூர்கள். கடைசி நாட்களில் அசுவதி திருநாள் இளையமன்னர் அவர்கள் தகுந்த மருத்துவரை அழைப்பித்துத் தமது ஆசிரியராகிய பிள்ளையவர்களை நலப்படுத்தமுயன்றும் பயன்படவில்லை.

பிள்ளை அவர்கள் காலஞ்சென்றதைக் குறித்து அந்நாளிருந்த திவான், திரு. கிருஷ்ணசாமி ராயர் அவர்கள், "In him the family has lost a prominent member of great promise, the Country a great scholar and the State an honest public servant" (அவர் போனதில் அக்குடும்பம் பெரும்பதவிக்கு வரக்கூடிய ஒரு முக்கியமான உறுப்பினரை யிழந்தது, இந்நாடு ஒரு பெரிய கல்வியாளரை யிழந்தது, துரைத்தனம் உண்மைவழி யொழுகும் ஒரு தொண்டனை யிழந்தது" என்று வியந்து எழுதியது இங்குக் குறிப்பிடத் தகுந்தது.

பிள்ளையவர்கள் ஆங்கில இலக்கிய நூல்கள், பழைய கிரேக்க உரோம இலக்கிய நூல்கள், தமிழிலக்கிய நூல்கள், ஞான நூல்கள், மனோதத்துவநூல், சடதத்துவநூல், அளவை நூல், உடல்நூல், மருத்துவநூல், வரலாற்றுநூல், கணக்கு, சட்டம், சோதிடம், வானநூல், செடிநூல், உயிர்நூல், பரிநூல், தோட்டம் வைத்தல், பாகநூல் முதலிய பல துறைகளில் ஆழ்ந்த புலமையும், அகன்ற நோக்கமும், விழுமிய மனப்பான்மையும் உடையவரென்று தென்னிந்தியா முழுவதிலும் புகழ் சிறந்து விளங்கினர்.

---

# நகைச்சுவைப் பகுதி - Humour

## அடிப்படிப்பு

### வெறுஞ் சிறு மொழி

[கபசம் எழுதுவது]

[பாலையூர்ப் புலவர் குழாத்தின்முன், மாலையனூர் தலைமையின் கீழ், பகல் பன்னிரண்டு மணிக்கு நிகழ்த்தப்பட்ட ஒரு சொற்பொழி வின் சுருக்கம்.]

அறிவகன்ற ஐயன்மீர்,

தங்கள்முன் இன்று யான் பேச எடுத்துக்கொண்ட பொருள் 'அடிப்படிப்பு' என்பது. இக்குழாத்தினராகிய நீவிர் யாவரும் மிக உயர்கல்வியின ராதலால் அடிப்படிப்பைப் பற்றித் தங்கள்முன் பேச யான் மிக மிக நாணுகின்றேன். பொருளொடு பொருந்தாப் புன்மொழி, சிறுமொழி, வெறு மொழி பேசும் யான், தங்கள் முன்னிலையிற் பேசப் புகுவது பரிதிமுன் இரவி ஒளிவிட முயல்வது போலிருக்கிறது. (இங்கே, அவையிலிருந்தவர் சிலர் முணு முணுத்தனர்; இளம்புலவர் சிலர் பட்டாசு வெடித்ததுபோல் சிரித்தனர்.) இரவில் ஒளி செய்வது இரவி. இரவியா பரிதிமுன் நிற்கும்? இரவியாகிய யான் பரிதியாகிய தங்கள் முன் வெளுத்து வெட்கித் தோன்று கின்றேன். தங்களுடைய வெப்பமிக்க ஒளி காய்கின்றமை யால் யான் வியர்த்து வியர்த்துக் கொட்டுகின்றேன்; பெரு மூச்சு விடுகின்றேன், சோர்வடைகின்றேன், அயர்ந்தேன், ஆ! கெட்டேன். (ஈண்டு அவையிலிருந்த மருத்துவன் குண்டோ தரனுர் விரைந்தெழுந்து வந்து என்னைத்தாங்கி நின்று, மாத்திரை ஒன்று கொடுத்த மாத்திரையில், பித்தந் தெளிந்து எனது சொற்பொழிவை மறுபடியுந் தொடங்கினேன்.)

அடிப்படிப்பென்பது, அடியினுள்ள படிப்பென்று பொருள்படும். அடியிலிருந்து ஒவ்வொன்றும் படிப்படியாக வரவேண்டும். படிப்படியாக வருகின்றது தான் படிப்பு. படிப்பு அடியிலிருந்து வரவேண்டும். இதற்காகத்தான் முன்னுளில் பிரம்படி, மிலாற்றடி முதலியவை வழங்கப்பட் டன. (ஆ, ஆ; ஏ, ஏ; ஓ, ஓ; ஆகா, ஓகோ என்ற ஓசைகள் இங்குக் கிளம்பின.) ஆரம்பக்கல்வி என்பது அடிக்கல்வி, அடிப்படிப்பு என்பதை எவர் மறுக்கக்கூடும்? ஆயினும், அடிப்படிப்பு என்று ஆரம்பக் கல்வியைச் சொல்லுவார் யாரு மிலர். அடிப்படிப் பென்று சொல்ல அஞ்சுகின்றூர்கள், நடுங்

குகின்றார்கள். இது பெரிதும் வருந்தற்குரியது. இதை நினைத்தால் எனக்கு அழுகை வருகின்றது. கண்ணீர் ஆறாய்ப்பெருகுகின்றது. என்னாற் பேசக்கூட முடியவில்லை. நாக் குழறுகின்றது. (இந்த நிலையில் நாவல் இலை கொண்டுவந்து வீசி, நாவற்பழம் அருந்தக் கொடுத்தபின் நாவன்மை எனக்குத் திரும்ப வந்தது.)

படிக்க வருகின்ற பிள்ளைகளுடைய தோலைப் பிரம்பு, மிலாறு முதலியவை கொண்டு பதனிட்டால், அவர்களுடைய அறிவு பதம் பெறும் என்ற கொள்கை ஒன்று இருந்தது. பதம் பெறுதல் என்ற சொற்றொடர்க்கு அடி அடைதல் என்பது பொருள். அடி அடையவேண்டும். ஒவ்வொருவரும் அடி அடையவேண்டும். அவ்வடி, சேவடி, சீரடி, மலரடி என்று பலவகைப்படும். சிவந்து தோற்றுமாறு கொடுக்கும் அடி சேவடி. மற்றவற்றிற்குப் பொருள் கண்டுகொள்க. தோலைப் பதனிட்டு அறிவு பதம் பெறச் செய்தலை இக்காலத்திற் பெரும்பாலர் ஏற்றுக் கொள்வதில்லை. பெரும் பாலர் யார்? பெரிய பிள்ளைகள்—மீசை முளைத்த குழந்தைகள், கிழக் குழவிகள், இவர்கள் தான் பெரும்பாலர். இந்த நிலையில் அடிப்படிப்பு என்பது, அடியற்ற படிப்பாக மாறிக்கொண்டு வருகின்றது. மற்றும், அடி என்பது தாள் என்ற பொருளுடைமை குறித்து, ஏட்டுப் படிப்பைத் தாள் படிப்பாக மாற்றி விட்டார்கள். நாட்டில் எங்குப் பார்த்தாலும் சிறுவர்கள் கல்வி செவ்வனே நடைபெறுகிறதில்லை என்ற கூப்பாடு கிளம்புகின்றது. அடி சரியாய் வைக்காவிடின் நடை எங்கிருந்துவரும்?

இப்பொழுது சிறு பிள்ளைகளுக்குக் கற்பிக்கின்றவரெல்லாம் அடி என்பதை அகற்றிவிட்டு, வேறு முறைகளைக் கையாண்டு வருகின்றார்கள். குடிக்கின்றவர் குடியர் என்பது போல் அடிக்கின்றவர்கள் அடியர்களாயிருக்க வேண்டும். அடிக்கமாட்டோம் என்று சொல்கின்றவர்களை அடியர்கள் என்று எங்ஙனஞ் சொல்வது? அடியர்கள் அடியாராயினர். இவ்வடியார் கூட்டத்தை நாம் பகைக்கவேண்டும், எதிர்க்க வேண்டும், அவரோடு பெரும் போர் தொடுக்கவேண்டும். இது குறித்தன்றே யான் ஈண்டுத் தங்கள் முன்வந்து பேசத் துணிந்தது. அறிவு முற்றின ஐயன்மீர்! அடிப்படிப்பை முன்னிருந்த நிலைக்குக் கொணர்தற் பொருட்டு விரைந்தெழுமின், வினை செய்ம்மின், பொருள்கொடுமின், போர் தொடுமின்! (பெருத்த ஆர்ப்பரிப்பு).

இதன் பின் மாலையனார் எழுந்து எனக்கு மாலைசூட்ட, மால்மகனார் என்ற வினையாளர் மேடையில் வந்து நன்றி கூறக் கூட்டம் இனிது கலைந்தது

## மலைபு எழுத்துக்கள்

["மால்" எழுதுவது]

1. எந்த எழுத்து மணக்கும்?
2. எந்த எழுத்துச் சுடும்?
3. எந்த எழுத்து எழுத உதவும்?
4. எந்த எழுத்து நாறும்?
5. எந்த எழுத்து எழுதும்?
6. எந்த எழுத்துப் பறக்கும்?
7. எந்த எழுத்து "இருக்காதே" என்னும்?
8. எந்த எழுத்துப் பிறனொருவனைக் கூப்பிடும்?
9. எந்த எழுத்தில் முப்பது நாட்களிருக்கும்?
10. எந்த எழுத்தில் பொருள்களைப் போட்டுக்கொள்ளலாம்?
11. எந்த எழுத்து பம்பாய் மாகாணத்திலுள்ள பெரும் பட்டினங்களுள் ஒன்று?
12. எந்த எழுத்து இரட்டித்தால் ஓர் உறவு முறையைக் காட்டும்?
13. எந்த எழுத்து இரக்கும்?
14. எந்த எழுத்து வாயைப் பிளக்கும்?
15. எந்த எழுத்து இரட்டித்தால் முறையிடும்?
16. எந்த எழுத்து இறக்கச் சொல்லும்?
17. எந்த எழுத்து வெறுத்து ஒதுக்கும்?
18. எந்த எழுத்து உசுப்பும்?
19. எந்த எழுத்து உமிழும்?
20. எந்த எழுத்துப் பிறனொருவனை மரியாதையின்றி அழைக்கும்?

---

| | | | | |
|---|---|---|---|---|
| 1. பூ. | 2. தீ. | 3. மை. | 4. பீ. | 5. கை. |
| 6. ஈ. | 7. போ. | 8. வா. | 9. தை. | 10. பை. |
| 11. பு.(பூனா) | 12. மா.(மாமா) | 13. தா. | 14. ஆ. | 15. கூ. கூ. |
| 16. சா. | 17. சீ. | 18. சூ. | 19. தூ. | 20. டே. |

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

## இந்திய நாடும் சமஸ்கிருதமும்

[பண்டித அ. நடராஜ பிள்ளை]

நாளது யுவஆண்டு ஆவணித்திங்களில் வெளியான கலைமகளின் கட்டுரைகளிலொன்றாகிய, "சமஸ்கிருதப் பெண்கவிகள்," என்பதனைக் காண நேர்ந்தது. அதன்கண், கட்டுரையாளர் முன்னுரையாகச் சிலவற்றை மொழிய முன்வந்து, வேண்டா கூறலாக, "இக்காலத்தில் ஆங்கிலம் இந்தியாவில் எந்த ஸ்தானத்தை வகித்து வருகிறதோ, அந்த ஸ்தானத்தைப் பண்டைக் காலத்தில் வகித்து வந்த ஆரியமொழி," என்ற தொடரொன்றைப் பொருத்தமின்றிப் போட்டுச்சென்ற போக்கே நமது கட்டுரைக்கு முழு முதலாகுமென்பதைச் செல்வி யன்பர்கள் நினைவிலிருத்த முயல்வதே நமது கட்டுரையின் முன்னுரையாம்.

இக்காலத்தில் ஆங்கிலம் இந்நாட்டில் எந்நிலையிலுளது என்பதைக் கட்டுரையாளர் கூர்ந்து நோக்கியிருப்பாராயின் அங்ஙனங் கூறமுன் வந்திருக்கவே மாட்டார். முதலாவது இலக்கிய மொழியாகவே இந்தியநாட்டில் எக்காலத்திலும் வழங்கிவந்த சமஸ்கிருதம் அரசியல் மொழியாகிய ஆங்கிலத்தின் நிலையினை எவ்வாறு எய்துதல் கூடும்? இரண்டாவது எந்த ஆரியவரசன் காலத்திற் சமஸ்கிருதம், இந்திய நாடெங்கும் ஆங்கிலமொழிபோல் பொது மொழியாகப் பேசப்பட்டும், எழுதப்பட்டும் வந்தது? இவ்விரண்டு வினாக்கட்குமுரிய விடைகளை முன்னர் எடுத்துக்காட்டி, அத்தொடரினை அவர் கையாண்டிருப்பின், யாம் எவ்விதக் குறையுங்கூற முன்வந்திருக்க மாட்டோம்.

அங்ஙனமன்றி, இந்திய நாட்டின் முக்காற் பங்கிற்கு மேல் ஆண்ட பேரரசனாகிய அசோகன் காலத்திலும், பாளி என்ற ஒருவித மொழியே பரவி இருந்தது என்ற உண்மையினையும், அவ்வசோக வரசனின் ஆட்சியும் புகாத தமிழ் நாட்டில், பாளி என்ற மொழியும் பரவ இயலாது போயிற்று என்ற நிலையினையும் கட்டுரையாளர் அறிந்து மறந்தோ, அன்றி அறியாமையாலோ அங்ஙனம் வரைந்து சென்றது, அவர் அம்மொழிமாட்டுக் கொண்ட குருட்டுப் பற்றினையே தெரிவிக்கின்றது.

பல்லாவரம் பொது நெறிக்கழகப் பேராசிரியர் மறைமலையடிக ளார் எழுதித் தொகுத்த "அறிவுரைக் கொத்து" என்னும் நூலைச் சென்னைப் பல்கலைக்கழக இடை வகுப்பிற்கு இவ்வாண்டுப் பாட புத்தகமாக வைத்திருந்ததைக் குறித்து எழுப்பப்பட்ட தடையைப் பற்றி முன் இதழில் குறிக்கப்பட்டது. நற்காலமாக அத்தடை ஒதுக்கப்பட்டு நூல் பாடபுத்தகமாக இருத்தல் வேண்டுமென்று பாட புத்தகக் கழகத்தார் முடிவு செய்ததைக் குறித்துக் கழி பேருவகை யெய்துவதுடன் அக்கழகத்தாரை மானமார வாழ்த்து கிறோம்.

* * * *

சென்னைப் பல்கலைக் கழக **வித்வான் தேர்தல் கழக** உறுப்பின ராகவும் தலைமைத் தேர்வினராகவும் பல ஆண்டுகளிருந்து தொண் டாற்றிவந்த மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி உ. வே. சாமி நாதையர் அவர்களுக்குப் பதிலாக ஆன்றகேள்வி அருந்திறற் புலவர் திருவாளர் **கா. நமசிவாய முதலியார்** அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர். திருவையாறு கல்லூரிப் பெரும்புலவர் **வேங்கடா சலம் பிள்ளை** அவர்களும் தேர்வுக் கழக உறுப்பினர்களில் ஒருவ ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## மதிப்புரை

### கபிலரகவல்

கபிலரகவல் என்னும் இந்நூல் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னே திருவள்ளுவர் உடன்பிறந்தவரான கபிலர் என்னும் நல் லிசைப் புலவரால் எளிய இனிய தமிழ் நடையில் பாடப்பெற்றது. கஙஅ அடிகளேயுடைய இந்நூலிற் பொதிந்துள்ள அறவுரைகளத் தனையும் திருக்குறளிற் போந்த அறவுரைகளோடு ஒத்து, அவற்றி னுஞ் சுருக்கமுடையனவாய், எல்லா மதத்தவராலும் எல்லா மக்கட் பிரிவினராலும் உவந்தேற்றுக் கொள்ளப்படும் விருப்பம் வாய்ந்தன வாய், பயில்வோருள்ளத்திற் பசுமரத்தாணியெனப் பதியுங் கூர்மை வாய்ந்து திகழ்கின்றன. இந்நூலை அழகியதாய்க்குறிப்புரையுடன் அச்சிட்டு அடக்க விலைக்கு வெளியிட்ட சென்னைத் தமிழ்ப் பாது காப்புக் கழகத்தார்க்கு எங்கள் நன்றி உரிமையாகின்றது.

| | |
|---|---|
| தனிப்பிரதி விலை | அணா $\frac{1}{4}$ |
| 25 பிரதிகள் | அணா 4 |
| 100 பிரதிகள் | அணா 12 |

25 பிரதிகட்குத் தபாற் கூலி 2 அணாவாகும். அடியிற்கண்ட விலாசத்தில் கிடைக்கப்பெறும்.

கிடைக்குமிடம்:—

தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்,
139, பவழக்காரத் தெரு, சென்னை.

### தூ - சிந்து, (தூவு)

வினைச்சொல் ஏவல்

[த்+உ+உ+உ=தூவு=தூ] (த்) கண்ணுக்குத் தோற்றப்படு பொருளை (உ) மற்றொன்றில் உகு என ஆதலின், தூ=சிந்து எனலாயிற்று.

சிதர்த்தலே உகுத்தல் தூவல் சிந்தல் —சூடாமணி நிகண்டு.

### தூ - தெளி, (நீர்மயப்பொருளை இறை)

வினைச்சொல் ஏவல்

[த்+உ+உ+உ=தூவு=தூ] தோற்றப்படுவதாயுள்ள நெகிழ்ச்சியாகிய நீர்மயப்படுபொருளை மற்றொன்றிற் படச்செய் என்னலின், தூ=(தூவு) தெளி என்னல் ஆயிற்று.

### தூ - மழைத்துளி, தூவு

வினைச்சொல் ஏவல்

[த்+உ+உ+உ=தூவு, தூ] விண்ணிலிருந்து விழு மழைத்துளி மண்ணின்மேல் தோற்றப்படு பொருளாய்ச் சிந்துவதாதலின், தூவு=தூ=மழைத்துளி தூவு என வழங்கலாயிற்று.

### தூ - தசை, (ஊன்)

பெயர்ச்சொல்

[த்+உ+உ+உ=தூவு=தூ] காட்சிக் குட்படுவதாய்த் தோற்றத்தினுட்கொண்டெழுந்து இடைப்பட்டு நின்று மாற்றத் தகுவதாயது தாதுப் பொருளாதலின், தூ=தசை எனல் ஆயிற்று. இதனுள எழுவகைத் தாதுக்களாகிய இரதம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல் என்பவைகளும் ஏற்கும்.

தசை, புலால், புனிதம், புன்னை தடியொடு புளிதந் தூவே.
—சூடாமணி நிகண்டு.

### தூ - பறவையின், இறகு தூவல்

பெயர்ச்சொல்

[த்+உ+உ+உ=தூவு=தூ] புள் என்னும் பறவையின் உடலுள் மேற்கூறிய வண்ணமே காட்சிப்பட்டெழுந்து நின்றுதிர்வது இறகுதூவல் முதலியனவாதலின், தூ=பறவை யிறகு, தூவல் எனவாயிற்று.

### தூ - தூய்மை, (சுத்தம்) தெளிவு

பெயர்ச்சொல்

[த்+உ+உ+இ=தூய்=தூ] கண்ணுக்கினிமை விளைக்குந் தோற்றத்துப் பண்பாயமைந்து நிற்றலின், தூ=சுத்தம், தெளிவு என்னல் ஆயிற்று.

மேதகு புனிதம் தூவே. —சூடாமணி நிகண்டு.

### தூ - வெண்மை

பெயர்ச்சொல்

[த்+உ+உ+இ = தூய் = தூ] மேற்கூறிய வண்ணமே எழுந்து காட்சிக்கினிமை விளைக்கும் நிறமாயமைதலின், தூ=வெண்மை எனலாயிற்று.

### தூ - பகை

பெயர்ச்சொல்

[த்+உ+உ+உ=தூவு=தூ] கண்ணுக்குக் காணப்படும் தோற்றத்தின் எதிர்த்தெழுந்து சினக்குறிப்பு, பழிச்சொல், இன்னாச்சொல் முதலியவைகளைத் தூவி முரணிநிற்றலின், தூ=பகை என வழங்கலாயிற்று.

### தூ - பற்றுக்கோடு

பெயர்ச்சொல்

[த்+உ+உ+உ=தூவு=தூ] அகவிழி முகவிழிகளாற் கண்டுகொள்ளத் தக்கநிலைமையில் அன்பு, ஆதரவு, இன்சொல் முதலியவைகளைத் தூவி அணைத்து நிற்றலின், தூ=பற்றுக்கோடு எனலாயிற்று.

தூ-என்பது முன்னிலை இகழ்ச்சிக் குறிப்பிடைச்சொல், மானம், ஒழிந்தது, தோற்றம் உகு எனல் குறி.

கருதுபற்றுக் கோடேற்றம், கந்து தூத் தஞ்சமும் பேர்.

—சூடாமணி நிகண்டு.

### நூ - அவி (அவிதல்), தோள்

வினைச்சொல் ஏவல்

[ந்+உஃகு+நகு=நூ] உள்ளினுள் உயிர்வலி உகுந்து நில் எனலின், நூ=அவி என்றாயிற்று.

நூ - நோய்வுபட்டு, நில்

வினைச்சொல் ஏவல்

[ந்+உஃகு=நகு=நூ] உயிர்வலி குறைந்து உறுதி கெட்டு நில் எனலின், நூ=நொது, நொதுத்து நில் எனலாயிற்று.

நூ - அணி, ஆபரணம்

பெயர்ச்சொல்

[ந்+உ+உ=நூ] உள்ளுக்குள் அமர்ந்த உயிர்க்கு நலம் விளைத்து நிற்கும் ஓர் வேற்றுப்பொருள் என்னப்படுதலின், நூ - அணி, ஆபரணம் என்னலாயிற்று.

நூ - எள்

பெயர்ச்சொல்

[ந்+ஊ+நூ] நயமமைந்த எண்ணெய்யை உள்ளினின்றும் உதவுவதாதலின், நூ=எள் எனலாயிற்று.

எண்ணெடு திலமு நூவும் எட்கவ்வை விளங்காயின் பேர்.

—சூடாமணி நிகண்டு.

பூ - உண்டாகு, (தோற்றப்படு)

வினைச்சொல் ஏவல்

[ப்+உ+உ=பூ] இச்சொல்லை வடமொழியில் ஹூ என்பதாக வைத்து இந்தப்பொருள் கூறுவர்; ஆனால் தமிழ் மொழியாகவே கொண்டால் பின்வருமாறு பொருள் அமைதி பெறல் காண்க - பகரம் பொதிவுப் பொருளது. உகரம் அங்குளது இங்குளது என்னாது நடுவது மேலது கீழது வேறுயது என நிற்கும். ஆகவே, உண்ணிலை பொதிந்த மேலெழுந்த பார்வையில் உள்ளதாக ஆகு அல்லது பொது நோக்கத்துக்குக் காணப்படு என அமைதலில், பூ-உண்டாகு, தோற்றப்படு என ஆயிற்றென்க. (இங்கிலை ஓர் பொருளை உண்டு என அதன்மேல் வடிவத்தை மட்டும் பார்த்து நிற்பதன்றி, அதன் உண்ணிலையை உய்த்துணர்தற்கில்லாத நிலை) இதைத்தான் பொதுமெனக் கூறியது - முன் கண்டிராது ஒன்றுய் எழு என்பதாம். இங்ஙனம் தோற்றல் ஓர் பொருளின் முதற்பார்வை என்னலாம்.

### பூ - பய (பேறு)

வினைச்சொல் - ஏவல்

[ப்+உ+உ=பூ] தான் பொதிபொருளாயேற்றுத் தன்னில் ஒன்றைப் பூத்து வெளிப்படுத்து என்றுதலின், பூ=பய என்னும் பொருள் கொண்டது.

### பூ - மாதவிடாய் ஆகு

வினைச்சொல் - ஏவல்

[ப்+உ+உ=பூ] மேற்கூறிய வண்ணமே தான்பொதி பொருளாய்த் தன்னில் பூப்படை என ஆகலின், பூ=மாதவிடாய் ஆகு எனலாயிற்று.

### பூ - பிறவி

வினைமுதல் தொழிற் பெயர்

[ப்+உ+உ=பூ] மேற்கூறிய வண்ணமே பூத்தல் தோற்றத்தினுகுதல் எனப்படுதலின், பூ=பிறவி என்றுயிற்று.

### பூ - மகளிர் சூதகம்

வினைமுதற் தொழிற்பெயர்

[ப்+உ+உ=பூ] தான் பொதிபொருளாய்த் தன்னிற் கொள்ளும் பூப்பு என ஆகலின், பூ=மகளிர் சூதகம் எனலாயிற்று.

### பூ - நிலம், விளைவு

பெயர்ச்சொல்

[ப்+ஊ=பூ] தன்மேற் பொதிவாய் விளைபொருளை ஏற்றுகுத்து நிற்றலின், பூ - நிலம், விளைவு என்றுயிற்று.

விடப்படாத்திணையே மாவே வே, வேலி, பூ, நிலனுற்பேரே.

—சூடாமணி நிகண்டு.

### பூ - இடம், மண்ணுலகம்

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] தன்மேற் பொதிபொருளாய் எல்லாத் தோற்றங்களையும் ஏற்று நிற்கும் இடமென்றுதலின் பூ=இடம், மண் உலகம் எனப்பொருள் கொள்ள நின்றது.

புவனி, மண்டலம், தலம், பூ —சூடாமணி நிகண்டு.



மாநூற் பேரறிஞர்

**லூதர் பர்பாங்க்**

கOக-ஆம் பக்கம் பார்க்க.




சிலம்பு-கச] யுவ—புரட்டாசி [பரல்-உ

## திருவாசகம்

### அச்சோப்பதிகம்

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

பதவுரை:—

முத்திநெறி அறியாத—வீடு அடைதற்கு ஏதுவாயுள்ள நெறி இன்னது என்று (சிறிதும்) அறியாதிருந்த.

மூர்க்கரொடு முயல்வேனை—மூடர்களுடன் (பழகி நிலையுள்ளது உலக வாழ்வே என்று எண்ணி) வினை செய்து கொண்டிருந்த எனக்கு.

பழவினைகள் பாறும்வண்ணம்—முன் பல பிறவிகளில் நான் செய்த சஞ்சித வினைகள் என்னை அடையாது விட்டு நீங்கும்படி.

பத்திநெறி அறிவித்து (உம்)—(உண்மை ஞானத்துக்குச் சேர்ந்த சரியை, கிரியை, யோகம், ஞானம் அடங்குவனவாயுள்ள) அன்பு நெறியை எனக்குக் காட்டிக் கற்பித்தும்.

சித்தம் மலம் அறுவித்து (உம்)—(அவ்வாறு கற்பித்தபடி நான் ஒழுகினதனாலுண்டாகும் பயனாக) எனது உள்ளத்தில் தனது அருட் பேரொளியை நிறைவித்து அதனால் அதனைவிட்டு மும்மலத் தொடக்கு முற்றிலும் நீங்கும்படி செய்தும்.

சிவமாக்கி (உம்)—(அவ்வாறு முற்றிலும் மும்மலங்கள் நீங்கியதாலுண்டாகும் பயனாகச்) சிவமாந் தன்மையை அடையும்படி செய்தும்.

எனை ஆண்ட—(சிவமாந்தன்மை அடைந்த) என்னைப் பின் தனது அடிமையாக ஆண்டு பேரின்பம் அருளிய.

அத்தன்—என் தந்தையாகிய சிவபெருமான்.

எனக்கு அருளியவாறு—எனக்கு அருள்செய்தது போல.
ஆர்பெறுவார்— வேறே யார் பெறவல்லார்?

விளக்கவுரை:—

முத்திநெறி—சமயம் என்பது மக்களுக்கு இறைவனை யடைந்து பேரின்ப முறுதற்குக் காட்டும் நெறி (வழி) யாகும். சைவ சமயத்திலும் சமய இலக்கணமுள்ள பிற சமயங்களிலும் இரு பெரும் பிரிவுகளுள் ஒன்று உலகநெறி, மற்றொன்று வீட்டுநெறி உலக நெறியில் சமயங்கள் மக்களுக்கு அறத்தின்வழி ஈட்டிய பொருளைக் கொண்டு அறத்தின்வழி உலக இன்பமாகிய சிற்றின்பத்தை நுகரும் முறையைக் கற்பித்து, உலக போகத்தில் அமிழ்த்தி, போகத்திற் கேதுவாகிய பொருள்களில் பற்று வைத்து ஒழுகச் செய்யும். பல பிறவிகளில் உலக நெறியி லொழுகி அநுபவ முற்றியதனு லுண்டாகும் பயனாக நிலையில் லாத உலகவாழ் வின்பத்தில் உவர்ப்பானது மனதில் அடையப் பெறும் பக்குவ அறிவுடைய மக்களுக்குச் சமயங்கள் வீட்டு நெறியைக் கற்பிக்கும். இந் நெறியில் மக்கள் உலகவாழ்வின் குறிக்கோள் இன்னது என நன்கு உணர்ந்து அறம், பொருள், இன்பம் மூன்றிலும் பற்றுவிட்டுப் பேரின்பத்தையே அடையுங் கருத்துடையவர்களாய் அருளே கண்களுக்கொண்டு அருளின் வழியிலே தங்கள் அறிவு வேட்கை செயல்களைச் செலுத்தி ஒழுகி, முறையே சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நிலைகளை அடைந்து மெய்யறிவும், மெய்யன்பும் பெற்றுப் பேரின்பம் அடைவார்கள். இந்த நெறியே இங்கே கூறப்படும் முத்திநெறி—முத்தி என்ற வடமொழிச் சொல் கட்டு விடுதல் என்று பொருள்படும். (முஞ்ச்=To release). உலகப்பற்றை விட்டு இறைவனையேபற்றிப் பேரின்பம் அடைதற் கேதுவாகிய நெறி முத்திநெறி. இதுவீட்டு நெறி என்று தமிழில் கூறப்படும்.

அறியாத மூர்க்கரொடு முயல்வேனை—பெறுதற்கரிய மானுடப் பிறவியைப் பெற்றிருந்தும் பெறுதற்கரிய பேரின்பப் பேறு இன்னது என்று அறியாது சிற்றின்ப உலக வாழ்வில் உழன்று வருந்துகிற மக்களை 'மூர்க்கர்' என்றார். மூர்க்கராவார் இன்னது செய்தால்; இன்னது விளையும் என்று அறியாது ஒழுகுகிறவர்கள். இதனால் மூர்க்கர் என்ற சொல்லுக்கு மல மறைப்பை அறியாத மூடர் என்று பொருள் உரைக்கப்பட்டது. முயலுதல்=வினை செய்தல்; அறிவுவேட்கை செயல்களை உலக விடயங்களிற் செலுத்தி வினைசெய்தல். உலக நெறி ஒழுகுகிறவர்கள் ஒன்று சேர்ந்து ஒருவரை யொருவர் மதித்து ஒழுகுகிறவர்களாதலின்

மூர்க்கரோடு முயல்வேனை என்றார். முயல்வேனை—உயர்திணை ஆண்பால் தன்மை ஒருமை வினையாலணையும்பெயர் : வழக்கமாய் முயன்றுவந்தவனாகிய நான். முயல்வேனை என்பது முயல்வேனுக்கு என்ற நான்காம் வேற்றுமைப் பொருளில் வந்த வேற்றுமை உருபுமயக்கம். முயன்றேன் (முயன்றுவந்த எனக்கு) என இறந்தகாலத்தாற் கூறற்பாலது தெளிவுபற்றி முயல்வேன் என எதிர்காலத்தாற் கூறப்பட்டது.

பழவினைகள் பாறும் வண்ணம் பத்திநெறி அறிவித்து—பத்திநெறி என்பது இறைவனைப்பற்றும் மெய் அன்பு நெறி ; உலக அன்பு நெறி அன்று.

இறைவன், உயிர்கள் தன்னை அடைந்து பேரின்பம் பெறும் பொருட்டுச் சலிப்பின்றிச் செய்து வரும் பேரருட் செயல்களை அறிந்து நினைந்து அகங் குழைந்து உருகி அவனிடத்து அன்பு செய்வது மெய் அன்பு ஆகும். இவ்வாறு அறிந்து செய்யும் அன்பே அழுத்தமாயுள்ள மெய்யன்பாயிருக்கும். இந்த மெய்யன்பானது தன்னை உடையவர்களை இறைவனுடைய திருவடிகளிற் சேர்க்கும் திறனுடையது ஆதலின் பத்தி நெறி யறிவித்து என்றார். "உன் குரை கழற்கே கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே" என்று அடிகள் வேறொரு பாட்டிற் (558) கூறியது காண்க. உண்மைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கும் அரும்பு, மலர், காய், கனிகள் போன்ற வளர்ச்சி முறைகளாக இந்தப் பத்தி நெறியாகிய மெய்யன்பு நெறியில் அடங்கும். இந்தப் பத்தி நெறியும் முதலாவது வரியிற் கூறப்பட்ட முத்திநெறியும் ஒன்று தான், வேறன்று. பழவினைகள்—முன் பல பிறவிகளில் ஈட்டப்பட்டு நுகர்ந்து கழிக்கப்படாது புத்தி தத்துவத்தில் சூக்குமமாய்த் தங்கியிருக்கும் வினைத்தொகுதியாகிய சஞ்சித வினைகள். மெய்யன்பு நெறியில் நின்று இறைவனோடு ஏகமாய் நின்று அவன் பணியாக எல்லா வினைகளையும் செய்யும் மக்களுக்கு ஆகாமிய வினை ஏறாது எடுத்த பிறவி நுகர்ச்சிக்கு முகந்து கொள்ளப்பட்ட பிராரத்த வினை, உடலூழாய்க் கழியும் ஆதலின் அடிகள் எஞ்சி நின்ற சஞ்சித வினையைப் பழ வினைகள் என்றார். பாறுதல் என்பது ஓடுதல்; அதாவது, தங்காது விரைவில் அகலுதல். தீயின் முன் பஞ்சுபோல, தீக்கையால் சஞ்சித வினை அழிதலின் பாறும் வண்ணம் என்றார்.

(1) சித்தம் மலம் அறுவித்து. (2) சிவம் ஆக்கி. (3) எனை ஆண்ட (ஆண்டு பேரின்பமருளிய)—சிவாநந்த அநுபோகத்துக்கு இலக்கணமா யமைந்துள்ள இம் மூன்றும் முறையே வேறாதல், உடனாதல், ஒன்றாதல் என்னும் மூவகைச் சிறப்பு இயல்பு அத்துவித நிலைகளைக் குறிக்கின்றன. 'இன்றெனக்கருளி' என்ற முதற்குறிப்புப் பாட்டிற் கூறப்பட்டபடியே இந்தப் பாட்டிலும் அவை கூறப்பட்டிருக்கின்றன. கூறப்பட்ட சொற்கள் மாத்திரம் வேறு. ஆதலின் அப்பாட்டின்கீழ்க் கூறப்பட்ட குறிப்புகளை இவற்றிற்குங் கொள்க. பத்திமையும் பரிசுமிலா என்ற

முதற்குறிப்புப் பாட்டிலும் இந்த மூவகை அத்துவித நிலைகளும் வேறு சொற்களாற் கூறப்பட்டிருக்கின்றன. இந்திரிய வயமயங்கி என்ற முதற்குறிப்புப் பாட்டில் சிந்தைதனைத் தெளிவித்து என்றும், சிவமாக்கி என்றும், எனை ஆண்ட என்றும், இந்தப் பாட்டிற் போலவே கூறப்பட்டுள்ளன. ஆனால் அந்தப் பாட்டில் சிந்தைதனைத் தெளிவித்து என்பதற்கு மட்டும் இந்தப் பாட்டில் சித்தமலம் அறுவித்து என்பது சிந்தை தெளிவித்தலுக்குக் காரணமாகக் கூறப்பட்டுள்ளது. இப்பாட்டுக்கள் ஒன்றை யொன்று விளக்குவனவாயுள்ளன. இந்த மூன்று அத்துவித நிலைகளும் பத்தி நெறி என்று இந்தப் பாட்டிற் கூறப்பட்டபடியால் உண்மைச் சரியை கிரியை யோகம் ஞானங்கள் பத்தி நெறியில் எவ்வாறு அடங்கும் என்பது இங்கே குறிக்கத் தக்கது. உண்மை ஞானத்துக்குச் சேர்ந்த ஞானத்தில் சரியை சித்தமல மறுவித்து என்பதிலும், ஞானத்தில் கிரியையும் யோகமும், சிவமாக்கி என்பதிலும், ஞானத்தில் ஞானம் எனை ஆண்ட என்பதிலும் அடங்கும். உயிரானது ஞானத்தில் சரியையால் மாயைத் தொடர்புடைய மலம் முற்றிலும் நீங்கப் பெற்றும், ஞானத்தில் கிரியை யோகங்களால் அருள் விளக்கம் அடைந்து சிவனுடைய எண் குணங்களும் பதியப் பெற்றுச் சிவமாகியும், ஞானத்தில் ஞானத்தால் பேரின்பப் பேற்றினிமித்தம் சிவனால் அடிமையாக ஆண்டருளப் பெற்றும் சிவனுடைய திருவடிகளை அடைகின்றது. இந்த மூன்று நிலைகளும் காரிய சுத்த நிலைக்குச் சேர்ந்தவை. காரண சுத்த நிலையே நாவினால் இன்னது என்று கூற வொண்ணாத சிவானந்த சிவாநுபவ நிலையாகும். சித்தமலம் அறுவித்து என்பதிலும் சிவமாக்கி என்பதிலும் உம்மை உருபுகள் தொக்கன.

அத்தன்—சிவபெருமானுக்குப் பேரின்பம் அடையப் பெறும் தாம் மகன் என்னும் கேண்மையால் அவனுடைய உரிமைகள் எல்லாம் அடைதல் பற்றி அடிகள் சிவபெருமானை இந்த இடத்தில் அத்தன் என்று கூறி அருளினர். சிவஞான சித்தியார் எட்டாவது சூத்திரம் முதலாவது பாட்டில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்களை நோக்குக.

ஆர்பெறுவார்—அடிகள் தம்மைச் சிவபெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து ஆட்கொண்டு பேரின்ப மருளிய அரிய நிலையை அதற்கு முன்னுள்ள தமது நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தும் அளவிலடங்காத் தமது வியப்பைக் கூறுகின்றார். "என் சிரத்தினுறுகால் பிறர்க்கரியோன் " என்று அடிகள் திருக்கோவையார் 126 வது பாட்டிற் கூறியது காண்க.

அச்சோவே—அச்சோ என்பது வியப்புக் குறிப்புச்சொல். 'ஏஅசை.'

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

# புதுக் கவிகள்-Original Poetry

## திருவள்ளுவர் சிந்தனை

[பண்டித. அ. நடராஜ பிள்ளை]

(மயங்கிசைக் கோச்சகக் கலிப்பா)

(தரவுகள்)

"தென்றமிழ்த்தாய் செய்தவத்தாற் சிறப்புள்ள தென்னாட்டில்,
மன்மரபில் வந்துதித்த மாபுலவோய்! வாய்மைமுதல்,
பிறனில்லை விழையாமைப் பேரறங்க ளிற்சிறந்தோய்!
அறனில்லை யரசியலி னறிவற்று லெனவுணர்ந்து,
பொதுமக்கள் பலர்க்குதவி புரிந்திடவே, அரசியலிற்
பொதுமக்கள் போற்றமைச்சர் புகழ்வாழ்வி லமர்ந்தோயே!" 1

"பல்லூழி முதற்கணிலே பலர்பரவத் தமிழ்நாட்டில், [கும்
எல்லோனின் கதிர்த்திரள்போ லிருந்ததமிழ் மொழித்தாய்க்
பொல்லாத காலமெனப் புரண்டுவந்த கடற்பெருக்கால்,
எல்லோரும் போற்றுமறை யிடருற்றுப் போய்மறைய,
கல்லார்போற் றமிழ்மக்கள் கருத்திலராய் வாழ்நாளில்,
வல்லோய்! நீ திருக்குறளைத் தமிழ்மறையாய் வகுத்தனையே" 2.

(தாழிசைகள்)

"கூர்த்தமதி மிகக்கொண்டு குவலயத்தோர்க் குதவியங்கே
சீர்த்தமதி வள்ளுவரென் றிருப்பெயராஞ் சிறப்புற்றாய்." 1.

"வள்ளுவரென் யெபர்ப்பொருளை மறந்தந்தோ! தமிழ்மக்கள்
வெள்ளைமொழிப் பொருள்கொள்ள விதித்தவிதி கொடுவிதியே!" 2.

"தமிழ்மறைநூற் றனிப்பயனுந் தகைமைகொடு முப்பாலாய்த்
தமிழ்மறையாந் திருக்குறளைத் தனிச்சிறப்பா யெமக்களித்தாய்" 3.

"பொருளறியா வாரியரிற் பொல்லோர்கள் வடமொழியிற்
பொருளாகு நாற்பொருளே போற்றினிரென் றேகுரைப்பர்." 4.

"மக்கடம வாழ்க்கைக்கு வாய்த்திடுந லின்பமதே
மிக்கதென வீட்டுக்கே யின்பப்பால் விளம்பினையே." 5.

"பேரின்ப வடிநிலையா மகப்பொருளின் பெருமையினை
ஓர்ந்தறியார் காமமென வொதுக்கியதென் பேதமையே!" 6.

"பன்னாட்டு மக்களது பரந்தபல கொள்கைகளும்
நந்நாட்டுக் குரியவென்ற நாவன்மை மிகப்பெரிதே!" 7.

"பொதுவுடைமைக் கருத்ததனை யொப்புரவாய்ப் பொதிந்துவைத்த
இதுபுதுமை யெனவியக்க வெந்நாளு நின்றனையே!" 8.

(தனிச்சொல்)

"எனவுன்னி."

(சுரிதகம்)

"நிற்பெரு நிலையை நேடின ரேங்கிப்
பற்பலர் நினது பழமையைத் துருவிக்
கழகம் பலகாண் காலையில், சான்றோர்
பழகுறு திருத்குறட் பல்கடற் பெருக்கிற்
றமிழர் பலருந் தாவியே குதித்தே
அமிழ்தெனும் பல்பொரு ளகத்தே கொண்டு,
சீர்திருத் தம்மெனுந் திருக்கரை சேர்ந்து
வீறுகொண் டிடயான் வேண்டினன்
மாறுகொ ளயலவர் மாப்பெரு நடுவணே."

---

# இலக்கணமும் இலக்கியமும்:
## LANGUAGE AND LITERATURE

### திருவள்ளுவர்

[ஆசிரியர் மறைமலையடிகள்]

(முன் உ௬-ம் பக்கத்தொடர்ச்சி)

மேலும், திருவள்ளுவர் திருமைலையில் ஓர் இருப்பை மரத்தின் கீழ்க்கண்ணதான குடிலொன்றிற் றோன்றினரென வழங்குந் தொன்றுதொட்ட வழக்கிற் கேற்பவே, இன்றும் அவ்விருப்பை மரமும், அவர் தோன்றிய குடிலின் அடையாளமாக அம்மரத்தின் அருகே அவரது திருவுருவம் நிறுத்திய திருக்கோயிலொன்றுந் திருமைலையி லிருக்கின்றன; அதுபோலத், திருவாலவாயிலாதல் வேறெந்த வூரிலாதல் அவை யிரண்டும் இருத்தல் அறியப்படாமையிற் றிருமைலையே அவர் பிறந்தருளிய இடமாகுமெனக் கபிலரகவல் நுவலும் வரலாறே உண்மை வரலாறாகு மென்று கடைப்பிடிக்க.

இனித், திருமைலையில் ஒரு துளுவ வேளாளர்பால் விடப்பட்டு அவரால் வளர்க்கப்பட்டு வந்த மகவைக் கண்டு, அவ்வேளாண் டலைவரின் உறவினர் "யாரோ இழிகுலத்தார் காமத்தாற் பெற்றுப் போகட்ட அகதிப் பிள்ளையை இவர் வளர்க்கின்றார்! ஈதென்னை!" என்று பழி கூறாநிற்ப, அதற்கு மிக வருந்திய அச்செல்வர் அம்மகவைப் பிரிதற் காற்றாராய்த் தம் விளைபுலத்தில் உழுதொழில் செய்யும் பறைக் குடிகளுக்குக் குருவாய் உள்ள ஒரு வள்ளுவனை அழைத்து, அவன் கையில் அதனை ஈந்து "இதனைப் போற்றி வளர்ப்பாயாக!" எனக் கூறி, அவற்கு அதன்பொருட்டு ஆம் செலவுகட்கும் வேண்டும் பொருள் நல்கினார். அதுமுதல் அக்குழவி அவ்வள்ளுவன்பால் வளர்வதாயிற்று. அங்ஙனம் வள்ளுவனாற் போற்றி வளர்க்கப்பட்டமை பற்றியே நம் ஆசிரியர்க்குத் திருவள்ளுவரெனும் பெயர்வழங்குவ தாயிற்று. ஆகவே, ஆசிரியர்க்கு அது சாதிபற்றி வந்த பெயரே யாதல் திண்ணம். இஃது ஆசிரியரோடு ஒரு காலத்தினரான மாமூலனார்,

> "அறம்பொரு ளின்பம் வீடென்னும் அந்நான்கின்
> திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
> வள்ளுவன் என்பானோர் பேதைஅவன் வாய்ச்சொற்
> கொள்ளார் அறிவுடை யார்"

கறிந்திருக்கின்றீர்கள். இதில் திரட்டப்பட்டிருக்கும் பலப் பல கதைகளிலிருந்து ஒன்றை ஈண்டெடுத்துக்கூற விரும்புகின்றேன். "வடிவு திருந்த அறிவு வளர்த வகை" என்ற எனது பொருளைத் தொடருமுன், மகாபாரதத்திலிருந்து, குருடனாகிய திருதராட்டிரனுடைய கதையை உங்களுக்கு நினைப்பூட்ட விழைகின்றேன். திருதராட்டிரன் குருடனாய்ப் பிறந்து குருடனாய் இறந்தானென்று நீங்களறிவீர்கள். ஆயினும், அவன் வாழ்க்கை முடியுமுன் ஒருகால் பார்க்கு மாற்றலை யவனடைந்தான். இங்ஙனம் பார்வையடைந்த திருதராட்டிரன், நெடுநாள் தனக்கில்லாத கட்புலன் பெற்றமை கருதி மகிழ்ந்தானோ? இல்லை, கடிதில் அப்பார்வை தன்னைவிட்டு நீங்க வேண்டுமென்று அவன் விரும்பினான். இவ்வாறும் ஒருமகன் விரும்புவான்கொல்? குருட்டு நிலையில் மிக நீண்டகாலம் கழிந்தபின் பெற்ற பார்வையை இழந்துவிட ஒருவனும் விரும்பான். பழைய குருட்டுத்தன்மையே திருதராட்டிரன் நன்றென்று அதை விரும்பவேண்டிய காரணமென்ன? இங்கு நாமெடுத்துக்கொண்ட பொருளுக்கு இது பொருத்தமுடையது. பார்வையைப் பெற்றதால் திருதராட்டிரனுக்கு வந்த துன்பம் யாது?

வடிவும் அறிவும் பொருந்திநின்று வளரும் வளர்ச்சியிற் பல பகுதிகள் உண்டென்று முன்னரே மொழிந்தேன். இவற்றுட் சில, அழகுகண்டு மகிழ்தல், நாணுடைமை, நாகரிகம் ஆகியவாம். நாணுடைமை யென்பது திடீரென்று தோன்றும் ஒருணர்ச்சியன்று. வேறு உணர்ச்சிகளும் இத்தன்மையவே. இவ்வுணர்ச்சிகள் நம்முள் தோன்றுமுன் உலகிலுள. இவைகளைப் பற்றிய நினைவுதான் வந்துபோய்க் கொண்டிருக்கின்றது. சிலருக்கு இந்நினைவு வருவதேயில்லை. வேறு சிலருக்கு இது எப்பொழுது மிருக்கின்றது. மிகக் கீழான உயிரிலிருந்து படிப்படியாக வளர்ந்து, எங்ஙனம் மக்களில் இது முதிர்ச்சிபெற்றதென்பது நாம் எடுத்துக்கொண்ட பொருளில் நீக்கமுடியாத ஒரு பகுதியாம்.

இச்சொற்பொழிவின் முதலில் ஒழுக்கத்திற் கொவ்வாத, நாணுடைமைக்குப்பொருந்தாத சிலவற்றை யான் மொழிந்தேனென்று சிறிது குழப்பமேற்பட்டது அக்குழப்பம் என்னைச் சற்றும் அசைத்திலது. ஏனெனின், நாணுடைமை, நாணின்மை ஆகிய இவற்றிற்கு மேற்பட்ட நிலையில் யான் நிற்கின்றேன். இவ்வையகத்தை ஒரே நோக்கிற் காணக்கூடிய அளவு என் கண்கள் விரிந்திடுமாயின், யான் காண்கின்றவை யெல்லாம் நாணின்மையாகத் தோன்ற வேண்டும். அவையே

அதேகாலத்தில் நாண முடையனவாகவும் தோன்றும் நாண மென்பது ஓர் அழகிய சொல்லே, நம்முடைய உளத்தின்கண் மாய்கையாற் பிறக்கின்ற ஒன்றே, என்றுணரவல்லார்க்கு நாணமும் நாணின்மையும் யாண்டுள ?

அறிவியற் றுறையின் (Evolution) ஒன்று திரிந்து வேறொன்றுதல் எனுங் கொள்கையின் அடிப்படை யாது? இடை யீடில்லா மாறுதலே அதனடிப்படையாகும் இதில் மாறுதல் தொடர்ச்சியாக வரவேண்டுமென்பது வெளிப்படை. தொடர்ச்சி யாண்டாயினும் அற்றுப்போமாயின், ஒருவட்டஞ் சுழன்று மறுபடியும் அவ்விடத்திற்கே வரவேண்டியதாகின் றது. ஒருவட்டம் முடிவு பெறும் வரையில் எக்கொள்கையை யும் நிலைநிறுத்த இயலாது. ஆதலின் ஒன்று திரிந்து வேறொன்றுதலென்ற கொள்கையை ஒருதுறையிற் செலுத்தி ஆராயுங்கால் அடியிலிருந்து முடிவரையிற்சென்று பார்க்க வேண்டும். இங்கு நாமெடுத்துக்கொண்ட நாணுடைமை என்ற பொருளை ஆராயப்புகின் நாணமின்மையிலிருந்து தான் நாம் தொடங்கவேண்டும். இதை விளக்குதற் பொருட்டுக் கணக்கிய லுண்மை யொன்றைக் கூறுகின்றேன். ஒரு நேர் கோடு வரைந்த பின், அதை ஒருபுற மிழுத்துக்கொண்டே சென்றால், புறப்பட்ட விடத்திற்கே இறுதியில் அது வந்து சேரவேண்டும். இங்ஙனந் தொடங்கிய விடத்தி லக்கோடு முடிவுபெறும் வகையை மக்கள் கருதிப் பார்ப்பதரிதாயினும் அஃதுண்மை யென்பதுறுதி. ஒருகோடு புறப்பட்ட விடத்தி லேயே வந்து கூடுவது யாண்டு நிகழுமெனின், முடிவிலாமை (Infinity)யில் நிகழுமென்க. இதுபோன்றே அறிவுடைமை யும் அறிவின்மையும் புணரவேண்டும். ஒன்றை அறிவுடைமை யென்போமெனின் அதற்கு நேர் முரண்பட்டதை அறி வின்மை என்கின்றோம். எது அறிவுடைமை? எது அறி வின்மை? என்பதை ஒவ்வொருவரும் தாங்களே தீர்மானிக்க வேண்டும். இஃது ஒருதலை, மறுதலை (Positive, Negative) ஒழுங்கிற்படும்.

முன் யான் கூறியவாறு, எனது சொற்பொழிவில் நாணங்கடந்து பேசினே னென்பது பற்றிச் சிறிது குழப்ப முண்டாயிற்று. அது குறித்து மறுபடியும் பேசப்போகின் றேன். உங்களுணர்ச்சியைப் புண்படுத்த வேண்டுமென்பது எனது நோக்கமன்று. இப்பொழுது யான் சொல்வது கொண்டு நீங்களே வாழ்க்கையில் நாணமுள்ளவை இவை நாணமற்றவை இவை என்று தெளிந்து கொள்ளலாம். நாணமின்மையாகிய பெரிய தொரு நீர்ச்சுழலில் நாமெல்லோரும் வாழ்கின்றோ

மென்பது யான் பகரப்போவதால் வெளிப்படும். என் நல்ல நண்பர்களி லொருவர், சைவசித்தாந்தத்திற் பெரும்பற்றுடையவர், எனது முதற்சொற் பொழிவைச் செவிமடுத்த பின் திடுக்கிட்டாரென்று கேள்விப்பட்டேன். யான் மொழிந்தது நேர்மையாயிருப்பினும் தவறுயிருப்பினும் ஒன்று யான் கேட்க விரும்புகின்றேன். சின்னுட்களுக்கு முன் யான் திருச்சி மலைக் கோவிலுக்குச் சென்று அஷ்டோத்தரசதம் செய்வித்தேன். இதில் "ஓம் பிரஜாபதி நமோ" என்பது முதலில் வந்தது. இதற்கெவரும் தடைகூறக்காணேமே! இஃதொரு மந்திரமெனக் கருதப்படுகின்றது. இது போன்ற வேறு வழிபாடுகளுமுள. இஷ்டலிங்க பூஜையென்பது ஒன்று. இதில் கடவுளின் அடையாளமாக இலிங்கத்தை ஒருவர் கையில் வைத்துத் தேனும் பாலுங்கொண்டு முழுக்காட்டி நறுமணம் வீசும் அழகிய மலர்களைத் தூவிப் பல மந்திரங்களை ஓதுகின்றனர். இதற்கு நீங்கள் தடை கூறுவதில்லையே? உங்களைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளில் நாணிறந்த தன்மையுளதென்று நீங்கள் காண்கின்றீர்களா? ஒரு வேளை நீங்கள் பார்ப்பவற்றைப் பகுத்தறியுந் திறமை உங்களுக்கில்லா திருக்கலாம். இங்ஙனம் யான் பேசுங்கால் எடுத்த பொருளைவிட்டு வேறென்றில் நுழைகின்றேனென்று நீங்கள் நினைப்பீர்கள். அங்ஙனமன்று; நாணுடைமை என்ற உணர்ச்சியின் வளர்ச்சியைப் பற்றியே நான் பேசுகின்றேன்.

பெரியோர்களே! யாதாயினு மொருபொருளை அறிவியல் முறைக்கேற்ப ஆராய்ச்சிக்கெடுத்துக் கொள்வோமாயின், காய்தலும் உவத்தலும் ஒருங்கே ஒழியவேண்டும்; ஒரு துறவியின் நிலையை நாம் எய்துதல் வேண்டும். விருப்பு வெறுப்புகளுடன் ஆராய்ச்சித்துறையி லிறங்குவோமாயின் அறிவியல் பாழ்படும். எனது முதற்சொற் பொழிவை நிகழ்த்துங்கால் அறிவியல் உளப்பான்மையுடைய, விருப்பு வெறுப்பற்ற உயர்ந்தோர் முன்னிலையில் யான் பேசினேனென்று நினைத்தேன். இது பிழையென்பதை இப்பொழுது உணர்கின்றேன்.

மரங்களைப்பற்றிச் சென்ற சொற்பொழிவிற் பேசியகாலை, அவைகள் தலைகளை நிலத்தில் நுழைத்துக் கொண்டு மற்றெல்லாப் பகுதிகளையும் வெளியே வைத்திருக்கின்றன வென்று பார்த்தோம். மக்களோடு ஒப்பிடுங்கால் அவை தலைகீழாக நிற்கின்றனவென்ப துண்மையாயினும் தம்மைப் பற்றி அவைகள் அங்ஙனம் நினையாவென்பது திண்ணம். மரம் பேசுந்திறமை பெறுமாயின் மக்கள் தலைகீழாய் நிற்கின்

ரூர்களென்று அது சொல்லும். ஆனால் பேசுமாற்றல் மக்களுக்கு வாய்ந்ததுபோல் மரங்களுக்கு வாய்க்கவில்லை.

ஒரு மரத்தின் பல பகுதிகளில் மக்கள் எதை மிகுதியும் விரும்புகின்றனர்? அதன் பசிய இலைகளையும் நறுமணம் வீசும் பன்னிற மலர்களையுமன்றோ மக்கள் பெரிதும் நச்சுகின்றனர்? ஒருமரத்தில் அரும்பும் முகையும் தோன்றும் நிலையில் மக்கள் அதைக் காதலிக்கின்றனர் என்று சொல்லுதலுஞ் சாலும். புலவன் அதுகண்டு பாடத் தொடங்குகின்றான். அவனது புலமை மலர் நிறைந்த மரத்தாற் புதுப்பிக்கப் படுகின்றது. புலவரல்லாத பிறரும் மலர்களைக் கண்டு மகிழ்கின்றனர். மலர் என்பதென்ன? நிலைத்திணை உயிர்நூல், இயங்குதிணை உயிர்நூல் முதலிய பல்வகைப்பட்ட அறிவியற் பகுதிகளின் கொள்கைகட் கேற்ப நோக்குவோமாயின், மலரென்பது மரங்களின் புணர்ச்சிக் கருவியேயன்றி வேறன்று. கோவிலினுள்ள வழிபாட்டிற்குரிய உருவங்களை முழுக்காட்ட வழங்கும் தேனென்பதென்னை? தேனீக்களைத் தம்பால் ஈர்க்கும் பொருட்டு மலர்கள் சிந்துகின்ற சாறு (மதம்) அன்றோ?

மரத்தின் வேரைப்பற்றி நாம் என்ன நினைக்கின்றோம்? தோற்றத்தினால் நாம் ஏமாற்ற மடைந்து வேர் பெயர்ந்து விழுந்து கிடக்கும் மரத்தைக் கண்ணுற்று இஃதொரு நகுதற்குரிய காட்சி யென்று கருதுகின்றோம். வேர் பெயர்ந்து விழுந்தமரம் தன் தலையை வெளியே காண்பிக்கின்றது. அத்தலையைக் கண்டு நாம் மகிழ்வதில்லை. ஆனால் நம்மில் நாம் மறைக்கின்ற உறுப்புக்களெவையோ அவைகளைத்தான் மரத்தில் நாம் கண்டு மகிழ்கின்றோம். இம்முறையில் மரத்தை நோக்குவது ஒரு புதுமையேயாகும். மக்களின் உடலிற்கும் மரத்தின் உருவத்திற்கும் வேற்றுமையே இல்லை. கோவிலுக்குட் சென்று அங்கே மந்திரங்களென்று கூறப்படுமவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாருங்கள். அப்பொழுது உங்கள் உளத்திற்கும் மெய்யறிவிற்கும் இடையே நிற்குந் திரை நீங்கும். அப்பொழுது, இதுகாறும் நீங்கள் நாணமுடைமையின்கீழ்வைத் தெண்ணிய தெல்லாம் நாணமின்மையின்பாற் படுவதை யறிவீர்கள்.

(தொடரும்)

---




## சிவஞானபோதக் கருத்து

[திரு மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள், B A.]

[முன் சிலம்பு கரு: ருஎஉ ஆம் பக்கத்தொடர்ச்சி]

(பதிப்புரிமை ஆக்கியோர்க்குரியது)

### நான்காவது சூத்திரம் : இரண்டாவது அதிகரணம்

20. மேலே மூன்றுவது சூத்திரம் ஏழு அதிகரணங்களி லும், நான்காவது சூத்திரம் முதலாவது அதிகரணத்திலும் ஆன்மா, சூனியம், உடல், ஐம்பொறி, சூக்கும உடல், பிராண வாயு, பிரமப்பொருள், சமுதாயம், அந்தக்கரணங்கள் ஆகிய இவற்றின் ஒன்றல்லாது வேறு பொருள் என நிலைநாட்டிய ஆசிரியர் தானே விளங்கவும், கருவிகளாகிய பிறபொருள்களை விளக்கவும் வல்ல அறிவுடையஆன்மா, தானே விளங்குந் தன் மையில்லாத அந்தக்கரணங்களோடுங் கூடி அறியவேண்டுவது யாது காரணத்தினல் என்று அந்தக்கரணான்ம வாதிக்கும் பிறருக்கும் நிகழும் ஐயத்தை நீக்குதற்கு இரண்டாவது அதி கரணம் கூறுகின்றார். இதனல் அந்தக்கரண இயைபு இனிது விளங்கும்.

21. இனி, இவ்வாறன்றி ஆன்மா, மூன்றுவது சூத்திரத் திற் றொகுத்துக் கூறப்பட்டவாறு சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற வேறு வேறு அவத்தை யுறுதற்குக் காரணம் என்னை? என்ற ஐயத்தை நீக்குதற்கு எழுந்தது இரண்டாவது அதிகரணம் என்று அதிகரண இயைபு கூறுதலும் பொருந்தும்.

22. "இவ்வான்மாச் சகச மலத்தினல் உணர்வின்று" என்பது இரண்டாவது அதிகரணத்தின் மேற்கோள். இது சூத்திரத்தில் "சகச மலத்து உணராது அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்தது" என்றிருப்பதைப் பதச் சேதஞ் செய்து ஆன்மா அந்தக்கரணங்களோடு சேர்ந்து அறிதற்குக் காரணம் என்னை என்னும் வினவுக்கு மட்டும் விடைகூறிய வாருயிற்று. சூழ்ச்சித் திறனில்லாத அரசனொருவன் தன்

ஆணையின்கீழ் வாழும் குடிகள் நலமடைந்து வாழும் வண்ணம் சூழ்ச்சித்திறனுடைய அமைச்சர்களுடன் கூடி அரசு புரிதல் போல ஆணவமலமறைப்பால் கேவல நிலையில் அறியுந் திறன் சிறிதுமில்லாத ஆன்மாவுக்குச் சகல நிலையில் இருளில் விளக்குப்போல ஏகதேசத்தில் அறிவு விளங்கும் பொருட்டு ஆன்மாவோடு அந்தக்கரணங்களாகிய கருவிகள் கூடின. ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், தூல சூக்கும ஐம் பூதங்கள் ஆகிய கருவிகளெல்லாம் அந்தக்கரணங்கள் தொழிற்படுதற்குத் துணைகளாய் நின்று உதவுதலின் அவை அந்தக்கரணங்களில் அடங்குவதாயின. ஆன்மா கட்டுநிலையில் கீழ்நோக்கி ஞானேந்திரியங்கள் முதலிய கருவிகளோடு கூடி உலகபோகம் நுகர்தற்கும் வீட்டு,நிலையில் மேல்நோக்கிச் சுத்தமாயா கருவிகளோடுங் கூடி சிவபோகம் நுகர்தற்கும், அந்தக் கரணங்கள் மேலேயுள்ள மாயாதத்துவக் கருவிகளுக்கும் கீழேயுள்ள மாயாதத்துவக் கருவிகளுக்கும் பாலம்போல இடைப்பட்ட மாயாதத்துவக் கருவிகளாயிருத்தலின் ஆசிரியர், பல மாயாதத்துவக் கருவிகளோடுங்கூடிச் சகல நிலையில் அறிகிற ஆன்மாவை அந்தக்கரணங்களோடு கூடியது எனச் சிறப்பாக எடுத்துக் கூறினர்.

23. 'இவ்வான்மா' என்பது மேலே கூறப்பட்டவாறு தானே விளங்கவும் மாயாதத்துவக் கருவிகளை விளக்கவும் வல்ல அறிவுடைய ஆன்மா. 'சகசமலம்' என்பது உடன் பிறந்த மலம்; அதாவது ஆன்மா என்று உளதோ அன்றே யாதொரு காரணமின்றி அநாதியே உடன் தோன்றி நிற்கும் ஆணவமலம். இடையே ஆன்மாவுக்கு இறைவனாற்கூட்டப்பட்ட ஆகந்துக மலங்களாகிய மாயை வினை மலங்களினின்று நீக்குதற்கு ஆணவமலம் சகச மலம் என விசேடித்துக் கூறப்பட்டது. 'உணர்வின்று' என்பது கருவிகளைக் கூடி அன்றித் தன்னியல்பால் அறியுமாறில்லை. அந்தக்கரணங்களில் ஒன்று அல்ல என்று நிலைநாட்டப்பட்ட ஆன்மா முதல்வனைப் போல அறிவுடைப் பொருளாயினும் தன்னோடு வேறு காரணமின்றி அநாதியே உடன் பிறந்த ஆணவமலமறைப்பினால் தன்னியல்பில் தானே அறியுமாறின்றிக் கருவிகளைக் கூடி நின்று அறியுந் தன்மை யுடையது என்பது அதிகரணத்தின் தொகைப் பொருள்.

24. முதலாவது சூத்திரத்தில் "மலத்துளதாம்" (மலத்தாலுளதாம்) என ஆணவமலத்தினது உண்மையைப் பிரமாணத்தாற் கூறிய ஆசிரியர் இச்சூத்திரத்தில் "ஆன்மா சகச மலத்துணராது" என இலக்கணத்தாலுங்கூறி வலியுறுத்

தினர். கருவிகளோடு கூடாத கேவல நிலையில் ஆன்மாவுக்கு ஆணவமலமானது அறியாமையைச் செய்கின்ற காரணத்தால் இறைவன் ஆன்மாவின்மேல் வைத்த பேரருளால் தன்னிடம் அடங்கியுள்ள மாயையை முதற்காரணமாகக்கொண்டு ஆன்மாவுக்குச் சகலநிலையில் இரவில் விளக்கொளிபோல் ஏகதேசத்தில் அறிவு விளங்குதற்பொருட்டுத் தனுகரணபுவன போகங்களைத் தோன்றச்செய்து ஆன்மாவுக்குக் கூட்டியருளினன். இங்ஙனம் இறைவனால் அளிக்கப்பட்ட தனுகரணபுவன போகங்களை ஆன்மா சேர்ந்து உலகவாழ்வில் உலக போகம் நுகரும்பொழுது ஆணவமலமானது மாயா காரியங்களாகிய தனு கரண புவனபோகங்களிலும் வியாபித்து நின்று ஆன்மாவுக்கு விபரீத உணர்வைச் செய்கின்றது. விபரீத உணர்வாவது ஒன்றைப் பிறிதொன்றாக மயங்கி அறிதல்; தானல்லாததைத் தானாகவும், தனதல்லாததைத் தன்னுடையதாகவும், நிலையுள்ளதை நிலையில்லாததாகவும், நிலையில்லாததை நிலையுள்ளதாகவும், இன்பமல்லாததை இன்பமுள்ளதாகவும் மயங்கி அறிதல். இந்த விபரீத உணர்வு காரணமாக ஆன்மா தீவினை நல்வினைகளைச் செய்கின்றது. இவ்வாறு கேவல நிலையில் ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்தல் ஆணவமலத்துக்குப் பொது இயல்பு; சகல நிலையில் ஆன்மாவுக்கு விபரீத உணர்வைச் செய்தல் ஆணவமலத்துக்குச் சிறப்பு இயல்பு.

25. ஆணவமலத்தைப் போலவே வினைமாயை மலங்களும் அநாதியாயுள்ளன. ஆணவமலம் அநாதியே உயிரைப் பற்றி நிற்கும்; இறைவனைப் பற்றாது. அஃது ஆன்மாவுக்குக் கேவல நிலையில், முழு இருளில் பொருளொன்றுங் காணப்படாதவாறு போல, முழு அறியாமையைச் செய்து நிற்கும்; சகல நிலையில் இரவில் விளக்கு ஒளிபோல ஏக தேசத்தில் அறிவை விளக்கி விபரீத உணர்வைச் செய்து நிற்கும். ஆணவமலம் ஆன்மாவை விட்டு என்றும் நீங்காது; வீடு பேற்றின் கண்ணும் ஒளிமுன் இருள் கெட்டொழிதல்போல ஆணவமல சத்தி முற்றிலும் கெட்டொழியுமே அன்றி ஆணவமலங் கெடாது. வினைமாயை மலங்கள் இறைவனிடத்தில் அடங்கியுள்ளன; அவை ஆன்மாவுக்கு, முன் கூறப்பட்டவாறு சகல நிலையில் இறைவனாற் கூட்டப்பட்டபடியால் ஆகந்துக மலங்கள் (இடையே வந்து கூடிய மலங்கள்) என்று கூறப்பட்டன. இங்ஙனம் சகல நிலையில் ஆன்மாவைக் கூடிய வினைமாயை மலங்கள் வீடு பேற்றின்கண் ஆன்மாவை விட்டு நீங்கும். ஆன்மாவினது சகல நிலையில் ஆணவமலமானது வினைமாயை

மலங்களைத் துணைக்கருவிகளாகக் கொண்டு தொழிற்படும். இவ்வாறு கூறப்பட்ட ஆணவம் வினை மாயை என்னும் மூன்று மலங்களோடு, மாயையின் காரியமாகிய மாயேயத்தை ஒரு மலமாகவும், ஆன்மாவுக்கு மலபரிபாகம் வருவித்தற் பொருட்டு ஆணவமலத்தின் வழிநின்று அதன் காரியங் களாகிய மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவ சங்கற்பத்துக்கு ஏதுவாகிய திரோதான சத்தியைத் திரோத மலமென ஒரு மலமாகவும் சேர்த்து ஐந்து மலங்களாகக் கூறு தலுமுண்டு. மூன்று மலங்களாகக் கூறும் வழி மாயேய மலம் மாயையிலும், திரோத மலம் ஆணவமலத்திலும் அடங்கும். (தொடரும்)

---

## மலைப்புச் சொற்றொடர்

(மால்)

ளா ளா டா டா நீ நீ கொண்டுவந்த மாடு சா சா
(இருளா, இருடா, இருநீ, கொண்டு வந்த மாடு சிறுசா பெரிசா)

---

குகுகுகுகுகுகுகுகுகுச் செட்டிமகன்
அஅஅஅஅஅஅஅஅஅக் காசைப்பட்டான்
முமுமுமுமுமுமுமுமுமு மூன்று பணியாரம்
செசெசெசெசெசெசெசெசெசெக் கட்டி யனுப்பு.

(குப்பத்துச் செட்டிமகன் அப்பத்துக் காசைப்பட்டான் முப்பத்து மூன்று பணியாரம் செப்பத்துக் கட்டியனுப்பு).

# லூதர் பர்பாங்க்

[காழி, சிவ. கண்ணுசாமி, B.A.,]

(முகப்புப் படம் பார்க்க)

“மரஞ்செடி மந்திரவாதி”, “அறிவியற்றுறை கொலம்பஸ்” என லூதர் பர்பாங்க் என்ற மரநூலளவையறிஞரை அறிவியற்றுறை போகிய பேரறிஞர்கள் அழைப்பர். இப்பெரியார் 1849-ம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 7-ம் நாள் அமெரிக்க நாட்டிற் பிறந்தார். அவருடைய இருப்பத்தாறும் அகவையில் காலிஃபோர்னியாவி லுள்ள சாந்த ரோஸா என்ற வீட்டிற் குடிபுகுந்தார். இறுதிக்காலம் வரையில் அவர் அவ்வீட்டிலேயே வசித்து வந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

இயற்கை யன்னையின் எழிலில் ஈடுபட்டுத் தம்முடைய 22ல் பொருளாதிய யெல்லாவற்றையும் ஒருங்கே உவந்தளித்த பெரியார் ஒருவர் இருந்தாரென்றால் அப்பெரியார் லூதர் பர்பாங்க்தான் என்று துணிந்து கூறலாம். ஆடம்பரமற்ற அமைதியான வாழ்க்கையையே அவர் விரும்பினர். செயற்கை யழகினும் இயற்கையழகே சாலச் சிறந்தது என்பது அவர் முடிபு. எனவே நடையுடைகளிலும் ஒழுக்கத்திலும் அவர் ஆடம்பரமென்பதை அறவே யொழித்து எளிமையையே தழுவிவந்தார்.

இயற்கைக் கடிமைப்பட்ட அவர் இயற்கையின் தலையணிகளாகிய மரஞ்செடி கொடிகளில் ஈடுபடாதிருக்க முடியுமோ? செடிகளும், பூக்களும், இலைகளும், பழங்களுமே அவர்க்குற்ற நண்பர்கள் எனக் கூறலாம். அவர் உன்னியதும், எண்ணியதும், உழைத்ததும், உஞற்றியதும் அவைகளைக் குறித்தேயன்றி வேறல்ல. கணக்கற்ற பழ வகைகளையும், காய்கறி வகைகளையும், பூக்களையும் அவர் தாமாகவே, தம்முடைய அறிவு முதிர்ச்சியாலும், இடையீடுபடாத உழைப் பினாலும் புத்தம் புதியனவாகக் கண்டுபிடித்துப் புகழ்பெற்றார். மரஞ்செடி கொடிகளின் இயற்கைவாழ்வை அணுவணுவாக ஆய்ந்து உணர்ந்து மகிழ்ந்த சிறு தொகையினரான உலக அறிஞர்களில் அவரும் ஒருவர். அவை தம்முட் டாமே பேசிக்கொள்வதுண்டானால், வியக்கத்தக்க அம்மொழி நுணுக்கத்தை முற்ற அறிந்தவர் அப் பெரியாரே. தெய்வத்தானாகாதெனினும் மெய்யுழைப்புக்கொண்டு கருதியதை முடிக்கக்கூடும் என்று உலகோர்க்குச் செயற்கை முறையில் தெரித்தவர் லூதர் பர்பாங்க். தாம் மேற்கொண்ட பணியில் ஒரு சிறிதும் கடவுளின் உதவியை எதிர்பாராமல் “முயற்சியே திருவினையாக்கும்” என்பதைக் கடைப்பிடித்து தெய்வத்தையும் ஊழையும் உப்பங்கண்டார் நம் பர்பாங்க். அவர் தம் மதமாகிய கிறித்து மதத்தின் உண்மை வேதமெனக் கருதப்படும் விவிலிய நூலில் அவர் சிறிதும் நம்பிக்கை வைத்ததில்லை. அதனாலேயே அவரை அம்மதத்தினர் “அஞ்ஞானி” என்று பட்டப் பெயர் சூட்டி அழைக்கலாயினர்.

இப்பெரியாருடன் நட்புரிமை பூண்டொழுகிய பல பேரறிஞர் களில் தாமஸ் ஆல்வா எடிசன் என்பவரும் ஒருவர். லூதர் பர்பாங்க் 11-4-1926-ல் காலஞ்சென்றார். அவர் தம் நினைவுக்குறியாக அவருடைய கல்லறையின்மீது ஒரு மரம் நடப்பட்டது குறிப்பிடத் தக்கதாகும்.

# நகைச்சுவைப் பகுதி - Humour

## திருவள்ளுவர் முதற்குறள் திருத்தம்

(கபசம் எழுதியது)

### முதல்

திருவள்ளுவனர் 'அகர முதல வெழுத்தெல்லாம்' என்று தொடங்கினர். பிறகு "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்று முடித்தார். இவ்விரண்டு தொடர்களுக்கு மிடையே வர வேண்டிய உவமச்சொல் விடுபட்டது, 'பிழை யொன்றிரண்டு செய்தாற் பொருரோ குடியிற் பிறந்தவரே' என்ற கொள் கையைத்தழுவித் திருவள்ளுவர் செய்த இக்குற்றத்தை யான் மன்னித்து விடுகிறேன், இதை எழுதும் யான் குடியிற் பிறந்தவன் மாத்திர மல்லன்; குடியிற் சிறந்தவனுமாவன், கட்குடியன்று எனது குடி; வேறு குடி; காப்பியக் குடி (காப்பி + அ + குடி); காப்பிக்குடி எனினு மதுவே. மதுவைப் போன்றதே காப்பி என்பதை வற்புறுத்தவே "காப்பி எனினு மதுவே" என்றேன், நிற்க.

உவமச் சொல்லைவிட்டு இருதொடர்களைப் புணர்த்திய திருவள்ளுவர் குற்றத்தை நீக்கிக் குறளை முடித்துக் காண்பிக் கின்றேன்.

> அகர முதல வெழுத்தெல்லா மாங்கு
> பகவன் முதற்றே யுலகு.

இஃது எவ்வளவு அழகாயிருக்கின்றது பாருங்கள்! உற்றுப் பார்த்து உவகைகொள்ளுங்கள். இப்படிக் குறள் செய்வது எளிதாயிருக்க ஆதியை ஏனழைக்கவேண்டும்? மற்றும், உலகு ஆதிபகவன் முதற்றே என்பதில் ஆதி சொல்லுக்குப் பொருளாகிய முதலென்னுஞ் சொல்லை அமைப்போமாயின், "முதற்பகவன் முதற்றே யுலகு" என்ருகின்றது. முத லென்னுஞ்சொல் இங்ஙனம் இரட்டித்தல் பொருந்துகின்றதா, பாருங்கள்? இது கொண்டே இக்குறளில் யான் செய்த திருத்தத்தின் சிறப்பை நீங்களறிந்து கொள்ளலாம்.

இங்கே கபிலரழைப்பிற் கூறியது உண்மைதானேவென்று ஓர் ஐயம் நிகழ்கின்றது.

கபிலரழைப்பு=கபிலரகவல் உலகத்தீரே! உலகத்தீரே! என்று அழைத்தமை காண்க.

ஆதி பகவனென்ற தமது தாய் தந்தையர் பெயரைக் கொணர்தற்பொருட்டே .வள்ளுவர் இம்முதற் குறளை, அஃ திருக்கின்றவாறமைத்தாரோ? அறிவுரைகொண்டு சென்னையிற் சிலரைக் கொத்திய மறைமலையடிகள் "ஆதிபகவன்" என்ற சொற்றொடரை இக்குறளில் அமைத்தது இது பற்றியே யென்று துணிந்து கூறுகின்றார். துணிவதிலும் துணிப்பதிலும் அவாவல்லூநர் என்பதற்கு அறிவுரைக்கொத்தே இலக்கியம், நிற்க.

முதற்குறளை மேற்சென்று பார்ப்போம்.

> அகர முதல வெழுத்தெல்லா மாங்கு
>
> பகவன் முதற்றே யுலகு.

பகவன் என்பதைப் பகவு + அன் எனப் பிரித்து "பிரிப் பவன்" (அழிப்பவன்) என்று பொருள்கொள்க. இங்ஙனஞ் செய்வோமாயின் அழிப்பவன் முதற்றே யுலகு என்று இரண்டாமடிக்குப் பொருள் கொள்ளல்வேண்டும். இது "அந்த மாதி என்மனார் புலவர்" என்ற சிவஞானபோதச் சூத்திரக் கருத்தொடு ஒன்றுதல் கண்டு மகிழ்க.

---

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

ஏறக்குறைய நாற்பதாண்டுகட்குமுன் நடைபெற்ற போரில் அபிஸீனியர்கள் இத்தாலியர்களை அடோவா என்ற இடத்தில் மடிக்க முடியாத வகையில் முறியடித்தனர். அத்தோல்வியை ஒரு சிறிதும் உளத்திலிருந்து அகற்றமுடியாமல் இத்தாலியர்கள் வஞ்சம் தீர்க்க வகை தேடிக்கொண்டிருந்தனர். சென்ற ஏழு ஆண்டுகளாக அதற்கு வேண்டிய போர்த்தளவாடங்களையும் சேகரித்து வந்தனர். நீறு பூத்த நெருப்புப் போலிருந்த அவர் தம் சினம் சென்ற அக்டோபர் 4-ம் நாள் கொழுந்துவிட் டெரியலுற்றது. எற்ற காரணம் ஏதுவுமின்றி அபிஸீனியர்களுக்குரிய எரெட்ரியா என்ற

பகுதியிற்புகுந்து அடோவாவைக் கோரமான போர் புரிந்து கைப்பற்றினர். அபிசீனியர்களுக்கும் இத்தாலிக்கும் இப்பொழுது கடுமையான சண்டை நடந்துவருகிறது. நாகரிக முதிர்ச்சியின் பயனாய் எதை விலக்கியபோதிலும் போரை விலக்க முடியாது போலும்!

---

## சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்
### சொல்லாராய்ச்சிக் கூட்டம்

இக்கூட்டம் 29-9-35 ஞாயிற்றுக்கிழமையன்று திருநெல்வேலி மந்திரமூர்த்தி ஹைஸ்கூல் கட்டிடத்தில் திருவனந்தபுரம் தமிழ்ப் புலவரும் பாவலரும் ஆகிய உயர் திரு. T. இலக்குமண பிள்ளையவர்கள் தலைமையில்கூடி ஐந்து நாட்கள் வரை நடைபெற்றது. இக் கூட்டத்தினர் ஸ்ரீவில்லிபுத்தூர் திரு. A. சீனிவாசாச் சாரியார் பி.ஏ., எல்.டி. அவர்களாலும், ஒரத்தநாடு திரு. T. S. வேலாயுதம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்களாலும் எழுதியனுப்பப்பெற்ற தமிழ் அறிவியற் சொற்களின் அச்சுப் படியினைப் படித்து ஆய்ந்து முடிவு கட்டினர். இதுபற்றி டிசம்பர் விடுமுறையில் மற்றொரு கூட்டமும் நடைபெறுமெனத் தெரிந்து மகிழ்கின்றோம்.

---

## தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்
### 15-வது ஆண்டு விழா
## தென்னிந்திய தமிழ்ச் சங்கம்
### 7-வது ஆண்டு விழா

இவ்விரண்டு விழாக்களும் முறையே திருநெல்வேலி மந்திர மூர்த்தி ஹைஸ்கூலில் தனியே அமைக்கப்பெற்ற பந்தலில் உயர் சைவத் திருவாளர் திவான்பகதூர் P. சுப்பையா முதலியா ரவர்கள், பி.ஏ., பி.எல். (Retired District Judge) தலைமையில் 4-10-35 வெள்ளிக்கிழமையன்றும், 5-10-35 சனிக்கிழமையன்றும் மாலை 4 மணி முதல் இரவு 10 மணிவரை பல அரிய சொற் பொழிவுகளுடன் இனிதே நடைபெற்றன.

---

சிவாகம சங்க வெளியீடு :

தேவிகாலோத்தர ஆகமம் தமிழ்மொழிபெயர்ப்புடன். புதிதாக வெளிவந்துளது. விலை அணா 10.

எம்மிடம் கிடைக்கப் பெறும்.

### பூ - பூ மலர்

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] பூத்தலென்னும் தொழிற்கு வினை முதலாயமைவதாய ஓர் பொருளென்றுதலின், பூ=பூமலர் என்றுயிற்று.

### பூ - தாமரை

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] பூத்தல் என்னும் தொழிலைக்கொண்டியனும் பூக்களிலெல்லாம் மேலானவோர் பூவென்றுதலின், பூ=தாமரை எனல் ஆயிற்று.

### பூ - கண்ணில் விழும் பூ

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] கண்ணில் வெள்ளை நிறம்கொண்டெழும் ஓர் கண்ணேய் பூவைப்போல்வதாதலின், பூ=கண்ணில் விழும் பூ - என்னல் ஆயிற்று. (உவமையாகு பெயர்).

### பூ - தீப்பொறி

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] தீயிலிருந்தும் எழும் சுடர்ப்பொறியைப் பூப்போல்வது எனக் கொள்வது வழக்காதலின், பூ=தீப்பொறி எனலாயிற்று. விளக்கிற் சுடர் விழுவதைப் பூ உதிர்கிறது எனல் வழக்கு.

### பூ - இந்துப்பு

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] பொதிகிலையிற் மீத்துண்டாகும் ஓர் பொருளாதலின் பூ=இந்துப்பு என அமைந்தது.

### பூ - (ஓமாக்கினி) வேள்வித்தீ

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] வேள்வி வளர்க்கும் ஓம குண்டத்தில் பொதிந்து நிற்கும் பூப்போல் வளர்ந்து வேள்விப்பயனைப் பூக்கின்ற தென்னும் மரபாதலின், பூ= வேள்வித் தீ என்னலாயிற்று.

### பூ - பூநீற்றுக்கு முன் எழுங்கதிர்

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] பூமியின் மேற்பொருளாப் பூ நீறுக்கு முன் பூத்தெழும் பொருளாதலின், பூ=பூ நீற்றுக் கதிர் என்னல் ஆயிற்று.

### பூ - தளிர், இலை,

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] பூத்தற்கு இன்றியமையாததாய் முற்படுவது தளிராதலின், பூ=இலை எனல் ஆயிற்று.

### பூ - இதழ், மலர்

பெயர்ச்சொல்

[ப்+சீ+உ=பூ] பூத்தலின் அமைவதாய்ப் பூவிற் பொறிவது இதழென்னும் மலர் ஆதலின், பூ=மலர் எனல் ஆயிற்று.

### பூ - ஓர் நரகம்

பெயர்ச்சொல்

[ப்+உ+உ=பூ] ஏழு நரகத்துள், பூதி மகாபூதி என்பவை பூவென்றும் மண்மயமாய்ப் பொதிபடு புழுதியாய் நிறைந்துளதாதலினும் பின்னும் பின்னும் பூத்த லென்னும் பிறப்பினைத் தந்து வருத்துவதாதலினும், பூ=நரகம் எனலாயிற்று.

### பூ - அழகு பொலிவு (களை)

பண்புப்பெயர்

[ப்+உ+உ=பூ] ஓர் பொருளின் பொலிவா யெழுந்து பூத்து நிற்றலின், பூ=அழகு, பொலிவு எனலாயிற்று.

* பூவேயழகுங் கூர்மையும் பொலிவும்

திவாகரம்

### பூ - கூர்மை

பண்புப்பெயர்

[ப்+உ+உ=பூ] ஓர் பொருளின் முனையிற் பொதிவாய் கதிர்கொண்டு நிற்பது அல்லது ஓர் பொருளாராய்ச்சியிற் பொதிவகற்றி நுழைந்து காணத்தக்கது கூர்மையாதலின், பூ=பொதிவகற்றும் கூர்மை என (ஆயிற்று கருவிப்பொருள்.)

### மூ - முடி, விலகு

வினைச்சொல் - ஏவல்

[ம்+உ+உ+உ=மூவு=மூ] ஒன்றின் மனம் ஒப்புநிலைமையில் உள்ளதைக் கண்டுகழி ஒன்றை மனம் ஒப்பக் கண்டு நீங்கு என்றும் அமைதலின் மூ—முடி, விலகு எனலாயிற்று.

### மூ - முதிர், பழமைப்படு

வினைச்சொல் - ஏவல்

[ம்+உ+உ=மூ] மனம் ஒப்பு மகிழ்நிலையாகிய, உள்வலி, நாளுக்கு நாள் உகுந்து உகுந்து கெடக்கிழப்படு என அமைதலின், மூ=முதிர், பழமைப்படு என்னலாயிற்று. (புதுமைபோய்ப் பழமைஆ).

### மூ - முடி, விலக்கு, மூப்பு

வினைமுதல் தொழிற் பெயர்

[ம்+உ+உ=மூ] மேற்கூறிய வண்ணமே, மூவென்பது வினை முதல் தொழிற் பெயரின் ஆக்கமாக—முடிவு, விலக்கு கிழமாகிய மூப்பு எனலாயிற்று.

### ஏ - அம்பு, பாணம்*

பெயர்ச்சொல்

[இ+அ+=ஏ—அ+இ=ஏ—ஏ+உ=ஏவு=ஏ] இப்பொருளெனக் கையிலிருப்பதொன்றை அப்பொருளெனச் சேய்மையிற் குறிக்கொள்ளப்படும் ஒன்றில் ஊடுருவிப் பாயும் ஓர்கருவி எனவும், அங்குக் காணப்படும் ஓர்பொருளின் மேல் இங்குள்ளதெனக் கைக்குட் பிடிபட்டு நின்று விட்டவுடன் போய்ப் பாய்ந்துதைக்கும் கருவி எனவும், ஏவு—ஏ என்பதில் இங்கிருந்தும் அங்கு அனுப்பப்படுவதாகிய ஓர் கருவி, எய்யப்படுவதாகிய ஓர்கருவி, எனவுமமைதலின், ஏ=அம்பு எனல் ஆயிற்று.

ஏ என்பது இசைநிறை—வேறு பொருளுணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது—எனவும், ஏ—அசை

---

* பாணம், ஆசுகமே, பூதை, பத்திரி,
விசிகம் புங்கம் தோணி,சாயகமே, பல்லம்,
தொடை சிலீமுகமே வம்பாம். —சூடாமணி நிகண்டு

நிலை—வேறு பொருளுணர்த்தாது பெயர்ச்சொல்லோடும் வினைச்சொல்லோடும் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது (அசைதல்-சார்த்துதல்)—எனவும், இலக்கண வழக்குகள் உள வேனும், அந்நூன்முறைக்கவ்வா றியனுமே அன்றி, இந் நூன் முறைக்கு அவற்றுள்ளும் நேர் பொருள் இலவாயினும் குறி நிலையேனும் பொருந்தி நிற்றல் வேண்டும். அவ்வண்ணம் ஆராயின், ஏ—இத்தன்மையதே அத்தன்மை, இங்ஙனமே அங்ஙனம். இதுவே அது என்றும், அத்தன்மையதே இத் தன்மை, அங்ஙனமே இங்ஙனம் என்னும் குறிநிலை எனக் கொள்ள நிகழும். ஏ—வினாப்பொருளைத் தருவதாகுங்கால், சேய்மைச் சுட்டடியா யெழுந்து, அதுதானா? என்னும்குறி நிலைகொண்ட ஆவென்வினாப்போல, அண்மைச் சுட்டடியா யெழுந்து, இதுதானா வென்னுங் குறிநிலைகொண்டது 'ஏ' எனக்கொள்க. ஏ=அடே என்பதின் குறிநிலை, 'அன்னவன் தானே நீ? அறிவேன்—எதிர்மறையில் என்றமைதல் காண்க. ஏ=இகழ்ச்சிக் குறிப்பிடைச் சொல் ஆகுங்கால் இதுவா அது? அதுவேறு என்னும் குறிநிலை. வினாப் பொருள் விட்டுத் தேற்றமாக மாறுங்கால் அதுவும் இதுவே, மற்றதுவும் இதுவே என அடுக்கி எண்பட நிற்குங்கால் எண் ணிடைச் சொல் ஏ என்றாயிற்று. ஏ—பிரிநிலையில், இவற்றுள் ஒன்றேநன்று எனில் மற்றவை வேறு என அமைதல் காண்க. ஏ=தேற்றம், நானே வந்தது, என்றது, மொய் அன்று என முற்பட்டுத் தேற்றல் காண்க=ஏ—எதிர்மறைப் பொருணிலை யில் அவனே கொண்டான்' என்பது அவன் கொண்டிலன் எனற்குக் குறிப்பாகக் கூறுமிடத்தென்க. ஏ—என்பதே அது இதுவா? இது அதுவா? என்னும் அமைதிக்கு ஏது ஏது என வினாப்பட்டமைந்த எழுத்தாதலின், ஏ என்பதின் பொருளாய் வரும் தேற்றமும், மருணிலைத் தேற்றமே எனக்கொள்க.

## கே - மூச்சுத் திணறல்

### தொழிற்பெயர்

[க்+ஏ+உ=கேவு=கே] இது வழக்கு ஒழிந்த சொல் ஆயினும், இதன் அமைதி, தொடப்படக் கூடிய நிலைமையில் மூச்சைச் செலுத்துதல் என ஆதலின், கே=மூச்சுத் திணறல் என்றாயிற்று. இம் மூச்சுத் திணறலாகிய கேவுதலின் நீரின் மூழ்கி மீன் வேட்டை யாடுவோர்க்குக் கேவேடரெனப் பெயர் கொண்டமை உணர்க.

ஓம்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு ௧௪ | யுவ ஆண்டு ஐப்பசித் திங்கள் 1935௵ அக்டோபர்மீ—நவம்பர்மீ | பரல் ௫

## செந்தமிழ்ச் செல்வி

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

## (Editorial Board Members)

### தலைவர்

1. திருவாளர் M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள், B.A.,
   *பென்ஷன் தாசில்தார், சிந்துபூந்துறை.*

---

2. ,, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A., M.L.,
   *தலைவர், மணிவாசக மன்றம், திருநெல்வேலி*
3. ,, பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்,
   *தமிழாசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம்.*
4. ,, துடிசைக்கிழார் A. சிதம்பரனாரவர்கள்
   *போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், திருவாரூர்.*
5. ,, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்,
   *தமிழாசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம்.*
6. ,, T. S. கந்தசாமி முதலியாரவர்கள், B.A.,
   *வழக்கறிஞர், சாத்தூர்.*
7. ,, ஆ. கார்மேகக் கோனாரவர்கள்,
   *தலைமைத் தமிழாசிரியர், அமெரிக்கன்கல்லூரி, மதுரை.*
8. ,, வித்வான் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள்,
   *தலைமைத் தமிழாசிரியர், செயிண்ட் சேவியர் காலேஜ், பாளையங்கோட்டை.*
9. ,, அ. மு. சரவண முதலியாரவர்கள்,
   *தமிழாசிரியர், லாலுகுடி.*
10. ,, காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளையவர்கள், B.A.,
    *தருமபுரவாதீன வித்துவான், சென்னை.*

# பொருளடக்கம்.



மதுரை
எம். திரவியம் பிள்ளை



சென்னை
டாக்டர் எஸ். அரங்காச்சாரியார்

155-ஆம் பக்கம் பார்க்க.




சிலம்பு-கச] யுவ—ஐப்பசி [பரல்-ரு

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்.

### திருச்சிறுகுடி, திருமுக்கால்.

செற்றினில் மலிபுனற்சிறு குடிமேவிய
பெற்றிகொள் பிறைமுடி யீரே-
பெற்றிகொள் பிறைமுடி யீருமைப் பேணிநஞ்
சற்றவ ரருவினை யிலரே.

பதவுரை :—

செற்றினில் புனல்மலி சிறுகுடி மேவிய—வயல்களில் நீர் நிறைந்திருக்கிற திருச்சிறுகுடி என்னும் திருப்பதியில் திருக் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற

பெற்றிகொள் பிறை முடியீரே—நல்லதன்மை யுடைய இளம் பிறைத் திங்களைத் திருமுடியில் அணிந்துள்ளவராகிய உம்மை

பேணி நஞ்சு அற்றவர்—அன்பு செய்து தொழுதலினால் தமது நெஞ்சில் வஞ்சனைப்பண்பு இல்லாத மக்கள்

அருவினை இலர்—வெல்லுதற்கரிய வினைத்தொடக்கு இல்லாதவர் ஆவர்.

விளக்க உரை :—

செற்றினில் புனல்மலி சிறுகுடி மேவிய—செறு + இன் + இல் = செற்றினில். செறு = வயல்; இன் = சாரியை; இல் = இடப் பொருளுணர்த்தும் ஏழாம் வேற்றுமை உருபு. செறு—செற்று என இரட்டித்தது. புனல் மலி சிறு குடி என்றதனால் திருச் சிறு குடியின் நீர்வளம் கூறப்பட்டது.

பெற்றிகொள் பிறை முடியீர்—பெற்றி = தன்மை; நல்லதன்மை இரவில் திங்கள் உலகிருளை நீக்குதலால் பெற்றிகொள் பிறை

என்றார். பெற்றிகொள் பிறை முடியீர் என்றதனால் இறைவன் தன்னை அடைந்தவரைக் காத்தருள்வன் என்பது குறிப்பிடப்பட்டது.

உமைப் பேணி நஞ்சு அற்றவர்—பேணுதல்=விரும்புதல்; அன்பு செய்தல்; அதாவது அன்பு செய்து தொழுதல். பேணி நஞ்சு அற்றவர் என்பது பேணுதலால் நஞ்சு அற்றவர் எனக் காரணப் பொருளில் வந்தது. காரணப் பொருளில் வந்த பேண என்ற வினையெச்சம் பேணி எனத் திரிந்தது. நஞ்சு என்பது இங்கே உருவகமாய் வஞ்சனை என்ற பொருளில் வந்தது. நஞ்சானது தன்னை உண்டவரை அழித்தல் போல நெஞ்சில் வஞ்சனையானது அந்நெஞ்சினை உடையவரை அழித்தலால், நஞ்சு வஞ்சனை என்னும் பொருள்படவந்தது. நஞ்சற்றவர்—நெஞ்சில் வஞ்சனை யில்லாதவர். ஒருவர் இறைவனை உண்மை அன்புடன் தொழும்பொழுது அவருடைய அறிவு வேட்கை செயல்கள் முறையே இறைவனுடைய அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கி நிற்கின்றன. ஆதலின் இந்த அறிவு வேட்கை செயல்களைச் செய்கின்ற அவர் நெஞ்சம் நேர்மையாயிருக்குமே யன்றி வஞ்சகமுடையதாய் இருக்க முடியாது. ஆதலின் பேணி நஞ்சற்றவர் என்றார். "பஞ்ச பூதவலையிற் படுவதற்-கஞ்சி நானுமாமாத்தூரழகனை-நெஞ்சினு ளினைந்தேனினை வெய்தலும்—வஞ்சவாறுகள் வற்றின காண்மினே" என்று திருநாவுக்கரசு அடிகள் திரு ஆமாத்தூர்—திருக் குறுந்தொகைத் தேவாரம் 4 வது பாட்டில் இவ்வுண்மையைக் கூறி யிருத்தல் காண்க. பொய் பொருந்தும் வஞ்சனைக் கருத்துக்கள் மலிந்து நிலவுகின்ற இக்கால உலக மக்கள் தாங்கள்படுந் துயரினின்று நீங்குதற்கு இறைவனை உண்மையன்போடு தொழுதலே தீர்வு மருந்தாகும் என அறிக.

அருவினை இலர்-அருவினை-இறைவனைத் தொழுதல் அல்லாத வேறு வழியில் வெல்லமுடியாத வினைத்தொடக்கு. வினை என்பது இங்கே முன்செய்த வினைத்தொடர்புகளினு லுண்டாகும் துன்பங்கள்; ஆகுபெயர். இலர்—இல்லாதவர்; குறிப்பு வினையாலணையும் பெயர். ஏ—அசை.

---

## திருவாசகம்

### கோயிற்றிருப்பதிகம்

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
யுள்ளவா காணவந் தருளாய்

தேறலின் தெளிவே சிவபெருமானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த
இன்பமே யென்னுடை அன்பே.

பதவுரை:—

தேறலின்தெளிவே—மிகத் தூய தேன் போன்று உயிர்களுக்கு இனிமையானவனே
சிவபெருமானே—சிவபெருமானே

திருப்பெருந்துறை யுறை சிவனே—திருப்பெருந்துறையில் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கும் சிவனே

ஈறிலாப் பதங்கள் யாவையுங்கடந்த இன்பமே—முடிவில்லாத் தத்துவ நிலைகள் எல்லாவற்றிற்கும் அப்பாலா யிருக்கும் பேரின்பப் பொருளே

என்னுடை அன்பே—என்னை (அடிமையாக உடைய) அன்புக்குரிய பொருளே

மாறிநின்று—மெய்யாகிய நிலையான சிவப்பொருளை நோக்கி நிற்றலுக்கு மாறுபட்டுப் பொய்யாகிய நிலையில்லாத உலக நுகர்வுப் பொருளை நான் நோக்கி நிற்கும்படி

என்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழி அடைத்து—என்னை மயக்குகின்ற வஞ்சகமான ஐம்பொறிவாயில்களில் நான் செல்லுதலைத் தடுத்து

என் உள் அமுதமே வந்து ஊறிநின்று—எனது உள்ளத்தினுள்ளே அமுதம்போன்ற முழுப்பேரின்ப உணர்வானது விளங்கி ஊற்றிலிருந்து நீரெழுதல் போல எப்பொழுதும் எழும்படி

எழு பரஞ்சோதி உள்ளவா காண அருள்வாய்—தோன்றுதற்குக் காரணமான அருட் பேரொளியை இயல்பான முறைமையில் நான் அகக்கண்ணால் அறியும்படி அருள் செய்வாய்.

விளக்க உரை :—

தேறலின் தெளிவு—தேறல்=தேன்; தேறலின் தெளிவு—குற்ற மில்லாத தூய தேன்.

ஈறிலாப்பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே—மண்முதல் நாதம் இறுதியாகிய முப்பத்தாறு தத்துவங்களில் வைத்து அறியப் படுவனவாயுள்ள எண்ணில்லாத தத்துவ நிலைகளையுங் கடந்து நிற்கின்ற இறைவனது இன்ப வடிவான சிறப்பியல்பு நிலையில் (சொரூப நிலையில்) உயிர்களால் இறவாத பேரின்பம் நுகரப்

படுதலின் அடிகள் 'ஈறிலாப் பதங்களி யாவையுங் கடந்த இன்ப மே' என்றார். பதம்—நிலை; உலகில் உயிர்கள் நுகரும் இன்பமும் இன்பவடிவான இறைவன் தத்துவங்களைக் கலந்து நிற்றலா லுண்டாகிறது.

ஈறிலா என்ற அடைமொழியை இன்பத்துடன் சேர்த்து ஈறிலா இன்பம் என்பதற்கு இறவாத பேரின்பம் என்று பொருள் கொள்ளி னும் பொருந்தும்.

என்னுடை அன்பே—இத்தகைய பேரின்பத்தை உயிர்கள் நுகர் தற்கு அன்பு காரணமாயிருத்தலின் இன்பமே என்று அடிகள் சிவபெருமானை விளித்தபின் அன்பே என்று கூறினர். "அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்" என்று திருமூலர் திருமந் திரம் 270வது பாட்டிற் கூறினமை காண்க.

மாறி நின்று-நிற்க என்பது நின்று எனத்திரிந்து நின்றது. நிற்கஎன் பது காரியப் பொருட்டாய் எதிர்காலம் குறித்து நிற்கிற செய் யென் வாய்பாட்டு வினையெச்சம்.

வஞ்சப்புலன்—ஐம்பொறிகளால் நுகரப்படும் உலக இன்பம் உண் மையில் நிலையில்லாததாயும் துன்பந் தருவதாயு மிருப்பினும் ஐம்பொறிகள் அவ்வுண்மையை மறைத்து நிலையான இன்பம் போலத் தோன்றச் செய்தலின் அவற்றை வஞ்சப்புலன்என்றார்.

என்உள் அமுதே வந்து ஊறி நின்று—உள்=உள்ளம். நெஞ்சு-மனது. வந்து என்ற சொல்லை அமுதம்என்ற சொல்லின் பின்சேர்க்க. சென்றடையாத பரஞ்சோதி யாதலின் வந்து என் பதற்கு விளங்கி என்ற பொருள் கூறப்பட்டது. நிற்க, என்பது நின்று என, மாறி நின்று என்பதிற்போலத் திரிந்து நின்றது.

நின்று=நிலைபெற்று நிற்க, அதாவது, எப்பொழுதும் நிலையாக எழும்படி; ஊறிநின்றுஎன்பது உருவகம். "ஓர் ஊற்றி லிருந்து நீரானது எப்பொழுதும் மேலேவந்து கொண்டிருத்தல் போல எனது உள்ளத்திலிருந்து பேரின்ப உணர்வு எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்க" என்ற பொருள்படும். அமுதே என்ற சொல்லி லுள்ள "ஏ" தேற்றத்தைக் குறிக்கிறது. இத்தேற்ற ஏகாரம் மலத் தொடக்குச் சிறிது மில்லாத முழுப்பேரின்பம் (பரிபூரணானந்தம்) என்றபொருளைத் தருகின்றது.

எழுபரஞ்சோதி உள்ளவா காண அருளாய்—எழுபரஞ் சோதி என்பது தோன்றுதற்குக் காரணமான பரஞ்சோதி. பரஞ்சோதி-மேலான ஒளி; பேரொளி; அருட்பேரொளி; முப்பத்தாறு தத்துவங் களையும் தன்னிடம் சத்தித் தொகுதியாய் அடக்கிக்கொண் டிருக்கிற இந்த அருட்பே ரொளியை அகக்கண்ணாற் காணுகிற ஒருவரே முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த நிலையிலுள்ள பேரின்பத்தை உணரவல்லவர் ஆதலின் பரஞ்சோதி உள்ள வா காண அருளாய் என்றார். காணுதல் என்பது இங்கே அகக் கண்

ணால் (ஞானக்கண்ணால்) அறிதல்; உள்ளவாறு என்பது உள்ளவா எனக் குறுகிநின்றது. உள்ளவாறு என்பது இயல்பானமுறைமையில் என்று பொருள்படும். உயிர்கள் மலத்தைச் சார்ந்து நிற்றல் செயற் கையும், அருளைச்சார்ந்து நிற்றல் இயற்கையுமாதலின் உள்ளவாறு என்பதற்கு இயல்பான முறைமையில் என்று பொருள் கூறப்பட்டது. மலமுற்றிலும் நீங்கிய ஒருவனுக்கு அருட்பேரொளி மலமறைப்பி னின்றுநீங்கிய காரணத்தால் உள்ளவாறு காணப்படும். மாணிக்கவாசக அடிகள் இந்தப்பாட்டில், 'இன்றெனக்கருளி', என்னும், முதற் குறிப் புப்பாட்டில் இருள் கடிந்துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று நின்ற நின்தன்மை என்று முதலாவதாகக் கூறப்பட்ட அருட்பே ரொளியானது அந்தப்பாட்டில் மூன்றாவதாகக் கூறப்பட்ட பேரின்பம் அடைவதற்கு காரணமாயுள்ளது என்று கூறியருளினர். உலகப் பற்றை முற்றிலும் விட்டு முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பா லுள்ள சிவத்தையே சிந்தித்துக் கொண்டிருக்கிறவருடைய உள்ளத் தில் அந்த அருட்பேரொளி விளங்கும் என்ற உண்மையையும் இப்பாட்டிற் கூறியருளினர்.

மா. வே. நெல்லையப்பபிள்ளை

---

# கொலை மறுத்தல்

நலிதரு சிறிய தெய்வமென் றையோ
　　நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதரு ஆடு பன்றிகுக் குடங்கள்
　　பலிக்கடா முதலிய உயிரைப்
போலிவுறக் கோண்டே போகவுங் கண்டே
　　புந்திநோந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில்
　　கண்டகா லத்திலும் பயந்தேன்.

—இராமலிங்க வள்ளலார்.

# இலக்கணமும் இலக்கியமும்
# LANGUAGE AND LITERATURE

## அகப்பொருள் அழகு

[வித்துவான். மணி. திருஞானசம்பந்த முதலியார் அவர்கள்]

மன்னுலகில் எல்லாப் பொருள்களினுஞ் சாலச் சிறந்த செம்பொருள் மாண்புறு மனமேயாகும். நன்மனத்தால் நன்மை விளையவும், வன்மனத்தால் தீமை விளையவும் கண் கூடாகக் காண்கின்றோம். ஆதலால், நல்ல உள்ளம் வாய்த்தல் பொருவில்லாக் கழிபெருஞ் செல்வம் என்பதில் தினைத் துணையும் ஐயமின்று. வளமுறு கல்வியும், அளவிடற்கரிய அறிவும் பெற்ற பேரறிஞர்களும் நல்லுள்ளம் பெறவில்லை யெனின், அவர்கள் நன்மனம் பெற்றுள்ள ஒரு சாதாரண மனிதனினும் புல்லியர்களாகக் கருதப்படுவார்கள். அத் தகைய விழுமிய மனத்தை யுடைய மக்கள் பிறர்க்கு எல்லாத் துறைகளிலும் இன்பம் ஊட்டுவதன்றித் தாங்களும் இணை யிலா இன்பத்தில் எஞ்ஞான்றும் திளைத்துப் பொலிவுறுவார் கள். மனத்தில் உண்டாகின்ற எண்ணங்களுக்கு ஏற்ப ஒருவன் நல்லவனுகவோ, தியவனுகவோ, பெரியோனுகவோ, சிறியோனுகவோ மாறுகின்ருன்.

ஒருவருடைய உள்ளத்தின் உயர்ச்சியை அறிதல் அருமை யினும் அருமையாகும். அத்தகைய நுண்ணிய மாண் பொருளை அறிய வல்லுநர் பேரறிஞர்களாக இருத்தல் வேண் டும். உலகில் இரு நண்பர் ஒருவர்பால் ஒருவர் தம் மனத் திற் கொண்டுள்ள சிரிய எண்ணங்களை அறிவாராயின் அஞ் ஞான்று அவர்கள் எய்தும் இன்பத்தின் எல்லையை உணர ஒருவராலும் இயலாது. இரு சகோதரர் மனப்பான்மையும் அப்பெற்றியே என்னலாம். ஏனைய சுற்றத்தார் உள்ளுணர்ச்சி யும் அந்நீர்மைத்தேயாகும்.

உலகில் எல்லா இன்பங்களினுஞ் சிறந்த இன்பம் காதற் பழுத்த காரிகையை அண்மி, அவளிடம் எய்தும் இன்பமே என்பதில் ஐயமின்று. அங்ஙனம் கூறுவதால் கேவலம் ஒரு வரை ஒருவர் மருவுதலால் உண்டாகும் இன்பந்தான் என்று எண்ணுதல் பெரும் பேதைமையாகும். அரசனுக இருப் பினும், ஒப்புயர்வில்லாக் கல்விமானுக இருப்பினும், விழுத்தகு சிறப்பும், செல்வமும், அதிகாரமும் பெற்ற ஏனைய மக்களாக

இருப்பினும், பாவையர்பால் சிந்தையைச் செலுத்தாமல் இரார் என்பது திண்ணம். மங்கையர் கூட்டுறவில்லா வாழ்க்கை பதருக்குச் சமானமாகும் என்று சொல்லவும் வேண்டுமோ? அக்காரணம் பற்றியே உலகில் மக்கள்மாத்திர மன்றி விலங்குகளும், பறவைகளும், சிறு பிராணிகளுங் கூட, ஆணும் பெண்ணுமாகக் கூட்டுறவு புரிந்து, இனிது உயிர் வாழ்கின்றன.

இத்துணைப் பெருஞ்சிறப்பு வாய்ந்த கலப்பு வாழ்க்கை தான் உலகில் இணையில்லாப் பேரின்ப வாழ்க்கையாகும். மேலுலகு உண்டு என்பார்க்கும், ஆன்மலாபம் உண்டு என் பார்க்கும், என்றும் அழியாத நிலைபெற்று, எல்லா உணர்ச்சி களும்பெற்று, முழுஅறிவோடு நின்று நிலவி, மறு பிறப்பு எடுக்காமல் இருக்கும் வாழ்க்கைதான் பேரின்ப வாழ்க்கை யென்று தோன்றும். இறந்த பின்னர் எய்தும் பேரின்ப வாழ்க்கைக்கு வழிகாட்டியாகப் பொலிந் தொளிரும் வாழ்க்கை சிற்றின்ப வாழ்க்கையே என்று அறிஞர்கள் கருது கின்றனர். அத்தகைய வாழ்க்கையைப் பெற்றாலும், செம்மை யுற, இன்பம் சீரிய நிலையில் பெறவில்லையெனின், அது மெய் யின்ப வாழ்க்கையாகாது. ஆதலால், ஒரு ஆடவன் ஒரு மகளை மிக விழைந்து, தன் மனப்பான்மைக்கு ஏற்பக் களவு மணம் புரிந்து, பின்னர் இல்லற வாழ்க்கையை இனிது வாழ் தலையே அறநெறி வழுவாத ஒப்புயர்வற்ற இன்ப வாழ்க்கை யாக நமது நாட்டில் இருந்த பண்டைக்காலத்துத் தமிழ் மக்கள் கருதியிருந்தார்கள். அவர்கள் திருமணம் புரிந்த தன்மையையும், தங்கள் காதற் கிழத்திகளோடு உரிமை பூண்டு இன்புறு வாழ்வை வாழ்ந்த தன்மையையும் உள்ளும் போது ஒவ்வொரு அறிஞர் உள்ளத்திலும் உவகை வெள்ளம் துளும்பும். அத்தகைய இணையில்லாச் சீரிய இன்ப வாழ்க் கையைப் பிற்காலத்தில் நம் தமிழ்மக்கள் அறவே மறந்து போயினர். இதுபோழ்து மணமகனும், மணமகளும் எய்து கின்ற வாழ்க்கை மிகப் புல்லியதே என்பதில் சிறிதும் ஐயமின்று.

பெருந்திருவும், பெருங்கல்வியும், பெருநிலையும் பெற் றுள்ள மக்களும் தற்காலத்தில் விழுமிய காதற்சுவை விஞ்சிய இன்பவெள்ளம் பெருகும் மனைவாழ்க்கையை எய்துகின்றார் களில்லை என்பது தவறாகாது. அத்தகைய பெரிய நிலையி லுள்ளவர்களும் தங்கள் மனப்பான்மைக்கும், கொழுஞ்சுவைக் கும் ஏற்பக் காரிகைகளை மணக்கின்றார்களில்லை. பெண்மணி களின் கதியும் அப்பெற்றித்தே. அவர்களும் எத்துணைச் செல்

வமும், அதிகாரமும், கல்வியும் பெற்றவர்களாகத் திகழ்ந்த போதிலும், தங்கள் உண்மை விருப்பம்போல் இன்புறு இல்லற வாழ்வை எய்துகின்றார்களில்லை. இத்தகைய புல்லிய வாழ்க்கையை அறவே வெறுத்த பண்டைக்காலத்துத் தமிழ்மக்கள் தங்கள் சிந்தைகளிப்பச் சீரிய நிலையில் மங்கையர்களைக் காதற்சுவை நுகர்ந்த பின்னரே மணந்தார்களாதலால், அகப்பொருள் என்று ஒரு செம்பொருளும் உண்டாயிற்று. அகத்தே நிகழ்கின்ற எண்ணங்கள் எண்ணிறந்தனவாக இருத்தலால், அவற்றை அறிகின்ற ஆற்றல் ஆடவர்க்கும், மகளிர்க்கும் உண்டாயின் எத்துணைய இன்பம் இருபாலார்க்கும் உண்டாகும் என்று உரைக்கவும் வேண்டுமோ? ஒருவன் அல்லது ஒருத்தி மனத்தே நிகழும் இன்பத்தை அறிவது எவராலும் இயலாத காரியமாகும். அவ்வின்பத்தை அவனே அல்லது அவளே அறியவல்லார்களாவார்கள். அத்தகைய இன்பத்தின் பயனாக இருபாலார்க்கும் உண்டாகும் எண்ணங்கள் பற்பலவாக இருத்தலால் அவற்றையெல்லாம் பற்பல துறைகளில் பற்பல விழுமிய பொருள்கள் பொருந்தப் பண்டைக்காலத்துப் பெரும் புலவர்கள் அகப்பொருள் சம்பந்தமாகப் பற்பல நூல்கள் எழுதினார்கள். அக்காலத்தில் ஒருவன் எத்துணைய விழுமிய கல்விமானாகத் துலங்கியபோதிலும், அவன் அகப்பொருள் விஷயத்தில் பாண்டித்தியம் எய்தவில்லையெனின், அவன் சிறந்த வித்துவானாகக் கருதப்படமாட்டான். அக்காரணம் பற்றியே அக்காலத்தில் பெரும்புலவர்கள்கூடத் தங்கள் பேராற்றலையும், பெரும்புலமையையும் அகப் பொருள் சம்பந்தமாகப் பல சிறந்த பாக்கள் யாத்து விளக்கினார்கள். பத்தி நெறியில் சென்ற புலவர் பெருந்தகைகளுங்கூட இறைவனைத் தொழுகின்ற காலத்திலும், தங்களைத் தலைமகளாகப் பாவித்து, அப்பெருமானைத் தலைமகனாகப்பாவித்து எத்தனையோ பத்திச்சுவை சொட்டும் இனிய பாக்கள் பாடியிருக்கின்றனர். எனவே, அகப்பொருள் என்பது எல்லோராலும் பெரிதும் பாராட்டப்பட்டு வந்தது என்பது வெளிப்படை.

ஒழுக்கநெறி போதிக்கும்பேராற்றல்வாய்ந்த பேராசிரியராகிய தெய்வப்புலவர் திருவள்ளுவ நாயனாரும் அகப்பொருள் என்னும் அளப்பருஞ் சுவைவிஞ்சிய நுண்பொருளைக் கைவிட்டாரில்லை. அப்பெருந்தகையாரும் தாம் இயற்றிய இணையில்லாத் திருக்குறளில் ‘காமத்துப்பால்’ என்று ஒரு பகுதி இறுதியில் இயற்றித் தலைசிறந்த மனப்பான்மை

கெழுமிய காதலன், காதலியைச் சிந்தையில் அமர்த்தித் தமது விழுமிய ஒப்புயர்வில்லாப் பெருந்தன்மையையும், பெருங்குணத்தையும், பேரறிவையும், சிறந்த தவசிரேட்டரும் தங்கள் சென்னியில் அணியுமாறு அதன்கண் அருட்செய்திருக்கின்றனர். அவ்வரிய நுண்ணிய இன்பம் பொதிந்த பொருள்களை அறியவல்லுனர் எய்தும் இன்பத்தை அளவிட்டுச்சொல்ல இயலாது. அவ்வினிய பகுதியைத் திருப்பித் திருப்பி ஓதிச் சிந்தித்துச்சிந்தித்துப் பார்க்க வல்லார்க்கே அதன்கண் அமைந்துள்ள செம்பொருட் புதையல்கள் விளங்கும். அப்புலவரேறு அருட்செய்துள்ள பாக்களின் நுண்மையையும், அழகினையும், நயத்தையும் அறிகின்ற சாதாரண ஆடவரும், மகளிருங்கூட இன்பக்கடலில் திளைப்பார்கள் என்பது திண்ணம்.

தெய்வப் புலவர் திருவள்ளுவர் இசைத்த பாக்களில் சிற்சிலவற்றை ஈண்டு எடுத்துக் காட்டல் அத்தியாவசியமாகத்தோன்றலால், அவையிற்றைச் சிற்சில குறிப்புக்களுடன் விளக்குகின்றேன். அகப்பொருள் துறை என்பது சுருக்கிச் சொல்லுமிடத்துப் பேரழகு வாய்ந்த, வளமும், ஒளியுஞ் செறிந்த தலைமகனும், அவனைப் போன்றே எழிலும், ஒளியும், சுவையும் கெழுமிய தலைவியும் ஒரு சோலையினிடத்தோ, ஒரு மலையினிடத்தோ, ஒரு கடற்கரையினிடத்தோ இன்னும் இன்பம் நிறைந்த வேறு எந்த இடத்தோ ஒருவரை ஒருவர் கண்ட துணையானே காதற்களியை நுகர்ந்து, ஒருவருக்கு ஒருவர் அடிமையாகிப் பொற்புள்ள சீரிய நிலையில் சிற்றின்பம் நுகர்ந்து, இருவர் உயிர்களும் ஓர் உயிராய்த் துலங்கிப் பின்னர் மனையற வாழ்க்கையில் இன்பத் தேன் தலைசிறக்க எய்துவதோடு, மாண்பயனும் எய்துதல் என்பதாகும். அங்ஙனம் ஒரு காதலனும், காதலியும் முதற்கண் சந்திப்பதிலிருந்து மனையற வாழ்க்கையை மாண்புடன் செலுத்துவது வரையில் பற்பல துறைகளில் பற்பல அழகுகளும் நயங்களும் மிளிர நம் பெருநாவலரும் அகப்பொருள் சம்பந்தமாகப் பொன்னினும், மணியினும் போற்றத் தக்க அரும் பொருள்கள் அருட்செய்தனர்.

திருவள்ளுவ நாயனர் இயற்றிய அரும்பாக்களில் ஒன்ருகிய "இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கொன் றந்நோய் மருந்து." என்னும் பாவினில் அமைந்துள்ள அழகினையும், நயத்தினையும் ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள். காதலன் தான் நனி விழைந்த காதலியைக் குறித்து, "இவளுடைய மையுண்ட கண்களில் உண்டாகின்ற

நோக்கு மற்றைக் காலத்தில் ஒரே ஒரு நோக்கே. ஆனல், இவள் இப்போது என்னிடத்து இரண்டு பார்வைகள் செலுத்தினுள். இக்கட்டழகியின் ஒரு பார்வை நான் என்றும் எய்தாத காம நோயை உண்டுபண்ணிற்று. அந்நோயை எய்திய நான் எங்ஙனம் அதனின்றும் மீள்வேன் என்று நான் தவிக்க வேண்டிய அவசியமின்று. ஏனெனில், இவள் அளப்பருங் கருணையால் என்னிடம் செலுத்துகின்ற வேருெரு பார்வையே அக்காம நோயை நீக்கிப் பேரின்பத்தை அளிக்க வல்லதாக உளது. இஃது எத்தகைய வியப்புள்ள விஷயம்!'' என்று இயம்புகின்றுன்.

தலைமகன் தலைவியின் உள்ளக் கருத்தைச் செவ்விதின் அறிந்துகொண்டான் என்பதையும், தலைவியும் தலைமகன் உட் கருத்தை நன்ருக உணர்ந்து கொண்டாள் என்பதையும் ஆசிரியர் திருவள்ளுவர் மிகவும் அழகாகக் கூறியிருக்கின் றனர். அதாவது,

''கண்ணெடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.''

இரு காதலரும் ஒருவரை ஒருவர் முதற்கண் நோக்கிய ஞான்றே, அந்நோக்கினல் உண்டாகிய எடுத்திசைத்தற் கியலாத தனி யின்பமானது ஒருவருக்கொருவரை அடிமையாக்கி விட்டது. அதாவது அவ்விருவர் பார்வைகளும் ஒரே தன்மையாகவும், ஒரே அளவாகவும், ஒரே நோக்கத்துடனும், ஒரே இன்பத்துடனும் ஒளிர்ந்தமையால், அவர்கள் ஒருவரை ஒருவர் ''நான் உன்னைக் காதலிக்கின்றேன்'' என்று கூறுமலேயே காதலித்து விட்டதாக இருவருக்கும் அவர்கள் பார்வைகளே விளக்கிவிட்டன. அந்நோக்குகளுக்கு ஏற்பட்டுள்ள ஆற்றல் வாய்ச்சொற்களுக்கு ஏற்பட்டுள்ள ஆற்றலினும் மிகவும் விழுமியது ஆதலால், அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி, ''நான் உன்னைக் காதலிக்கின்றேன்,'' என்று கூறவேண்டிய அவசியமே நிகழவில்லை என்றும், அங்ஙனம் ஒருவரிடம் ஒருவர் கூறியபோதிலும் அதனல் ஒரு பயனுமில்லை என்றும் கூறுகின்ற புலவர் நுண்ணிய கருத்து எத்துணைச் சிறந்ததாகவும், எத்துணை இன்பம் பயக்கவல்லதாகவும் இருக்கின்றது என்பதைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள்.

உலகினுள்ள இன்பங்கள் அனைத்தும் ஐம்புலன்களாலன்றே அனுபவிக்கப்படும்? நாவிற்குச் சுவை நல்கக்கூடிய ஓர் அருங்கனியானது செவிக்கு இன்பத்தை நல்குமோ? நல்காது. செவிக்கு இன்பத்தைச் சொரிகின்ற இனிய கீதம்

நாவிற்குச் சுவையை நல்குமோ? நல்காது. நாசிக்கு நல்லின்பத்தை அளிக்கக்கூடிய நறுமணம் நாசிக்கு இன்பத்தை நல்குமேயன்றி நாவிற்கோ அல்லது செவிக்கோ இன்பத்தை அளிக்குமோ? அளிக்காது. கண்ணுக்கு விழுமிய இன்பத்தைப் பயக்கின்ற நற்காட்சியானது கண்ணிற்கு இன்பத்தைத் தருமேயன்றி நாவிற்கும், செவிக்கும், நாசிக்கும் இன்பத்தை நல்குமோ? நல்காது. தேகத்தின் இணைப்பால் உண்டாகின்ற இன்பம் தேகத்திற்கே உண்டாகுமேயன்றி மற்றப் புலன்களுக்கு உண்டாகுமோ? உண்டாகாது. ஆகையால், உலகில் ஐம்புலன்களுக்கும் இன்பம் தேடுபவர் ஐந்து துறைகளிலும் ஐந்து வெவ்வேறு பொருள்களை நாடித்தான் இன்பம் நுகர்தல் வேண்டும். ஆனால், ஒரு காதலன் தான் இன்பம் நுகர்ந்த பாவையினிடத்துண்டாகிய இன்பத்தைக் குறித்து, "நான் என் காதலியின்மாட்டு எய்திய இன்பமானது ஐம்புலன்களுக்கும் ஒருங்கே இன்பத்தை ஈந்தது. இதனினும் சிறந்த இன்பமும் வேறு ஒன்று உண்டோ? ஐந்துவகையான இன்பங்களும் இவள் ஒருத்தியினிடத்திலேயே பொதிந்து கிடக்கின்றன. ஆகையால், இவளே எல்லாத்துறைகளில் உண்டாகின்ற இன்பங்களுக்கு எல்லாம் இருப்பிடம்," என்று கூறுகின்ற சிறப்பினை நாயனார்,

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள,"

என்று எத்துணை நட்பங்கள் பொலிய ஒரு காரிகையின் இன்பத்தை விளக்கியுள்ளார் என்பதைச் சிறிது ஆழ்ந்துநோக்கினுல், நுண்ணிய அறிவும், ஆழ்ந்து அருமைகளைச் சிந்திக்கும் ஆற்றலும் வாய்க்கப் பெற்ற மக்களுக்கு உண்டாகும் இன்பமும், வியப்பும் இத்துணையன என்று அளவிட்டுக் கூறவியலாது.

(தொடரும்)

---

## கம்பரும் காதல் மணமும்

[வித்துவான். மா. இராசமாணிக்கம்]

(௬உ-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

கோசலக் குரிசில் சென்ற பின்னர் வைதேகி தன் உயிர் உடலில் தங்கப்பெறுது துடித்தாள். அவளது நிறை என்னும் அங்குசம் நிமிர்ந்து போயது. குரிசிலின்பின்னே போன மனதைத் தன்பால் மீண்டும் இழுக்கச் சக்தியற்றவளாய்க்

காதல் நோயால் நலிந்தாள். அவ்வளவில் அந்தி நேரம் வந்தது. அஃது அவளுக்குப் பூதம்போன்று இருந்தது. மாலை வானத்தைச் சிதை, குளங்களாய நெருப்பிலே காய்த்து மலரின் மணமாகிய விஷத்தைப் பூசிக்கொண்டு உலவுகின்ற தென்றல் காற்று என்ற வேல், அனங்கன் எய்த அம்புகளால் உண்டான புண்களில் பாய, அதனால் நலிகின்ற உணர்வும் அழகும் உருகிச் சோர்கின்ற சிதையின் உயிர் உண்ணும்படி விளங்கிய மாலை வானத்தை நோக்கி 'இயமனது உருவம் இது தானோ?'' என்றாள்.

'கயங்க ளென்னும் கல்தோய்ந்து, கடிநாண் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல் மன்மதவேள் எய்த புண்ணின் இடை நுழைய
உயங்கு முணர்வு நன்னலமு முருகிச் சோர்வாள் உயிருண்ண
வயங்கு மாலை வானோக்கி இதுவோ கூற்றின் வடிவென்றாள்!'

(க. ரா: மி. காட்சிப் படலம்)

இங்ஙனம் விரகவேதனையால் அந்திக்கு ஆற்றாளாகிப் புலம்பிய வைதேகி, இருளைக் கண்டதும் மிகச் சோர்வடைந் தாள். (கோசலக் குரிசிலின்) 'கரிய நிறத்தை என்போல் எல் லோரும் எண்ணுவதால், அவ்வெண்ணத்தின் தொகுதிதான் இங்ஙனம் இருளாகப் பரந்ததோ! என்று' வியர்த்தாள். பின் னர், அன்றில் கூவுதலுக்கு ஆற்றாளாகி, 'மன்மதன் என்னைத் துன்புறுத்த உன்னை ஏவினனோ? அல்லது யான் செய்த தீவினையே அன்றில் என்ற உருவோடு வந்ததனையோ'? என்று கூறி வருந்தினாள். இதனைப் பற்றி விரிக்கின் பெருகுமாத லின் ஈண்டு விரித்திலம்.

இருள் சென்ற பின்னர் தண்கதிர் இன்புறத் தோன்றி னான். இன்புறத் தோன்றிய மதியைத் தனக்குத் துன்புறத் தோன்றியதாக வைதேகி நினைத்தனள். அதற்கு அவள் ஆற்றாளாகி, 'அதிகப்படும் இருளாக வந்து உலகை விழுங்கி, மேன்மேலும் பருக்கின்ற பெரியதோர் நெருப்பினிடையே முளைத்த வெண்ணெருப்பே! நீ நீங்காத அழகு உடைய அவருக்கு (இராமனுக்கு) நிறத்திலே தோற்று ஒரு புறம் ஒதுங்கி ஏங்கிக் கிடக்கும் அலைகளை வீசும் கடலுக்கும் எனக் கும் கொடியன் ஆனாயோ? ஏன் இது?'

'நீங்கா மாமை யவர்தமக்கு நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கு மெறிகட்கும் எனக்குங் கொடியை யானாயே!
ஓங்கா நின்ற இருளாய்வந் துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி னிடையே வெழுந்த வெண்ணெருப்பே'

(க. ரா. மி, காட்சிப் படலம்):

இவ்வாறு புலம்பிய சனகி, அன்னப் பறவை நெருப்பில் பட்டதுபோல் மலர்கள் அடர்ந்த சயனத்தில் புரண்டாள். இங்ஙனம் பலவாறு காதல் நோயால் நைந்து கூறிய வைதேகி யின் நிலையை அருகே யிருந்து கண்டவர் போல் கம்பர் இரக் கங்கொண்டு இயம்பும் இனிய கருத்து இனிமையை ஊட்டு கின்றது.

ஆகையால் காதலால் விளையும் நோய்க்கு மருந்தும் உண்டோ? எனக் கம்பர் கழிவிரக்கங் கொள்கின்றார்.

‘வாச மென்கல வைக்களி வாரிமேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்;
வீச வீச வெதும்பினள்; மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ’

என்று காதல் நோய்க்குக் காதலரே மருந்தன்றி மலர் கள் முதலானவை மருந்தன்று என்பதைக் கூறி, சீதைக்கு உபசாரம் செய்த தோழியரை நோக்கி நகுகின்றார்.

சீதையின் செய்தி இங்ஙனமாக, இராமன் கன்னியைக் கண்ட அன்றிரவு கண்துயின்றிலன். அந்நிலையைக் கம்பர் பிரான்,

‘இருள்
கனியும் போல்பவன் கங்குலும் திங்களும்
தனியும் தானுமத் தையலு மாயினான்!’

என்று குறுநகை தோன்றக் கூறுகின்றார்; இரவுண்டு, மதியுண்டு, தனிமையுண்டு, தானுண்டு என்றிருந்தான் இரா மன். அப்போது அவன் அகத்தே குடிகொண்ட சனகியின் தோற்றம் முகத்தெதிரே தோன்றக் கண்டான். கண்டு, ‘வானத்திலிருந்து பிரிந்த மின்னலின் உருவானது இங்ஙனம் பெண்ணின் நல்ல அழகைப் பெறுவது கூடுமோ? அவ்வுரு வத்தைக் கண்ணினுள்ளும் கருத்தினுள்ளும் காண்கின்றேன். இரண்டிற்கும் வேறுபாடு உணர்ந்திலேன்’ என்று கூறி அயிர்த்தான்.

பின்னரும் இராமன், ‘அவள் என்பால் அருள் இலாதா ளாயின் நான் என் மனதின் ஆசையால் வெருட்டுகின்ற காமநோய் தீரத்தக்க மருந்தாக அவளை நான் என் விழி களால் விழுங்கி இருப்பதால், தெளிவுற்ற இவ்வுலகில் சரா சரப் பொருள்கள் அனைத்தும் எனக்கு அவளது அழகிய உருவாகவே தோன்றலாயின’ என்று ‘மெய்க்காதலின் தத்து வத்தை’க் கம்பர் இராமன் கழறுவதாகக் கூறி நமக்கு உண்மையை விளக்குகின்றார்.

'அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளி நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வானவே!

(க. ரா: மி. காட்சிப் படலம்)

இச்செய்யுளில் இராமன் 'அருள் இலாள்' என்று சீதையைக் கடிகின்றான். இஃது அர்த்தமற்ற சொற்களேயாகும். காதல் நோயால் நலியும் ஆண் பெண் புலம்பும் பழக்கமான சொற்களே இவை. இராமன் கூற்றைக் கவனித்தால், சனகி எவ்வித அருளை இவன்மாட்டு அந்நிலையில் செய்யக்கூடும்? மணமாகாத முன்னர் இவனண்டை வந்து அவள் எங்ஙனம் அருள் சுரக்கக்கூடும்? இங்ஙனமே மறுநாள் சீதையும் பிதற்றுகின்றாள்; 'மதனன் தன் நீண்ட வெற்றி வில்லால் என் நெஞ்சு அழியும்படி, பஞ்சை அழிக்கும் தீயைப்போல் என் ஆவியைப் பற்றக் கொடிய பாணங்களை எய்ய, அதனால் துன்புறும் மாதரை உய்ய வந்து "அஞ்சல், அஞ்சல்" என்று அபயம் அளிக்காத ஆண்மை என்ன ஆண்மையோ?' என்று தன்னை ஆட்கொள்ளாதிருக்கும் இராமனைக் கடிந்து கூறுகின்றாள்.

"பஞ்சரங்கு தீயினாவி பற்றநீடு கொற்றவில்
வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாம னெய்யவே
சஞ்சலங் கலந்தபோது தையலாரை யுய்யவந்
தஞ்சலஞ்ச லென்கிலாத ஆண்மை என்ன ஆண்மையோ?"

(க. ரா: கார்முகப் படலம்)

தாமரைப் பொய்கையிடையிருந்த மண்டபத்தில் வீற்றிருந்த வைதேகி, அங்கு இராமன் எதிர்வந்து தோன்றவில்லை என்று பழி கூறினளோ? இஃது காதலர் பால் தவழும் வெற்றுரைகளே?

இந்நிலையில் வைதேகி, தன் வளர்ந்து உயர்ச்சி பெற்ற கொங்கைகளை நோக்கி, 'இளைத்தலன்றி மிகக் கொழுத்த கொங்கைகளே! நீங்கள் பருத்து விம்மி என்ன பயனைப் பெற்றீர்? சந்திரன் போன்ற முகத்தையுடையவரும் யாவராலும் வளைப்பதற்கு முடியாத வில் ஒன்றினைக் கையில் தாங்கிய சிங்கம் போன்றவரும் ஆகிய அப் பெருமகனது மார்பினுள் பொருந்தி அனுபவிக்கின்ற நலம் உங்களுக்கு வேண்டுமானால், இவ்வாறு பருப்பதை விட்டு, அதற்கு வேண்டிய தவங்களைச் செய்யுங்கள்' என்று கூறுவது காதல் இன்பத்தைப் பெருக்கச் செய்கின்றது.

“இளைக்கலாத கொங்கைகாள் ! எழுந்து விம்மி என் செய்தீர் ?
முளைக்கலா மதிக்கொழுந்து போலும் வாண் முகத்தினன்
வளைக்கலாத விற்கையாளி வள்ளல் மார்பினுள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான செய்தவங்கள் செய்மினே!”

(க. ரா: கார்முகப் படலம்)

திருமணத்தன்று முன்னாள் இரவிலும் காதலர் இருவரும் தனித்தனி இருந்து நோயால் நலிந்தனர். இராமனும் துயின்றிலன்; சனகியும் துயின்றிலள். மறுநாள் திருமணம் இனிது நிறைவேறச் சீதை அவைக்கண் வந்தாள். ஆங்கே, இருவரும் தத்தமக்கு இருந்த அன்பைக் கண் பார்வையால் அறிவித்துக் கொண்டு உள்ளம் மகிழ்ந்தனர். பின்னர், திருமணம் திருவுடன் நடந்தேறியது.

---

## திரு. திவான்பகதூர். பொ. சுப்பையா முதலியாரவர்கள் தலைமையுரை

“வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்
பூதபரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.”

“சைவசமயமே சமயஞ் சமயாதீதப் பழம்பொருளைக்
கைவந்திடவே மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டாம் முத்திதருந்
தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே.”

(தாயுமானவர்)

நமது சைவத்துக்கும் தமிழுக்கும் சிறந்த நாடாய் விளங்குவது தென்பாண்டி நாடேயாகும். தமிழின் பேராசிரியராகிய அகத்திய முனிவர் தென்பாண்டி நாட்டிலேயுள்ள பொதிய மலையிற்றான் எழுந்தருளி யிருக்கின்றார். சைவத்திற்கு இரு கண்மணிகள்போல் விளங்கும் நமது மாபாடிய ஆசிரியராகிய மாதவச் “சிவஞான முனிவரும்,” ஐந்தாவது ஆண்டு வரை மூகையராயிருந்து திருச்செந்தூர் முருகப்பெருமான்

(குறிப்பு) தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் 15-வது ஆண்டுவிழாவில் நிகழ்த்திய தலைமையுரை.

திருவருளால் அது நீங்கப்பெற்று, இமயம் வரை சென்று சைவத்தை நிலைநாட்டிய நமது "குமரகுருபர சுவாமிகளும்" இந்நாட்டிற்றான் திரு அவதாரஞ் செய்துள்ளார்கள். இத்தகைய பெருமை வாய்ந்த திருநாட்டில் தமிழுக்கும் சைவத்திற்கும் உறைவிடமாகிய திருநெல்வேலி என்னும் திருநகரம் திருஞான சம்பந்தப் பெருமானால் தேவாரம் அருளிச்செய்யப் பெற்றதும், காந்திமதி சமேத நெல்லையப்பர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பதுமாகிய திருத்தலமாயுள்ளது.

இந்நகரத்தில் நமது சைவமும் தமிழும் தழைப்பதற்காகவே தோற்றுவிக்கப் பட்டுள்ள "சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்" அறநிலையங்களாகிய தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் 15-வது ஆண்டுவிழாவும், தென்னிந்திய தமிழ்ச்சங்கத்தின் 7-வது ஆண்டுவிழாவும் இவண் நடைபெறப் போவதறிந்து மகிழ்ச்சியடைகின்றேன்.

இவ் ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கும்படி என்னைக் கழகத்தார் கேட்டுக் கொண்டார்கள். அதற்கு நான் தகுதியுடையன் அல்லனாயினும், சைவத்திற்கும் தமிழுக்கும் இயன்ற தொண்டு செய்யவேண்டுமென்னும் பேரவாவினாலே தலைமைதாங்க ஏற்றுக்கொண்டேன். இன்று நடைபெறப் போவது "சைவசித்தாந்த சங்கத்தின்" 15-வது ஆண்டு விழாவாகும். நமது சித்தாந்த சைவமானது ஏனைய சமயங்களைப்போல ஒரு குறுகிய கொள்கையுடையதன்று. ஒரு காலத்திற்கும் ஒரு தேசத்திற்கும் ஒரு வகுப்பார்க்கும் உரியது அன்று. மற்றைச் சமயங்களோடொப்ப ஒரு சமயமாக எண்ணப்படினும், உண்மையாக நோக்கின், எல்லாச் சமயங்களையுந் தனக்கு உறுப்பாகக்கொண்டு விளங்குவதொரு சமய அரசாகும்.

"அன்பே சிவம்" என்னும் திருமந்திரப்பாட்டே அதன் உண்மையைத் தெள்ளிதிற் காட்டும். நமது சமயம் ஒரு சமயத்தையும் வெறுக்காது எல்லாச் சமயங்களையும் படிமுறையாகக் கொண்டுள்ள காரணத்தினாலேயே இது விரிந்த கொள்கையுடையதென்பதை விளக்கும். "யாதொரு தெய்வங் கொண்டீர்—அத்தெய்வமாகி யாங்கே—மாதொரு பாகனார்தாம் வருவர்" என்னுஞ் சிவஞான சித்தித் திருமொழியே இவ்வுண்மையை நிலைநிறுத்தும்.

பண்டைக்காலப் பெருமக்களின் மனிதப்பிறப்பு மற்ற எல்லாப் பிறப்புகளினும் மேலானது. "அரிது அரிது மானிட

ராதல் அரிது'' என்றபடி அறிந்து, அதன்பயனை அடையத் தங்களுடைய பிள்ளைகளை ஒழுக்கமுடைய குருக்களிடத்து அனுப்பிக் கல்வியைக் கற்கும்படி செய்தார்கள்.

அக் குருக்கண்மார்கள் தந்நலங்கருதாது உயிர்கள் மாட்டு அருள்கொண்டவர்களாக இருந்தபடியால், தம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட இளைஞர்களைத் தம்முடைய மக்களாகவே கருதித் தம்மிடத்தில் இருக்கும்படி செய்து கல்வியைக் கற்பிக்கின்ற காலத்து, ஆரம்பத்திலிருந்தே கடவுள் உண்டு, மனிதராய்ப் பிறந்தவர்கள் கடவுளை வழிபடல் வேண்டும் என்று நூல்களைக் கற்பிப்பதற்கு முன் கடவுள் வாழ்த்து என்ற தோத்திரங்களைச் சொல்லிக் கொடுப்பார்கள். அக்கடவுள் வாழ்த்துக்களும் எந்த எந்த நூலை மாணுக்கன் படிக்கின்றானே, அந்த அந்த நூல்களுக்குத் தக்கவிதமாகச் சொல்லப் பட்டிருக்கும்.

இரண்டாவதாக, கற்பிக்கும் நூல்களிலுள்ள பொருள் களோ நீதிகளும், தருமங்களும் நிறைந்தனவாக இருக்கும். நீதியைப்பற்றிச் சொல்லுங் காலத்து முதலில் தாய், தந்தை, தமையன், உபாத்தியாயன், ஞானசிரியன் ஆகிய ஐவரையும் கடவுளைப்போல் எண்ணி அவர்கள் சொல்லுகின்றபடி நடக்க வேண்டும் என்று அறிவிக்கும். இரண்டாவதாகத் தன் தொடர்புடையவர்களிடத்து எக்காலத்தும் விடாது செலுத்து கின்ற ஆசையாகிய அன்பினைச் செலுத்தல் வேண்டும் என்று கூறும். மூன்றாவதாகத் தொடர்புடையவர்களிடத்தில் அன்பு செலுத்துவதுபோல், கடவுளாற் படைக்கப்பட்ட எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தி அருளுடையவனாக இருக்க வேண்டுமென்று கூறும். நான்காவதாக, உலகத்தில் உள்ள எல்லாச் சாதியாரிடத்தும் எல்லாச் சமயத்தாரிடத்தும் அவ ரவர் சாதி சமயம் என்பதைப் பாராமல் நடுவுநிலைமை என்ப தைச் செலுத்த வேண்டும்; நடுவு நிலைமையானது சிறப்பாக அரசனுக்கும் அரசனாணை செலுத்தும் நீதிபதிகளுக்கும் இன்றி யமையாதது; அதைச் செலுத்துங் காலத்தில், தான் தீர்மா னிக்கவேண்டிய செய்திகளை வாதி பிரதிவாதிகளாகிய இரண்டு பக்கத்தாரிடத்தும் நன்றாகக் கேட்டுச் *''சமன் செய்து சீர் தூக்குங் கோல்போல்'' சிறிதுங் கோணுதலில்லாமல் நீதி செலுத்துதல் வேண்டும் என்று கற்பிக்கும்.

ஐந்தாவது, இல்லறத்தானுயுள்ளவன் தக்கவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்வதற்காகவே இல்லறத்

* குறள். நடுவு நிலைமை. அ.

தானுயிருக்க வேண்டுமென்றும், அவ்விதமிருக்கின்ற காலத்துத் தன்னுடைய கடமைகளைச் செய்யப் பொருள் வேண்டுமாதலால் அப்பொருளைத் தீயவழியிற் சிறிதும் ஈட்டாது நல்வழியிலேயே ஈட்டுதல் வேண்டுமென்றும், ஈட்டிய பொருளை அறநூல்களிற் கூறியாங்கு தக்கவர்களுக்குக் கொடுத்துத் தானும் உண்ணவேண்டும் என்றும் கற்பிக்கும். அன்றியும், தான் இல்லறத்தை நடத்தும்போது தனக்கு ஒரு துணை வேண்டுமாதலால் அதற்கென்று அமைக்கப்பட்ட மனைவியோடிருந்து இல்லறத்தை நடத்த வேண்டுமென்றும், அம் மனைவியினிடத்து அன்போடு கூடி இருக்கவேண்டுமென்றும், அவ்விதமிருந்தால் மட்டும் இல்லறம் செவ்வனே நடக்குமென்றும், நல்ல பிள்ளைகளைப் பெறுதல் கூடுமென்றும், கற்பிக்கும். ஆருவது, பொதுவாக எல்லா மக்களிடத்தும் அன்பாகவும், இனிமையாகவும் பேசுதல் வேண்டும். இனிமையாகப் பேசாவிடில் *காயும் பழமும் கலந்திருக்கின்ற மரத்தில் பழத்தை விட்டுவிட்டுக் காயைப் பறித்து உண்பது போல், உலகத்தில் அடைய வேண்டிய பயனை அடைவதற்கு இல்லாமற் போகும் என்றும், ஒருவன் தனக்குச் செய்த உதவிகளை மறந்துவிட்டால் மிகுதியும் பாவத்தை அடைய நேருமாதலால் செய்த உதவியை மறக்கக்கூடாது என்றும், எல்லாரிடத்தும் எக்காலத்தும் அடக்கமுடையவனாய் இருக்க வேண்டுமென்றும். அந்த அடக்கமேதான் அவனுக்குப் புகழைக் கொடுக்குமென்றுங் கூறும்.

அதுவல்லாமலும், தன் மனைவியரல்லாத வேறு மகளிரைத் தன் தயாகவும் சகோதரியாகவும் கருதவேண்டுமென்றும், பிறரைப் பற்றிப் புறங்கூறுதல் ஆகாது என்றும், பிறர் செல்வத்தைக் கண்டு பொருமை கொள்ளுதல் தவறு என்றும் கற்பிக்கும்.

இவ்வித நூல்களைக் கற்பிக்கின்ற ஒழுக்கமுடைய ஆசிரியர், கல்வியைக் கற்பிக்கின்ற காலத்து, கல்வியைக் கற்கின்ற முறை இது வென்றும், கற்கவேண்டிய நூல்கள் இவையென்றும், கற்றவர்கள் அடையும் பயன் இது வென்றும், கல்லாமையினல் வருங்கேடு இதுவென்றும், கற்றலோடு நில்லாமல் ஒழுக்கமுடையவரிடத்துக் கேட்டலும் வேண்டும் என்றும் கற்பிப்பார்.

மேலும் எந்தக் காரியத்தைச் செய்யப் புகுந்தாலும், செய்யத் தகுந்த காரியமோ, தகாத காரியமோ என்று ஒரு

---

* குறள். இனியவை கூறல். 10-ன் கருத்து.

முறை, இருமுறை, மும்முறை நன்றாக ஆராய்ந்து செய்வதுடன் பிறரையுங் கலந்து செய்தல் வேண்டுமென்றும், பெரியவர்களைத் துணைக்கொள்ளுதல் வேண்டுமென்றும், அறிவில்லாதவர்களைச் சேருதல் கூடாதென்றும் புத்தி புகட்டுவார். அன்றியும், நட்புக்கொள்ளுங் காலத்துத் தக்கவர்களையே நட்புக்கொள்ளுதல் வேண்டுமென்றும், தகாதார்களுடன் நட்புக்கொண்டால் நன்மை யடைவதற்குப் பதிலாகத் தீமையே அடையநேருமென்றும் கூறுவார். அதுவல்லாமலும், நூலைக் கற்பிக்கும் அக் குரு கற்கின்ற மக்களுக்கு இளமையிலிருந்தே மனத்தால் செய்ய வேண்டுவது இது, மொழியாற் செய்ய வேண்டுவது இது, மெய்யாற் செய்ய வேண்டுவது இது என்று அறிவிக்கின்ற காலத்து, மனத்தால், நல்ல பொருள்களைச் சிந்திக்க வேண்டும், வாயால் நல்ல பொருள்களைக் கூறல்வேண்டும், உடலால் நல்ல செயல்களைச் செய்தல் வேண்டும் என்று கூறுவார். இவைகளை யெல்லாம் செய்யுங் காலத்து, விரைந்து செய்ய வேண்டுவதை மெதுவாகச்செய்யாமலும், மெதுவாகச் செய்யவேண்டுவதை விரைந்து செய்யாமலும், எந்தக் காரியத்தையுங் குறித்த காலத்தில் முறையாகச் செய்ய வேண்டுமென்றுங் கற்பிப்பர்.

இவ்விதமாக நூல்களைக் கற்றுக்கொள்ளுதலும், இல்லறத்தானாய் இருத்தலும் தனக்கு மாத்திர மல்லாமல், பிறர்க்கும் பயன்படும்படி இருக்கவேண்டியதற்காதலால், உடம்பை நோயணுகாவண்ணம் தூய்மையாய் வைத்துக்கொள்வதிலும் அளவறிந்து உண்பதிலும், அளவறிந்து உறங்குவதிலும், அளவறிந்து வேலை செய்வதிலும் உள்ள நலங்களைக் கற்பிப்பார்.

இன்னும் உறுப்புகளெல்லாம் வலிமைபெறும்படி உடற்பயிற்சி முறைகளைக் கற்பிப்பர். அன்றியும், பழியஞ்சிப் பொருளைச் சம்பாதிக்க வேண்டுவதால் மாணவர்கட்கு எல்லாவற்றினும்சிறந்ததாகிய தொழில் உழவுத்தொழில் என்றும், பின்னர் நெய்தற் றொழிலென்றும், அதன்பின்னர் வாணிகம் என்றும், அதன்பின்னர் அரசர்பணி செய்வது என்றும் கற்பிப்பார்; ஏனெனில் "†உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்—மற்றெல்லாந் தொழுதுண்டு பின் செல்பவர்" என்னும் பொதுநூல் மொழிக்கிணங்க, தானும் அறத்தொடு வாழ்ந்து, பிறனுக்கு அடிமையாகாது வாழ்வதற்குக் கூடுமானதாக இருத்தலால் உழவையே மேன்மையாகக் கொள்கின்றார்கள்; வாணிகத்தை "*வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்—பிறவுந்தமபோற்

---

* குறள். உழவு. 3. † குறள். நடுவுநிலைமை. ய

செயின்." என்ற வள்ளுவர் வாய்மொழியின்படி செய்கின்ற தகுதியுடையவனாக இருப்பானானால் அது பொருத்த முடைய தென்றும், அதுவும் பெருமுதல் உடையவனுக்கே கைகூடும் ஆதலால் அதை மூன்றாவதாகவும் கைக்கொள்ளுகின்றனர்; மற்று, சேவக விருத்தியோ கடைசி என்று கூறுகின்றார்கள் என்று பிழைக்கும் வழிக்குரிய முறைகளையெல்லாம் நன்றாகக் கற்பிப்பர். இத்தகைய நூல்களை யெல்லாம் முற்காலத்து இளைஞருக்கு நல்லாசிரியர்கள் தம்மிடத்தேயே இருக்கச் செய்து கற்பித்தும், ஒழுக்க நெறியில் ஒழுகச்செய்தும், நோய் கொள்ளாவண்ணம் பழக்கியும், பிழைக்கும் வழியையுங் கற்பித்ததனால், முற்காலத்திருந்த மக்க ளெல்லாம் நல்வழிநின்று பொருளைச்சேர்த்து அறவழி யிற் செலவுசெய்து தமக்கென்று வாழாது பிறர்க்கென்றே உலகத்தில் வாழ்ந்து நன்மக்களைப்பெற்று நீண்ட ஆயுளுட னிருந்து தம்பெயரை நாட்டிச் சென்றனர்.

இக்காலத்தோ, மக்களைக் குருகுலவாசம் என்பதொன் றில்லாமல் அரசாங்கத்தாரால் அமைக்கப்படும் பள்ளிக்கூடங் கட்கும், இரண்டு மல்லாது பொதுமக்களால் நிறுவப்படும் பள்ளிக்கூடங்கட்கும் கல்விகற்க அனுப்புகின்றார்கள். முதலா வது, அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் "கடவுள் வழிபாடு" என்பதைக் கற்பிப்பதே இல்லை. ஏனெனில் அரசர்கள் நம் முடைய நாகரீகம் தெரியாத அன்னிய நாட்டார்க ளாதலா லும், பல சமயங்களடங்கிய இந்திய நாட்டில் தாம் சமய விஷயங்களிலே தலையிடக்கூடாதென்று கடவுள் வழிபாட்டிற் குரிய நூல்களையும் பாக்களையும் அங்குப் போதிப்பதற்கு இல்லை, ஏனைய புறமதத்தவர் கலாசாலைகளில் தம்மதம் நாட்டு வதற்கென்றே நிறுவப்பெற்றிருக்குங் கொள்கையால் தங்கள் மதத்தை நாட்டுவதற்கு உரிய கல்வியைக் கற்பித்து, நம் நாட்டு மதங்களின் உண்மையைக் கற்றுத்தெரிந்துகொள்ளா மல் அதைப் புறக்கணித்து மாணாக்கர்களை ஒரு மதத்திலும் பற்றில்லாதவர்களாக ஆக்கி விடுகின்றார்கள்.

நம்மக்களால் ஏற்படுத்தப்படுகின்ற பள்ளிக்கூடங்களி லுங்கூட *"அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதி—பகவன் முதற்றே யுலகு" என்று பொதுமறையிற் கூறியபடி, பொது வாகிய கடவுள் வாழ்த்தைக்கூட பயிற்றுவிக்காது, "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதியை," "மற்றுப் பற் றெனக்கின்றி நின்றிருப்பாதமே மனம் பாவித்தேன்," "கல் லார் நெஞ்சினில்லா னீசன்" "சொல்லாதாரோ டல்லோ

* குறள். கடவுள்வாழ்த்து. க

நாமே,'' "அரியானை அந்தணர்தஞ் சிந்தையானை,'' என்று முறையே, ஆளுடையடிகளும், ஆளுடைநம்பியும், ஆளுடைப் பிள்ளையும், ஆளுடையரசும் உலகோர் உய்யும்படி மேல்நிலையில் நின்று ஓதிய—திருவாசகத் தேவாரங்களைக் கற்பதற்கு இல்லாமல், இம்மை, மறுமை, வீடு என்கின்ற மூன்றையும் இழக்கின்றார்கள்.

இனி இரண்டாவதாக, முன்னர் நாம் கூறிய வண்ணம் நல்லாசிரியனிடத்துக் கற்கவேண்டிய நூல்களைக் கல்லாது, பின்னர் பயன்தராதனவும், உலக அறிவுக்குப் பொருந்தாதனவுமான சில நூல்களைக் கற்கின்றனர். அதனால் கற்க வேண்டிய முறைப்படி கல்லாமலும், கற்ற நூல்களிற் சொல்லிய நெறிப்படி ஒழுகுவதற் கில்லாமலும் * "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக,'' என்னும் பொது மறையின் திருமொழியை அறிந்து கொள்வதற்கு இல்லாமற் போகின்றனர். இவ்விதம் இருப்பதால் பன்னெடுநாள் கல்வியைக் கற்றுப் பட்டதாரிகளாய் விடினும் † "கண்ணுடையரென்போர் கற்றோர் முகத்திரண்டு—புண்ணுடையர் கல்லாதவர்.'' என்றபடி ஞானக்கண் கொள்ளாது ஊனக் கண்ணையே கொண்டு உறுதிப்பொருளை யறிவதற் கில்லாது வழியிருக்கக் குழியில் வீழ்கின்றனர்.

அற்றேல், நன்னூல்களைக் கற்றற்கு இல்லாவிடினும் தமக்கு ஒழிந்த காலத்தேனும் மதவிஷயங்களைப் போதிக்கும் நல்லாசிரியச் சபைகளில் ‡ "இழுக்க லுடையுழி ஊற்றுக் கோலற்றே—ஒழுக்க முடையார்வாய்ச்சொல்'' என்றபடி அவ்வாசிரியர்கள் கூறும் வீட்டிற்குரிய பயனையுங் கேளாமல் போய் விடுகின்றார்கள். இவ்விதம் கல்லாமலும் கேளாமலும் போய் விடுவதுடன், இன்னும் பெருங் கேட்டிற்குக் காரணமாகிய காம இன்பத்திற்குரிய வரிப்பாடல்களாகிய இசைப்பாட்டுகளைக் கேட்டு மிகுதியும் இன்பம் நுகர்வார் போல "கரும்பிருக்க இரும்புகடித் தெய்த்தவாறே'' என்னும் தேவார மொழிக்கிணங்க உண்மையறியாது, பாகனில்லாத யானை போல நெறியல்லா வழிச்சென்று உயிரையும் போக்குகின்றார்கள். இவ்வளவு மாத்திரமோ, மேல் நாட்டவரிடத்துக் கற்க வேண்டிய குறித்தகாலத்துச் செல்லுதல், விடாது ஒழுங்காகச் செல்லுதல், ஊக்கத்தோடு செய்தல், விடாமுயற்சியாயிருத்தல், கூட்டுறவுச்சங்கம் அமைத்தல், ஒருவரை ஒருவர் வஞ்சியாமை, ஒருவரோடொருவர் சினங்கொள்ளாமை, ஒற்

---

* குறள். கல்வி. ௧ † குறள். கல்வி. ௩ ‡ குறள்—கேள்வி—௫

றுமை, திரைகடலோடியுந் திரவியந்தேடுதல், ஒழுங்காக வரவு செலவுக்கணக்கு வைத்தல், வருவாய்க்குத்தக்க அளவாகத் தான் உண்டு உடுத்தல், தான் பொருளைச் சேர்த்தல், தன் மக்களையும் அவ்வழியே நிறுத்துதல், இறக்கும் அளவும் ஒருவர் உதவியும் கருதாது தம்முடைய சொந்தப் பொருளிலேயே உண்டும் உடுத்தும், இறக்கின்ற காலத்துத் தம் பொருள்களைப் பலவிதமாகப் பங்கிடுவதில் சரியான அறத்திற்கென்றும் ஓர் பகுதியைக் கொடுத்தல் ஆகிய நற்குணங்களை யெல்லாம் விட்டு விட்டு, அநேகர் மேல் நாட்டிற்குரிய வெப்ப தட்பத்துக்குத் தக்க அளவாக உடையை உடுத்தியும், சிலர் தூய்மையல்லாத ஆகாரங்களை உண்டும், உடலுக்குப் பல கெடுதல்களைச் செய்யக்கூடிய சுருட்டுப் பிடித்தும் * "ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்—சான்றோர் முகத்துக் களி" என்று பெற்ற தாயாலும் வெறுக்கக்கூடிய மயக்கப்பொருள்களைக் குடித்தும், † "தூண்டிற் பொன் மீன் விழுங்கியற்று" என்றபடி சூதாட்டத்தை விரும்பியும், நாடகங்களிற் சென்று நல்ல அறிவை யிழப்பதற்குக் காரணமாகிய நடனங்களைப் பார்த்தும், தகாத காரியங்களைச் செய்யும் நெறிகளைக் கற்பிப்பனவாகிய படக்காட்சிகளைப் பார்த்தும் தம் வாழ் நாட்களை வீண் நாளாக்கி, "சின்னாள் பல்பிணிச் சிற்றறிவுயிர்" என்பதை நிலைநாட்டிச் செல்லுகின்றனர்.

இதுவன்றியும், பண்டைக்காலத்திருந்து ஒவ்வொருவகுப்பினரும் செய்து வந்த தொழில்களை மறந்து எல்லோரும் உலக அறிவிற்குரிய கல்வியைக் கற்க முயலுவதால், அரசாங்கத் தொழிலிலேயே ஆசைப்பட்டு ஒருவர் இருக்கவேண்டிய இடத்துக்கு ஆயிரக் கணக்கானவர்கள் முயன்று உத்தியோகங் கிடைக்காமல் கற்ற கல்வியால் அடையக்கூடிய இம்மைப் பயனையும் இழக்கின்றார்கள்.

நீதிமன்றத்தில் வழக்கறிஞர் வேலைக்குப் பெரும் பொருள் செலவழித்துக் காலமெல்லாம் நீதியைப் பேசுவோமென்று அதற்குரிய பட்டங்களைப் பெற்று வாழ்கின்ற மக்களில் பலர், தாங்கள் சென்ற துறையில் தங்கள் எண்ணிக்கையில் ஒருவர்க்கு நூறாக இருப்பதால், பிழைப்பதற்கும் பொருள் கிடையாது சிறியவெல்லாம் பெரியவற்றிற்கு இரையாகிப் பெரும்பான்மையோர் போதுமான வேலையில்லாமல் தவிக்கின்றார்கள். சுக்கு, திப்பிலி, மிளகு என்கின்ற மூன்று பொருள்களால் வெகு சிறு பொருள் செலவழித்து நோயைப் போக்கடிக்கும் திரிகடுகம் என்னும் முறையைக்

---

* குறள். கள்ளுண்ணாமை. ௩. † குறள். சூது. ௧.

கொண்ட இந்நாட்டில் மேல் நாட்டு மருத்துவத்தை ஒரு வர்க்கு நூறுகக் கற்கப் புகுந்து நீண்டதோர் காலமும், பெரியதோர் பொருளும் செலவழித்து மருந்து வகைகளையும் இரணவைத்தியத்தையுங் கற்றுத் தொழில் ஆரம்பிக்கையில், இந்த ஏழை நாட்டு மக்கள் அநேகர், மேல் நாட்டு வைத்தியர் களுக்கும் மருந்துக்கும் வேண்டிய அளவு கொடுக்க ஆற்ற லற்றவர்களா யிருக்கிறபடியால் அநேக வைத்தியர்களுக்கு வாழ்க்கைக்கே கட்டமாகிறது. உழவுத் தொழிலைச் செய் வோன் "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்" என்று மேற்கொண்ட உழவர்களோ, உழுதுண்டு வாழ்பவர், உழுவித்துண்டு வாழ்பவர் என்கின்ற இரண்டு தகுதிகளை யுடைய உழவர்களில் சிலர்மாத்திரம் பிறரைச்கொண்டு உழு வித்து அவர்கட்குக் கொடுக்கவேண்டிய கூலியைக் கொடுத்து மிகுதியை உண்டு தாம் வாழ்ந்திருக்கவும், ஏனையோரெல்லாம் தாமே உழுதற்றொழிலைச் செய்தும், நாற்றை நட்டும், நீர்ப் பாய்ச்சியும், எரு வீசியும், களை எடுத்தும், பயிரைக் காத்தும் உழவுத் தொழிலைச் செய்து உண்டு உடுத்துப் பிறர்க்குத் தானஞ்செய்து வாழ்ந்திருந்த இந்நாட்டில், நவீன நாகரிகத் தால் உழவர்க்குரிய முறையைக் கல்லாமலும், தம் உடல் முயற்சி கொண்டு உழையாமலும் *"செல்லான் கிழவனிருப் பின் நிலம்புலந்து, இல்லாளின் ஊடி விடும்" என்னும் பொது மறையை மறந்து தம் நிலத்தை எட்டிப்பாராமலும் தம் தகுதிக்கு மேற்பட்ட உடையை உடுத்தும், உணவினை யுண்டும், தமக்குத் தகாத வீடுகளைக் கட்டியும், தகுதிக்கு மேற்பட்ட அணிகள் அணிந்தும், நாளுக்கு நாள் வருவாய் குறைந்து மூதாதையர்கள் தேடிவைத்த பொருளையும் தாம் உழுவித்துண்ணும் வேளாளர் என்று தாம் பொய்மை யாகக்கொண்ட நாடகத்தால் கூத்து முடிந்து சிறுமை அடைகிறுர்கள். இனி நெசவுத்தொழிலாளிகளோ இயந்திரங் களினல் உண்டாக்கப்படுகிற துணிகளின் போட்டியால் அவர்கள் தொழில் செய்வதற்கிடமில்லாமல் வயிறு நிரம் பாது வறுமையால் துன்புறுகின்றனர். இனி, வாணிகஞ் செய்பவரோ பண்டைக்காலத்து முறையில் முதலுக்குத்தக்க அளவாக வாணிகஞ்செய்யாது கடன்கொண்டு வாணிகஞ் செய்தும், கொண்ட வாணிகத்திற்குத்தக்க அளவாகப் பெரும்பொருள் செலவழித்தும், கூட்டுறவுச் சங்கம் என்று மேலைத் திசையோர் செய்வதுபோல் தாம் வாணிகத்தைச் செய்யப் புகுந்து, மேல்நாட்டார் ஒற்றுமையுடனும் ஒருவருக் கொருவர் நம்பிக்கைக்கு விரோதமில்லாமலும் தொழில்

* குறள்-உழவு. கூ.

நடத்துவதுபோல் செய்யாமல், சரியான கணக்கு வைக்காமலும், வழியல்லா வழிகளில் செலவுசெய்தும் 'கணக்குப் பார்க்கில் பிணக்குவரும்' என்றபடி கணக்குப் பார்க்கின்ற காலத்து ஒருவருக்கொருவர் பிணக்குக்கொண்டு, வாய்ச் சண்டையும் கைச்சண்டையும் செய்து வாணிகத்தையும் வருவாயையும் இழப்பதுடன் நில்லாது, நீதிமன்றத்துக்குச் சென்று ஒரு குரங்கின் கைப்பட்ட இரண்டு பூனைகள்போல், நடுவிலிருக்கின்றவர்கள் கையிலகப்பட்டு, உண்ணச்சோறும், உடுக்கத் துணியுமில்லாது வருடக்கணக்காக நடக்கும் வழக்குகளில் வழக்கு நடந்துகொண்டிருக்குங் காலத்திலேயே பலர் இறந்தும், வழக்கு முடிந்தவுடன் உயிர்தப்பி நின்ற சிலர் அன்னிய அரசாங்கத்தாரால் ஆளப்படும் அயல் நாட்டுக்கு ஓடியும், தீவு தீவாந்தரங்களுக்கு ஓடியும் ஒழிந்துபோகின்றனர். எல்லாச் செல்வங்களும் நிறைந்து இயற்கையறிவையும் செயற்கையறிவையும்பெற்று ஞானத்திற்கே தலைநாடாய், இம்மை, மறுமை, வீடு என்கின்ற மூன்றையும் அடைய உரியதாய், பல மதங்களும், அம்மதங்களையுண்டாக்கிய ஆசிரியர்களும் எம்மதமும் தங்களுக்குச் சம்மதமே என்றும், எல்லாம் படிமுறையாக வருவது, எல்லா வுயிர்களும் ஒரு திறத்தனவாகிய உயிர்கள் என்று அன்புகொண்டு அருள்பூத்து, "இல்லறம் அல்லது நல்லறம் அன்று" என்னும் இல்லறத்தை நடத்தி நன்னிலையும் சைவமும் தழைத்த இந்நாட்டில் நம் இளைஞர் இவ்விதம் காலங்கழிப்பது தகுதி யாகுமோ? ஆதலால் இனியேனும் நம்மக்களை நன்னெறியில் செலுத்துவதற்குப் பண்டைக் காலத்தைப்போல் சமயத்தைப் போற்றி வாழ்கின்ற கல்வியையும், அறநெறியைப் போதிக்கின்ற கல்வியையும் பிழைக்கும் வழியையும் போதித்து, விதித்தன செய்து, விலக்கியன ஒழிவதற்கு வேண்டியதைக் கற்பித்து உழவுத் தொழிலையும் கைத்தொழிலையும் வாணிபத் தொழிலையும் வளர்த்து, ஆளும் அரசர்க்கு அன்பு பூண்டவர்களாக இருந்து, எந்நாளும் எக்காலத்தும் ஆண்டவனை மனத்தால் நினைத்து வாயால் வாழ்த்தி உடலால் வணங்கி வாழும்படி செய்தல் வேண்டும். இவற்றிற்கெல்லாம் முதலாகிய எல்லா மதங்களையும், படிமுறை என்று கொள்ளும் அகன்ற அறிவையும், எல்லா வுயிர்களையும் தம்முயிர்போல் பார்க்கும் அருளுடைமையும் கொண்டு தேவ தேவனாகிய மகாதேவன் என்னும் சிவபெருமானைத் தமக்குக் கடவுளாகக் கொண்டு, அவன் ஆண்டவன், நாம் அடிமைகள் என்னும் ஆண்டான் அடிமைத்திறங் கொண்டு நம்முடைய செய்கைகளால் கடவு

ளருக்குரியராகி, நாம் இறைவன் திருவடியை அடையச் செய்கின்ற மதமாகிய சைவசித்தாந்த மதத்தை உலகெங்கும் பரப்புதல் வேண்டும். இந்நெறி செய்தலே நன்னெறியாகும்.

இதுகாறும் கூறியவாற்ருல், நமது நாட்டு மக்கள் முற்காலத்தில் சமயக் கல்வியும் ஒழுக்கநூற் கல்வியும் தொழிற் கல்வியும் நன்கு பயின்று தங்கள் வாழ்க்கையைச் செவ்வையாய் நடத்தி வந்தார்களென்பதும், தற்காலத்தில் அவ்விதக் கல்வி முறைகளைக் கைவிட்டு, ஆங்கில நூற் கல்வியை மட்டுங் கற்று இந்திய நாட்டுக்குப் பொருந்தாத அவர்கள் நாகரிக முறையைப் பின்பற்றி ஒழுகுதலேயன்றி, அவர்களிடத்தி லுள்ள நற்குணங்களைக் கடைப்பிடியாது தங்களுக்கும் தங்கள் நாட்டுக்கும் பெருங்கேடு விளைத்துத் துன்புறுகிறுர்கள் என்பதும், ஆதலால் இனி, உலக நாகரிகத்துக்கே வழி காட்டியாயிருக்கிற நமது தமிழ்க் கல்வியையும் சமயக் கல்வியையும் பயிலுதல் நல்வாழ்க்கை வாழ்ந்து இம்மை மறுமைப் பயன்களையும் முடிவில் வீட்டின்பத்தையும் அடைதற்குச் சாதனமா மென்பதும் நன்கு புலனுகும்.

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலந்தையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

(முன் எசு-ம் பக்கத்தொடர்ச்சி)

### குறிஞ்சி

இரவுக் குறிக்கண் வந்து தலைவியுடன் கூடி நீங்கும் தலைவனைத் தோழி எதிர்ப்பட்டுக் களவொழுக்கம் தீர்ந்து வரைந்துகொள்ளு மாறு கூறியது.

கபிலர் பாடியது

18. வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார லுட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்
கிவளுயிர் தவச்சிறிது காமமோ பெரிதே.

என்பது இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப் பட்டு வரைவு கடாயது.

பதவுரை:—வேரல் வேலி—மூங்கிலால் ஆக்கப்பட்ட வேலியை யுடைய, வேர்க் கோட் பலவின் சாரல் நாட—வேரிலே பழுத்த பழங்களையுடைய பலாமரங்கள் நிறைந்த மலைச்சாரலையுடைய குறிஞ்சிநிலத் தலைவனே, செவ்வியை யாகுமதி—நீ இக்கள வொழுக்கத்தை நீங்கிச் செம்மையான ஒழுக்கத்தை யுடையவனுவாயாக!, யார் அஃது அறிந்திசி னோரே—நீ இவ்வாறு களவொழுக்கத்து ஒழுகுவதால் தலை விக்கு உண்டாகும் தீமையை யாவரே அறிந்துள்ளார்? சாரல் சிறு கோட்டுப் பெரும் பழம் தூங்கியாங்கு—மலைச்சரிவிலே, மரத்தின் சிறிய கிளையில் பெரிய பழம் தொங்கிக்கொண் டிருப்பதைப் போல, இவள் உயிர் தவச்சிறிது—இவளுடைய (தலைவி) உயிர் மிகவும் சிறிது; காமமோ பெரிதே—இவளுக் குண்டாயிருக்கும் காமநோயோ பொறுக்கலாற்ருத அவ் வளவு பெரிது. (ஆதலின் செயக் கடவதை அறிந்து செய்வா யாக.)

வேரல்—மூங்கில். கோள்—பழம். அஃது எனும் சுட்டு தலைவியின் துன்பநிலையைக் குறித்தது. கோடு + பழம் = கோட்டுப் பழம் — ஏழன் தொகை. நாட—அண்மைவிளி. மதி, முன்னிலை யசைச்சொல். தவ—உரிச்சொல்.

இறைச்சி

'வேரல் வேலி வேர்க்கோட் பலவின் சாரல்'—என்றது மூங்கி லால் ஆக்கப்பட்ட வேலியைக் காவலாக வுடைய வேரில் பழுக்கும் பலாப் பழத்தையுடைய மரங்கள் நிறைந்த சாரல் என்றமையால் அப் பழம் பெறற் கரிது என்றவாறு. அதுவேபோல் தலைவியும் காவல் மிக்க மனையிடத்து உள்ளாளாயினள். ஆதலின் எய்தற் கரியள்; ஆதலின் இரவில் வாரற்க. பகல் வருதலும் இயலாதாதலின் வரைந்து கொள்க என்பது குறிப்பு.

மேற்கோள் விளக்கம்

1. 'யாரஃதறிந்திசினோரே'

(1) (தோல்- சோல். சூ 270 இளம்)
(2) (தோல்- சோல். சூ 270 தெய்வ)
(3) (தோல்- சோல். சூ 275 சேனு)

2. 'சிறு கோட்டுப் பெரும் பழந்தூங்கியாங்கவள்'

—(நன்- மயிலை. பக். 213)
—(நன்- சங்கர. பக். 221)

3. "வேரல்வேலி பெரிதே"—இது காதல் மிகுதி கூறியது)
—(தோல்- களவி. பக். 536.)

4. "வேரல்வேலி......பெரிதே"—"இஃது அடிகள் எல்லாம்

அளவடிகளாய் மறிந்து செல்லலின்றி நின்றவாறே நிற்றலால் நிலை மண்டல வாசிரியப்பா'' என்பதற்கு மேற்கோள்.

—யாப்பு. காரிகை. (குமாரசாமிப் புலவர்) (பக். 77)

5. …………மேற்படி………யா. காரிகை. மாறன் பதிப்பு. (பக். 94,219)

6. (1) "வேரல்வேலி………பெரிதே"—'இதனுள் அடி யெதுகையும் பொழிப்பு மோனையும், ஒரூஉ எதுகையும், இணை முரணும் கடையிணை யெதுகையும் பின் முரணும் வந்தவாயினும் முதல் வந்ததனாற் பெயர் கொடுத்து அடியெதுகைச் செய்யுள் என்று வழங்கப்படும். —(யாப்பருங்கலம்—பக். 189)

"காமங் கைம்மிகிற் றாங்குதல் எளிதோ" —(நற். 39)

(2) இஃது எல்லா வடியு மொத்துச் சிறப்புடை நேர்த்தளை யான் வந்த நிலை மண்டல வாசிரியப்பா— (யாப்பருங்கலம் 261)

7. 'இவளுயிர் தவச் சிறிது காமமோ பெரிதே'—

"பெரிதே காமமென்னுயிர் தவச் சிறிது"—(கலித்—137—2)

ஈற்றடிக் கயலடியின் ஈற்றுச்சீர் 'தூங்கியாங்கு' என்பது, 'தூங்கியாங்கிவள்' எனச் சில பிரதிகளிலுள்ளது.

"வேர்க்கோட் பலவின்"—

"பலவின் வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும் பழம்" —(நற். 213)

"நீ யறிந்திலை" என்பாள். "யாரஃதறிந்திசினோர்" என்றது கருதத் தக்கது.

'சிறு கோட்டுப் பெரும் பழம்'—<br>'உயிர் தவச் சிறிது காமமோ பெரிதே' } இவை முரண் தொடைகள்.

இம்முரண் நயம் உணரத்தக்கது.

"வேரல்வேலி—காமமோ பெரிதே"—இச்செய்யுள் காதன் மிகுதி கூறியதற்கு மேற்கோள்—

(தோல். களவு. இளம்பூ. பக். 202)

(1) "வேரல்வேலி வேர்க்கோட் பலவின்………பெரிதே" —நிலை மண்டலவாசிரியப்பாவிற்கு மேற்கோள்—

(இலக்கண விளக்கம்—பக். 740)

(2)—காம மிக வுரைத்தற்கு மேற்கோள்

—(இலக்கண விளக்கம்—பக். 454)

(3) "வேரல்வேலி—பெரிதே"—எல்லா வடியும் ஒத்து வருவ தனை நிலை மண்டல ஆசிரியம் என்ப.

—(தோல். செய்யு. இளம்பூ. 402)

மெய்ப்பாடு—அணங்கு பற்றிய அச்சம்.

பயன்—வரைவு கடாதல்.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## தனித் தமிழும் கலப்புத் தமிழும்

(மறைமலையடிகள் மகனார் வே. மாணிக்கவாசகம் எழுதியது.)

மக்கட் கூட்டத்தாரின் நாகரிகமெல்லாம், அவர் வழங்கும் மொழியினால் நன்றாயறியப்படும். நாகரிகமில்லாத மக்களின் மொழியானது நாளுக்கு நாள் உருமாறியும், மற்ற மொழிச்சொற்களொடு கலந்தும் கடைசியில் தானொரு மொழியென்றே நில்லாமல் மாய்ந்துபோகின்றது. இதற்குச் சான்றாக உலகமெங்குமுள்ள காட்டுமிராண்டிகளின் மொழிகள் காலந்தோறும் மாறி மாறி மாய்ந்து போதலை வெள்ளைக்கார அறிஞர்கள் எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள். ஆகவே, நிலையான நாகரிகமும், நிலையான வாழ்க்கையும், நாளுக்கு நாள் பெருகும் அறிவு விளக்கமும், அரிய முயற்சியும் உடைய மக்களிடத்தல்லாமல், மற்றவர் பால் ஒரு மொழி சிறந்து தூயதாய்த் தொடர்பாய் நடைபெறுதென்பது அறிவுடையார்க்கெல்லாம் உடன்பாடாகும். ஆதலால், நாகரிகமுடைய மக்கள் தமது மொழியை நன்கு பாதுகாத்து வளர்த்தலிற் கண்ணுங் கருத்துமாய் இருக்க வேண்டுமென்பது சொல்லாமலே நன்கு விளங்கும். மக்களின் முயற்சியால் ஒரு மொழியானது உரம்பெற்று உயிர்ப்புடையதாய் வழங்குதல் போலவே, திருந்திய மொழிவழக்கினாலும், அம்மக்கள் உரம் பெற்று உயிர்ப்புடன் நடைபெறுவர். வலிமையிற் சிறந்த ஒருவனையும், அறிவில் மிக்க மற்றொருவனையும், நல்லியற்கை வாய்ந்த வேறொருவனையும், அவனவன் சொற்களினாலேயே நாம் அறிந்து கொள்ளலாம். அங்ஙனமே வலிமையில்லாத ஒருவனையும், அறிவு குறைந்த மற்றொருவனையும், தீயோனான வேறொருவனையும் அவனவன் சொற்களினாலேயே அறிந்து கொள்ளலாம். ஆகவே, ஒரு மொழி வழக்கிற்கு அம் மொழிக்குரிய மக்கள் இன்றியமையாதவரா யிருத்தல் போலவே, அம் மக்களின் நாகரீக வாழ்க்கைக்கும் அவர் தம் மொழி இன்றியமையாததாகு மென்பது பெறப்படும். மக்களை விட்டு மொழியும், மொழியை விட்டு மக்களும் உயிர் வாழ்தல் சிறிதும் இயலாது. "எனது விருப்பப்படிதான் யான் பேசும் மொழியைத் திரித்தும், அயல்மொழிச்சொற்களோடு கலந்து மாசுபடுத்தியும் வழங்குவேன்; அம் மொழியின் அமைப்பின்படி யான் நடக்கக் கடவேனல்லேன்" என்று ஒவ்வொருவனுந் தனது மொழியைத் தன் விருப்பப்படியெல்லாந் திரித்துக் கொண்டு போவானாயின், சிறிது காலத்

தில் ஒரு மக்கட்கூட்டத்தாரிலேயே ஒருவரை யொருவர் அறிந்து கொள்ளமுடியாத வகையாய் ஒவ்வொரு சிறு கூட்டத்திற்கும் ஒவ்வொரு புதுமொழி காலந்தோறும் உண்டாகி அம்மக்களை ஒன்று சேரவிடாமல் அவர்களைப் பல சிறு கூட்டங்களாகப் பிரித்து விடும். முன்னொரு காலத்தில் இவ்விந்திய நாடெங்கும் பரவி யிருந்த தமிழும், தமிழ் மக்களும் இப்போது எத்தகைய நிலையிலிருக்கின்றனர் என்பதை நினைத்துப் பாருங்கள்! முற்காலத்தில் தமிழ் மொழி ஒன்றையே பேசிய தமிழ் மக்களின் தொகை ஆறு கோடியாகும். அப்பெருந் தொகையான மக்கள் இப்போது சிறு சிறு கூட்டத்தவராய்த் தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவு, தோடம், படகம், குடகம், உராவோன், எர்க்கலா, ஏனதி, பிராகுயி, கோண்டம், பில்லம் முதலான பலவேறு மொழிகளைப் பேசுவாராய், ஒருவர் பேசுவதை ஒருவர் அறியாமல் விழிக்கும் நிலையில் இருப்பது எதனு லென்பதையும் நினைத்துப் பாருங்கள்! நாகரிகத்தாற் சிறந்த தமிழ், முன்னோர்கள் வழங்கிய செந்தமிழ் வழக்கிற்குச் சிறிதுங் கட்டுப்படாமல் தாந்தாம் விரும்பிய படியே தமிழ்ச்சொற்களைத் திரிபுபடுத்தியும், வடசொற்களை ஏராளமாகக் கலந்து மாசுபடுத்தியும் வந்த தமிழ் மக்களன்றோ இப்போது தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலான பலவேறு மொழிகளைப்பேசும் பலவேறு இனத்தவர்களாய் ஒருவரை யொருவர் அறியாமலும், ஒருவரோடொருவர் அளவளாவுதற் கில்லாமலும், ஆங்காங்குத் தன்னந்தனியராய்ச் சிறு சிறு கூட்டத்தவராய் ஆரியர்களுக்கு அடிமைகளாய் வாழ்நாட் கழிக்கின்றனர். ஆதலால், ஒரு மக்கட் கூட்டத்தார் தம்முட் பலவகையாய்ப் பிளவுபடாமல் ஒன்றுபட்டிருந்து நன்கு உயிர்வாழ்வதற்கு அவர்கள் தமக்குரிய மொழியைத் திரிபு படுத்தாமலும், அதில் அயல் மொழிச் சொற்களைக் கலவாமலும் மிகவும் கருத்தாக அதனைப் பாதுகாக்க வேண்டுமென்பது புலனுகும்.

இனி, ஆங்கிலமொழியை எடுத்துக்காட்டி, அதிற் பலவேறு மொழிகள் கலந்திருப்பதே அதனுடைய வளர்ச்சிக்கும் பரவுதலுக்குங் காரணம் என்பர் சிலர். ஆனல், ஆங்கில மொழியின் வரலாற்றை அவர்கள் செவ்வையாக அறிந்துதான் பேசுகின்ருர்களோ என்பது எனக்கு ஐயமாயிருக்கின்றது. ஆங்கிலமானது சொல்வள மில்லாத ஏழை மொழி; பழைய நாளில் நாகரிகமில்லாத ஒரு சிறு கூட்டத்தவராற் பேசப்பட்ட மொழி; காலங்கடோறும் பிற நாடுகளிலிருந்து வந்த முரடர்களான வேறு வேறு மக்களால் அலைப்புண்டு, அவர்கள் கொண்டுவந்த பலவேறு மொழிகளாற் கலப்புண்டு தன் தாய்

மையிழந்தமொழி; காலங்கடோறும் மாறிக்கொண்டு வந்த மொழி. இதனைப் பேசும் மக்கள் அறிவிலும், முயற்சியிலும் மேம்பட்டு நாகரிகத்திற் சிறந்து வாழ்ந்து வழங்கிய பின்னரே, தமது மொழியை இனித் திரிந்து போக விட்டால் தமது வாழ்க்கை நிலையாது என நன்குணர்ந்து, அதற்கு இலக்கண இலக்கிய வரம்பு கோலி அதனைக் கண்ணுங்கருத்துமாய்ப் பாது காத்து வருகின்றார்கள். ஆசிரியர் 'பேயின்' 'மிக்கிள் ஜான்' முதலானவர்கள், தமது ஆங்கில மொழியைத் தூயதாகப் பிறமொழிச் சொற்கள் கலவாமல் எவ்வளவு அதனைப் பாது காத்து வழங்கக் கூடுமோ, அவ்வளவுஞ் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி எழுதியிருக்கின்றார்கள். இன்றைக்கு ஐந்நூறுண்டுகட்கு முன்னிருந்த ஆங்கில மொழியும், இன் றைக்கு முந்நூறுண்டுகட்கு முன்னிருந்த ஆங்கில மொழியும் வெவ்வேறு மொழிகள் போல் மாறிவிட்டமையால், அக் காலத்தில் எழுதப்பட்ட நூல்களை இப்போது ஆங்கிலம் பயிலு கின்றவர்கள் தெரிந்துகொள்ள முடியாதவர்களா யிருக் கின்றார்கள். 'சாசர்' எழுதிய நூல்களையும், 'ஷேக்ஸ்பியர்' எழுதிய நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவ்வுண்மை நன்கு விளங்கும். ஆங்கில மொழி அத்தகையதாயிருக்க, அதனோடு தமிழை ஒப்பிட வந்த அவர்கள், தமிழின் வர லாறும், அதன் வழக்கும் எவ்வளவு ஆராய்ந்திருக்கின்றார்க ளென்பது, அவர்கள் சொற்களிலிருந்து விளங்கவில்லை. ஆனாலும், எனக்குத் தெரிந்தமட்டில் எழுதுகிறேன்.

தமிழின் வரலாற்றையும், வழக்கையும் விரிவாகத் தெரிய வேண்டினால், என் அருமைத் தந்தையார் மறைமலையடி கள் எழுதியிருக்கும் நூல்களைப் பார்க்கும்படி வேண்டு கின்றேன். தமிழானது மிகுந்த சொல் வளமுடையது. தமி ழையும், பிறமொழிகளையும் நடுவு நின்று நன்கு ஆராய்ந்த 'கால்டுவேல்' முதலான மேனாட்டாசிரியர்கள், தமிழானது பிறமொழிகளின் உதவியைச் சிறிதும் வேண்டாமல் எல்லாத் துறைகளிலும் தனித்தியங்கவல்லது என்றும், ஆங்கிலம் முத லான மற்றமொழிகளோ பிற மொழிகளின் உதவியை வேண் டாமல் தனித்தியங்க மாட்டாதனவென்றும், தமிழானது பிறமொழிக் கலப்பின்றித் தூயதாக எழுதப்படும்போதும், பேசப்படும்போதும் மிக்க அழகுடையதாய்ப் பிறருள் ளத்தைக் கவருந்தன்மையதாய் விளங்குகின்றதென்றும் வலி யுறுத்திச் சொல்லியிருக்கின்றார்கள். அவர்கள் சொல்லிய அவ்வுண்மை எல்லாப் பொருள்களையும் தனித்தமிழில் எடுத்துரைக்குந் "திருக்குறள்" என்னும் ஒரு நூலைப் பார்த் தாலும் நன்றாகத் தெரிந்து கொள்ளலாம். அதுவும் போதா

தேல், திருக்குறளின் காலத்தும் அதற்கு முற்பட்ட காலத்தும், இயற்றப்பட்ட பழைய செந்தமிழ்நூல்களைப் பார்த்தால் தமிழின் சொல்வளம், பொருள்வளம் நன்கு விளங்கும். இவ்வளவு சிறந்த தமிழ் மொழியைப் பேசிய பழைய தமிழ் மக்கள் எவ்வளவு சிறந்த நாகரிகம் வாய்ந்தவர்களாயும், பிறமொழியாளர்களுக்கும், அவர்களுடைய சொற்களுக்கும் அடிமைப்படாத எவ்வள்வு தனிப்பெருஞ் சிறப்பு உடையவர்களாயும் இருந்திருக்க வேண்டும்! இத்தகைய தமிழரையும் இத்தகைய தமிழ் மொழியையும், ஆங்கில மொழிக்கும், ஆங்கில மக்களுக்கும் ஒப்பிடுவது எவ்வளவு பொருந்தாததாயிருக்கின்றது!

(தொடரும்) —ம. விடுதலை.

---

# பொய்யாமொழிப் புலவர்

(1) பொய்யா மொழிப்புலவர் தொண்டை மண்டலத்தில் செங்காட்டங்கோட்டத் துறையூரில் சைவவேளாளர் மரபில் உதித்தவர். இம் மரபினரே அந்தகக்கவி வீரராகவ முதலியாரும், கவிவீரராகவ முதலியாரும், அட்டாவதானி சொக்கப்ப நாவலரும் பிறரும் ஆவர். இவருள் சொக்கப்ப நாவலர் 17-ம் நூற்றுண்டின் இடையில் சேலம் கணக்கத் தெருவில் வாசம் செய்து தஞ்சைவாணன் கோவை உரையும் சேலம் ஸ்தலபுராணமும் சுகவனநாதர் தோத்திரப்பிரபந்தங்களும் இயற்றினர். நாவலர் பரம்பரையில் வந்தவர்கள் சேலம் வக்கீல் சுப்பராய முதலியாரும் இவரது புத்திரர் கனகசபாபதி முதலியாரும் (M. A., B. L., மிட்டாதார்) ஆவார். தொண்டை மண்டலத்து வேளாளர்கள் விஜயநகரவரசர் காலத்தில் முன்னர்க் குறித்த நூற்றுண்டில் தாரமங்கலம் முதலிய இடங்களில் பிரதி காவலராக இருந்து பல சிவாலயங்களையும் கட்டுவித்தமை துருக்கங்களாலும் சாஸனங்களாலும் விளங்கும்.

(2) பொய்யாமொழிப்புலவர் இயற்றிய நூல் தஞ்சைவாணன் கோவை. இக் கோவைக்குப் பாட்டுடைத் தலைவர் சந்திரவாணபூபதி. இப்பூபதி மாறை நாட்டை யாண்ட ஜோமாற்வர்மர் திரிபுவனச்சக்கரவர்த்தி குலசேகரதேவருக்கு மந்திரியாய் இருந்தவர். மாறைநாடாவது தென்பாண்டிநாட்டில் கொற்கை வல்லம் தஞ்சாக்கூர் மல்லை என்னும் நான்கூருக்கும் இடைப்பட்டுப் பொருநையாற்றங் கரை

யில் உள்ள நாடு. மாபலிவாண கோவரையர் என்பார் 8-ம் நூற்றூண்டு வரை வட தேசத்திலும் தொண்டை நாட்டிலும் சிறப்புடன் அரசியல் ஒச்சி, 12, 13,-ம் நூற்றூண்டில் மாறை நாட்டில் பாண்டியருடைய பட்டந்தரித்துச் செந்தமிழ் நாட்டையும் செந்தமிழையும் போற்றிவந்தனர் என்பதை ஸ்ரீவில்லிபுத்தூர்ச் சாஸனங்களாலும் ரைஸ், போக்ஸ் என்ற ஆங்கில அறிஞர்கள் எழுதிய நூல்களாலும் அறியலாம். இக் கோமாறவர்மர் சோழநாட்டில் கடற்கரைப் பட்டினங்களையும், சேரநாட்டில் சேரர்களோடு மல்லைவல்லங்களில் பொருது அந் நாட்டுச் சில பகுதியையும் கைப்பற்றினர் என்பது பல சாஸனங்களால் விளங்கும். இம் மாறவர்மர் தாம் புலவராய் இருந்து சில நூல் வரைந்ததும் அன்றிப் பொய்யாமொழியாரையும் நாற்கவிராஜ நம்பியாரையுங் கொண்டு, கோவையையும் அகப்பொருள் விளக்கத்தையும் எழுதுவித்தும் உள்ளார். வஞ்சிப் பொய்யா மொழியார் இவர் எனத் துணிதற்கு இடமில்லை.

(3) பொய்யா மொழிப் புலவர் இயற்றிய தனிப் பாடல்களால் தஞ்சாவூர் முதலிய நகரங்களும் ராஜேந்திர சோழருள் அப்பேர் வாய்ந்த ஒருவரும் குல சேகரபாண்டியருள் அப்பேர் வாய்ந்த கோமாறவர்மரும் பாடப்பட்டார் என்பது விளங்கும். இவரியற்றிய பாடல்களைக் கொண்டு இதுகாறும் பெரியோர்கள் இவரைப்பற்றிக் கூறும் விருத்தாந்தங்கள் காளிங்கராயன் குதிரையை மாளவும் மீளவும் பாடியதும், கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப் பாடேனென்றதும், கலைந்த சங்கத்தைக் கூட்ட மதுரைக் கெழுந்ததும், காளைக்குமாரன் கவிகேட்கத் தனிவழி வந்ததும், காளையார் கோவில்கூத்தாள் முதலியோர்க்குக் கண்வரப் பாடியதும், தஞ்சைவாணன்மீது கோவைபாடிப் பொற்றேங்காய் பரிசு பெற்றதும், மதுரை சென்று மாறனைக் கண்டு பாடியதும், பழைய குருடி கதவு திறடி எனப் பாடியதும், சோழ நாடு புகுந்து செல்வர் சீநக்கனைப் பாடியதும், கண்டியூர் வண்ணத்தியைப் புகழ்ந்து பாடியதும், புலையன்உடல் வெடிக்கப் பாடியதும், அவவாதத்திற் கஞ்சி இரங்கியதும், சிதைவிலகப் பாடித் தீப்பாய்ந்ததும் பிறவுமாம். இவ் விருத்தாந்தங்களை மண்டல சதகங்களாலும் தமிழ்நாவலர் சரிதத்தாலும் தனிப்பாடற் றிரட்டாலும் விநோதரசமஞ்சரியாலும் முருகர் பிள்ளைத்தமிழ், திருப்புகழ், நன்னூற் புத்துரை என்பவற்றாலும் சத்தியவாக்கியின் சரித்திரபுத்தகங்களாலும் அறிந்து கொள்ளலாம்.

---

# அறிவியற் பகுதி - Science

## ஞாலநூல் (Geology)

[திரு. S. நடராஜன் அவர்கள் B. A.]

(௩௩-ம் பக்கத் தொடர்ச்சி)

6. உயிர் இனங்கள் நேர்முகமாயும் மறைமுகமாயும் ஞாலத்தின் மேற்பரப்பை மாற்றுகின்றன. அழுகின செடி, இலை, வேர், பூண்டு முதலியவை படை படையாய் சேர்ந்து நிலப்பரப்பை உயர்த்துகின்றன*. கடல் வாழ் உயிர்களின் எலும்புகளும், சிப்பிகளும் சேர்ந்து புதுத்தீவுகள் ஆகிவிடு கின்றன. தென்கடலில் இம்மாதிரித் தீவுகள் பல உள. இவை களைப் பவளத்தீவு (Coral reefs) என்பர். இது நேர்முகமாய் செடி கொடி உயிர் இனங்கள் ஞாலத்தின் மேற்பரப்பில் மாறுதல்களை விளைப்பனவாம். மலைமேலும் மணற்குன்றுகள் மேலும் புல் பூண்டு செடி கொடி மரங்கள் தோன்றி அரண் போல் விளங்கி நீராலும் காற்றாலும் அழிந்து சிதையாமல் காப்பது மறைமுகமான பணியாகும். பட்டு விழுந்து நிலப் பரப்பை உயர்த்தும் மரஞ்செடி கொடிகள் எவ்வாறு நிலக் கரியாய் மாறுகின்றன என்பதைப் பின்னர்க் கூறுவாம். ஈண்டு மரஞ்செடி கொடிகளும் நிலப்பரப்பை உயர்த்துகின்றன என்பது அறியத்தக்கது.

தாவரம் ஒழிந்த ஏனைய கடலிலும் நிலத்திலும் வாழும் உயிரினங்கள் அவை அவைகளின் எச்சத்தாலும், இறந்த பின்னர் எலும்புக் கூடுகளாலும் ஞாலத்தின் பரப்பை மாற்று கின்றன. தென்கடலில் புதிது புதிதாகத் தோன்றி ஒன்று டன் ஒன்று இணைக்கப்படும் பவளத்தீவுகளைப்பற்றி முன்னரே குறிப்பிட்டோம். விலங்குகளின் எலும்புகளும் பறவைகளின் எலும்புக் கூடுகளும் ஏரி மணலின் அடியில் புதையுண்டு கிடக்கின்றன. இப்புதை பொருள்கள் ஞால நூல் ஆராய்ச்சி யாளர்க்குப் பெரிதும் துணையாகின்றன.

---

* The growth and decay of Vegetables are yearly adding to the soil, at the same time that they protect the surface from the wasting action rain, frost and the like.

—*David Page*

*Advanced text of Book of Geology.*

7. தாதுப் பொருள் அல்லது பூதப் பொருள்களால் ஏற்படும் மாறுதல்கள் புலன்கட்கு எளிதில் தோன்றுவன வல்ல. பாறைகளின் உட்படை சுருங்குவதும், உலோகங்கள் உற்பத்தியாவதும் தாதுப் பொருள்களின் செயலாலேயாம். கடற்கரை ஓரங்களிலும் தட்டையான உப்புநீர் ஏரிகளின் கரை ஓரங்களிலும் படிந்து கிடக்கும், உப்பு, வெடியுப்பு, பொட்டிலுப்புப் படைகளும் ஞாலத்தின் மேற்பரப்பில் மாறுதல்களை உண்டாக்குகின்றன.

8. ஞாலத்தின் மேற்பரப்பில் ஏற்படும் மாறுதல்களுக்கு எரிமலை ஒரு சிறப்பான காரணம். மழை, ஆறு, கடல் வழியாக நீர் மேட்டு நிலத்தைச் சமதளமாகச் செய்கிறது எனக் கூறினோமல்லவா? இவ்வாறு செய்துவரும் நீரின் வேலைக்கு எதிர்மறையாக எரிமலைகள் வேலை செய்கின்றன. இவைகள் நிலப்பரப்பை மேலே கிளம்பச் செய்து மலைகளை தோற்றுவிக்கின்றன. நீர் சமதளமாக்குகின்றது. நெருப்பு மலைகளைப் புதுப்பித்து மேட்டு நிலத்தை உண்டாக்குகின்றது. மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத மலைகளும், மேட்டு நிலங்களும், பள்ளத்தாக்குகளும் எரிமலையால் உண்டாகின்றன*. எரிமலை, மண்கம்பம், மேற்பரப்பின் மெல்லிய அசைவு, ஆய மூன்று சிறப்பியல்புகளாலும் சிதைவுறும் நிலப்பரப்பு மறுபடியும் உண்டாக்கப் படுகிறது. இம்மூன்று சக்தியும் இயற்கையால் ஞாலத்திற்கு இல்லாதொழியுமேல் நிலப்பரப்பே இல்லாது போகும்.

௨. ஞாலத்தின் வயிற்றில் இருக்கும் நெருப்பின்சக்தியால் மூட்டப்பட்டு நிலப்பரப்பு மேலே உயர்ந்து மலைகளாயும் தொடர்மலைகளாயும் ஆகியுள்ளன. சில இடங்களில் மலையின் வாய்பிளந்து நெருப்புக் குழம்புகளும், பாறைத்துண்டுகளும், தூசிகளும், சுடு மண்களும், சாம்பரும், பலவித நெருப்புசம்பந்தமான வாயுக்களும் வெளியே வருவதுண்டு. வெளியில் வழிந்த நெருப்புக்குழம்பு குளிர்ந்தபின்னர் பாறைகளாகின்றன. இவ் எரிமலைகள் கக்கும் கனற்குழம்பு படைபடையாய்ச் சேர்ந்து குடைபோன்ற மலைகளாய் மாறும். வரலாற்றுக் காலத்துக்குள் இவ்வாறு பல புது மலைகள்

---

* As the one from without tends to degrade and wear down, so the other within tends to elevate and reconstruct; and through the force exerted by either may vary at different Epochs, still the general result is the maintenance of a habitable terraqueous surface.

—*David Page*

உண்டாயதற்குச் சான்றுகள் பல உள. நிலப்பரப்பில் எரிமலை கள் கனற் குழம்புகளைக் கக்குவதுபோல் கடலிலும் தரையி லிருந்து எரிமலை கனற்குழம்புகளைக் கக்கும். ஆண்டு வழியும் தீக்குழம்பானது நீரினுள்ளே பாறைகளாய் மாறுகின்றது. எரிமலையின் கக்கு வாயினின்றும் வழியும் அனற்குழம்பு குளிரும் கால அளவையால் பலவிதமான பாறைகள் உண்டா கின்றன. சில இடங்களில் வெந்நீர் ஊற்றுக்களும் கந்தகக் கக்குவாய்களும் இதனால் ஏற்படுகின்றன.

(ங) மண்கம்ப அதிர்ச்சியினால் மலைகளின் உயரம் அதி கரிக்கின்றது; நிலத்தின் மேற்பரப்பு பிளவுபடுகின்றது. சிற்சில பாகம் கடல்வாய்ப் படுகின்றது. புதுநிலம் தோன்று கின்றது. கடலில் பெரும் கொந்தளிப்புகள் ஏற்படு கின்றது. நீரின் அழித்தல் வேலைக்குப் புறநடையாக மண் கம்ப அதிர்ச்சிகள் நிலப்பரப்பை உயர்த்தி மாறுதல்கள் உண்டாக்குகின்றன.

(ச) மேற்பரப்பின் மெல்லிய அசைவுகளால் நிலப்பரப்பு சிலபல இடங்களில் மேல்நோக்கிக் கிளம்புகின்றது.

9. இதுகாறும் கூறியவாற்றால் பெறப்படுவது யாதெ னின் நீர், தீ, வளி என்ற முப்பெரும் பூதங்களும் ஞாலத் தின் மேற்பரப்பில் தனித்தனியாயும், ஒன்று சேர்ந்தும் பலபல மாறுதல்களை உண்டாக்குகின்றன. இம்மாறுதல் களானவை தொன்றுதொட்டே இடைவிடாது நடை முறை யிலே இருந்து வருகின்றன. இம்மாறுதல்கள் ஓய்வின்றி இன்றும் நடைபெறுகின்றன; என்றும் நடைபெறும். மழை யும், பனியும், காற்றும், இறுகிய நிலப்பரப்பைத் தேய்த்துக் குறைக்கின்றன. சிற்றாறுகளும், பெரிய நதிகளும், தாங்கள் செல்லும் வழிக்காக நிலத்தை அறுத்து மலையைக் குடைந்து கற்களை மணலாக்கி ஏரிகளிலும் கடல்களிலும் தூவி அடுக்கு வரிசையாகப் படை படையாய்ச் சேர்க்கின்றன. இப்படை களின் இடையே பல உயிர் இனங்களின் எலும்புக் கூடு களும் செடி கொடிகளும் அகப்பட்டு ஞால நூலாசிரியர் களுக்குப் பெரிதும் துணைபுரிகின்றன. புல் பூண்டுகளின் அழுகிய குப்பைகள் நிலக்கரியாக மாறுகின்றன. எரிமலை களின் சக்தி நிலப்பரப்பின் சில பகுதியை உயர்த்தியும் சில பகுதியைக் கடலினுள் தாழ்த்தியும், சில இடங்களில் கக்கு வாய்களின் மூலம் நெருப்புக்குழம்புகள், தூசி, சாம்பர்களைக் கக்கி வழிந்து ஒடச்செய்து மலைகளை உண்டாக்குகின்றன. பண்டையிலும் எரிமலைகள் இவ்வாறு புது மலைகளை உண்

டாக்கி நிலப்பரப்பில் பல மாறுதல்களைச் செய்துள்ளன. பலவகைப் பாறைகள் தோன்றுவதற்கு எரிமலைகள் காரணமாம்.

(10) இயற்கை யென்னும் காலனின் ஏவலாளர்கள் இடைவிடாது ஓய்வின்றி ஞாலத்தின் மேற்பரப்பில் மாறுதல்களை உண்டாக்கிக்கொண்டு வருகின்றனர். புதுப் புதுப் பாறைகளின் தோற்றமும் புதுமலைகளின் அடுக்கு வரிசைகளும் இயற்கையின் எல்லையற்ற திறனை எடுத்துக்காட்டுகின்றன. இவ்வியற்கையின் நுட்பங்களை உணர்ந்தார் யாரே "மண்ணையும், புனலையும், வளியையும், கனலையும், விண்ணையும் படைத்த வித்தகவித்தை"* ஏற்றிப் பணியாதார்!

---

# வடிவு திருந்த அறிவு வளர்ந்த வகை

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்—
திரு. க. ப. சந்தோஷமவர்கள்]

மரங்கள் தலையை நிலத்திலூன்றிப் புணர்ச்சிக் கருவிகளை எவருங்காண வெளியே வைத்திருக்கின்றனவென்று பார்த்தோம். மரங்களை விட்டு விலங்குகளுக்குச் செல்லுங்கால் இவை தம் புணர்ச்சிக் கருவிகளை வால்கொண்டு மறைக்கின்றனவென்று காண்கின்றோம். இயற்கை உணர்ச்சியாலுந்தப்பட்டு இங்ஙனம் புணர்ச்சி உறுப்புக்களை மறைக்க முயல்வதற்கேற்ப உயிர்களின் அறிவு முதிர்ந்திருக்கின்றது. இதற்கிசைய உடலுந் தலையும் பொருந்துகின்ற முடக்கியும் வேறுபடுகின்றது. முதன்முதல் வையகத்தில் தோன்றிய மக்கள் தம் புணர்ச்சி உறுப்புக்களை இலைகளால் மூடிக்கொண்டார்களென் றறிகின்றோம். மக்களின் அறிவுயர்ச்சிக்கிதுவே சான்றாகும். நாட்டுப்புறங்களில் வாழுகின்ற மக்களிற் சிலர் இந்நாளிலும், மரம் எங்ஙனந் தலையை மறைத்துக்கொண்டு உடலை எவருங்காண வெளியில் வைத்துக்கொண்டிருக்கின்றதோ, அவ்வாறே செய்கின்றார். அவர்கள் தங்கள் மண்டையில் ஒரு தலைப்பாகையைச் சுற்றி மறைத்து, உடலை எவருங் காண வெறுமையாக வைத்திருக்கின்றனர். உயிர்களின்கீழ் நிலையில் புதையுண்டிருக்குந் தலை சிறிது சிறிதாக நிமிர்ந்து மக்கள் நிலையில் செங்குத்தாக மேலே அமரும்பொழுது உடல் முழுவதையும் மறைத்துத் தலையை வெறுமையாய்

---

* தாயுமானசுவாமிகள் மாணக்கர் அருளிய அகவல்.

விடவேண்டுமென்கின்ற ஒருணர்ச்சி யுண்டாகின்றது. இது நாகரிக முதிர்ச்சி.

என் நண்பரொருவர் சில நாட்களுக்குமுன் நிகழ்த்திய சொற்பொழிவொன்றில், இந்திய மகளிர் காலை மூடுவதற்கு ஒன்றும் அணியாதிருப்பதைப் பார்த்தால் ஐரோப்பிய மகளிர் அருவருப்புக் கொள்வார்கள் என்று சொன்னபின், ஐரோப்பிய நங்கையர் அப்படி நினைப்பது தவறென்றும், அவர்கள் (ஐரோப்பிய நங்கையர்) ஆண்களோடு சேர்ந்து கூத்தியற்றுகையில் அணிந்து கொள்ளும் உடையைக்கண்டு இந்திய மகளிர் பெரிதும் வெறுப்புறுவார்க ளென்றும் மொழிந்தார். மரஞ் செடி கொடிகளிலிருந்து முதன் முதல் வையகத்தில் தோன்றிய மக்கள் வரையிலும், முதன் முதற் றோன்றிய மக்களிலிருந்து இக்காலத்திய நாகரிகமடைந்த மக்கள்வரையிலுஞ் சென்று ஆராய்ந்து, தலையைவிட உடலை மூடுவதே இயற்கையான நெறியென்றும், நாகரிகமடைந்த பெண்கள் உடல் முழுவதையும் மூடித் தலையை மறையாமல் விடுவதே ஒழுங்கென்றுங் காட்டமுயன்றேன். இதுவே இயற்கை நெறியின் முடிவாகும். ஆதலின், கால்கள் மூடப் படாமலிருப்பதைக் குற்றமென்று நினைப்பது இயற்கைக்கு முரண்பட்டதாகு மென்று யான் கருதவில்லை. கால்களை மூடுவது இயற்கையில் நாம் காணும் நாணுடைமை நெறியைப் பின்பற்றியதேயாகும்.

இதுபோன்றவையும் இதனினுந் தலையாயனவு மாகிய பலபகுதிகள் இதுபற்றிச் சொல்லுதற்குள. ஆனாலிவற்றை வெளியிடுதற்கேற்ற மன்று இஃதாகாது. அறிஞர் சிலரே இதற்குரியராவர். இதன் காரணம் முன்னரே என்னால் எடுத்துக்கூறப்பட்டது. இன்று யான், படிப்படியாக அறிவும் வடிவும் ஒன்றிற்கொன்றிசைந்து வளர்ச்சிபெற்ற வரலாற்றை முடிக்கக் கடமைப்பட் டிருக்கின்றேன். இச் சொற்பொழிவுகளை யான் நிகழ்த்துவதன் கருத்து யாதென்பது பற்றி இதற்குமுன் ஒன்றும் யான் கூறவில்லை. இன்றோடு சொற்பொழிவு முடிவு பெறப் போவதால் யான் கொண்ட நோக்கத்தைக் குறித்துச் சில கூறுகின்றேன்.

உங்களிற் சிலர், உயிரின் வளர்ச்சியைப்பற்றி யான் இதுகாறும் கூறியவை எனது மூளையிலிருந்தே கிளம்பியவை என்று நினைத்திருக்கலாம்!; என்னைப் போல் இத்துறையிற் கருத்தைச் செலுத்தக் கூடிய சிலர் யான் கூறியவற்றை மகிழ்ந்துகேட்டு ‘இது நன்று’ என்றெண்ணியிருக்கலாம்;

வேறு சிலர் வேறு கருத்துடையவர்களாகவு மிருக்கலாம். இப்பொழுது யான் கூறுகின்றது யாதெனின், இது பற்றி வரக்கூடிய புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் யான் உரியவனல்லன் என்பதே. ஈண்டு யான் எடுத்துக் கூறியவையெல்லாம் சைவ சித்தாந்தக் கொள்கையினின்றும் பெறப்பட்டன. எடுத்துக் கொண்ட இப்பொருளை, மேல்நாட்டார் வழக்கைப் பின்பற்றி, யாவரும் மெய்ப்பித்துப் பார்க்கக்கூடிய கணக்குகளோடுங் காட்டுகளோடுங் கூறியிருக்கின்றேன். மொத்தமாய் எனது கருத்தைச் சொல்லவேண்டுமாயின், டார்வின் என்ற அறிஞரால் 19-ம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட உயிர் வளர்ச்சி வகை (Evolution) சைவசித்தாந்தக்கொள்கையின் ஒரு பகுதியே யாகும். உயிர் வளரும் வகையைப்பற்றி ஈண்டு யான் மொழிந்த சில உண்மைகள் மேலைநாட்டு அறிவியலாரால் இன்றளவும் ஆராயப்படவில்லை. சிறப்பாக, யான் கூறிவந்த அறிவிற்கும் வடிவிற்குமுள்ள இயைபு அவர்களுடைய ஆய்விற்குட்பட வில்லை. யான்கூறு மிதுகேட்டவர்கள் நகினும் நகுவர். நிற்க.

தமிழ்த் தொல்லறிஞர் மிகமிக நீண்டகாலத்திற்கு முன்னரே ஒவ்வொரு வடிவிற்கும் ஒவ்வொரு பொருளுண்டு என்ற முடிவிற்கு வந்தார்கள். ஒருருவத்திற்கும் அது குறிக்கும் பொருளுக்குமுள்ள பொருத்தம் வழக்குப்பற்றி வருவதன்று, இயற்கையிலேயே அமைந்து கிடக்கின்றதென்ற கொள்கையுடையவர்களாயும் அவர்க ளிருந்தார்கள். பண்டைத் தமிழருடைய உண்மை இயல், நாம் காண்பனவுங் காணக் கூடியனவுமாகிய உருவங்களும், கேட்பனவும் கேட்கக் கூடியனவுமாகிய ஒலிகளும், தம்மில் தாமே பொருளுடையனவாய் மிளிர்கின்றன என்ற தகர்க்கொணாத அடிப்படையின்மேல் கட்டப்பட்டுளது. இவ்வடிப்படை தவறுமாயின் அவர்களுடைய உண்மை இயல் முழுவதும் பிழைபடும். யான் உங்கள்முன் கூறிவந்தவை யெல்லாம் தமிழரின் உண்மை இயலையும் மறைமொழிகளையும் எடுத்துரைக்கும் நூல்களிலிருந்து திரட்டப்பட்டவையே. ஈண்டுக் கூறியவாறே இவை ஆண்டுக் காணக்கிடக்கின்றனவல்ல. மேலை நாட்டு முறையில் கினைவைச் செலுத்துகின்றவர்கள் எளிதில் இவற்றை அறிந்து கொள்ளும் வகையில் தமிழ் உண்மை இயலை உங்களுக் கெடுத்துக்கூற முயன்றிருக்கின்றேன்.

டார்வின் என்பவர் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே, உயிரின் வளர்ச்சியைக் குறித்துத் தமிழர்கள் நன்கறிந்திருந்தனர். டார்வின் தோன்றி ஒன்

றரை நூற்றுண்டுதானுங் கழியவில்லை. தமிழரின் கடைச் சங்கமிருந்த காலம் முப்பதுநூற்றுண்டு அல்லது குறைந்தது இருபது நூற்றுண்டுக்கு முற்பட்டதாகும். டார்வினுக்கு முன் மேல்நாட்டார் உயிர்வளர்ச்சியைப் பற்றி ஒன்றுமறியாதிருந்தனர். நமது பழைய ஏட்டுச் சுவடிகளில் அவர்களறியாதிருந்த உண்மைகள் மறைந்து கிடந்தன.

மக்கள் எங்ஙனந் தோன்றினர்கள் என்பது பற்றிய பல கொள்கைகள் வெளிவந்திருக்கின்றன ஆனல், மக்களுக்கு மேற்பட்ட நிலையைப்பற்றி மேல்நாட்டார் ஒன்றும் நவின்றிலர். இது புனைதல் (Imagination) என்னும் ஆற்றலின் பாற் படுவதாகும். இத் துறையில் வகுக்கப்படுவனவற்றை மெய்யென்றும் பொய்யென்றுங் கூற வியலாது. யான் புனையும் ஒன்று எனக்குத் திருத்தமானதாகவே தோன்றுகின்றது. அது தவறென்று மற்றொருவர் கூற உரிமையில்லை.

மக்களுக்குக் கைகள் இரண்டு உள. கைகளில் ஆட்காட்டி விரலுக்கும் பெருவிரலுக்கும் நடுவே விரிந்த இடையொன்றுளது. இது விலங்குகளில் அத்துணை நன்றாகத் தோன்றுவதில்லை. கோழியை எடுத்துக் கொள்வோமாயின், பெருவிரலைபொத்த விரல் அதற்கும் ஒன்றுண்டு. ஆனல், அது பிரிந்து நிற்கின்றதே யொழிய மக்களுடைய பெருவிரலைப்போல் விரிந்த இடைவெளியோடு விளங்கவில்லை. இந்நாளில் ஏறிச்செல்வதற்குரிய பொறியூர்திகள் மிகுந்து வருவதால் மக்களுடைய கால்களுக்கேற்ற பயிற்சி யில்லாமற் போகின்றது. சென்னைக் கடற்கரையில் வேலைசெய்கின்ற வலைஞர் சிலரை யான் கவனித்தபொழுது, அவர்களுடைய விரல்களுக் கிடையே, வாத்தின் விரல்களுக்கிடையேயுள்ள சவ்வைப்போன்ற ஒரு வளர்ச்சி இருப்பதைக் கண்டேன். கடல் நீரில் அவர்கள் பெரும்பாலும் நீந்துவதால் இம் மாறுதல் தோன்றி யிருக்கின்றது. கருத்தின்றிப் பார்ப்பவர்களுக்கு அவர்களுடைய விரல்கள் நீளக் குறைவுடையவை போலத் தெரியலாம். அஃதுண்மையன்று. இடையே வளர்ந்திருக்குந் தோலால் அவர்களுடைய விரல்கள் நீளத்திற் குறைந்து தோன்றுகின்றன. இதிலிருந்து, மக்கள் செய்யுந் தொழிலுக்கேற்ப அவர்களுடைய உருவம் மாறுதலடையுமென்பது வெளியாகின்றது. தொழிலுக்கேற்ற வண்ணம், உருவம் மாறுதலடையுமாயின், அதனல் மக்களுடைய கைகளில் நிகழக் கூடிய வேற்றுமையைத் தெற்றெனக் காணப் பல்லாயிரமாண்டுகள் செல்லும்.

பெருவிரலோடு ஆட்காட்டி விரல் சேர்வதால் யாதாயினு மொன்றை நாம் இறுகப் பற்றிக் கொள்ளக்கூடியவர்களா யிருக்கிறோம். பெருவிரலுக்கும் ஆட்காட்டி விரலுக்குமிடையே ஒரு கத்திகொண்டு கீறிடின், முன்னங்கை முழுவதையும் இருபிரிவாகப் பிளந்திடலாம். முன்னங்கையில் அமைந் திருக்கும் இரண்டு எலும்புகளும் இங்ஙனங் கீறுவதால் இயல் பாகவே இடையூறின்றிப் பிரிகின்றன. விலங்குகளுடைய முன்னங்கால்களை இவ்வாறு பகுத்திடமுடியாது. மக்களின் கைகளோ இயற்கையிலேயே இருபிரிவாக வகுக்கப்பட்டிருக் கின்றன. இவ் இருபிரிவுகளும் சதையினால் சேர்க்கப்பட்டிருக் கின்றனவேயன்றி எலும்பினாலன்று. யாதாயினும் ஒரு காரணத்தால் பெருவிரலுக்கும் ஆட்காட்டி விரலுக்கும் நடுவே செல்கின்ற இடை விரிந்திடுமாயின் யாது நேரிடும்? நான்கு கைகளுண்டாகும். புனையுமாற்றல் கொண்டு இதைப் பார்க்கு மாறு வேண்டுகின்றேன். கருநிலையிலே மரமாயினும் புழுவாயி னும் மீனாயினும் விலங்காயினும் யாவும் ஒருருவமுடையன வென்பதை நன்கறிந்த தமிழர்கள், மக்கட்பிறவிக்கு உயர்ந்த நிலையில் முழங்கையிலிருந்து பிரிகின்ற நான்கு கைகளை யுடை யதாய் உயிர் விளங்கவேண்டுமென்று நினைத்தார்களென நாம் கருதலாம். புனையுமாற்றல் கொண்டு வகுத்த இவ்வடிவம் அறிவுக்கு முரண்பட்டதன்று என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். தமிழர்கள் தங்கள் கடவுளர்க்கு நான்கு கைகளை வகுத்து மக்கட்பிறவிக்கு மேம்பட்ட நிலை அதுவே என நினைத்தனர். அவர்கள் கைகளின் தொகையை அதிகப் படுத்தினார்களேயன்றிக் கால்களைப் பெருக்கவில்லை. எதிர் பாராத ஒரு நிகழ்ச்சியால் ஆட்காட்டிவிரலுக்கும் பெருவிர லுக்குமிடையே ஒரு பிளவுண்டாமாயின், அதைத் தடுப்ப தற்கு எலும்பொன்றுமில்லை என்பதைக் கருத்தில் வைக்க வேண்டும்.

ஆதலின், நான்கு கைகள் வளர்வது முடியாத ஒரு நிகழ்ச்சியாகாது. பண்டைத் தமிழர்கள் நான்கு கைகளோடு கடவுளரை வகுத்த புனையு மாற்றலை நாம் புகழவேண்டும். இவ்வாற்றல் கொண்டே எட்டு, பதினாறு கைகளையுடைய உருவங்களை அவர்கள் வகுத்தனர். இதை மற்றுந் தொடர்ந்து கடவுளர்க்குத் தலைகளையும் பெருக்கிக் காட்டியிருக்கின்றார் கள். வடிவும் அறிவும் ஒன்றை யொன்று தழுவி வளர்ச்சி பெற்ற வகையை எடுத்துக் காட்டியிருக்கின்றேன். இதில், பார்வை என்று நாம் சொல்லும் அறிவு, கணக்கியலின் முறைக்கிசைய, கீழிருந்து மேல் நிமிர 180-டிக்கிரியாகும். இதில் மக்களுடைய கண்கள் 90 டிக்கிரியே அடைந்திருக்

கின்றன. மக்கட் பிறவிக்கு மேற்பட்ட நிலையில் அக்கண்கள் 180-டிக்கிரி நிமிரவேண்டுமென்பது கணக்கியலாற் பெறப் படும் உண்மையாகும். இந்நிலையில், அவைகள் விசும்பை நேர்மேலே காணுமாறு அமையப் பெறல்வேண்டும். இவ் வகையினுந் தமிழர்கள் தங்கள் புனையு மாற்றலைப் புகுத்திச் சிவனுடைய ஊர்த்துவமுகத்தை நேரே விசும்பை நோக்கு மாறு அமைத்திருக்கின்றனர். இதைப் புனையுமாற்றல் என்று நாம் கூறிடினும் அறிவினின்றும் அஃது அகன்ற தன்று.

(தொடரும்)

---

## பொருள்களின் ஆக்கப்பாடு

[திரு. T. V. அருணசலம் பிள்ளையவர்கள், B.A., (Hons.]

உலகத்தின்கணுள்ள பருப்பொருள்களை [1] பகுபொருள் கள், [2] பகாப் பொருள்கள் என விருபாலாகப் பிரித்தலாகும். இங்ஙனம் கூறுபடுத்துவது [3] இயைபுநூன்முறைப்படியாம். பிற நூலோர் வேறு வகையாகவும் கூறுவர். நாம் காணும் பொருள்கள் எண்ணிறந்தன. ஆனால் இவற்றிற் பெரும் பாலன [4] பகுக்கப்படும் தன்மையுடையனவா யிருக்கின்றன. அவற்றைப் பகுத்துப் பார்க்கும்பொழுது சுமார் தொண்ணூறு மூலப்பொருள்கள் அல்லது பகாப் பொருள்கள் கிடைக் கின்றன. இப்பகாப் பொருள்களின் பல் திறப்பட்ட [5] இயை பினாலே தான் பன்னூறாயிரம் பகுபொருள்கள் உண்டா கின்றன. பகாப் பொருள்களின் பெயர்களடங்கிய ஒரு அட்டவணையைப் பார்த்தால் அப்பெயர்களிற் பாதி பலருக் குத் தெரியாததாயிருக்கும். அந்தப் பொருள்களில் ஒரு சிலவே நாம் நன்கறிந்தவை. ஒரு சில நாம் ஒரு வாறறிந்தவை. நூலோர் பகாப் பொருள்களின் சிறப்பியல்பு களைச் செவ்வனம் ஆராய்ந்துள்ளார்கள்.

பகாப் பொருள்கள் ஒன்றோடொன்றோ, பலவோ இயைந்து பகுபொருள்கள் உண்டாகும்பொழுது நாம் சிறப் பாய் நினைவிற்கொள்ள வேண்டியதொன்றுண்டு. அஃ தென்னையெனின், பகாப் பொருள்களின் குணங்கள் தெரிந்த மாத்திரையானே அவற்றினின்று உண்டாகும் பகுபொருள் களின் இயல்பை நாம் சொல்லிவிட முடியாதென்பது.

---

1. Compounds　2. Elements　3. Chemistry
4. Chemically decomposable　5. Chemical combination

காட்டாக [1] நீரியம், [2] உயிரியம் என்னும் இரண்டு பகாப் பொருள்களை எடுத்துக்கொள்வோம். இவை [3] வளிகளாகலின் இவற்றின் இயைபினுல் பிறிதொருவளியே உண்டாகலாம் என்று நாம் நினைப்பது இயற்கை. ஆயின் உண்மையதுவன்று. இவ்விருவளிகளையும் சேர்த்து ஒருகாலத்தில் வைத்திருந் தால் அவை [4] வெறுங்கலவையாகவே இருப்பன. அங்ஙனம் வைத்திருப்பது மணலையும் சர்க்கரையும் சேர்த்து வைத் திருப்பதுபோலாம். ஒவ்வொருவளியும் தன் தன் தனிக்குணத் தோடிருக்குமேயன்றி அக்குணம் சிறிதேனும் மாறுபடாது.

இனி, இந்த வளிகளை [5] மின்னெழுக்கினுல் இயைத்து விடலாம். அங்ஙனம் இயைக்கும்பொழுது இரண்டு வளிகளி னின்றும் முற்றிலும் மாறுபடுந் தோற்றமுடைய தண்ணீர் உண்டாகின்றது. இதற்கு எதிரிடையாகத் தண்ணீரினுள் மின்னெழுக்கைச் செலுத்தினுல் தண்ணீர் நீரியமாகவும் உயிரியமாகவும் பிரிகின்றது. நீரியம் மிக விரைவில் தீப்பற்றக் கூடியது. தண்ணீரோ நெருப்பிற்குப் பகை. உயிரியம் கிட் டத் தட்ட மற்றெல்லாப் பொருள்களையும் எரித்துவிடும் ஆற் றல் வாய்ந்தது. இரும்புக் கம்பிகளைக்கூட எரியச் செய்யும். ஆனுல் அது நீர்வளியுடன் இயைபு கொண்டு தண்ணீராய் மாறும் பொழுது தனக்கியல்பாயிருந்த எரிக்கும் ஆற்றலை இழந்து விடுகிறது. எனவே உயிரியமும் நீரியமும் இயையு மிடத்து அவற்றின் தனிக்குணங்கள் முற்றிலும் போய்விட வேறு பண்புகளுடைய தண்ணீருண்டாகின்றது.

இங்ஙனம் தண்ணீருண்டாகுங்கால் நிகழ்வது யாதென் றறிய நாம் விழைவது இயற்கை. இன்னது நடக்கின்றதென்பது நேராகப் புலனுகாது. ஆயின் ஆண்டு நடப்பதை நம் மனக்கண் ணுற் காணுதல் கூடும். எல்லாப் பொருள்களும் சிறு சிறு [6] பர மாணுக்களால் ஆகியவை. இப்பரமாணுக்கள் மிகுந்த [7] பார் வைப் பெருக்கமுடைய [8] உருப்பெருக்கிகளாலும் கண்டறிய முடியாத அத்துணைச் சிறியன. அவற்றின் குறுக்களவு ஒரு அங் குலத்தின் [9] ஐந்துகோடியில் ஒரு பங்கு என்று கணித்திருக் கிருர்கள். இந்த அளவை நம்மனத்தால் நினைக்கக்கூட இய லாது. அஃது மற்ற நுண்பொருள்களோடு அதனை ஒப்பிட்டுக் காண உதவுமேயன்றி வேருெரு பயனையும் தாராது.

---

1. Hydrogen 2. Oxygen 3. Gases. 4. Mixture
5. Electricity 6. Atoms 7. Magnification
8. Microscopes 9. $\frac{1}{50,000,000}$ inch.

[1] அறிவியற்றுறையில் புதிதாய்ப் பயிற்சி செய்யத் தொடங்கியிருக்கும் ஒருவன் உருப் பெருக்கியில் ஒரு பொருளைக் காணும் பொழுது, அப்பொருள் வெறுங் கண்ணுக்கு எப்படித் தோன்றுகின்றதென்பதையும் விருப்புடனறிவான். ஒரு துகளின் அளவாய்க் கண்ணுக்குப் புலனுவது உருப்பெருக்கியில் ஓர் அழகிய சிப்பியின் வடிவம்போல அவனுக்குத் தெரிகிறது. இன்னும் அவன் மிக்கவாற்ற லுடையதோர் உருப்பெருக்கியில் ஒரு [2] நுண்கூட்டை நோக்கும் பொழுது, தான் பார்த்துக்கொண்டிருக்கும் பொருள் வெறுங் கண்ணுக்குச் சற்றேனும் தெரியாததென் றுணர்கின்ருன். அஃது ஒரு துகளினுஞ்சிறிது. நுண்ணியபொருளுக்கோர் முடிவெல்லையாக இந்நுண் கூட்டினைக் கருதலாகும். ஏனென்ருல் அது நம் கண்ணுக்குப் புலனுவதில்லை. ஆனல் பகாப் பொருள்களின் [3] பரமாணுக்களோடு இந்நுண் கூடுகளை ஒப்பிட்டுப் பார்ப்பது மக்களையும் அரக்கர்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பது போலாம். நுண்கூடு ஒவ்வொன்றிலும் புன்னூறு கோடிப் பரமாணுக்கள் இருக்கின்றன. இயற்கைக் கொற்றன் எடுத்தடுக்கும் செங்கல்கள் எனத் தகும் இச்சிறு பரமாணுக்களின் அளவை மனந்தாற் கருதுவதும் இயலாதாகும். எல்லாப் பகாப் பொருள்களும் பரமாணுக்கள் என்னும் மிகமிகச் சிறிய பகுதிகளாலாகியவை என்று கருதுவது சாலும்.

பகாப் பொருள்கள் எத்தனையோ அத்தனை வேறுபட்ட பரமாணுக்களும் உண்டு. [4] இரும்புப் பரமாணு, தங்கப் பரமாணு, நீரியப் பரமாணு, உயிரியப் பரமாணு, கரியப் பரமாணு என்றிங்ஙனமாக ஏறக்குறைய தொண்ணூறு வகையான வெவ்வேறு பரமாணுக்கள் இருக்கின்றன. தண்ணீர்ப் பரமாணு என்று நாம் சுட்டுவதில்லை. ஏனென்ருல் தண்ணீர் தனித்தியலும் பான்மையுள்ளது. தண்ணீரின் மிகமிகச் சிறிய பாகமானது இரண்டு நீரியப் பரமாணுக்களும் ஓர் உயிரியப் பரமாணுவும் இயைந்து உண்டாயிருக்கின்றது. இந்தச் சிறு இயைபுக்கு அணு என்றுபெயர். நோக்குமிடத்து அதுவே, தானய்த் தனித்திருக்கக்கூடிய தண்ணீரின் மிகமிகச் சிறுபகுதியாகும். ஏனென்ருல் அதை இயைபு முறையில் இன்னுஞ்சிறியதாக்க முயன்ருல், அது தண்ணீராக இராமல் நீரியவளியும் உயிரியவளியுமாய்ப் பிரிந்துவிடும்.

ஓர் அணு பல பரமாணுக்களின் தொகுதியேயாம். ஓர் அணுவின்கணுள்ள பரமாணுக்கள் ஒரே திறத்தனவாகவோ

---

1. In the field of scienee 2. A bacillus 3. Atom
4. Atoms of Iron, Gold, Hydrogen, Oxygen, Carbon etc.,

மல் எங்கும் நிறைந்து இருக்கிற உன்னுடைய அறிவு வேட்கை செயல்களுக்குள் தன்முனைப்பு சிறிதுமின்றி அடங்கி இருக்கச் செய்கின்ற இனிய அருள் என்பது பொருள். எப்பொழுதும் அருள் உயிர்களுக்கு இன்ப நலத்தையே செய்தலால் அதனை இன்அருள் என்றார்.

இன்அருள் தந்தாய்—என்பது இன்றெனக்கருளி என்ற முதற்குறிப்புப் பாட்டில் அடிகள் கூறியபடி எனது உள்ளத்தில் அதன்கண்ணுள்ள மலஇருள் முற்றிலும் நீங்கும்படி இனிய அருட்பேரொளி விளங்கச் செய்தாய் என்று பொருள்படும். கோயிற்றிருப்பதிகம் கடைசிப் பாட்டில் 'தந்தது உன்றன்னை' என்று அடிகள் கூறி இருத்தல் காண்க.

யான் இதற்கு ஓர் கைம்மாறு இலன்—(மாயா தத்துவங்கள் எல்லாம் அடங்கி நான் உன்னிடம் அடங்கியிருக்கும் உண்மை நிலையில்) தாம் யாதொரு கைம்மாறும் இறைவனுக்குச் செய்யமுடியாது என்று அடிகள் கூறினார்.

அடிகள் அநுபோக இலக்கணம் கூறுகிற கோயிற் றிருப்பதிகம் "இன்றெனக் கருளி" என்னும் முதற்குறிப்புடைய எழாவது பாட்டிற் கூறுகிறபடியே அதே பதிகம் இரண்டாவது பாட்டாகிய இந்தப் பாட்டிலும் மலநீக்கத்தா லுண்டாகும் (1) அறிவு நிலையும், அருள் விளக்கத்தா லுண்டாகும் (2) அன்பு நிலையும், இன்ப விளக்கத்தா லுண்டாகும் (3) செயல் நிலையும் ஆகிய மூவகைச் சிறப்பு இயல்பு அத்துவித அநுபோக நிலைகளையும் கூறி அருளினர். ஆனால் அந்தப் பாட்டிற் கூறப்பட்ட முதலாவது நிலையை இந்தப் பாட்டில் மூன்றாவதாகவும், இரண்டாவது நிலையை இந்தப் பாட்டில் முதலாவதாகவும் மூவகை நிலைகளுக்குமுரிய ஏதுவும் பயனும் ஆகிய முறைமைக்கு மாறின்றி அடிகள் கூறினர்.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

## சென்னை மாகாணத் தமிழர் இரண்டாவது மகாநாடு

# திருநெல்வேலி.

தலைவர்

திருவாளர் வி. நாடிமுத்துப்பிள்ளை அவர்கள் M. L. C.,

நிகழ்த்திய

# தலைமைப்பேருரை.

---

மருந்தவை மந்திரம் மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத் [துன்றுபைம்பூஞ்
செந்திசெம் பொன்மலர் திருநெல்வே லியுறை செல்வர்தாமே.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்.
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்தோனை விளங்கு வள்ளிக்
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவாத வர்க்கொரு தாழ்வில்லையே.

அறிவும் ஆற்றலும் வாய்ந்த ஆன்றோர்களே !
தமிழ்த்தாயின் மீது பேரன்பு பூண்டொழுகும் பெரியோர்களே !!
சகோதரி, சகோதரர்களே ! அனைவர்க்கும் என் வந்தனம்.

எந்நாட்டிலும் முன்னுடைனப் போற்றும் இத் தென்னாட்டின் கண் உள்ள சிவத் தலங்கள் பலவற்றுள்ளும் ஒப்புயர் வில்லாது விளங்குவதும், திருஞான சம்பந்தப் பெருமானால் தேவாரத் தீந் தமிழ்ப் பதிகம் பெற்றுப் பெருஞ் சிறப் பெய்தியதும், முருக வேளின் திருவருள் பெற்ற அருணகிரியாரால் உலகினர் உய்வான் வேண்டிப் பாடிய திருப்புகழ் வண்ணங்களையுடையதும், புனிதமிக்க தாமிரபரணி நதியால் சூழப் பெற்றதும், பாண்டிய நாட்டிற்கும் தமிழிற்கும் புத்துயிர் அளித்த பெருமை யுடையதும், அன்பர்கள் நினைத்தமாத்திரத்தால் முத்தி இன்பத்தை அளிக்க வல்லதும், பவக் கடல் கடக்கத் தவக்கலம் நடத்துவோர் முத்திக்கரையை முன்னுற வேண்டி, எத்திக்கினும் பார்த்து மருண்டிராது, முத்திக்கரை யிதுவாமெனக் காட்டும் கலங்கரை விளக்கமாக விளங்குவதும்,

தமிழ்த்தாயின் பிறப்பிடமாகக் கூறப்பெறும் அகத்திய முனிவர் தவப்பெரும் மலையாகிய பொதியிலைத் தன்னதாக்கொண்டிருப் பதும், மக்கட்கு என்றும் இடையறா இன்பத்தை அளிக்கும் நீர் அருவிகளாலும் அழகிய மலர்ச் சோலைகளாலும் இத்தகைய பல் வேறு வளங்களாலும் சிறப்புறப் பெற்றதும், நீர் நிறைந்த தாமரைத் தடாகங்களாலும் பொய்கைகளாலும் படிந்தவர் குற்றமகற்றும் பல் பெரும் தீர்த்தங்களாலும் குறிஞ்சி முதலிய ஐந்திணை வளங்களாலும் பார்ப்பவர் கண்களைக் கவரும் காட்சியை உடையதாகியதும், மாட கூடங்கள், தெற்றிவரிசைகள் நிறைந்து அழகினைச் செய்வதும், காந்திமதி யம்மையை இடமாகக் கொண்ட நெல்லையப்பர் அமர்ந்த திருக்கோட்டம் வானுற வோங்கி மாண்புறத் திகழ்வதும், தொண்டர் கள், அறவோர் முதலியவர்களுக்கு அன்னம் ஆர்விக்கும் அறச் சாலைகள் அணிபெற நிலவப் பெற்றதும், கற்போர் இன்புறும் கல்விச் சாலைகள் கவினுற வோங்கப் பெற்றதும், அவநெறி நீக்கிச் சிவநெறியளிக்கும் அன்பர் மடங்கள் செறியப் பெற்றதும், நாதாந்த மாக்கிப் போதாந்த மளிக்கும் வேதாந்த சித்தாந்தத் திருமடங்கள் விளங்கப் பெற்றதும், தமிழ்த்தாயைப் போற்றிப் பாதுகாத்து நீங்காப் புகழ்பெற்று நின்று நிலவுகின்ற தமிழ்ச் சங்கம் கவினப் பெற்றதும், இன்னோரன்ன பல சிறப்புக்களை யுடையதுமான இத் திருநெல்வேலியில், இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ் மொழிக்கும், அம்மொழியினைத் தாய் மொழியாகக் கொண்ட தமிழருக்கும், இடையறாது அரிய தொண்டினை ஆற்றி வருகின்ற இத் தமிழ்ச்சங்கத்தின் இவ்வாண்டுவிழாவிற்குக் கல்வி, கேள்விகளில் மிகவும் இளையேனாகிய என்னைத் தலைமை தாங்கப் பணித்தமை சிறி யேன்கண் இச் சங்கத்தினர் கொண்டுள்ள பேரன்பின் பெருக்கி னையே காட்டுவதாகும்.

அன்பரீர்! இத் தமிழ்ச் சங்கத்தின் முதற் காரணமாக நின்ற சென்னை மாகாணத் தமிழர் மகாநாட்டின் முதலாம் ஆண்டு விழாவில் நந்தமிழ் மொழியிலும் அரசியல் மொழியாம் ஆங்கிலத்திலும் சட்டப் புலமையிலும் நிறைந்த அறிவு, ஆற்றல், வண்மை, வாய்மை, எடுத்துக் கொண்ட காரியத்தைத் திறமையாக முடித்தல், பக்தி முதலிய உயர்ந்த குணங்களிலும் செயல்களிலும் சிறப்புற்று விளங்குவாரும் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவரும், செந்தமிழ்ப் புரவலரும், ஆகிய இராவ்சாகிப் திரு த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் தலைமையுரையினை அன்புடன் கேட்டு மகிழ்ந்தீர்கள். இச்சங்க ஆண்டு விழாவில் ஆண்டிலும் அறிவிலும் இளையேனாகிய யான், தலைமை தாங்கி என்ன பேருரையை நிகழ்த்தப் போகின்றேன்? ஏதோ, தலைவர் என்பார்க்கு உரிய கடமையின்படி, எனக்குத் தோன்றும் சிலவற்றைக் கூறுகின்றேன்.

அன்பர்களே! இப்பெருமையை எனக்கு அளித்த பெரியா ராகிய உங்களுக்கு என் என்றும் மறவாத நன்றியறிதலையும் வந்த னத்தையும் தெரிவித்துக் கொண்டு மேற்செல்லுகின்றேன்.

**மெய்யன்பர்களே!** மக்கள் முன்னேற்றத்திற்கு உரிய முதன்மையான காரணம், மொழியின் முன்னேற்றமே என்பது உலகத்தார் கண்டறிந்த உண்மையாகும். மேனுடுகளும் ஜப்பானும் முன்னேற்றமடைந்த காரணம் அந்நாட்டினர் தங்கள் தங்கள் மொழிகளை வளப்படுத்திக் கொண்டு, அவற்றின் பயிற்சியால் தாங்கள் முன்னேற்றமடைந்ததேயாகுமன்றே! எந்தமொழி, மக்கள் தொடங்கிய கால முதலாக அவர்கள் பேச்சு வழக்கிற்கு ஏற்றதாகிய தொன்மை பெற்றுளதோ, எது இடையருது என்றுமுள்ள **மொழியாக** வுள்ளதோ, எது சிறந்த இலக்கிய இலக்கணச் சிறப்பு வாய்ந்ததாக உள்ளதோ, எது பிறமொழியிலுள்ள எல்லாக்கலைகளையும் ஏற்றுக்கொள்ள இடம் தருவதாக உள்ளதோ, எது மக்கள் வாழ்வின் முடிந்த பயனுக உள்ள அறம் பொருள் இன்பம் வீடுகளைப் பெறச் சாதனமாக உள்ளதோ, எது தெய்வத்தன்மை வாய்ந்ததாக உள்ளதோ, அந்த மொழியே மொழிகட்கெல்லாம் முதன்மைபெறும் **உயர்தனிச் செம்மொழி** யாகும். இங்ஙனமாகிய சிறப்புக்களை யெல்லாம் ஒருங்கு கொண்டது நம் தெய்வச் செந்தமிழாகும் என்பது புனைந்துரைக்கும் புகழ்ச்சியுரையாகாது.

நமது தாய்மொழியாகிய தமிழ் மொழியில், **தொல்காப்பியம்** என்பது இப்பொழுதுள்ள இலக்கணங்களிலெல்லாம் மிகப்பழைய இலக்கணமாகும். இதுதோன்றி ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகள் ஆயின என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இந்தப் பழைய நூலாசிரியரே, தமக்குமுன் எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பிருந்த பழைய இலக்கண நூலாசிரியர்களைத் தமது நூலில் ஆங்காங்குக் குறிக்கின்றனர்; 'தோலென மொழிப **தொன்மொழிப் புலவர்**' என்றெல்லாம் கூறுகின்றனர். இதனுல் தமிழ் மொழியிலுள்ள இலக்கணங்களின் பழைமையை யாவரே எண்ணியறியவல்லார்! **அன்பர்களே!** சிறந்த இலக்கணங்கள், ஒரு மொழியில் தோன்ற வேண்டுமாயின், அம்மொழியில், அதற்குமுன் பல ஆண்டுகளாகவே, சிறந்த இலக்கியங்கள் இருந்திருக்க வேண்டும்.

'இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்பலின்' என்பர். அங்ஙனமே ஒரு மொழியில் சிறந்த இலக்கியம் தோன்றவேண்டின், அம்மொழி தோன்றி எத்தனையோ ஆண்டுகள் கடந்திருக்க வேண்டும். இவற்றை யெல்லாம் நோக்கின், நமது மொழி, படைப்புக்காலம் தொடங்கியே இருக்கும் ஒரு அநாதிமொழிஎன்பதற்குத்தடையென்ன? இவ்வளவு காலமாக மக்கள் வழக்கில் இருந்து வந்தும், நம் மொழி, இது காறும் ஒரு சிறு தளர்ச்சியும் உருது, கன்னித்தமிழாகவேயிருத்தலின், இது, இந்த உலகம் உள்ளளவும் அழியாது நிலவும் எனற்கும் தடையென்ன? இங்ஙனம் நமது தமிழ்மொழி நமது சிவபெருமானைப்போல என்றும் உளதாயிருத்தலினன்றே, இதனை, '**என்றுமுள தென்றமிழ்**' என்று கவிச்சக்ரவர்த்தி கூறுவாராயினர். இனி, நமது மொழியின் இலக்கணச் சிறப்பினை எடுத்துரைக்க யாவரால் இயலும்? பிறமொழிகளின் இலக்கண மெல்லாம் எழுத்து, சொல், யாப்பு,

அணி—என்றிவைகளுக்கு இலக்கணம் கூறிச்செல்லும் நம் தமிழ் மொழியோ, அவற்றோடு பொருளிலக்கணம் எனும் ஒன்றையும் சிறப்பாகப் பெற்றுளது. இலக்கண நூல்களின் பயன், சொல்லை மாத்திரமன்றி, மொழியை மாத்திரமன்றி, மக்களின் ஒழுகலாற்றினையும் வரையறுப்ப தென்பது, நம் தமிழ்மொழியாலேயே கண்டறியப்படுவது. மக்கள் ஒழுகலாற்றினை, அஃதாவது, வாழ்க்கை நெறியினை, அகம் என்றும் புறம் என்றும் வரையறுத்துக் கூறுவதே, தமிழ் இலக்கணத்திலுள்ள பொருளதிகாரமாகும். இலக்கணத்தின் முக்கியமான பயனே பொருளதிகாரத்தால் கூறப்பெறும் அகம் புறம் எனும் வாழ்க்கை நெறிகளை வரையறுப்பதே யாகும் என்பதனை, "எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே" என்று கூறும் இறையனாரகப் பொருளுரையால் அறியலாகும். இம்மட்டோ, மக்கள் வாழ்க்கையின் பயன், வீட்டுலகம் அடைதலேயாகலின், அதனையே வலியுறுத்திக் கூறுவதும் நம் தமிழ் இலக்கணமேயாகும். உள்ளத்து உறவு பூண்ட தலைவன் தலைவியென்பவர்கள், இல்லறம் நடத்தி, பின்பு நிலையாமையுணர்ந்து, உள்ளத் துறவும் பூண்டு, வீடு பெறும் நெறியையடைதல் வேண்டும் என்னும் உண்மை,

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் வற்புறுத்தப் பெறுதல் காண்க. இங்ஙனமாகிய இத்தொல்காப்பியத்திற்கு இணையாய் இலக்கண நூல் வேறு எம்மொழியில் உளது? இவ்வாறு பலவாய தமிழ் இலக்கண நூல்களின் பெருமையையெல்லாம் எடுத்துக்கூற என்னால் இயலாது. இங்குள்ள புலவர்கள் கூறல் வேண்டும். இயல், இசை, நாடக மாண்புகளை முற்ற ஆராய்ந்து இலக்கணங் கூறியதனால், 'முத்தமிழ்' என்ற சிறப்புப் பெயர் பெற்றது, நம் அரும்பெறல் அமிழ்தமாகிய தமிழேயன்றோ!

அன்பர்களே! இனி நம் தமிழ் மொழியிலுள்ள இலக்கியச் சிறப்புக்களை எடுத்துரைப்பின், அதுவே தனி விரிவுரையாகும். அவற்றையெல்லாம் எடுத்துரைக்க வல்லார் மேற்கூறியபடி இங்குள்ள புலவர்களேயாவார். சுருங்கக்கூறின், சங்ககாலத்து நல்லிசைப் புலவர்கள் அருளிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு முதலாய எண்ணரும் சங்க இலக்கியங்களும், விண்ணகம் போற்றும் கண்ணகியின் கற்புமாண்பை விரித்துக் கூறும் சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலாக உள்ள ஐம்பெரும் காப்பியங்களும், கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர், ஒட்டக்கூத்தர், சேக்கிழார் முதலியோர் பாடியருளிய தீந்தமிழ் நூல்களும் தமிழ் மக்களாகப் பிறந்தோர் ஒவ்வொருவரும் கற்றுக் கேட்டுப் பருகவேண்டிய மண்ணக அமிழ்தமல்லவா?

உலக மெங்கணும் சிறப்புற்று நிற்பது, திருவள்ளுவ ரியற்றிய தமிழ்மறை என்பது யாவர்தா னறியார்? இது நிகர்க்குஞ் செவ்விய நூலினை, வேறு எம்மொழி யாயினும் பெற்ற பெருமையுடைத் தாயிற்றோ? பொய்யில் பொருளைத் தன்னகங்கொண்டு பொலிவதனு லன்றோ, மேல் நாட்டிலுள்ளவர்களும், கீழ்நாட்டி லுள்ளவர்களும், தத்தம் மொழிகளில் இதனை மொழிபெயர்த்துக் கற்று இன்புறலா யினர். இத்திருக்குறள், இருபத்தெட்டு மொழிகளுக்குமேல் இது காறும் மொழிபெயர்க்கப்பட்டதுபோன்று, வேறு எம்மொழியிலுள்ள எந்நூலாவது மொழிபெயர்த்துக் கற்கப்படும் தகுதியுடையதாக விருக் கின்றதா? இந்நூலின் அருமையை அறிந்தன்றோ, டாக்டர் G. U. போப் முதலிய ஆங்கிலப் புலவர்கள், இதற்கிணையாகும் மெய்ந் நூலொன்றை, எம்மொழியினும் காண்பதரிது எனக்கூறிப் போற்றலா யினர். மேலும், இத்தமிழ் மறையினைத் தங்கள் வேதம்போலவே வைத்துப் போற்றுவாரு மாயினர். இந்நூல், தன்னைக் கற்பவர் மனத்தையும், கேட்பவர் செவியையும், பகர்வோர் வாயையும், இன் புறுத்துவதன்றித் தொடர்ந்து துன்புறுத்துகின்ற இருவினைகளும் இரிய ஈர்க்கும் அரிய மருந்து மாகுமென்று புலவர் பறைசாற்று கின்றனர். இவ்வரிய தமிழ் மறையைத் தமிழ் நாட்டிலுள்ள தமிழர் களில் எத்துணைப்பேர் படித்து இன்ப மெய்துகின்றனர்? அங்ஙனம் கற்று இன்புறாமை நம் நாட்டின் தவக்குறையே யன்றோ?

இத்தகைய தமிழ் இலக்கியங்களன்றோ, நம் முன்னோர் களாகிய சமயகுரவர்கள், தொண்டர்கள், புலவர்கள், மன்னர்கள், பொதுமக்கள் ஆகிய இவர்களது பத்திநெறி, புலமைத் திறமை, ஆட்சித் திறமை, வாழ்க்கை வரலாறு, நாடு, நகரச் சிறப்பு, வள் ளன்மை, வீரம் முதலாயவற்றை நாம் அறிந்து மகிழச் செய்வன. திருக்குறள், நாலடியார் முதலாகிய அறநூல் நீதி நூல்களா லன்றோ, நாம், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இவற்றின் இயல்பும், இவைகளைப் பெறும் நெறியும் அறிகின்றோம். இனி நமது மனத்தை உருக்கி எல்லாம் வல்ல இறைவன் திருவடியைச் சேர்ப்பிக்கும் தோத்திரங்களாகிய பக்தி நூல்கள், நம் தமிழ்மொழியில் இல்லாதன வேறு எங்குள்ளன? தேவாரம், திருவாசகம், திவ்யபிரபந்தம் முதலிய பத்திச் சுவைகள் மலிந்த தோத்திர நூல்கள்; அவற்றை ஓதும் மக்களை மட்டுமா உள்ளங் கனிவிக்கின்றன? அவற்றைக் கேட் டருளும் மூர்த்திகளையும் உருகச் செய்து ஆட்டுவித்தன அல்லவா?

> தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
> யுண்டபாலனை யழைத்தது மென்புபெண் ணுருவாக்
> கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
> தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

என வரும் இவ்வரிய பாசுரத்தினுல், சமயகுரவர்கள் மூவரும், தாம் அருளிய தேவாரத் தீந்தமிழ்ப் பதிகங்களினுல், தமிழ்மொழி முத் தொழின்மையினையும் நடாத்தும் ஆற்றலுள்ள தென்பதை மெய்ப்பிக்

கின்றனர் என அறிகின்றோம் அல்லவா? நம் நாட்டில் வழங்கும் மொழிகளில், வேறு எம்மொழி, எல்லாம் வல்ல இறைவனை மேற் கூறியபடி தூதுபோகத் தூண்டியது? அங்ஙன மெல்லாம் செய்தது நம் பைந்தமிழன்றோ! இங்ஙனம் இறைவனையும் ஆட்டிவைக்கும் இறைமையினால் தலைசிறந்து நின்றது நமது உயர்தனிச் செம்மொழி யன்றோ! இன்னும் நீர்வற்றிய குளத்தில் நீரையும், அதன்பால் முன்னிருந்த முதலையையும், அம்முதலை வயிற்றிலிருந்து உரிய வயதுவரை வளர்ந்த பிள்ளையையும் அழைப்பித்துத் தந்தது நம் தீந் தமிழன்றோ! சிவநேசச் செல்வராகிய வணிகர் பெருமானார் சேமித்து வைத்த என்பினை, "மட்டிட்ட புன்னையங்கானல்" என்ற இன் னிசைத் தீந்தமிழன்றோ பெண்ணுருவாக்கியது! ஒரு நாவால் உரை செயற்கரிய உயர்வினைப் பெற்ற திருநாவுக்கரச ரோதிய "பண்ணி னேர் மொழியாளுமை பங்கரோ" என்ற பண்ணிசைப் பதிகமன்றோ, கண்பெறு பயனையடையப் பண்புடைக் கதவைத் திறக்கப்பண்ணி யது! மணிவாசகனார் அருளிய திருவாசகம், கோவையார் இவைகள், தீந்தமிழின் இனிமையைத் தெரிக்கும் தெய்வ நன்மொழிக ளென் பதை யாவரறியார்? மேல்நாடுகளில் வானசாத்திர விற்பன்னர்கள் எழுதிய பல பெரிய நூல்களிலுள்ள தத்துவங்கள், திருவாசகத்தில் திருவண்டப் பகுதியென்ற பாசுரத்தின் மூலமாக அறியக்கிடக் கின்றன வன்றோ!

தொல்காப்பியர் "மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும்" என்று கூறியவாறு, நம் தமிழ் மொழியில், மந்திர நூல்களும் பிறவும் இருந் தனவே! இனி, இங்ஙனமாகிய சிறந்த நூல்களைத் தோற்றுவித்த நல்லிசைப் புலவர்களோ எண்ணிறந்தவர்கள் ஆவர். திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமரவேளும் முதலாய தெய்வங்களே, புலவர்களாகிச் சங்கம் வீற்றிருந்த சிறப்புடைய தன்றோ நம் தமிழ் மொழி! பண்டைக்காலந் தொட்டு இத் தமிழ் நாட்டை யாண்டு வந்த மூவேந்தரும், குறுநில மன்னரும், வள்ளல் களும், பிறரும் புலவரைப் போற்றித் தமிழை வளர்த்து வந்தார்கள். அதனால், கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகம், ஔவை முதலிய தமிழ்ப் புலவர்கள் தோன்றிக் கம்ப ராமாயணம் முதலிய அரிய நூல்களையும் தனிச் செய்யுட்களையும் இயற்றித் தமிழிற்குத் தொண்டு செய்த வரலாறுகள் அளவிடற்பாலன வாமா? இதுகாறும் கூறியவற்றால் பண்டைத் தமிழர்களாலும், தமிழ்ப் புலவர்களாலும், அவர்கள் இயற்றிய நூல்களினாலும் தமிழின் பல்வகைப் பெருமையையும் அதனால் தமிழ்நாட்டின் உயர்வையும் ஒருவாறு அறிந்தோம்.

அன்பர்காள்! பண்டைக்காலத்தே யிருந்த நம் தாய் மொழி யின் உயர்தரக் கல்வியின் பெருமையினைப் பாருங்கள். அக்காலத்தே இக்காலத்துள்ள பள்ளிக்கூடங்கள் (Schools) கல்லூரிகள் (Colleges) முதலியன இருந்தனவாகக் காணமுடியவில்லை. ஆசிரிய மாணவ பரம்பரையாகவும், ஏட்டுச் சுவடிகள் வாயிலாகவும் பயிலப்பட்டு

வந்ததாகவே அறியப்படுகின்றது. இக்காலத்தோ பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், வகுப்புகள், பரீட்சைகள் முதலாய நெறிகளுடன் எளிதிற் கிடைக்கும் புத்தகங்கள் வாயிலாக நிகழும் கல்வி வசதிகள் மிகப்பலவாகுமே! "பொருள் நனி கொடுப்போன்" "வழிபடுவோன்" என்று இன்னவரேயன்றி, எல்லோர்க்கு மிப்போது உண்டிச்சாலை முதலிய வமைத்தும் கல்வி கற்பிக்கப்படுகின்றதே. என்றாலும், பண்டைக் காலத்தேபோல் பற்பல சிறந்த புலவர்கள் இப்போது தோன்றாமைக்குக் காரணம் என்ன?

பண்டைக் காலத்தே, ஆசிரியரும் அவரைச் சார்ந்த சில மாணவருமாகப் பயிலப்பட்டுவரினும், அத்தகைய பயிற்சி, ஊர் ஊராக, நாடு நாடாக, எங்கெங்கும் பரவியிருந்தது. சிறந்த ஆசிரியர்களில்லாத ஊரும், அவர்பாற் கல்வி பயிலாத மாணவரும், கல்வி பயிலாத காலமும் இருந்தில. இப்போதோ உயர்தரக் கல்லூரிகள் இருக்குமிடங்களோ, மிகச் சில. இச் சென்னை மாகாணத்திற்கே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், தஞ்சை மாநாட்டாண்மைக் கழகத்தைச் சார்ந்த திருவையாற்று அரசர் கல்லூரியிலுமே, தனித் தமிழ் வித்துவான் உயர்தரக் கல்விகள் பயிலப் பெறுகின்றன. தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவரது பெரு முயற்சியால், அச்சங்கத்தே அண்மையில் ஒரு தனித் தமிழ் வித்துவான் கல்லூரி தொடங்கப்படுமெனவும், தமிழ் மொழியும் சைவ உலகமும் செய்த தவப்பயனாக அவதரித்திருக்கும் திருப்பாதிரிப்புலியூர், ஸ்ரீ ஞானியார் மடாலயத் தலைவர்களாகிய சுவாமிகளது நன் முயற்சியால், அங்கு ஒரு தனித்தமிழ் வித்துவான் வகுப்புக் கல்லூரி தொடங்கப் பெறுமெனவும் அறிந்து மகிழ்கின்றேன்.

தனித்தமிழ் வித்வான் பயிற்சி பரவுவதற்கு ஒரு முக்கியமான காரணமாக விருப்பது மற்றொன்றாகும். அது, திருப்பனந்தாள் மடாதிபதிகளாகிய ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் தனித்தமிழ் வித்துவான் பரீட்சையில் முதன்மையில் தேர்ச்சியுற்றவர்கட்கு ஆயிர ரூபா பரிசு ஏற்படுத்தியிருப்பதாகும். தமிழ்த்தாயின் புதல்வர்களில் நம் சுவாமிகள் தலைசிறந்தவர்களன்றோ!

இங்ஙனம் இம்மாகாணம் முழுவதற்கும் இரண்டொரு கல்லூரிகள் போதியனவாகுமா? பொருளுடையோ ரெல்லாரும் ஆங்கிலக் கல்வியின் ஆசைமேலீட்டால், தம் மக்களை ஆங்கிலக் கல்லூரிகட்கு அனுப்பி விடுதலின், பொருளில்லாதவரே, பெரும்பாலும் தனித் தமிழ்ப் பயிற்சியினையடைய விரும்புகின்றனர். எனவே, இத்தகைய பிள்ளைகட்கு உணவு உறையுள் முதலிய வசதிகள் செய்து தந்து, அறச்சாலைகள் வைத்து நடத்துதல் வேண்டியதாகின்றது. தஞ்சை நாட்டாண்மைக் கழகத்து ஆதரவில் திருவையாற்றில் நடக்கும் அரசர் கல்லூரியில் வடமொழி, தமிழ்மொழி ஆகிய இரு மொழிகளும் பயிற்றப் பெறுகின்றன. ஆசிரியர்களூதியம் உணவுச் செலவுகட்கெல்லாமாக, ஆண்டொன்றுக்கு இலட்சக்கணக்கான

ரூபா வேண்டப்பெறுகின்றது. இத்தகைய பெருஞ் செலவுகளை ஏற்று நடாத்துமிடம் இவ்வொன் றிரண்டுதானு மில்லையாயின், புலமைபற்றிய தனித் தமிழ்க் கல்லூரிகளோ, அவற்றிற் பயில்வாரோ இல்லையன்றே. இங்ஙனம் தனித் தமிழ்க் கல்லூரிகள் வைத்து நடாத்துவது, எல்லோருக்கு மியலாததாயினும், அரசாங்கத்தினர், மாநாட்டாண்மைக் கழகத்தினர், சைவ வைணவ மடாலயத் தலைவர்கள், மிக்க வருமானமுள்ள கோயில்களின் தருமகருத்தாக் கள், மிக்க செல்வவளம் பொருந்திய சிற்றரசர்கள், பெருஞ் செல்வர் என்று இன்னவர்கள் ஆங்காங்கு வைத்து நடாத்துதல் அரிய செயலாகுமா? கல்லூரியே வைத்து நடத்துவது இயலாததாயினும், இயன்ற அளவு மாணவர்கட்கு உணவு முதலிய வசதிகளளித்து, கல்லூரிகளிருக்குமிடங்களுக் கனுப்பியாவது படிப்பிக்கலாமன்றே? தஞ்சைமாநாட்டாண்மைக் கழகத்தினர், பிறர் இங்ஙனம் உதவி தந்து அனுப்பப்பெறும் மாணவர்க ளெல்லோரையும் ஏற்றுக் கொள்ளச் சித்தமாகவுள்ளார்கள். இவர்கள் உரத்தநாடு, இராசா மடம், நீடாமங்கலம் முதலிய விடங்களிலும், ஆரம்ப நடுத்தர உயர்தர ஆங்கிலப் பள்ளிக்கூடங்களை உணவு முதலிய வசதிகள் தரும் அறச்சாலைகளுடன் அமைத்து நடாத்திவருகின்றனர். ஆத லின், இன்னு மதிகமாகத் தனித்தமிழ் மாணவர்களை ஏற்க இயலாத வராகின்றனர். இங்ஙனம் பேரறங்கள் செய்வதற்கு உரிய பெருஞ் செல்வங்களைத் தருமத்திற்காக வைத்துப் புகழுடம்பு எய்திய தஞ்சை மன்னர் சரபோஜி மகாராஜாவுக்கு இத் தமிழுலகம் எத் துணைக் கடமைப்பட்டுளது! தமிழ்த்தாயின் தவப்புதல்வர் இத் தமிழ் மன்னரேயன்றே!

இனி, தனித் தமிழ் வித்துவான்கள் என வருவோரும், இன் னும் சின்னாளுள், B. A. முதலிய பட்டதாரிகளைப்போல, வேலை யில்லாக் குறைபாட்டினை எய்துவது திண்ணமாகும். இக்காலத்தே 'படிப்பும் படிப்பாளர்தம் பிழைப்பும்' என்பதே, பல அறிஞர்களும் கூடித் தீர்க்கவேண்டிய முக்கியமான ஆராய்ச்சியாக விருக்கின்றது. எண்ணிறந்த தொழில்களும், தொழிற்சாலைகளும் நிரம்பிய மேல் நாடுகளிலேயே, வேலையில்லாக் குறைகள் மிகவும் காணப்படுமாயின், அரசாங்க வேலைபோன்ற இரண்டொரு வேலைகளையன்றி யறியாத நம் நாட்டு மக்கட்கு வேலையகப்படாக் குறை மேருமலையினும் பெரிதாக வுள்ளதாகுமன்றே? அதிலும் அரசாங்கத்துப் பல்வகை வேலைகளுங் கிட்டாத தனித்தமிழ் வித்துவான்கள் நிலையினைக் கூறவும் வேண்டுமோ? பண்டைக் காலத்தேயுள்ள கல்வியாளர்கள் "யாதானு நாடாமால் ஊராமால்" என்னுஞ் செருக்கொடு வாழ்க்கை நடாத்திவரும் ஏதோ ஒரு தொழிற்றிறம் வல்லராயிருந்தனர். இக் காலத்தே காணப்பெறும் புலவர், வித்துவான், பண்டிதர் என்ற புலமைப் பட்டங்களைத் தரித்த பெயர்களின் மாறாக, பண்டைக் காலத்தே, கூலவாணிகன் சாத்தனார், மருத்துவன் தாமோதரனார், அறுவை வாணிகன் என்றின்னோரன்ன தொழிற்றிறம் வல்ல பட்டங் களைக்கொண்ட பெயர்களே பெரும்பாலும் பண்டைப் புலவர்கள்

பெயர்களாகக் காணப்படுகின்றனவன்றே! எனவே, அக்காலத்துக் கல்வியாளர்கள், இக்காலத்தேபோற் குறுகிய நெறிகளுட் புகுந்து, இடர்ப்படாது தத்தமக் கியன்ற தொழிற் றிறங்களையெல்லாம் நாடி, இனிது வாழ்க்கை நடாத்திவந்தனரென்பது அறியப்படுகின்றது. இதனால் நம் நாட்டில், கலைக் கல்விகளும், தொழிற் கல்விகளும் ஒருங்கு கற்பிக்கவேண்டும் இன்றியமையாமையை உணர்ந்து நம் தமிழன்பர்கள் ஆங்காங்குச் செய்வதற்குரிய வேறு வேறு தொழில் முறைக் கல்விகளைப் புகட்டி வருவாராயின், கல்வி பயின்று வெளியேறும் மாணவர்கள் பிழைப்பிற்கு என்செய்வோமெனுங் கவலையின்றி வெளிவருவரென்பது திண்ணமன்றே! மேலும், அரசாங்கத்து வேலைகளுள், பத்திரப்பதிவு (Registration), பிரதி எழுதல் (Copyist) முதலாய பல அரசியல் வேலைகளைத் தமிழ்ப்புலம் வாய்ந்தவர்கள் திறம்படச் செய்யக்கூடுமாகையால், அத்தகைய வேலைகளெல்லாம் வித்துவான் முதலிய பட்டதாரிகளுக்கும் எய்துமாறு தமிழ் மக்கள் முயலவேண்டும். பள்ளிக்கூடங்களிலும் இவர்கள் தமிழ் மாத்திரமன்றி மற்றைச் சரித்திரம் முதலான தமிழ்ப் பாடங்களையும் கற்பிக்கும் ஆசிரியர்களாகவும் வரத் தமிழ் மக்கள் முயல வேண்டும்.

அன்பர்களே! இனி, பொதுவாக நம் நாட்டுக் கல்விப் பயிற்சியினையும் சிறிது ஆராய்வாம்.

கலைப் பயிற்சியானது எந்த நாட்டிலும் அதன் அதன் தாய் மொழி வழியாகவே நடைபெறுகின்றது. நம் நாட்டிலோ, பெரும்பாலும் ஆங்கில மொழியாலே பயிற்றப்பெறுகின்றது. இதனால், காலம் பெரிதும் வீணே கழிவதுமட்டுமன்றி, தாய்மொழிப் பயிற்சியும் குறைந்துபோகின்றது. இங்ஙனம் பிற மொழியாற் கலைப் பயிற்சி செய்யப்பெறுவதற்கு இரு காரணங்கள் உள்ளன. ஒன்று, கலைப் பயிற்சிக்கு உரிய நூல்கள் இல்லாமை. இரண்டு, அவற்றைத் தாய்மொழி வழியாகப் பயிற்றும் தாய்மொழி வல்லவர் இல்லாமை. இவ்விரு குறைகளும் நீங்கினாலன்றிக் கலைகளைத் தாய்மொழி வழியாகப் பயிற்றவேண்டுமெனக் கட்டாயம் செய்வதில் பயனின்று என்பது அனுபவமுடையார் அறிவார். ஆங்கிலம் ஒழிந்த பிற கலைகளெல்லாம் தாய்மொழி வழியாகப் பயிற்றுவது இயலாத காரியம் அன்று. இக்குறைகளுள் முதலில் நீக்கவேண்டுவது தாய்மொழியில் கலைகளையெல்லாம் ஆக்கவேண்டுவதே. இக்குறை தீர்ந்தால், தாய்மொழி வழியாகப் போதிக்கவல்ல ஆசிரியரில்லாக்குறை எளிதில் நீங்கிவிடும். இம் முதற்குறையினை நீக்குவதுபற்றி, நம் தமிழ்ச் சங்கம் வேண்டும் காரியங்களையெல்லாம் செய்து வருதலின், இது விரைவில் நீங்கும் என்பது திண்ணம். இங்ஙனம் தாய்மொழியிற் கலைகளை மொழிபெயர்த்துக் கற்பியாது, இப்போது உள்ள நிலையில் ஏனைய மொழிகளாற் கற்பிப்பதாயின் அது, தமிழ் மக்கள் எல்லோரும் ஒருங்கு கலைப்பயிற்சி அடையக்கூடியதாக இராது. அன்பர்களே! எந்த நாடு, தன் மக்கட்குரிய பொருள்களைத் தானே ஈட்

டித் தரவல்லதோ, அதுவே நாடு எனப்படுமென்றும், எந்த நாடு, தன் மக்கட்குரிய பொருள்களில் ஏதொன்றையும் பெறப் பிற நாட்டினை எதிர்நோக்குகின்றதோ, அது நாடு எனக் கூறலாகாது எனவும் கண்ட நமது தெய்வப் புலவர் திருவள்ளுவர்,

> "நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
> நாட வளந்தரு நாடு."

எனத் திருவாய் மலர்ந்திருக்கின்றனரன்றோ! இங்ஙனம் ஒரு நாட்டின் தேவையாகிய எல்லாப் பொருள்களும், அதுவே படைத்துக் கொள்வதாயின், இக்காலத்து, அந்நாடு, உலகிலுள்ள மற்றைத் தேசங்களிலெல்லாம் இயற்றப்பெறும் பொருள்களுள், தனக்கு இன்றியமையாதவற்றையெல்லாம், தானே தேடிக்கொள்ளல் வேண்டாமா? அங்ஙனம் தேடுவதாயின், அவ்வப் பொருள்களை ஆக்குந் தொழிற்சாலைகள் வேண்டாமா? தொழிற்சாலைகள் வேண்டுமாயின், அவ்வவற்றிற்குரிய தொழில் அறிவு வேண்டாமா? அவ்வறிவை யாவரும் எளிதிற் பெறவேண்டின், அக்கலைகளையெல்லாம் தாய் மொழியில் மொழிபெயர்க்க வேண்டாமா? இங்ஙனம் தொழிற் கல்விக்குரிய நூல்கள், நந் தாய்மொழியில் எத்துணையுள்ளன?

புதுவதாக வேண்டப்படும் எவ்வகை நூலினையும், வேண்டிய அளவு இயற்றிக் கொள்ளத் தொல்காப்பியமே வழி காட்டுகின்றது. தொல்காப்பியத்திற் கூறப்படும் நூல் வகைகளுள் "விருந்து" என்பதொன்றாகும். "விருந்து" என்பதற்குப் புது வகையான நூல்கள் என்பது பொருளாகும். இங்ஙனம் இக் காலத்திற்கு வேண்டிய நூல்களை இயற்றுவது, நமது மிக இன்றியமையாத முதற் கடமையாகும். இத்தகைய நூல்களை ஆக்குவதற்கு நமது தமிழ்ச் சங்கம் செய்து வரும் முயற்சி மிகவும் பாராட்டுவதற் குரியதாகும். வேற்றுக்கலைகளைத் தமிழில் மொழிபெயர்க்குமாறு, இந்தச் சங்கம் செய்து வரும் தொண்டே, தமிழ்த் தாய்க்குக் காலத்தினுற் செய்யும் பெருந்தொண்டாகும். இத்தகைய நூல்களை ஆக்குவதற்கு இன்றியமையாது வேண்டும் சொற்கள் நந்தமிழிலேயே ஆக்கிக் கொள்ளல் வேண்டும். மிக இன்றியமையாத விடத்து வேற்றுச்சொற்களையும் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால், அவைகளைத் தமிழ் இலக்கண வரம்பிற்கு உட்பட்டு ஆக்கல்வேண்டும், இதனை நம் தமிழ்ச் சங்கம் உணர்ந்து திறம்படச் செய்து வருவது பாராட்டத் தக்கதாகும். இங்ஙனம் ஆக்கப்பெறும் புதுக்கலைகளால் மொழிவிரிந்து, தொழிலறிவு விரிந்து, தொழிற்றுறைகள் விரிந்து நாட்டின் வளம் விரிந்தாலன்றி, நம் நாடு ஏனைய நாடுகளின் பெருமைகளை எய்தல் இயலாது. இதற்குரிய முயற்சிகளைச் செய்யாமல், நம் நாடு நகரங்களைப் புராண முறைப்படி பாராட்டிக் கொண்டிருப்பதிலும், நமது தாய்மொழியின் பண்டைப் பெருமையினைப் பாராட்டிக் கொண்டிருப்பதிலும், பெரும்பயன் எய்திடாது. சுருங்கக்கூறின், நமது நாட்டுக் கல்விப் பயிற்சியை, ஆங்கிலம் ஒழிந்த கலைப்பயிற்சிகளை யெல்லாம் தாய்மொழி வழியாக நடைபெறச் செய்யவும், தாய்மொழியில் புலமைப் பயிற்சியோடு பன்

ளுட்டுக் கலைப்பயிற்சியும், தொழிற் கல்வியும் சேர்த்துப் பயில்விக்கச் செய்யவும், நாம் முற்படவேண்டும். (தஞ்சை மாநாட்டாண்மைக் கழகத்தினர் இருபதினுயிர ரூபா செலவில் மாணவர்கட்கு இயந்திர அறிவைப் புகட்டும் கலைப் பயிற்சியையும் சேர்த்துப் பயில்விக்க வேண்டும்ஏற்பாடுகளைச் செய்துவருகின்றனர்). அரசியலாரும் மாநாட்டாண்மைக் கழகத்தாரும் இத்தகைய காரியங்களில் தத்தமக் கியன்றவைகளைச் செய்ய முற்படுவார்களாயின், நம்நாடு விரைந்து முன்னேறும் என்பதிற் றடை என்னை? இனி, தாய்நாட்டில் அன்பும், தாய்மொழியிற் பற்றும், சுதந்தர உணர்ச்சியும் இளைஞர்கள் உள்ளத்தே நிலை நாட்டத்தக்க நூல்கள் எண்ணிறந்தன பிற நாடுகளில் கல்விப் பயிற்சியில் விரவியுள்ளன. அவற்றால் அவ்வத் தேயங்கள் அடைந்துள்ள நன்மைகளை நாமும் அடையவேண்டின் அத்தகைய நூல்கள் நமது நாட்டுக் கல்விப் பயிற்சியில் கலந்திடல் வேண்டும்.

இனி, மேனுட்டார், தமது தாய்மொழி வளங்குறித்துச் செய்வனவற்றைப் பார்ப்போம். தமது மொழியுள், உலகில் உள்ள எல்லாக்கலைகளையும், மொழி பெயர்த்து அமைத்துக் கொள்ளுகின்றனர். இலக்கணஇலக்கியங்கள் வல்லவர்களேயன்றி, எல்லோரும் அறியுமாறு, அவைகளை எளிய வசன நடைகளாலே, ஆக்கிக்கொள்ளுகின்றனர். அந்நூல்களை, மாணவர்களே யன்றி, வயதானவர்களும் அறியுமாறு, புத்தகாலயங்கள் ஆங்காங்கு நிறுவுகின்றனர். ஊர்தோறும் ஊர்தோறும் அப்புத்தக நிலையங்களை எடுத்துச்சென்று, வலிதில் வீடு வீடாகச் சேர்த்துப், பயிலச்செய்கின்றனர். புத்தகாலயங்களில் யாரும் எந்தநேரத்திலும் சென்று எந்த நூலினையும் எளிதில் எடுத்துப் பயிலலாம். ஐயம் வரும் இடங்களை விளக்கிச்சொல்லும் சிறந்த ஆசிரியர்கள் நூல் நிலையங்களில் எந்தவிடத்திலும் காத்திருப்பர். நிலையங்களிற் படிப்பதன்றி, வீடுகளுக்கும் எடுத்துச் செல்லலாம்; படித்து முடித்துப் பின் கொடுக்கலாம். சிறந்த நூல்களை அரசாங்கத்தினர் பணவுதவி தந்து எழுதச் செய்வர். தாமே செலவு செய்து அச்சிடுவோர்க்கும், பணவுதவி செய்து பற்பல பிரதிகளைப் பெற்றுக் கல்லூரி கலாசாலைகளுக்கு வாங்கியளிப்பர்: பொது மக்களுட் செல்வராகவுள்ளார் யாவரும், தத்தம் இல்லங்களில் அரிய நூல்களின் நிலையங்கள் அமைப்பர். இங்ஙனமாக மேனுட்டார், தம் தாய் மொழிப் பயிற்சி பற்றிச்செய்யும் தொண்டுகள் மிகப்பலவாகும். உலகிலுள்ள எல்லா மொழிகளின் அரிய நூல்களும், மேனுட்டார் பெரு நூல்நிலையங்களுட் காணலாகும். நமது தாய்மொழியிலுள்ள பழைய எட்டுச் சுவடிகள் பலவும், 'லண்டன்' 'பாரிஸ்' முதலாகிய பெரு நகரங்களிலுள்ள பெரும் நூல்நிலையங்களுள் இன்றுங் காணலாகும். மேனுட்டார் செயல்கள் இவ்வாறாக, நாம், நமது தாய்மொழி வளம்பற்றி என்ன செய்கின்றோம்? இன்னும் நமது தாய்மொழியில் வெளிவராத எட்டுச்சுவடிகள், எத்தனையோ பலவுள்ளன. மிகவும் முயன்று ஏட்டுச்சுவடிகளைத்தேடி அச்சிடும் உபகாரிகட்கு உதவிசெய்வார் பலருளரேல், அத்தகைய அரிய சுவடிகளெல்லாம்

வெளிவந்து விடுமெனல் திண்ணம். அரசியலாரும் மாநாட்டாண்மைக் கழகத்தினரும், பண்டை எட்டுச்சுவடிகள் பல இறந்து போகாமல் காப்பாற்றும் கடமையினை இயன்றவளவு மேற்கொள்ளல் வேண்டும். தமிழ்ச் சங்கங்களும், தமிழகத்துச் சமய மடங்களும், தமிழ்ச் செல்வர்களும், இத்தகைய தொண்டுகளில் ஈடுபடுதல் வேண்டும். மேனாட்டாரைப் போலவே கற்றோரேயன்றி மற்றோரும் படித்துணரும்படி வசன நடையில் கலைகள் எழுதி வெளியிடல் வேண்டும். தமிழ்த் தொண்டே கருதி நடக்கும் அரிய தமிழ்ப் பத்திரிகைகளை யெல்லாம் யாவரும் ஆதரித்தல் வேண்டும்.

அன்பர்காள்! இனி இத்தகைய தொண்டுகள் பலவற்றையும் செய்யவே முன்வந்து, செய்துவரும் இத்தமிழ்ச் சங்கத்திற்கு, இத்தொண்டுகளில் இனி ஈடுபட விருக்கும் இளையனாகிய யான், இவைகளை யெல்லாம் கூறுவது பயனில்லாததாகும். சிறியேன் இனித் தங்கள் தொண்டுகளில் கலந்துகொண்டு, என்னால் இயன்றனவெல்லாம் செய்வதே என் கடமையாகும். இத்தொண்டுகளில் முன்னின்று உழைக்கும் பெரியாராகிய இச்சங்கத் தலைவர் திருவாளர் K. சுப்பிரமணிய பிள்ளை M.A.. M.L., அவர்கட்கும் அதன் அங்கத்தினர்களுக்கும் தமிழ் உலகமே மிகவும் கடமைப் பட்டுள்ளது. இதற்குமுன் என்றும் யாரும் செய்தறியாத தமிழ்த் தொண்டுகளைச் செய்து முடித்திருக்கும் பெரியராகிய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் முதலிய பலரையும் நாம் இப்போது நினைந்து நன்றி பாராட்டக் கடமை பூண்டுளோம். பல அரிய தமிழ்த் தொண்டுகளைச் செய்து வரும் தமிழ்ப் பெருந்தொண்டர்களாகிய தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரே இது பொழுது தமிழ்த் தாய்க்குப் புத்துயிரளித்து வருவாராவர். இக்கழகம் நீடு வாழ்க. இக்கழகத்தினருக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். பெரியோர்களே! பலவிடங்களிலுமிருந்தும் தத்தம் அரிய வேலைகளை விட்டு, இங்குவந்து கூடியிருக்கும் உங்கள் வாய்மொழிகளைக் கேட்கவும், அரிய பெரிய முடிபுகளைத் தெரிந்து கொள்ளவும், உரியதாகிய இந்தக் காலத்தை, என் எளிய உரையினை வளர்த்துப் பயனில்லாமற் கழிப்பது பொருந்தாதென எண்ணி, இம்மட்டுங்கூறி நிறுத்துகின்றேன். அன்பரீர்! இதுகாறும் பொறுமையுடனிருந்து, என் எளிய உரைகளைக் கேட்டிருந்த உங்கட்கெல்லாம் பன்முறையும் எனது வணக்கத்தினைச் செலுத்தி, எல்லாம் வல்ல இறைவனும் இறைவியுமாகிய நெல்லையப்பர் காந்திமதியம்மையின் திருவடிகளை வணங்குகின்றேன்.

---

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## "வெண்பாவில் புகழேந்தி"*

[வேலணையூர் பண்டிதர். திரு. கா. போ. இரத்தினம் அவர்கள்]

அருந்தமிழ்த் தாயின் பெருந்தவப் புதல்வர்களே!

நம் தாய் மொழியாம் தமிழ்மொழி இற்றைஞான்று இறந்தொழியும் நிலையிலுள்ள, ஆரியம், இலத்தீன் முதலிய தொன்மொழிகள் தோன்றிய காலத்துத் தோன்றியதென்பதையும், இற்றைஞான்று புகழ்பெற்றிலங்கும் ஆங்கிலம், பிரான்சு முதலிய புது மொழிகளிலும் பார்க்கச் சிறந்தமைந்த நல்லிலக்கண வரம்பையுடைய தென்பதையும், கடவுளரும் காதல்கொள்ளும் இனிமையாம் குணத்திசைந்து தட்பமும் தகவும் ஒட்பமும் ஒருங்கமையப்பெற்ற தென்பதையும், பல்லுயிரும், பலவுலகும் படைத்து அளித்து அழிக்கும் எல்லையறு பரம்பொருள்போல் முன்னைப் பழமொழிகட்கு முன்னைப் பழமொழியாய்ப் பின்னைப் புதுமொழிகட்கும் அப் பெற்றித்தாய் விளங்குகின்ற தென்பதையும், எம்மொழியகத்தும் காணக்கிடையாப் பொருளிலக்கணப் பாகுபாடு உடையதென்பதையும், பிறமொழிக் கலப்பின்றித் தனித்தியங்கும் தன்மையுடைய உயர் தனிச் செம்மொழி என்பதையும், குமரியொடு வடவிமயத்தொரு மொழி வைத்துலகாண்ட சேரலாதனால் இந்தியா முழுவதற்குமே இறைமொழியாக வழங்கப்பட்ட தென்பதையும், இன்னும் இன்னோரன்ன பல சிறப்பியல்களையும் நீங்கள் நன்கறிவீர்கள். ஆகையால் இவைபற்றி விரித்தல் வேண்டியதின்று.

இத்தகைய அமிழ்தினுமினிய நந்தமிழ்மொழி நச்சும் பெருமை முச்சங்கத்து ஆலவாயவிர்சடைக்கடவுள், அகத்தியர், முருகவேள், பெருந்தேவனார் முதலிய முத்தமிழ்த் துறையின் முற்றப்போகிய முதுபுலவர்களால் முற்காலத்தில் வளர்க்கப்பட்டது. (இச்சங்க வரலாறுகளை இறையனார் அகப்பொருளுரையிற் கண்டுகொள்க). நல்லிசைப் புலவர்கள் நல்குரவால் நலியாது வள்ளல்கள் உள்ளத்தால் உவந்தளித்த பொருள்பல பெற்றுத் தம் வாழ்க்கையினை நடத்தினர். அதனால், அவர்

---

*யாழ்ப்பாணக் கலாநிலையத்தில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.

கள் தம் ஆயுள் முழுவதையும் அருநூல்கள் அமைப்பதிலேயே கழித்தனர். நாளுக்குநாள் நயமுடை நன்னூல்கள் தோன்றின. இயல், இசை, நாடகம், என்னும் முத்தமிழ் நூல்கள் தோன்றின; மருத்துவ நூல்கள், சோதிட நூல்கள், பொருள் நூல்கள், வான நூல்கள், உலக புராணங்கள் முதலியன தோன்றின.

இவ்வாறு பெருகிய தமிழ்நாற்கடல் கொடுங் கடலாற் கொள்ளை கொள்ளப்பட்டது. முத்தமிழ் நூல்களும் பிறவும் அழிந்தொழிந்தன. பெருநாரை, பெருங்குருகு, இசைநுணுக்கம், இந்திரகாளியம் முதலியன, புகழுடம்பை நிறுத்திப் பூதவுடம்பைப் போக்கினர்போற் றம்பெயரை நிறுத்தித் தாமழிந்தன. இருந்தன சிலவும் எரியாலும், செல்லாலும், இன்னும் பிற ஏதுக்களாலும் அழிந்துகொண்டே வந்தன. இறுதியில், இப்பொழுது நமக்குக் கிடைத்திருப்பன இடைச்சங்க காலத்து இருந்த ஒல்காப்புலமைத் தொல்காப்பியரால் இயற்றப்பட்ட தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட பனையளவு காட்டும் படித்தாய்ச் சிற்றளவினவாகிய சொற்றொடர்களில் சிறந்தமைந்தனவாகிய பெரும் பொருள்கள் தோன்றத்திகழும் தொல்காப்பியமும், கடைச்சங்ககால நூல்களாகிய அன்பினைந்திணைக் களவினைக் கூறும் களவியல், கீழ்க்கணக்கு நூல்கள், அருங்காவியங்களாகிய பாரதம், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியனவுமே. இவற்றிலும் சிலவற்றில் சில பகுதிகள் இல்லாதிருத்தல் துயரத்திற் கிடமானதே. முன்னைய இரண்டும் இலக்கண நூல்கள். மேற்கணக்கு நூல்கள் ஐவகைப் பாக்களாலும் அகப்புறப் பொருட்டுறைகள் பற்றித் தொகுக்கப்பட்டவை. கீழ்க் கணக்குநூல்கள் அறம், பொருள், இன்பம், அடுக்கித்திறம்பட வெண்பாவால் யாக்கப்பட்டன. பின்னைய மூன்றனுள் பாரதம் வெண்பாவும் அகவலும், உரையும் விராய்த் திருந்திய செந்நாவுடையிருங்கலைப் புலவராய பெருந்தேவனாராலும், சிலப்பதிகாரம் அகவலால் அரசிளம் புலவராய இளங்கோவடிகளாலும், மணிமேகலை அகவலால் தண்டமிழ்ச் சாத்தனாராலும் இயற்றப்பட்டன. இவை அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையுங்கூறும் காப்பியங்களாம். இவற்றின் பின்தோன்றிய சிறந்த காவியங்களாகிய சிந்தாமணி, இராமாயணம், சூளாமணி, நைடதம் முதலியனவும், புராணங்களும், பிறவும் சங்ககாலத்தி லிலங்கிய வெண்பா அகவல் முதலியவற்றால் ஆக்கப்படாது இலங்காத விருத்த பேதங்களால் திருத்தமுற யாக்கப்பட்டன.

இவற்றையெல்லாம் நன்கு சீர்தூக்கி ஆராயின், விருத்தங்களால் காவியங்களைக் கவினுற இயற்றுவது இலகுவானதென்பதும், அகவலால் அழகுற அமைப்பது சிறிது கடினமானதென்பதும், வெண்பாவால் பண்புறப்பாடுவது அரிதானதென்பதும் தெற்றெனப்புலனும். இது, காவியக்கடலுள் புலவர் திலகராகிய புகழேந்திப்புலவர் இயற்றிய நளவெண்பா ஒன்றே முழுவதும் வெண்பாவினால் ஆக்கப்பட்டிருத்தலினாலும் விளங்கும் இவ்வருஞ் செயலைச் செய்தமையாற்றான்.

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர் சயங்கொண்டான்
விருத்தமென்னும்
ஒண்பாவில் உயர்கம்பன் கோவை உலா அந்தாதிக்கு
ஒட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள் வசைபா
டக்காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே."

என்னும் இன்னின்ன செய்யுள் செய்தற்கு இன்னாரின்னாரே சிறந்தார் என்று கூறும் இச்செய்யுள் புகழேந்திப் புலவரை வெண்பா இயற்றுவதில் சிறந்தாராக எடுத்துக் கூறிற்று என்னலும் சாலும். அறிஞர்களே! இஃதொன்றே புகழேந்திப் புலவர் வெண்பாவில் புகழ் ஏந்தி என்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்காதா?

இவர், கம்பர் ஒட்டக்கூத்தர் ஒளவையார் முதலிய சிறந்த புலமைமிக்க கலைவாணர்கள் இலங்கிய காலமாகிய பன்னிரண்டாம் நூற்றாண்டில் இருந்தவர். இக்காலத்தைக் கடைச்சங்க காலத்தின்பின் தமிழ் வளர்ச்சி ஓங்கிய காலங்களிற் றலைசிறந்ததெனலாம். செங்கற்பட்டை யடுத்துள்ள பொன்விளைந்த களத்தூரில் தொண்டைமண்டல வேளாளகுலத்திற் பிறந்தவர். களத்தூரில் வசித்திருந்த ஒரு வண்மைநிறைந்த வேளாளனது வயலினுள் நெற்கள் பொற்கதிரீன்றன—என்றும் அதனால் அவ்வூர் பொன்விளைந்தகளத்தூரென்று அழைக்கப்பட்டதென்றுங் கூறுவர். "சடைச்செந்நெல் பொன் விளைக்கும்" என்னும் புகழேந்தியார் கூற்றும் இக்கதையை வலியுறுத்துகின்றது.

நளவெண்பா ஏடுகள் சிலவற்றில் சிவபிரானுக்கும், சிலவற்றில் திருமாலுக்கும் உரிய காப்புச் செய்யுள்கள் காணப்படுதலினாலும், நூலினுள் சிவபிரானைக் குறித்து "வையத்தாருண்ணக் கடுவிடத்தை உண்ட ஒரு மூன்று கண்ணனைப் போன்றனளே" "பொடியாடி கொன்றதெல்லாம் பொய்"

"நெற்றித் தனிக்கண் நெருப்பைக் குளிர்விக்கும்" என்று மூன்றிடத்தும், திருமாலைக் குறித்து,

"செங்கண்மாலல்லனேல்," "மிக்கோனுலகளந்த மெய்யடியே சார்பாகப் புக்கோர் அருவினைபோற் போயிற்றே," "நாராயணாய நமவென் றவனடியிற் சேராரை வெய்துயரம் சேர்ந்தாற்போல்" "மையாழி யிற்றுயிலும் மாலனையான்" என்று நாலிடத்தும் கூறப்பட்டிருத்தலினாலும் இவர் சைவ சமயத்தினரா? வைணவ சமயத்தினரா? என்று ஒருதலை துணிதற்கு முடியாதிருக்கிறது. கர்ண பரம்பரைக் கதைகளாலும் பிறவற்றாலும் பலரிவரை வைணவ சமயத்தினரென்பர். கலி நளனைச் சேர்ந்தான் என்பதை "நாராயணாய நமவென் றவனடியிற் சேராரை வெய்துயரம் சேர்ந்தாற்போல்" சேர்ந்தான் என்றும், நளனது தேர்ப்பாகன் வடிவு நீங்கியது எனுமிடத்தில் "மிக்கோனுலகளந்த மெய்யடியே சார்பாகப் புக்கோர் அருவினைபோல்" நீங்கியது என்றும் புலவராற் கூறப்பட்டிருப்பன அவர் கூற்றை வலியுறுத்தும். இதனை அறிஞர்கள் ஆராய்ந்து உண்மையை எடுத்து உரைப்பார்களாக. இவருடைய கல்வி யறிவைக் கண்ட செண்பக மாறன் என்னும் பாண்டிய னிவரைத் தன்னுடைய ஆத்தான வித்துவானாக்கினன். வேறு கூறுவாருமுளர். அவனுடனிருந்த நாட்களில் அவன் மகளுக்குக் கல்வி கற்பித்து அவளைப் பண்டிதை ஆக்கினர். இங்ஙனம் இருக்கும் நாட்களில் பொன்னி நாடாளும் புரவலனாம் குலோத்துங்கனுக்குப் பெண் கேட்கும்படி அவன்றன் ஆசிரியரும் ஆத்தான வித்துவானுமாகிய ஒட்டக்கூத்தர், பாண்டியனிடம் வந்து பேசிக் கொண்டிருக்கையில், பாண்டியன் பரிகாசமாய்ச் "சோழன் பாண்டிய குலத்துப் பெண்ணைக் கொள்ளத்தக்க உயர்ச்சி உடையவனா? அவனுடைய சிறப்புக்கள் யாவை? சொல்லும்" என்று கேட்டான். உடனே, கூத்தர் சோழனுடைய குதிரை, நதி, மலை, குலம், வீரம், கொடி, நகர், தேசம் எனும் எட்டிற்கும் பாண்டியனுடைய குதிரை முதலிய எட்டும் ஒப்பாகா எனும் பொருளமைந்த,

"கோரத்துக் கொப்போ கனவட்டம் அம்மானே
கூறுவதும் காவிரிக்கு வையையே அம்மானே
ஆருக்கு வேம்புநிகர் ஆகுமோ அம்மானே
ஆதித்தனுக்கு நிகர் அம்புலியோ அம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ அம்மானே
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ அம்மானே
ஊருக்கு உறைந்தநிகர் கொற்கையோ அம்மானே
ஒக்குமோ சோணாட்டைப் பாண்டி நாடுஅம்மானே"

எனும் பாடலைக் கூறினர். இதைக் கேட்ட புகழேந்திப் புலவர் அதற்கு மாறாகப் பாண்டியனுடைய மலை, நகர், கொடி, குலம், ஆறு, மாலை, வீரம் என்பன சோழனுடைய மலை முதலிய ஏழினும் சிறந்தன என்பதைக் காரணங் காட்டி நிறுவிப் பாண்டியன்றன் பராக்கிரமம் பகரவரிது என்றும் பாடினர்.

“ ஒருமுனிவன் நேரியிலோ உரைதெளித்தது அம்மானே!
ஒப்பரிய திருவிளையாட்டு உறந்தையிலோ அம்மானே!
திருநெடுமால் அவதாரஞ் சிறுபுலியோ அம்மானே!
சிவன்முடியில் ஏறுவதும் செங்கதிரோ அம்மானே!
கரையெதிரல் காவிரியோ வையையோ அம்மானே!
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானே!
பரவை பணிந்ததும் சோழன் பதந்தனையோ அம்மானே!
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே அம்மானே.”

என்பதே அச் செய்யுளாகும். இச் செய்யுளிலிருந்தே புகழேந்தியரது விரிந்த அறிவையும் நுண்மாணுழை புலத்தை யும் அறிந்துகொள்ளலாம்.

பாடியவுடன் கூத்தர் பின்னும் தம் அரசனைப் புகழ வேண்டி “வென்றிவளன் விறல்வேந்தர் தம்பிரான்”, என்றும் “முதுகிக்கிடான் கவசம்—துன்றும்” என்று கூறி ஆலோசிக் கப் 'புகழேந்திப் புலவர் “வெறியார் தொடை கமழும் மீனவர்கோன் வைவேல், எறியான் புறங்கொடுக்கின்.” என்று தம் அரசனை வீரவேந்தனைக்கிப் பாடிமுடித்தார். இன்னணம் தாம் பாடியவற்றிலும் சிறந்த பாடல்களைப் பாடிய புகழேந்திப் புலவர்மீது கூத்தருக்குப் பொறாமை உண்டாயிற்று.

---

## தனித்தமிழும் கலப்புத்தமிழும்

[மறைமலையடிகள் மகனார் வே. மாணிக்கவாசகம் எழுதியது.]

(கசடு ஆம்-பக்கத் தொடர்ச்சி)

ஆகவே, உலகத்தின்கணுள்ள மேற்கூறிய மதத்தவர்க ளெல்லாருந் திருவள்ளுவர் திருக்குறளைத் தத்தமக்குரிய பொதுநூலாகக் கைக்கொண்டு பாராட்டுவரென்று தாங்கள் சொல்லுவது பொருந்தாததா யிருக்கின்றது. அங்ஙன மானால், எல்லா மதத்தவரும் திருக்குறளைத் தத்தம் நூலா கக்கொண்டு பாராட்டுவரென்று பழைய தமிழ்ப் புலவரொரு

வர் கூறியது ஏனென்றால், ஒவ்வொரு மதத்திலும் உள்ளாரில் உண்மை காணும் விருப்பமும் முயற்சியுமுடைய நடுநிலையாளர் இருப்பராதலால், அவர்கள் தம் மதத்துக்கு ஆகாத கொள்கைகள் திருக்குறளில் இருந்தாலும், அக்கொள்கைகள் எல்லாருந் தழுவத் தக்கமெய்ம்மை உடையனவாயுந் தம்மதக் கொள்கைகள் அம்மெய்ம்மை இல்லாதனவாயும் இருத்தலை ஆராய்ந்து காண்பராதலின், அத்தகையவர்களே திருக்குறளைப் பாராட்டுவர் என்பதே அந்நல்லிசைப் புலவரின் கருத்தாகும். கொல்லாமை, புலாலுண்ணாமை ஆகிய திருவள்ளுவரின் கொள்கைகள், அக்கொள்கைகட்கு மாறான கிறிஸ்தவ, மகமதிய, பௌத்த, நாத்திக மதத்தவர்களில் நடுநிலையாளரால் இக்காலத்தில் தழுவப்படுதல் எவரும் அறிந்ததேயாகும்.

இனி, மேற்கூறிய மதங்களுள் ஒன்றனிடத்திலுஞ் சேராத திருவள்ளுவர், சைவசமயத்துக்கே உரியவர் என்பது எதனாலெனிற், சைவர்கள் பிறப்பு இறப்பு இல்லாத ஒரு முழுமுதற் கடவுளையே வணங்குதல்போலத் திருவள்ளுவரும் வணங்குதலாலும், உயிர்கள் எக்காலத்தும் உள்ள முதல்கள் என்று சைவர்கள் கூறுதல்போலவே திருவள்ளுவரும் 'மன்னுயிர்' 'மன்னுயிர்' என்று உயிர்களை அடுத்தடுத்துச் சொல்லுதலாலுஞ், சைவர்கள் ஊழ்வினையும் மறுபிறப்பும் உயிர்களுக்கு உண்டென்று கூறுதல் போலவே அவை யிரண்டும் உயிர்களுக்கே உண்டென்று திருவள்ளுவருங் கூறுதலாலும், கொல்லாமை, புலாலுண்ணாமை ஆகிய அறம் சைவசமயத்துக்கே முதன்மையானவை என்பதற்கு எல்லா மதத்தவரும் ஊனுண்ணாமையைச் சைவமென்று அழைத்தலாற் பெறப்படுதலின் அத்தகைய கொல்லா அறத்தைத் தமது நூலெங்கும் வலியுறுத்துந் திருவள்ளுவரும், அதனாற் சைவ ஒழுக்கமே யுடையவரென்பது பெறப்படுதலாலுஞ்.

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

என்னுந் திருக்குறளால் இறைவன் திருவருளைச் சார்ந்தார்க்கே அவரைப் பற்றிய இருவினையும் அறியாமையுமாகிய நோய் நீங்குமென்று இவர் கூறும் முடிந்த நிலை சைவசித்தாந்த முடிந்த நிலையாதல் இத்திருக்குறளை, எடுத்துக்காட்டி அந்நிலையை விளக்குந் திருக்களிற்றுப்படியார் என்னுஞ் சைவசித்தாந்த நூற்பாவினால் நன்கு அறியப் படுதலாலும் இவர் சைவ சமயக்கொள்கை யொன்றே உடையரென்பது ஐயமின்றித் தெளியப்படும்,

இங்ஙனமாகச், சைவக் கொள்கை ஒன்றே யுடைய திருவள்ளுவர் சைவத்தின் வெளி யடையாளங்களான திருநீறுஞ் சிவமணியும் அணியாமல் வேறு எந்த மதத்தினடையாளத்தை அணியக்கூடும்? அரசன் தனக்குரிய அடையாளங்களாக மணிமுடிகவித்துச் செங்கோல் பிடித்தலும், அமைச்சன் தனக்குரிய அடையாளங்களாக அரசியல் நூல் கையேந்தியிருத்தலும், இல்லறத்தார் தமக்குரிய் அடையாளங்களாக வெள்ளாடையுடுத்தி அணிகலன்களணிதலும், துறவறத்தார் காவியாடையுடுத்து முக்கோலேந்துதலுஞ் சைவப் பெரியார் திருநீறுஞ் சிவமணியும் அணிந்து சடை வளர்த்தலும், பழைய காலத்திலிருந்தே நடந்து வருகின்றன. மற்றைச் சமயத்தாரிலும் அவர்க்குரிய அடையாளங்களாக உள்ளவை எத்தனையோ பல. இவ்வடையாளங்களை யெல்லாம் எடுத்துவிட்டுப் பிறந்த வடிவத்தோடு இருக்க வேண்டுமென்று ஒருவர் எண்ணுவாரானல், எல்லாரும் அம்மணமாகத்தான் இருக்கவேண்டும். அங்நிலைக்கு மற்றையவர்கள் தாந்தாங்கொண்ட அடையாளங்களை விடாதிருக்கையிற் சைவர்களுக்கு மட்டும் ஒருவர் அறிவு சொல்ல வருவதற்குச் சைவர்கள் தாமா இளைத்தவர்கள்? அது நிற்க.

கடவுளை நெருப்புருவில் வைத்து வணங்கி, அந்நெருப்பினல் உள்ளும் வெளியுமுள்ள அழுக்குகள் எரிக்கப்பட்டுத் தூய்மையாவதற்கு அடையாளமாகவே திருநீற்றைச் சைவர்கள் அணிகின்றார்கள். அத்திருநீற்றைக் கையிலெடுக்கும் போது இறைவன் எல்லா அழுக்குகளையும் எரித்துத் தூய்மை செய்கின்றான் என்னும் நினைவு எமக்கு வருதலால் அதனை அந்நினைவுக்கு அடையாளமாகப் பூசுவது குற்றமாகுமா? உலக நினைவிலேயே இழுப்புண்ணும் எமது உள்ளத்துக்குக் கடவுள் நினைவை எமக்கு உண்டுபண்ணும் இவ்வடையாளங்களுந் திருக்கோயில்களுஞ் சிறந்தன வல்லவா? தாழ்ந்த எண்ணங்களை உண்டு பண்ணும் அடையாளங்களாகிய கள்ளுக்கடை, கஞ்சாக்கடை, இறைச்சிக்கடை முதலானவைகளையும் இறுமாப்புக்கு இடஞ்செய்யும் ஆடை யணிகலன்களையும் நீக்குவது பொருந்தும். ஆனல், உலக நிலையாமையினையுங் கடவுள் அருள் நிலையினையும் நினைவுக்குக் கொண்டுவருந் திருநீறு முதலியவைகளை நீக்குதலால் மக்களடையும் பயனென்ன? இவ்வடையாளங்களை நீக்கினவுடனே எல்லா மதங்களும் எல்லாக்கொள்கைகளும் ஒன்றாகிவிடுமா? என்று தாங்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

திருவள்ளுவரின் திருவுருவமானது சைவ அடையாளங்கள் உடையதாக மைலாப்பூர் திருவள்ளுவர் கோயிலிற் பழைய காலத்திலேயே அமைத்துவைக்கப்பட்டிருந்ததால், அதனை அப்படியே ஓவியமெடுத்து அதனால் அவரை நினைந்து வணங்கும் எம்மனோரை ஒருவர் குற்றஞ் சொல்வது பொருந்துமோ? நாங்களே புதிதாக அச்சைவ கோலத்தை அத்திருவுருவத்திற்கு அமைத்திருந்தாலன்றோ எங்கள்மீது குற்றஞ் சுமத்தலாம்? ஆனாற் பழைய நாளிலேயே அமைக்கப் பட்ட அதனை அப்படியேவைத்து வணங்கும் எம்மனோரைப் பழித்தல் அடாது. சைவ அடையாளங்களை விட்டாலுந் திருவள்ளுவர் சைவரேயாவர். வெளிக்கோலத்தைப்பற்றி எங்களுக்கு அக்கரையில்லை. கொள்கையே பெரிது. எங்கள் சைவப் பெரியாராகிய சேக்கிழார் அடிகளே "எந்நெறியில் நின்றாலும் எக்கோலங்கொண்டாலும் மன்னியசீர்ச்சங்கரன் றாள் மறவாமை பொருள்" என்று எங்களுக்கு அறிவு புகட்டி யிருப்பதை, நாங்கள் மறந்தவர்களல்லேம். அது நிற்க,

இனித், தமிழைச் சைவப்பசை கொண்டு ஒட்டியிருப் பதைப் புய்த்துவிட வேண்டுமென்று சொல்லுகின்றனர். புய்த்துவிட்டாற் புத்தர் சமணர் முதலான எல்லாரிடத்துந் தமிழன்னை துள்ளிக் குதிப்பாளென்று கிளர்ச்சியோடு எழுது கின்றனர். ஆனால், தமிழ் மொழியி னுண்மையோ அதனை வழங்கி வளர்த்த தமிழ் மக்களின் கொள்கையாகிய சைவத்தைத் தனக்கு உயிராய்க் கொண்டு உலவுகின்றது. அவ்வுயிரைப் போக்கி விட்டால் தமிழ் துள்ளிக் குதிப்ப தெங்ஙனம்? பண்டைக் காலந் தொடங்கித் தமிழை வழங் கினவர்களும், வளர்த்தவர்களும் சைவர்களே யல்லாமல் மற்றைய மதத்தவர்களல்லர். இடைக்காலத்து வந்த புத்தர் சமணர்கள் தமிழைக் கைக்கொண்டது தங் கொள்கைகளை அதிற் புகுத்தவே யல்லாமல் வேறன்று; கிறிஸ்துவ, முகமதி யருந் தமிழைக் கையாளுவது அதில் தமது கொள்கையைப் புகுத்தவே யல்லாமல் வேறன்று. தன்மதிப்பியக்கத்தாராகி ஒருவர் அதனைக் கையாள்வதும் அவர் கொள்கையை அதிற் புகுத்தவேயல்லாமல் வேறன்று. இவைகளையெல்லாம் அவர் சிறிதாயினும் நினைத்துப் பார்ப்பாரானால் மொழி யானது அம்மொழியை வழங்கும் மக்களின் கொள்கை களை விட்டுத் தனித்து நடவாதென்பதைத் தெரிந்து கொள்ள லாம்.பிற்காலத்திற் புதியபுதியவாகத் தமிழிற்புகும் கொள்கை களெல்லாம் தமிழுக்கு உரியனவுமல்ல; தமிழை வளர்க்க வந்தனவுமல்ல. அவைகளெல்லாம் தமிழை வளர்க்க வந்தன

வல்லவென்பதற்கு அக்கொள்கையினையுடையார் வடமொழி முதலான பிறமொழிச் சொற்களை அதனுள் வரை துறையின்றிப் புகுத்தி, ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களை வழங்க விடாமற் செய்த கொடுமையால் நன்றாக அறியலாம். மற்றுத் தமிழுக்கேயுரிய தமிழ் மக்கள் சைவர்களா யிருந்தமையால் அவர்கள் அதனைத் தூயதாகவே வழங்கி வளர்த்து வந்திருக்கின்றார்கள். அதனாற் சைவக் கொள்கையானது தமிழுக்கு உயிர்போல்வதென்பதும், அதனை அதிலிருந்து பிரித்தல் இயலாதென்பதும் அறிந்துகொள்ளல் வேண்டும்.

ஒருவர் உண்மையிலேயே தமிழை வளர்க்கும் எண்ணமுடையவர்களா யிருந்தால், மக்கட் கூட்டம், மக்களினம், மக்கள் தொகுதி முதலான தமிழ்ச்சொற்களிருப்ப அவற்றையெல்லாம் விட்டு "மனித சமூகம்" என்ற வடசொல்லை எழுதுவாரா? கடலூர் வாணர் என்னுந் தமிழ்ச்சொல்லிருக்கக் 'கடலூர்வாசி" என்று எழுதுகின்றனர். விடையென்னுந் தமிழிருக்கப், "பதில்" என்னுந் தலுக்குச் சொல்லை வரைகின்றனர். அவா, ஆவல், விருப்பம் என்னுந் தமிழ்ச்சொற்களிருப்ப அவற்றை விட்டு "ஆசை" என்றும், மொழி, சொல், கட்டாயம், ஒலி, ஓசை, மொழி, அறிவு நூல், கலைநூல், புலவர், அறிஞர், கற்றார், நேரம், உதவி, பொருள், திருநீறு, சிவமணி, எல்லாம், ஓவியம், முறை, ஒழுங்கு, சிறிது, நினைத்து, சூழ்ந்து, ஆராய்ந்து, அன்பு, மகன், ஆண்மகன், ஆடவன், ஆள், முதன்மை, வலம்வருதல், வணக்கம், செலுத்துதல் என்னுந் தூய தமிழ்ச் சொற்களிருப்ப, இவற்றை யெல்லாம் விடுத்துப், பதம், வாக்கு, வார்த்தை, அவசியம், சப்தம், பாஷை, விஞ்ஞானம், பண்டிதர், சமயம், உப, விஷயம், விபூதி, உருத்ராட்சம், சகலம், படம், நியாயம், கிரமம், கொஞ்சம், யோசித்து, தயவு, மனிதன், முக்கியம், திக்குவிஜயம், தண்டம், சமர்ப்பித்தல் முதலான வடசொற்களைக் கலந்து எழுதுகின்றனர். தமிழ்ச்சொற்களை வெட்டி வீழ்த்தி வடசொற்களைக் கொண்டுவந்து விதைப்பது தானா தமிழை வளர்ப்பது? நன்றாக எண்ணிப்பார்த்தல் வேண்டும்.

---

# திருவள்ளுவர் சமயம்

[தூத்துக்குடி போ. முத்தையா பிள்ளை அவர்கள்]

திருக்குறளாசிரியராகிய திருவள்ளுவரை சைனர், பௌத்தர், வைணவர், சைவராகிய ஒவ்வொருவரும் தத்தஞ் சமயத்தினரென்றும், வேறு சிலர் அவர் ஒரு சமயத்தையும் சார்ந்தவரல்ல ரென்றும் கூறுவர். இவ்வாறு கூறுதற்குக் கடவுளைச் சமயத்தார் இட்டுவழங்கும் சிறப்புப்பெயராற் கூறாது பொதுப் பெயரானும் இலக்கணவகையானும் கூறியிருத்தலே காரணமாகும். ஆயினும், எந்தச் சமயத்தின ரென்று நிச்சயிப்பதற்கு அவர் வழிகாட்டாமலுமில்லை. அவ்வழியைக் கண்டு பிடித்து முடிவுகூறுதலே இக்கட்டுரையின் கருத்தாகும்.

யாதானும் ஒரு சமயத்தைச் சார்ந்து நின்று அச்சமயக் கடவுளை வழிபட்டாலன்றி, மக்கட் பிறவியைப் பெற்றதனாலாயபயனை அடைதல்கூடாது. ஆதலின், ஒரு சமயத்தையுஞ் சார்ந்தவரல்லரென்பார் கூற்று பொருந்தாது. ஒருவனை நாயகனாகக்கொண்ட நாயகி, ஏனைய புருடர்களை சகோதரராகக் கொள்ளுமாறு போல, ஒரு சமயத்தைச் சார்ந்து நிற்பவரும் ஏனைய சமயங்களை இகழ்ந்திடாமல் ஏற்றுப் போற்றுதலே முறையாகும். ஆனால் பலசமய நூல்கள் பிறசமயங்களைத் தாழ்த்தியும் தம் சமயத்தை உயர்த்தியும் கூறுகின்றன. அவ்வாறாயின், உண்மையான உயர்ந்த சமயம் யாதென ஆராயப் புகுவார்க்கு இதுவாகும் அதுவல்லதெனும் பிணக்கதின்றி நீதியினால் இவை எல்லாம் ஓரிடத்தே காணநின்றது யாதொரு சமயம் அதுசமயமெனப் பெரியார் கூறியுள்ளார். திருவள்ளுவர், அத்துணைப் பெருமைவாய்ந்த சமயத்தினராதலின், எல்லாச் சமயத்தினரும் தத்தஞ் சமயத்தினரென்று பாராட்டிப் போற்றும் வண்ணம் கடவுள்வாழ்த்துக் கூறினர்.

இனி, திருவள்ளுவர் எச்சமயத்தின ரென்பதைப் பற்றி ஆராய்வாம். ஒரு சமயத்தின் கொள்கை முற்றும் இருக்க வேண்டு மென்பதில்லை; சில இருப்பினும் அமையும். ஆனால் அந்தச் சமயத்தின் கொள்கைகளுள் சில மறுக்கப்படினும், குறளில் கூறப்பட்ட கொள்கைகளுள் யாதானுமொன்று ஒரு சமயத்தில் இல்லையெனினும் அந்தச் சமயத்தினராகக் கொள்ளுதல் பொருந்தாது.

திருக்குறள் கடவுள் வாழ்த்தில் பகவன், வாலறிவன், மலர்மிசை யேகினன், வேண்டுதல் வேண்டாமையிலான்,

இறைவன், பொறிவாயிலைந்தவித்தான், தனக்குவமை யில்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தானெனக் கடவுட் பெயர் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றுள் பகவனென்பது பொதுப்பெயர். வாலறிவன் என்பது முதல் அறவாழி அந்தணன் என்பதீறாக வுள்ளபெயர்கள் இலக்கண வகையால் எல்லாச் சமயத்தினர்க்கும் பொதுவாகும். ஆதலின் ஒவ்வொருவரும் தத்தஞ் சமயத்தின ரென்று கூறலாம்.

சைனருக்கு உலகம் ஒருவனால் படைக்கப்பட்ட தென்பதும், பிரமசரியமுதலிய நான்கு நிலைகளும் உடன்பாடில்லை.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டில் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.

என்னுங் குறள்களால் உலகத்தைப் படைத்தவன் உண்டென்பதும், நான்கு நிலைகள் உண்டென்பதும் விளங்குதலால் சைனரல்லர்.

பௌத்தருக்கு ஐந்துபூதங்கள் உடன்பாடில்லை.

வஞ்சமனத்தான் படிற் றொழுக்கம் பூதங்க
ளைந்தும் அகத்தே நகும்,

என்பதனால் பௌத்தரு மல்லர்.

வைணவ சமய நூல்களில் கடவுள் எண்குண முடையானென்பது கூறப்பட வில்லை.

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

என்பதனால் வைணவரு மல்லர்.

முடிவான சமயக்கடவுளின் சிறப்புக்குணம் எண் குணமென்பது அறிவித்தற் பொருட்டே அதனை இறுதியிற் கூறினாரென்பது கவனிக்கத் தக்கது.

எண்குணத்துளோனே, எண்குணம் செய்த ஈசனே, எட்டுவான் குணத்தீசன் என்பன வாதியாக சைவசமயத்திற் றான் கடவுளுக்கு எண்குணம் உடைமை கூறப்பட்டிருக்கிறது. வைணவ நூலைப் பல இடங்களில்மேற்கோளாகக்காட்டிய உரை

யாசிரியர் பரிமேலழகரும், எண்குணத்தின் பெயரை எடுத்துக்காட்டி இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டன என்றனர். வைணவ நூலில் கடவுளுக்கு எண்குணம் உடைமை கூறப்பட்டிருப்பின் அவர் கூறுதுவிடார்.

உயிருக்குச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மை உண்டென்பதும், சாரப்படும் பொருள் கடவுளும் கட்டுமே யென்பதும், கடவுளோடுள்ள சார்பு எக்காலத்தும் பிரிக்க முடியாததென்பதும், கட்டோடு உள்ளசார்பு.ஒருகாலத்தில் பிரிக்க முடியுமென்பதும், பிரிக்க முடியாதிருத்தலை உணர்தலே கடவுளை அடைதலென்பதும் சைவசமயத்தினுள்ள சிறப்பான கொள்கைகள். இவ்வுண்மைகளை,

'சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரு நோய்,' என்னும் ஒரு குறளால் அறிவுறுத்துகின்றனர். எவ்வாறெனின், கூறுதும்.

சார்புணர்ந்து சார்புகெட என்றமையால் உயிர் யாதானுமொன்றனைச் சார்ந்து நிற்றலேயன்றித் தனித்து நிற்றலில்லை என்பதும், உணர்ந்து என்பதனால் கடவுளோடுடைய சார்பு பிரிக்க முடியாதென்பதும், பிரிக்கமுடியாமையை உணர்தலே அடைதலென்பதும், கெட என்பதனால் கட்டோடு உடைய சார்பு பிரிக்கப்படு மென்பதும் விளங்கினமை காண்க.

ஆகவே, கடவுளுக்கு எண்குணம் உடைமையினையும், உயிருக்குச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையினையும் கூறுதலானும், சாரப்படும் பொருள்களும் சார்பின் வேற்றுமையும் கூறுதலானும், திருவள்ளுவர் சமயம் சைவசமயமே ஆகும்.

சைவ சமயந்தான், ஏனைய சமயங்க ளெல்லாவற்றையும் தனக்கு அங்கமாகக் கொண்டு இதுவாகும் அதுவல்லதெனும் பிணக்கதின்றி நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண இராஜாங்கத்தமர்ந்து நிற்கும் சிறப்பு வாய்ந்தது. இச்சமயக் கடவுளே திருவள்ளுவருக்கு வழிபடு கடவுளாகும்.

ஆயினும், எச்சமயத்தினரும் ஏற்றுப் போற்றி உய்யும் வண்ணம் கடவுட்பெயரைச் சிறப்பாக எடுத்துக்கூறுது இலக்கணவகையாற் கூறி நூல்செய்தனர். நூலிலே கூறப்பட்டவை அறம், பொருள், இன்பம் என மூன்று. வீடு இலக்கணவகையாற்கூற இயலாதாதலின் சாதனவகையால் துறவறத்துட் கூறப்பட்டது.

அறத்துக்கு விட்டுணுவும், பொருளுக்குப் பிரமனும், இன்பத்துக்கு உருத்திரனும் அதிதெய்வங்க ளாகுமாதலின், இம் மூவரையும் வணங்க வேண்டும். அவ்வாறு வணங்கின் எச் சமயத்தினரும் ஏற்றுக்கொள்ளா ரென்பது கருதி, மூவ ராகவும் மூவருக்கு முதல்வராகவு முள்ள ஒரு கடவுளை இலக் கண வகையால் வணங்கினர். ஆதலின் இவர் கூறிய கடவுள் வாழ்த்து வழிபடுகடவுள் வாழ்த்தாதலோடு ஏற்புடைக் கட வுள் வாழ்த்துமாயிற்று. வாழ்த்தப்பட்ட கடவுள் முதற் கடவுள் என்பது அறிவித்தற்கு ஆதிபகவன் என அடை கொடுத்தோதினர். மூவருக்கு முதலாக ஒரு கடவுள் உண் டென்பது உணர்ந்து அக் கடவுளை வழிபடும் திறனுடையரா யிருந்தாலன்றி நூலில் அக்கடவுள் வழிபாடு கூறுரென்பது கடைப்பிடிக்க.

இவ்வாறு கடவுளைவாழ்த்திப் பொதுவாயும் சிறப்பாயும் உள்ள தருமங்களைக் கூறி உபகரித்தாராகலின், எல்லா நாட்டி னரும் எல்லாச் சமயத்தினரும் ஏற்றுப்போற்றிக் கொள்ளும் பெருமைவாய்ந்துள்ளது திருக்குறள்.

இத்துணைப் பெருமை வாய்ந்த திருக்குறளை அருளிச் செய்து உபகரித்த பெரியாராகிய திருவள்ளுவ தேவரை சம யப் பிணக்கின்றி எல்லாச் சமயத்தினரும் பாராட்டி வழிபடு தலே கடமையாகும்.

திருவள்ளுவ தேவர் திருவடிவாழ்க.

---

ஹட்கின்ஸன் பிரபுவின் தலைமையின்கீழ் எகுபதி (Egypt) யின்மீது படையெடுத்துச் சென்ற இந்திய சிப்பாய்கள் ஹாட்ஜா வில்ஷிலி என்ற ஊரிலுள்ள ஒரு பாழடைந்த கோயிலைக் கண்டவுடன் அது சிவன் கோயிலே என நம்பி, அக்கோயிலை அவ்வாறு பாழடைய விட்டமை நோக்கி அவ்வூர் மக்களைச் சினந்தனராம். எகுபதியின் கடவுளர் கள்.—ஓசிரிஸ்-பிரமா; ஹோரஸ்-விட்டுணு; டைஃபன்- சிவன்; ஈஷிஸ்-பார்வதி.

—தாமஸ் இன்மன் எம். டி.,




## சிவஞானபோதக் கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ.]

பதிப்புரிமை ஆக்கியோற்குரியது

(முன் ௧௨௪-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### நான்காவது சூத்திரம் இரண்டாவது அதிகரணம்

34. மேலே, அறிவு இன்மையே (ஞானாபாவமே) அறியாமைக்குக் காரணம், ஆணவமலம் என்பதொரு பொருள் மிகையாம் என்பார் கொள்கையும் மாயையே ஆன்மாவின் அறிவை மறைத்தற்கு அமையும், ஆணவமலம் மிகையாம் என்பார் கொள்கையு மறுக்கப்பட்டன. இன்னும் ஒரு சாரார் (ஏகான்மவாதி முதலியோர்) பிராந்திஞானமே ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்யும், ஆணவமல மென்பதொரு பொருள் மிகையாம் என்று கூறுவர். பிராந்திஞானம் என்பது கயிற்றைப் பாம்பு எனக் காணுதல்போல ஆன்மா, தானல்லாத உடலைத்தான் எனவும் நிலையில்லாத உலகவாழ்வை நிலைபேறுடையதெனவும், மயங்கி அறியும் மயக்க அறிவு. அம்மயக்க அறிவானது உண்மைப் பாம்பையும் உண்மைக் கயிற்றையும், முன் கண்டறிந்த ஒருவனே ஞாயிற்றினொளி மழுங்கின மாலை நேரத்தில் நீண்டு வளைந்து கிடக்கிற கயிறொன்றைக் கண்ட பொழுது அக்கயிற்றை உண்மைப் பாம்பென மயங்கி அறிகின்றான்; உண்மைப் பாம்பை முன் கண்டறியாத ஒருவன் கயிற்றை உண்மைப் பாம்பென மயங்கி அறியான். இம் மயக்க அறிவு ஞாயிற்றினொளி மழுங்கின மாலை நேரத்திலே கண் பார்த்த காரணத்தினா லுண்டாயிற்று. அதுபோல உடலைப்பற்றியும் உலகைப்பற்றியும் உண்மை அறிவுடைய ஆன்மாவே அவ்வறிவு மறைக்கப்பட்டிருத்தலால் அவற்றைப்பற்றி மயக்க அறிவும் (பிராந்தி ஞானமும்) உடையதாயிருத்தல் வேண்டும். ஆதலின் ஆன்மாவின் உண்மை அறிவைக் கெடாதபடி மறைத்தற்குக் காரணமாய் ஆணவமலம் உண்டு என அறிக.

35. இன்னும் ஒரு சாரார் தமோகுணமே ஆன்மாவின் அறியாமைக்குக் காரணம், ஆணவமலம் வேண்டப்படுவதில்லை என்று கூறுவர். அசுத்தமாயா கலையினின்று உண்டான மூலப்பகுதியானது சிகண்ட ருத்திரராற் கலக்கப்பட்ட பொழுது அதினின்றுங் குணதத்துவந் தோன்றியது. இந்தக் குணதத்துவம் தொழிற்படுங்கால் தாமதம், இராசதம், சாத்துவிகம் என மூன்று குணங்களாய்ப் பிரிகிறது. இம்மூன்று குணங்களாலாகிய மயக்கமானது பிரகிருதி மாயையின்கண் வைகும் ஆன்மாக்களுக்கன்றி பிரகிருதி மாயா தத்துவங்களுக்கு மேற்பட்ட அசுத்த மாயா தத்துவங்களின் வைகும் பிரளயாகல வருக்க ஆன்மாக்களுக்கும் அவர்களுக்கு மேற்பட்ட விஞ்ஞானகல வருக்க ஆன்மாக்களுக்குமில்லை. இங்ஙனம் பிரகிருதி மாயா தத்துவங்களின் உச்சியிலுள்ள மூலப்பகுதியின் காரியமாய் இடையே தோன்றி இடையே அழிவதாகிய மூன்று குணங்களிலொன்றாகிய தமோகுணமானது சுத்த மாயா தத்துவங்கள் வரை வியாபித்து மூவகை ஆன்மாக்களின் அறிவையும் மறைக்கின்ற ஆணவமலம் ஆகமாட்டாது. இடையே தோன்றிய தமோகுணம் தூயதான ஆன்மாவை இடையே கட்டுறுத்தி மயக்கும் என்னில் அவ்வாறு தமோகுணம் ஆன்மாவை இடையே கட்டுறுத்தற்கு ஒரு காரணம் வேண்டும்; ஒரு காரணமின்றி அஃது ஆன்மாவைக் கட்டுறுத்தும் என்னில் ஆன்மா வீடு பேறுபெற்ற பின்னும் அதனைக் கட்டுறுத்தும் என்று நாம் சொல்லல் வேண்டும்; அப்பொழுது வீடு பேறு என்பதே இல்லையாக முடியும். ஆதலின் தமோகுணமானது அநாதியே ஞானதிரோதகமாய் ஆன்மாவைக் கட்டுறுத்தும் என்பார் கொள்கை பொருந்தாது என அறிக.

36. இன்னும் ஒரு சாரார் (சாங்கியர் முதலியோர்) ஆன்மாவின் அறிவை மறைத்து மயக்குதற்கு அவிச்சையே காரணம், ஆணவமலம் என்பதோர் பொருள் காரணமாகக் கொள்ளுதல் மிகையாம் என்பர். அவிச்சை என்பது நிலையில்லாததை நிலையுள்ளது என்றும் தூய்மை இல்லாததைத் தூய்மை உடையது என்றும் தானல்லாத பொருளைத் தான் என்றும் திரிவுபடக் காணும் உணர்வாம். அது பஞ்சக்கிலேசங்களுளொன்றாய் ஏனைய நான்கு கிலேசங்களுக்கும் காரணமாய்ப் பிரகிருதி மாயாபோகங்களை ஆன்மாச் சிறப்பு வகையால் நுகர்தற்கு ஏதுவாயுள்ள பும்சத்துவமலம் என்று கூறப்படும். இந்த பும்சத்துவமலமும் மூலப்பகுதித் தத்துவத்திலிருந்து இடையே தோன்றி இடையே அழிவதாயுள்ளது. இது

பிரளயாகலர் விஞ்ஞானகலர் ஆன்மாக்களைக் கட்டுறுத்தாது. ஆதலின் மேலே தமோகுணம் ஆணவமலமாகாது என்பதற்குக் கூறப்பட்ட தடை உரைகள் இதற்கும் பொருந்தும் என அறிக.

37. ஒரு சாரார் சிவசத்தியானது ஞானதிரோதகமாய் நின்று ஆன்மாவைக் கட்டுறுத்தும் என்று கூறுவர். சித்துப் பொருளாகிய ஆன்மாவை அதற்குப் பகையாகிய சடப் பொருள் கட்டுறுத்துவதன்றி சித்துப்பொருளாகிய சிவசத்தி சித்து ஆகிய ஆன்மாவைக் கட்டுறுத்த மாட்டாது; அல்லதூஉம் அங்ஙனம் சிவசத்தி கட்டுறுத்தும் என்று கூறுதல் இறைவனது பெருங்கருணைக்கு இழுக்காய் முடியும், ஆதலின் சடப்பொருளாய் ஆன்மாவை அநாதியே கட்டுறுத்தும் ஆணவமலம் வேறுண்டு என்பது பெறப்படும்.

38. ஒரு சாரார் ஆணவமலம் சகசமலமாய் ஆன்மாவோடு அநாதியே உடனிற்றலின், ஆன்மாவின் குணம் என்று கூறுவர். ஆன்மாவினது குணம் அறிவு என்பது முன்னே மூன்றாவது சூத்திரத்திற் கூறப்பட்டது. அறியாமையைச் செய்யும் ஆணவமலமும் அறிவும் ஆகிய இரண்டு மறுதலைக் குணங்கள் ஒரு பொருட்குக் கூடாது. மேலும் ஆணவமலம் ஆன்மாவின் குணமாயின் அதன் சத்தி இடையே அழியும் என்றல் கூடாது. ஆணவமலசத்தி இடையே அழியாதாயின் ஆன்மாவுக்கு வீடு பேறு இல்லையாக முடியும் ஆதலின் ஆணவமலம் ஆன்மாவின் குணம் என்றல் பொருந்தாது.

39. ஆணவமலமே விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூன்று வகை உயிர்ப் பாகுபாடுகளுக்குக் காரணமாயுள்ளது. சகசமலமாகிய ஆணவமல நீக்கத்தின் பொருட்டே உயிருக்கு (ஆன்மாவுக்கு) மாயை மலமும் வினை மலமும் (கன்மமலமும்) ஆகந்துக மலங்களாக இறைவனாற் கூட்டப்பட்டனஎன்பது மேலே கூறப்பட்டது. ஆணவம், வினை, மாயை மலங்கள் மூன்றினையுமுடையவர் சகலர். சகலர் என்றசொல் கலைகளோடு கூடியவர் என்று பொருள்படும். கலை அத்துவா, அதற்குக் கீழேயுள்ள தத்துவம், புவனம், மந்திரம், பதம், வர்ணம் என்னும் அஞ்சு அத்துவாக்களிலும் நிறைந்து அவற்றைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருத்தலால் கலை என்றசொல் எல்லா அத்துவாக்களாலும் உயிர்களுக்கு உண்டாகிற கட்டினை (பந்தத்தை)க் குறிக்கும். ஆகவே எல்லா அத்துவாக்களாலு முண்டாகிற கட்டினையுடையவர் சகலர் ஆவார். பிரளயாகலர் என்றசொல் பிரளயம் அகலர் என்ற

இரண்டு தனிச்சொற்களா லாக்கப்பட்டுப் பிரளய காலத்தில் அதாவது உயிர்களெல்லாம் ஒடுங்கி நிற்கிற சங்கார காலத்தில் கலை அற்றவர் என்று பொருள்படும். சகலர்க்கு உரியன போல அவர்களுக்கு முக்குணங்களால் உண்டாகும் மயக்க மில்லை. விஞ்ஞானகலர் என்ற கூட்டுச்சொல் விஞ்ஞானம் (மேலான ஞானம்) அகலர் (கலைஅற்றவர்) என்ற தனிச் சொற்களாலாக்கப்பட்டு மேலான ஞானம் அதாவது பதி ஞானத்தால் கலைஅற்றவர் என்று பொருள்படும். வடமொழிச் சந்தி இலக்கணப்படி விஞ்ஞாநகலர் என்று கூறற்பாலது விஞ்ஞானகலர் என மரீஇயது. ஆணவமலத்தினது உண்மையை அறியாத சமயங்கள் மூவகை உயிர்ப் பாகுபாடுகளையும் அவ்வவ்வுயிர்களுக்கு உரிய சத்திநிபாத முதலிய இலக்கண வேறுபாடுகளையும் அவ்வுயிர்களுடைய பக்குவத்திற்கு ஏற்றவண்ணம் இறைவன் அருள்செய்யும் தீக்கை வேறுபாடுகளையும் பிற உண்மைகளையும் அறியமாட்டா.

40. ஆணவமலமே கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூவகைக் காரணவத்தைகளுக்கும் காரணமா யமைந்துள்ளது. வண்ணானொருவன் அழுக்குப்பற்றிய ஆடைகளோடு பிறிதோர் அழுக்காகிய உவர்மண்ணைச் சேர்த்து வெள்ளாவியில் வைத்துத் துவைத்து ஆடையிலுள்ள அழுக்கை உவர்மண் அழுக்கோடு போக்கித் தூய்மை செய்தல்போல இறைவன், உயிர்கள்மேல் வைத்த பேரருளினால் ஆணவமல அழுக்குப் பற்றியுள்ள உயிர்களுக்கு மாயைவினை அழுக்குகளைக் கூட்டி தநுகரணங்களோடு கூடிய அவ்வுயிர்களைப் புவன போகங்களாகிய உலகில் வாழும்படி செய்து ஆணவமல அழுக்கை மாயை வினைமலங்களோடு போக்கித் தூய்மை செய்தபின், வீட்டின்பம் அளிக்கின்றான். இதனால் உயிர்கள் வீட்டின்பம் அடைதற்கு ஆணவமல சத்தியினின்று நீங்கிப் பக்குவப்படும் பொருட்டு உயிர்களுக்கு இத்துன்ப உலகவாழ்வு வந்தது என்ற உண்மை நன்கு தெளியப்படும். இங்ஙனம் இறைவன் உயிர்களுக்கு மாயைவினை மலங்களைக் கூட்டுதற்கு முன்னுள்ள அவத்தை கேவலாவத்தை என்றும், மாயை வினைமலங்களைக் கூட்டிய பின்புள்ள அவத்தை கலை முதலிய கருவிகளோடு கூடிய சகலாவத்தை என்றும், கருவிகளோடுகூடி உலகவாழ்வு வாழ்ந்து தூய்மை அடைந்த பின்னுள்ள கருவிகள் நீக்கிய நிலை சுத்தாவத்தை என்றுங் கூறப்படும். அவத்தை என்பது அறிவுநிலை (State of Consciousness) கேவலாவத்தை சகலாவத்தை சுத்தாவத்தை என்ற மூன்று அவத்தைகளையும் முறையே தனிநிலை, கருவிநிலை, தூய்மைநிலை என்று நாம்

தமிழிற் கூறலாம். இந்த மூன்று காரணாவத்தைபற்றி உயிர்களுக்கு உண்டாகின்ற சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து காரியாவத்தைகளும் ஆணவமல மறைப்பு நீக்கத்தின் பொருட்டே உண்டாகின்றன. இந்த ஐந்து காரியாவத்தைகளும் முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்று தமிழிற் கூறப்படும். இந்த ஐந்து அவத்தைகளும் மூன்றாவது அதிகரணத்தில் விரித்துக் கூறப்படும். ஆணவம் வினைமாயைகளால் எல்லாக் கட்டுக்களுடனுங் கூடிய சகலருக்கு ஒவ்வொரு காரணாவத்தைக்கும் ஐந்து காரியாவத்தைகளாகப் பதினைந்து அவத்தை வேறுபாடுகளுள. (Different states of consciousness on account of the soul functioning in different Vehicles at different times). இந்த அவத்தை வேறுபாடுகளை எல்லாம் பிறசமயங்கள் அறியா; மேலைநாட்டு உளநூலாரும் (psychologists) அவற்றின் நுட்பங்களை அறியமாட்டார்.

41. மேலே கூறியவாற்றான் ஆணவமலமானது ஞானாபாவம், மாயை, பிராந்திஞானம், தமோகுணம், அவிச்சை, சிவசத்தி ஆன்மாவின் குணம், ஆகிய இவற்றின் வேறாய் உயிரின் அறிவு வேட்கை செயல்களை அநாதியே மறைத்துக் கட்டுறுத்துவதாய் அறியாமைக் குணமுடையதாய் அநாதியே செம்பிற் களிம்புபோல ஆன்மாவைப்பற்றியுள்ள சகசமலமாய், சடமாய் ஒன்றாய் ஒன்றாயினும் ஆன்மாக்கள்தோறும் வெவ்வேறாய், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகை உயிர்ப்பாகுபாட்டிற்கு ஏதுவாய், நின்று மறைத்துத் தத்தங்கால எல்லையில் நீங்குமளவாகிய சத்திகள் பல உடையதாய், உயிர் கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்றவத்தையுறுதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், நிற்பதொரு பொருள் (திரவியம்) என்பது பெறப்படும். உயிரானது ஆணவமல மறைப்பினின்று நீங்கிப் பேரின்பத்தை அடையும் வழிகள் பின் உண்மை அதிகாரத்திற் கூறப்படும்.

42. உயிரின் அறிவை மறைத்துக் கட்டுறுத்துகிற ஆணவமலத்தினது உண்மையை அறியமாட்டாத சமயக்கொள்கையரும் தத்துவக் கொள்கையரும் அவ்வறியாமைபற்றி உயிரினது உண்மைத் தன்மையையும் நன்கு அறியமாட்டார். வைணவர் ஆகிய பாஞ்சராத்திரி முதலியோர், உயிரானது உடம்பினின்று நீங்கிப் போக்குவரவு புரிதலானும் உடம்பினுள்ளுஞ் சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளுறுதலானும் அணுவடிவுடையது என்று கூறுவர். அவர்தாம்

கூறும் கொள்கைக்கு "உயிர் இதயகமலத்தின் புன்றுளிச் சிறு வடிவினதாயிருக்கும்" என்று வேதம் கூறுதலை மேற்கோளாகக் கூறுவர். உயிர் அணுவடிவினதாயின் நாம் கண்கூடாகக் காணுகிறபடி அதற்கு ஏகதேசத்திலன்றி உடம்பு முழுவதும் அறிவு நிகழ்தலும் சேய்மைக்கண்ணதாகிய துருவ மண்டலத்தை அறிதலும் எங்ஙனம் கூடும்? என்று அவரைக் கேட்பின் விளக்கின் குணமாகிய விளக்கின் பிரபை விளக்கு அளவில் நில்லாது பக்கங்களிற் பரந்து சென்று வியாபித்திருத்தல்போல உயிர் ஏகதேசமாயினும் உயிரின் குணமாகிய அறிவு வியாபகமாகலின் அங்ஙனம் அறிதல்கூடும் என்று அவர் விடைகூறுவர். இவ்விடை உரையைக் கேட்ட ஆசிரியர் மறுபடியும் கூறுகிறதாவது.—விளக்கின் பிரபை விளக்கின் சூக்கும உருவமாகிய திரவியமே அன்றி அதன் குணமாகாது. விளக்கின் பிரபையைக் குணமென்று நாம் கொண்டாலும் அது விளக்காகிய குணி அளவினன்றி வேறிடத்துச் சென்று வியாபிக்குமாறு இல்லை. ஆதலின் விளக்கொளி உவமை பொருந்தாது. உயிரானது பெத்தகாலத்தில் அணுவடிவிற்றாகிய சூக்கும தேகமாய் நிற்குஞ் செயற்கைபற்றி அஃது இதயகமலத்தில் அணுவடிவினதாயுள்ளது என்று வேதம் கூறுகிறதே அன்றி உயிரின் இயல்புபற்றி அஃது அணுவடிவினது என்று கூறுகிறதில்லை. உயிர் தன் இயல்பில் வியாபகமுடைய பொருள் என்றே வேதம் கூறுகிறது. ஆகமமும் அவ்வாறே கூறுகிறது. ஆதலின் வேதம் கூறுவதாய்ச் சொன்ன மேற்கோளும் பொருந்தாது. ஆன்மா என்ற சொற்குப் பொருள் வியாபகமாகிய நித்தசித்து என்பதே ஆகலானும் சேய்மைக் கண்ணும் வியாபித்து அறிவதாகிய உயிர் ஏகதேசமான அணுஅளவினது என்ற பாஞ்சராத்திரியர் கொள்கை பொருந்தாது.

43. ஆருகதர் உயிரினது அறிவானது உடம்பினிடத்தன்றி ஏனை இடங்களில் நிகழாமையால் உயிர் உடம்பு அளவில் வியாபகமாய் நிற்கும் என்று கூறுவர். உயிர் உடம்பினளவில் வியாபித்திருக்குமென்னில் அது யானை உடம்பில் யானை உடல்அளவு பெருத்தும், எறும்பு உடலில் எறும்பு உடல்அளவு சிறுத்தும், அவ்வாறே ஏனைய உடல்களிற் சிறுத்தும் பெருத்தும் உடலளவில் வியாபித்திருக்கும். அவ்வாறாயின் உயிரினது அறிவு தான் இருக்கும் உடலின் அளவு விரிந்தும் சுருங்கியும் விளங்குதல் வேண்டும். அப்படியல்லாமல் பேருடலில் சிற்றறிவும் சிற்றுடலில் பேரறிவும் விளங்கி நிகழ்தலை நாம் அநுபவத்தில் காண்கின்றோம். மேலும் அங்ங

னம் சுருங்கியும் விரிந்தும் விளங்குகிற அறிவு அவயவப் பகுப்புடைய உருவப்பொருளாதல் வேண்டும். உருவப் பொருள்களெல்லாம் அழிவு எய்துமாகலான் அவ்வறிவுடைய உயிரும் அழிவெய்தும் என்பதாக முடியும். உடம்பிலிருக்கிற மக்களுயிர் உடம்பினளவின்றி சேய்மைக் கண்ணேயிருக்கிற துருவ மண்டலத்தையும் அறிகின்றது. ஆதலின் உடம்பி னளவில் உயிர் வியாபித்து நிற்கும் என்ற கொள்கை பொருந் தாது என அறிக.

44. இன்னும் ஒரு சாரார் (நையாயிகர்) குணி நிற்பக் குணம் தோன்றி அழியும் என்று கொண்டு ஆகாயமானது நித்தமாய் வியாபகமாய் நிற்ப அதன் குணமாகிய சத்தம் தோன்றி அழிதல்போல, உயிரானது நித்தமாயும் வியாபக மாயும் தோற்றக் கேடின்றி நிற்பினும் அதன் குணமாகிய அறிவு ஏகதேசத்தன்மை உடையதாய்த் தோன்றி அழியும் இயல்புடையது என்று கூறுவர். இருளின் கண்ணுள்ள குடம் விளக்கினொளியுள்ள பொழுது விளங்கியும், விளக்கினொளி யில்லாதபொழுது விளங்காதும், நிற்றல்பற்றிக் குடம் தோன்றி அழிந்தது என்று நாம் கூறுவதில்லை. அதுபோல் ஆகாயத் தின் குணமாகிய சத்தமும் அதனை விளக்குதற்குரிய காரண முயற்சிகள் கூடியபொழுது விளங்கியும் கூடாதபொழுது அச் சத்த குணம் ஆகாயத்தில் அடங்கி விளங்காதும் நிற்றல் மாத் திரையேயன்றி அழிதலில்லை. குணிநிற்பக் குணந்தோன்றி அழிவது எவ்விடத்துமில்லை. தன் இயல்பில் நித்தமாயும் வியாபகமாயும் தோற்றக்கேடின்றி நிற்கும் உயிரின் குண மாகிய அறிவு ஒருகால் விளங்கியும், ஒருகால் விளங்காதும், இடத்தாலும் காலத்தாலும் ஏகதேசப்பட்டு நிகழ்தல் செயற் கையால் ஆகியது. அச்செயற்கைக்குக் காரணம் ஆணவமல மறைப்பு ஆகும். ஆதலின் உயிரானது நித்தமாயும் வியாபக மாயும் நிற்ப உயிரின் அறிவானது நித்தமாயும் வியாபகமாயும் விளங்காது தோன்றி அழியும் என்ற நையாயிகர் கொள்கை பொருந்தாது.

---

## அறிவியற் பகுதி - Science

# வடிவுதிருந்த அறிவு வளர்ந்த வகை

[திரு. பா. வே. மாணிக்க நாய்க்கர்—திரு. க. ப. சந்தோஷம்]

(முன் ௧௬௰-ஆம் பக்கத் தொடர்ச்சி)

மேற்கண்ட எடுத்துக்காட்டுக்களி னுதவியால் உயிரின் வடிவம் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்கு ஏற, ஏற, எங்ஙனம் வேறுபடலாமென்பதை விளக்க முயன்றிருக்கின்றேன். கணக்கியலினும் அதையொத்தவேறு அறிவியல் துறைகளினும், கண்டதிலிருந்து காணுததைப் பெறுகின்ற முறையே பொதுவாக எடுத்தாளப்படுகின்றது. முந்திய சொற்பொழிவில் தமிழர்கள் கடவுளை அறிவு மயமாகக் கருதினர்களென்று மொழிந்தேன். இப்பொழுது கடவுளுக்குக் கைகளுந் தலைகளும் பல உண்டென்றதுடன், தலைகளுள் ஒன்று விசும்பிற்கு நேரே பார்வையுடையதாய் அமைந்திருக்கின்றதென்றும் பகர்ந்தேன். கண்டதிலிருந்து காணுததை அறியும் முறையைத் தழுவித் தமிழர்கள் கடவுளின் பண்புகளையும் பிறவற்றையும் அமைத்திருக்கும் வகையைச் சீர்தூக்கிப்பார்த்து, அவர்களுடைய கருத்துக்கள் அறிவியலுக்கு முரண்படாவண்ணம் வடிக்கப்பட்டுள்ளனவென்று காண்கின்றேன். இவைகளெல்லாம் சைவசித்தாந்தக் கொள்கையிற் காணக்கிடக்கின்ற உயிர் வளர்ச்சி முறையை யொட்டியனவாம். இச்சைவசித்தாந்தக் கொள்கை அறிவியலாகிய உரைகல்லுக்கு நிற்கும். பிற கொள்கைகள் இதுபோல் நில்லா. மற்றக் கொள்கைகள் இத்துறையிற் குறையுடையனவென்று நான் கூற முற்படவில்லை. அவைகளைப்பற்றி யான் விரிந்த அறிவுடையவனல்லன். பிற கொள்கைகளைவிடச் சைவ சித்தாந்தத்தை நான் நன்கறிந்திருக்கின்றேன் என்பதுபற்றியே இவ்வாராய்ச்சி எழுந்தது. மற்றக் கொள்கைகளில் அழுந்தியவர் அவற்றி லாராய்ச்சியைப் புகுத்தி அறிவியல்முறைக்கவை ஒத்தனவென்று காட்டுவரேல் அதுவும் நன்மை தரக்கூடியதேயாகும்.

பழுத்தன வைந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் வினையறிவா ரில்லை
எழுத்தறி வோமென் றுரைப்பர் களேதர்
எழுத்தை யழுத்து மெழுத்தறி யாரே.

ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனு மோங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனு மோங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே. —திருமந்திரம்.

இன்று இவ்விரண்டு நவிற்சிகளையும் எடுத்தாராய்வது போதும். இவற்றிற் கூறப்பட்டிருப்பதை எடுத்துக்கொண்டு உயிரின் வளர்ச்சியைப் பற்றி நாமறியத்தக்க உண்மைகள் அதிலுளவோ வென்று பார்ப்பது நமது கடமை.

உரு, அரு என்பதை மட்டும் எடுத்துக்கொள்வோம். இது கண்ணிற் கெட்டினவற்றையும் எட்டாவற்றையுங் குறிக்கின்றது. ஓங்காரத்தின் விளக்கங்கூறும் நூல்கள் பல உள. இவைகளிற் பலவற்றை நாம் படித்திருக்கின்றோம். ஆனால், அவற்றால் குறிக்கப்படும் பொருளை நாம் மெய்ப்பித்துப் பார்க்கவில்லை. வடிவங்கள் பலவற்றுள் ஓங்காரத்தினின்று மெழுகின்ற சிலவற்றைப் பார்ப்போம். இதில் அடிப்படையானவை உண்மையாயிருப்பின் பலவற்றை அறிவது எளிதாகும். ஐரோப்பியர்களால் எழுதப்பட்ட உயிர் வளர்ச்சி நூல்களை நான் படித்தபொழுது, அவர்கள் தங்கள் நூல்களில் உயிர்களின் பல வடிவங்களுக்குள்ள ஒற்றுமையைக் காட்டும் பொருட்டு, வெவ்வேறு உயிர்களின் கரு நிலையைப் படங்களால் விளக்கிக் காட்டியிருப்பதைப் பார்த்து வியப்புற்றேன்.




ஈண்டு நான் கருப்பையில் முதிராக் குழவியின் படமொன்றை வரைந்திருக்கின்றேன். பாம்பு, மீன், பறவை, விலங்கு ஆகிய எல்லா உயிர்களின் கருநிலையும், கருப்பையிலுள்ள முதிரா மக்கட் கருவும் ஒரே வடிவுடையனவாயிருக்கின்றன. முட்டையில் தோன்றும் கருவிற்கும் பையில் தோன்றும் கருவிற்கும் வேற்றுமையே இல்லை. இங்கு நாம் சிறப்பாய்க் கருதவேண்டியது யாவையெனின், முதிராக் கருவின்

கழுத்திலே தோன்றுகின்ற மடிப்புகளேயாம். எக்கருவாயிருப்பினுஞ் சரி, அதிலுள்ள மடிப்புகள் ஐந்தே என்பது உற்று நோக்கத்தக்கது. ஆயிரத்தில் ஒன்று ஆறு மடிப்புடையதாயிருக்கலாம். பொதுவாக நஞ்சுடன் (Placenta) சேர்த்து ஐந்து மடிப்புகளே தோன்றுகின்றன. கருவினுருவும் ஓங்காரத்தின் வடிவமாகும். இஃதொரு வியத்தகும் ஒற்றுமையன்றோ? இப்பொழுது ஐந்து மடிப்புகளையும் பிரித்துணரும்பொருட்டு அவற்றிற்கு ந, ம, சி, வ, ய என்ற எழுத்துக்களை அடையாளமாகக் கொடுப்போம். எல்லாஞ்சேர்ந்து ஓங்கார வடிவமாயிருக்கின்ற தென்பதை நினைவில் வைத்துக் கொள்வோம். யோகப் பயிற்சியில் அடியிலிருந்து இடுப்பு வரையுள்ள உடற்பகுதி நகார மெனப்படுகின்றது. இடுப்பிலிருந்து நெஞ்சுவரையுள்ள பகுதி மகார மெனப்படுகின்றது. நெஞ்சிலிருந்து நாடிவரை சிகாரமாம். (நாடியிலிருந்து மூக்கு வரை வகாரமாம்.) இதிலிருந்து உச்சந்தலைவரையிலுள்ளது யகாரமாம். வாஸ்து புருஷர் அல்லது விராட்புருஷர் என்பது இந்த வகுப்பைத் தழுவியதேயாம்.




பதினெண்சித்தர்பாடல் என்று கூறப்படுந் தமிழ்யோக நூலில் யாண்டுங் காணக்கிடக்கும் ஓர் உண்மையாகும் இது. இந்நூலில் நகரம் பிருதிவி என்றும், மகரம் அப்பு என்றும், சிகரம் தேயுவென்றும், வகரம் வாயுவென்றும், யகரம் ஆகாசமென்றும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த

உடலின் வகுப்பு திருத்தமுடையதுதானோ என்பதைச் சிறிது நோக்குவோம். இடுப்பிற்குக் கீழேயுள்ள கால்கள் பிருதிவியின் இறுகிய தன்மையுடையனவென்பது யாவருங் காணக் கூடியது. இப்பகுதியில் வேறு பூதங்களின் சேர்க்கை மிகக் குறைவு. நகரப்பகுதியின்மேலே நெஞ்சுவரையிலுள்ள பாகம் மகாரமாகின்றது. இங்கே நீர்மிகுந்து காணப்படுகின்றது. இதற்குமேலே கழுத்தளவுமுள்ள பகுதி தீயின் தன்மை வாய்ந்தசிகாரமாகின்றது. இங்கே உடலிற்கு வெப்பந்தருகின்ற கருவிகள் இடம்பெற்றிருக்கின்றன. இதற்குமேல் காற்றை உள் வாங்கி விடுகின்ற கருவிகள் அமைந்திருக்கும் பகுதி வகாரமாகின்றது. இறுதியில் யாவற்றிற்கும் மேலிருக்கின்ற ஆகாசத் தன்மையுடையதாகிய மூளை யகாரமாகின்றது. இவ்வமைப்பின் கருத்து உடலில் மாத்திரமன்றி மற்றெல்லாவற்றிலு மிருப்பதைக் காணலாம்.

ஈண்டுக் கூறியவை யெல்லாம் தமிழர்களின் விரிந்த ஞான நூல்களில் பரவிக் கிடக்கின்றன. இவை இக்காலத்துக் கல்வி பெற்றவர்கள் உணர்ந்துகொள்ளும் வகையிற் கூறப்பட்டிருக்கவில்லை. இதுபற்றி யாரையும் நோவதிற் பயனில்லை. நாம் மேலை நாட்டாருடைய முறைகளுக்கேற்றவாறு கல்விப் பயிற்சி யடைந்திருக்கின்றோம். அவர்கள் தம்மாற்கூடிய அளவு கல்வியை நமக்கு ஊட்டியிருக்கின்றனர்.

நமசிவய என்று நம்மாற் பெயரிடப்பட்ட ஐந்து மடிப்புக்கள் கருவில் எங்ஙனம் வளர்ந்து வேற்றுமையடைகின்றனவென்பதைப் பார்ப்போம். நாளுக்கு நாள் கிழமைக்குக் கிழமை முதிராக் கருவளர்ச்சி யடைந்து கொண்டே வருகிறது. அந்த வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு மடிப்பு மறைந்து போகின்றது. ந என்று குறிக்கப்பட்ட மடிப்பு நீங்கும்பொழுது கருவின் கால்கள் தோன்றுகின்றன. இந்த நிலையில் குலை, கை முதலியவை தனியுருப்புக்களாய் விளங்குவதில்லை. இதற்கடுத்த நிலையில் மற்றொரு மடிப்பு மறைகின்றது. இங்ஙனம் எல்லா மடிப்புகளும் நீங்கியபின், கரு முற்றுப்பெற்றுத் தீர்ந்த வடிவமுடையதாகின்றது. மக்கட் குழவியாயினும், பறவை, மீன், பாம்பு முதலியவற்றின் குஞ்சாயினும் இவ் வொழுங்கையே பின்பற்றுகிறது.

மடிப்புகள் நீங்க நீங்க கருவின் வடிவம் முதிர்ச்சிபெறுதல், நமசிவய என்ற எழுத்துக்களை மக்கள் வடிவத்தில் அமைக்கின்ற இந்திய உண்மைநூலின் ஒழுங்கோடு ஒன்றியிருத்தல் கருதத்தக்கது. இப்பொழுது நமசிவய என்ற

எழுத்துக்களை நான் மந்திரமாக எடுத்தாராயவில்லை. இயற்கையில் நாம் காண்கின்ற வடிவின் வளர்ச்சிமுறைக்கொரு குறியீடாகவே அதைக் கொள்கின்றேன். இதிலிருந்து பருப்பொருளாராய்ச்சிசெய்யும் எல்லா அறிவியல் துறைகளை மாத்திரமேயன்றி நுண்பொருள் துறைகளையும் பெறலாம். சமூக அமைப்பு (Sociology) எனுந் துறையையும் அதிலிருந்து பெறலாம். பண்டைத் தமிழர்கள் மேற்கூறிய எழுத்துக்களை, இக்காலத்துக் கணக்கியலில் விரிந்த ஒருமுறையைச் சுருக்கிக் காட்ட ஆளப்படுகின்ற எழுத்துக்களைப்போல் (Formula) வழங்கியிருக்கின்றார்கள். உலகிலுள்ள அறிவியிற்பகுதிகளை விளக்குகின்ற குறியீடாகப் பயன்படுவதே மந்திரத்தின் இயல்பாம். ந. ம. சி. வ. ய. என்னும் எழுத்துக்களை பஞ்சபூதக் குறியீடு என்று நான் கூறுகின்றேன். அரசியற் சிக்கனம் முதலியவற்றிற் காணப்படுகின்ற சிக்கல்களையும் இதனுதவி கொண்டு அவிழ்த்திடலாம். சமூக அமைப்பு என்பதை எடுத்துக்கொண்டு அதில் ஏன் நாமிப்பொழுது இடையூறுகளுக்காளானோம் என்பதை விளக்கிக் காட்டுகின்றேன். இத்துறையில் நாம் பஞ்ச பூதக் குறியீட்டின் ஒழுங்கைச் சிதைத்துவிட்டோம். ந. ம. சி.வ. ய. என்றிருக்கவேண்டிய ஒழுங்கு தவறி சி. வ. ய. ந ம. என்று நின்றிடுமாயின், குறியீட்டின் மாறுதலுக்கேற்ப, குறிக்கப்பட்ட துறையிலும் நிலை மாறும். இங்ஙனந் தோன்றிய மாறுதல் குறியீட்டிலுள்ள ந. ம. சி. வ. ய. என்ற ஒழுங்கு திரும்பி வருமளவும் நிகழ்ந்து கொண்டே செல்லும்.

பண்டைத் தமிழர்கள் வகுத்த பஞ்சபூதக் குறியீட்டிலடங்கிய நனியகன்ற அறிவுக் களஞ்சியத்தில் இஃதொரு இம்மியேயாகும். அக்குறியீடு வடிவ வளர்ச்சியை மாத்திரமேயன்றி விண்ணிலும் மண்ணிலுமுள்ள எல்லாவற்றையும் சுருக்கிக் காட்டுகின்றது. கட்டிட அமைப்பியல் கருத்தாயினும், அறிவியற் கருத்தாயினும் எல்லாம் இக்குறியீட்டிலடங்கும். கட்டிட அமைப்பை எடுத்துக்கொள்வோம். நாமொரு வீடு கட்டும்பொழுது இக்குறியீட்டின் எல்லாப் பகுதிகளையும் எடுத்தாள்கின்றோம். ஒரு மனையை வகுக்குங்கால் அது நெடுநாள் உறுதியாய் நிற்கவேண்டுமென்பது நம்முடைய நோக்கமாகின்றது. உறுதியாய் ஒரு மனை நிற்கவேண்டுமாயின், அது, பஞ்சபூதக் குறியீட்டின் ஒழுங்கைப் பற்றியமைக்கப்பட வேண்டுமென்று தமிழர்களுடைய மனையடி சாஸ்திரங் கூறுகின்றது. குறியீட்டின் ஒழுங்கு யாண்டாவது பிறழுமாயின், அதற்கேற்ப வீட்டின் உறுதி நிலையும் பழுது

படும். ஒரு வீட்டினுள்ள ஐம்பூதங்கள் யாவை? ஈண்டு வீடு கட்டுவதில் நாம் வகுப்பனவற்றினுள்ள ஐம்பூதங்களையே நாம் கருதவேண்டும். ஏனெனின், நெருப்பென்பது ஒரு பருப் பொருளன்று. பருப்பொருட்களின் ஒரு நிலையே நெருப்பாகின்றது. ஆனால், பிருதிவி என்பது பருப்பொருளாகும். ஆதலின், ஐம்பூதச் சார்புள்ள பொருட்களையே நாமெடுத்துக் கொள்ளல் வேண்டும். எங்ஙனமெனின், பிருதிவியின் தன்மை இறுக்கம்; இறுக்கமுடையவை பிருதிவியின் பாற்படும். அப்புவின் தன்மை புடைபெயர்ச்சியாகும். தேயுவின் தன்மை சூடாகும். ஒருவனுடைய புனையுமாற்றல் கொழுந்து விட்டெரிகின்றதென்று சொல்கின்றோம். (A man's imagination is on fire). இங்கே நெருப்பொன்றுமில்லை. ஆனால், ஆற்றல் உரத்துடன் வெளிப்படுவதை இவ்வாறு கூறுகின்றோம். வாயுவென்று சொல்லுங்கால் வெறுங் காற்றை மாத்திரம் நினைத்தல் கூடாது. ஆனால், எல்லா விடங்களையும் நிரப்புகின்ற தன்மையே வாயுவெனப்படுகின்றது. ஆகாசமென்பது நீக்கொணாதது. காற்றை நாம் நீக்கக்கூடும். ஆனால் விண்ணி என்ற ஈதரை (ஆகாசத்தை) நீக்குதல் கூடாது. நாம் எவ்வளவு முயன்றாலும் அஃது இருந்தே தீரும். ஈண்டுக் கூறிய இத்தன்மைகளே பஞ்சபூதங்களுக்கு அடையாளமாயெடுத்துக்கொண்ட ஐந்தெழுத்துக்களால் குறிக்கப்படுவன.

இத்தன்மைகள் ஒரு வீட்டின் அமைப்பில் எங்ஙனம் இடம் பெறுகின்றன என்பதைக் கவனிப்போம். ஒரு வீட்டின் அடிப்படை இறுகிய தன்மையுடைய பிருதிவியால் அமையவேண்டும். ஏனெனின் அடிப்படை வன்மையை அவாவுகின்றது. இதற்கடுத்தபடியில் அப்பு வரவேண்டும். இதற்கேற்ப, அடிப்படைக்குமேல் சாலகங்கள் அமையப் பெறுகின்றன. அடிப்படையிற் சாலகம் அமைப்பாருண்டு கொல்! சாலகத்திற்கு மேலும் கூரைக்குக் கீழும் உள்ள மூன்றாம் இடத்தில் தேயு இடம்பெறுகின்றது. தேயுவின் இடம் சாலகத்தின் அருகிலும் கூரையினருகிலு மிருத்தல் கூடாது. இதற்கு மேல் வாயுவின் இடம் வருகின்றது. வாயுவின் இடம் சாளரங்களாற் குறிப்பிடப்படுகின்றது. சாளரங்களமைக்கப்படுவது தரை மட்டத்தின் மேலும் ஆகாயத்திற்குக் கீழுமாம்.

எத்துறையை எடுத்து ஆராயினும் உறுதியுள்ளவற்றில் எல்லாம் பிருதிவி ஆள்கின்றதைப் பார்க்கலாம். அதற்கடுத்தபடியில் அப்புவும், அதற்கடுத்தபடியில் தேயுவும், இங்ஙனமே மற்றிரண்டும் இடங்கொள்கின்றன.

எழுத்துக்களை நான் மந்திரமாக எடுத்தாராயவில்லை. இயற்கையில் நாம் காண்கின்ற வடிவின் வளர்ச்சிமுறைக்கொரு குறியீடாகவே அதைக் கொள்கின்றேன். இதிலிருந்து பருப்பொருளாராய்ச்சிசெய்யும் எல்லா அறிவியல் துறைகளை மாத்திரமேயன்றி நுண்பொருள் துறைகளையும் பெறலாம். சமூக அமைப்பு (Sociology) எனுந் துறையையும் அதிலிருந்து பெறலாம். பண்டைத் தமிழர்கள் மேற்கூறிய எழுத்துக்களை, இக்காலத்துக் கணக்கியலில் விரிந்த ஒருமுறையைச் சுருக்கிக் காட்ட ஆளப்படுகின்ற எழுத்துக்களைப்போல் (Formula) வழங்கியிருக்கின்றார்கள். உலகிலுள்ள அறிவியிற்பகுதிகளை விளக்குகின்ற குறியீடாகப் பயன்படுவதே மந்திரத்தின் இயல்பாம். ந. ம. சி. வ. ய. என்னும் எழுத்துக்களை பஞ்சபூதக் குறியீடு என்று நான் கூறுகின்றேன். அரசியற் சிக்கனம் முதலியவற்றிற் காணப்படுகின்ற சிக்கல்களையும் இதனுதவி கொண்டு அவிழ்த்திடலாம். சமூக அமைப்பு என்பதை எடுத்துக்கொண்டு அதில் ஏன் நாமிப்பொழுது இடையூறுகளுக்காளானோம் என்பதை விளக்கிக் காட்டுகின்றேன். இத்துறையில் நாம் பஞ்ச பூதக் குறியீட்டின் ஒழுங்கைச் சிதைத்துவிட்டோம். ந. ம. சி.வ. ய. என்றிருக்கவேண்டிய ஒழுங்கு தவறி சி. வ. ய. ந ம. என்று நின்றிடுமாயின், குறியீட்டின் மாறுதலுக்கேற்ப, குறிக்கப்பட்ட துறையிலும் நிலை மாறும். இங்ஙனந் தோன்றிய மாறுதல் குறியீட்டிலுள்ள ந. ம. சி. வ. ய. என்ற ஒழுங்கு திரும்பி வருமளவும் நிகழ்ந்து கொண்டே செல்லும்.

பண்டைத் தமிழர்கள் வகுத்த பஞ்சபூதக் குறியீட்டிலடங்கிய நனியகன்ற அறிவுக் களஞ்சியத்தில் இஃதொரு இம்மியேயாகும். அக்குறியீடு வடிவ வளர்ச்சியை மாத்திரமேயன்றி விண்ணிலும் மண்ணிலுமுள்ள எல்லாவற்றையும் சுருக்கிக் காட்டுகின்றது. கட்டிட அமைப்பியல் கருத்தாயினும், அறிவியற் கருத்தாயினும் எல்லாம் இக்குறியீட்டிலடங்கும். கட்டிட அமைப்பை எடுத்துக்கொள்வோம். நாமொரு வீடு கட்டும்பொழுது இக்குறியீட்டின் எல்லாப் பகுதிகளையும் எடுத்தாள்கின்றோம். ஒரு மனையை வகுக்குங்கால் அது நெடுநாள் உறுதியாய் நிற்கவேண்டுமென்பது நம்முடைய நோக்கமாகின்றது. உறுதியாய் ஒரு மனை நிற்கவேண்டுமாயின், அது, பஞ்சபூதக் குறியீட்டின் ஒழுங்கைப் பற்றியமைக்கப்பட வேண்டுமென்று தமிழர்களுடைய மனையடி சாஸ்திரங் கூறுகின்றது. குறியீட்டின் ஒழுங்கு யாண்டாவது பிறழுமாயின், அதற்கேற்ப வீட்டின் உறுதி நிலையும் பழுது

படும். ஒரு விட்டிலுள்ள ஐம்பூதங்கள் யாவை? ஈண்டு வீடு கட்டுவதில் நாம் வகுப்பனவற்றிலுள்ள ஐம்பூதங்களையே நாம் கருதவேண்டும். ஏனெனின், நெருப்பென்பது ஒரு பருப் பொருளன்று. பருப்பொருட்களின் ஒரு நிலையே நெருப்பா கின்றது. ஆனால், பிருதிவி என்பது பருப்பொருளாகும். ஆதலின், ஐம்பூதச் சார்புள்ள பொருட்களையே நாமெடுத்துக் கொள்ளல் வேண்டும். எங்ஙனமெனின், பிருதிவியின் தன்மை இறுக்கம்; இறுக்கமுடையவை பிருதிவியின் பாற்படும். அப்பு வின் தன்மை புடைபெயர்ச்சியாகும். தேயுவின் தன்மை சூடாகும். ஒருவனுடைய புனையுமாற்றல் கொழுந்து விட்டெரி கின்றதென்று சொல்கின்றோம். (A man's imagination is on fire). இங்கே நெருப்பொன்றுமில்லை. ஆனால், ஆற்றல் உரத் துடன் வெளிப்படுவதை இவ்வாறு கூறுகின்றோம். வாயு வென்று சொல்லுங்கால் வெறுங் காற்றை மாத்திரம் நினைத் தல் கூடாது. ஆனால், எல்லா விடங்களையும் நிரப்புகின்ற தன்மையே வாயுவெனப்படுகின்றது. ஆகாசமென்பது நீக் கொணாதது. காற்றை நாம் நீக்கக்கூடும். ஆனால் விண்ணி என்ற ஈதரை (ஆகாசத்தை) நீக்குதல் கூடாது. நாம் எவ் வளவு முயன்றாலும் அஃது இருந்தே தீரும். ஈண்டுக் கூறிய இத்தன்மைகளே பஞ்சபூதங்களுக்கு அடையாளமா யெடுத் துக்கொண்ட ஐந்தெழுத்துக்களால் குறிக்கப்படுவன.

இத்தன்மைகள் ஒரு வீட்டின் அமைப்பில் எங்ஙனம் இடம் பெறுகின்றன என்பதைக் கவனிப்போம். ஒரு வீட்டின் அடிப்படை இறுகிய தன்மையுடைய பிருதிவியால் அமையவேண்டும். ஏனெனின் அடிப்படை வன்மையை அவாவுகின்றது. இதற்கடுத்தபடியில் அப்பு வரவேண்டும். இதற்கேற்ப, அடிப்படைக்குமேல் சாலகங்கள் அமையப் பெறுகின்றன. அடிப்படையிற் சாலகம் அமைப்பாருண்டு கொல்! சாலகத்திற்கு மேலும் கூரைக்குக் கீழும் உள்ள மூன்றாம் இடத்தில் தேயு இடம்பெறுகின்றது. தேயுவின் இடம் சாலகத்தின் அருகிலும் கூரையினருகிலு மிருத்தல் கூடாது. இதற்குமேல் வாயுவின் இடம் வருகின்றது. வாயு வின் இடம் சாளரங்களாற் குறிப்பிடப்படுகின்றது. சாளரங்க ளமைக்கப்படுவது தரை மட்டத்தின் மேலும் ஆகாயத்திற் குக் கீழுமாம்.

எத்துறையை எடுத்து ஆராயினும் உறுதியுள்ளவற்றில் எல்லாம் பிருதிவி ஆள்கின்றதைப் பார்க்கலாம். அதற்கடுத்த படியில் அப்புவும், அதற்கடுத்தபடியில் தேயுவும், இங்ஙனமே மற்றிரண்டும் இடங்கொள்கின்றன.

இப்பொழுது நமது பஞ்சபூதக் குறியீடு ஓர் ஈருருளியில் எங்ஙனம் அமைகின்ற தென்பதைப் பார்ப்போம். ஈருருளி யில் அதன் சட்டம் பிருதிவித் தன்மையுடைய தென்பதை எவரும் ஒத்துக்கொள்வர். இதில், நீர் நெருப்பு ஆகியவற் றின் தன்மை வெளிப்பட்டு நிற்கவில்லை.

உருளைகள் சுற்றிச் செல்வதால் அவை, புடைபெயர்ச்சி யுடைய நீரின் தன்மையைப் பெறுகின்றன. ஆதலின், இங்கே உருளைகள் அப்புவின் பாற்படும். உருளைகள் சுழல் கின்றதன் பயனாக நெருப்பின் தன்மை யுண்டாகின்றது. இந்த ஒழுங்கு சரியாயிருக்கும் மட்டும் ஈருருளி செவ்வனே உருண்டு செல்கின்றது. இந்த ஒழுங்கைச் சற்றுப் பிறழச் செய்வோமாயின், உருளி கீழே விழ அதன் சட்டம் நிலத்திற் படிந்து உருளைகள் காற்றிற் சுழல்கின்றன. இவ்வுண்மையை எல்லா இயந்திர அமைப்புகளிலுங் காணலாம். ஒவ்வொரு இயந்திரத்திலிருந்தும் பெறக்கூடிய ஆற்றல் வெளிவரும் வண்ணம் பஞ்சபூதக் குறியீடு பற்பல வகையில் மாற்றி ஆளப் படுகின்றது. பற்பல பகுதிகளையுடைய ஒரு கப்பலும் இவ் வொழுங்கிற்குட்பட்டதே. அதன் புடைபெயருந் தன்மை யும் மிதக்குந் தன்மையும் வேறு பண்புகளும் நன்றாக ஒழுங்கு செய்யப்பட்டிருக்கின்றன. இவ்வொழுங்கு சிறிது தவறிடின் இன்னல் விளைகின்றது.

ஈண்டு யான் கூறியவை பயனுடையனவாகவோ, பயனில் லாதனவாகவோ இருக்கலாம். ஆனால், இத்துறையில் ஆராய்ச்சி நிகழ்த்துகின்றவருக்கு ஊக்கமளிக்கும் ஒரு கருத் தாய் இஃது இருக்குமென்று நினைக்கின்றேன். தொல்காப்பிய மரபியலில் ந. ம. சி. வ. ய என்ற முறை முற்றிலும் ஆளப்படு கின்றது. சமுதாய அமைப்புங்கூட இம்முறையைப் பின் பற்றியே எழுதப்பட்டிருக்கின்றது. மரபியலின் பகுதிகள் உறுதியை நோக்கியே (நிலை பெற்ற தன்மை) ஒழுங்கு செய் யப்பட்டிருக்கின்றன. திருவள்ளுவரும் ஔவையும் செய்த அறநூல்கள் அவைகள் தோன்றிய நாட்டில் மாத்திரமே யன்றி அவைகள் மொழி பெயர்க்கப்பட்டிருக்கும் வேறு நாடுகளிலும் நிலையானவையாய் விளங்குகின்றன. அவை களின் உறுதி நிலைக்குக் காரணம் பஞ்சபூதக் குறியீட்டுக்கு ஒப்ப அவை இயற்றப்பட்டிருத்தலேயாம்.

(முற்றிற்று)

---

# மொழி பெயர்ப்பு-Translation

குறுந்தொகை

(ஆங்கில மொழிபெயர்ப்பு)

திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் எம். எ., பி. எல்.

4. நெய்தல்

நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
இமைதீப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவில ராகுத னோமென் நெஞ்சே. —காமஞ்சேர் குளத்தார்

Pained is my heart, ay, pained is my heart and pained yet again is my heart, and my eyes are brimful of hot tears that scald the eyelids, at the departure of my lover who was inclined to abide with me!

—**Kamam-ser-kulathar.**

5. நெய்தல்

அதுகொல் தோழி காம நோயே
வதிகுரு குறங்கு மின்னிலைப் புன்னை
யுடைதிரைத் திவலை யரும்புந் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லித ழுண்கண் பாடொல் லாவே. —நரிவெருஉத் தலையார்,

Is this the thing called love Oh friend, that sleep does not visit those collyrium-fed eyes of thine resembling the many-petalled lotus, ever since he departed the Lord of the quiet sea-port where the broken waves flinging forth the spray drench the tender leaves of the *Punnai* where herons sleep and abide.

—**Nari-veru-Thalai-yar.**

also மின்னிலை-shining leaves.

6. நெய்தல்

நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கள் முனிவின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே. —பதுமனார்.

Midnight hums with the sound '*Nal*'; speechless- and subdued by sleep lie the low among mankind: like- wise the high ones, of this loving wide-spread world. Alas, alas! I alone am sleepless! —**Padmanar.**

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

## தூத்துக்குடி, சைவசித்தாந்த சபை
## 52-ஆம் ஆண்டுவிழா

1935-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 28, 29-ஆம் நாட்களில் தூத்துக்குடியில் சைவசித்தாந்த சபை 52-ஆம் ஆண்டு விழா திருவாளர் T. சிவராம சேதுப்பிள்ளை M.A.,B.L., F.C.S., அவர்கள் தலைமையில் மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது. உயர்சைவத் திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் சபையினைத் திறந்துவைத்தார்கள்! அறிக்கை முதலியன படித்தபின் திருத் தலைவரவர்கள் முன்னுரையாக அரை மணி நேரம் தமிழும் சைவமும் என்னும் பொருள்பற்றிப் பேசினார்கள். பின்னர்த் திருவாளர்கள் சாத்தூர் T. S. கந்தசாமி முதலியாரவர்களும், தஞ்சை பா. சிவகுருநாத பிள்ளை அவர்களும், லாலுகுடி வித்வான் அ. மு. சரவண முதலியாரவர்களும் நாகர்கோவில் ஆறுமுகம் பிள்ளை அவர்களும், பறங்கிப் பேட்டை வித்வான் பெரியசாமிப் பிள்ளையவர்களும், அண்ணாமலைநகர் R. P. சேதுப்பிள்ளை அவர்களும் இரண்டுநாட்களிலும் அவரவர்கள் எடுத்துக் கொண்ட பொருள்களைப்பற்றி மிகவும் அழகுபடக் குறித்த நேரத்துக்குள் பேசினார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்ட ஆடவரும், நூற்றுக்கு மேற்பட்ட பெண்டிரும் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்தனர். இரண்டாம் நாட் காலையில் சைவஇளைஞர் மகாநாடும் மூன்றாம் நாள் மாலையில் சைவமங்கையர் மகாநாடும் முறையே சிறப்புற நடைபெற்றன. சைவ இளைஞர் மகாநாட்டில் திரு. அ. மு. சரவண முதலியாரவர்கள் அருமைத் திருமகனார் ஞானசம்பந்தம் என்னும் மாணவர் 'காரைக்காலம்மையார்' என்னும் பொருள்பற்றிப் பேசியது இளைஞர்கட்கும் முதியவர்கட்கும் ஒருங்கே மகிழ்வையும் ஊக்கத்தையும் அளித்தது. இரண்டாம் நாள் விழா முடிவில் அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

This Conference is of opinion:—

(a) that Tamil lecturers in Colleges should be given the status and salary of the lecturers on other subjects.

கலாசாலைகளில் தமிழ்ப்பாடம் கற்பிக்கும் விரிவுரையாளர் (lecturers) க்கு மற்றைய பாடங்களைக் கற்பிக்கும் விரிவுரையாளருக்குரிய சம்பளமும் பதவியும் கொடுக்கப்படவேண்டும் என்று இம்மகாநாடு வற்புறுத்துகின்றது.

(b) that provision for higher studies in Tamil be made by instituting Honours Course in the Madras University.

சென்னைச் சர்வகலாசாலையில் தமிழ் மொழி வளர்ச்சியடைவதற்கு இன்றியமையாத பீ. ஏ. ஆனர்ஸ் வகுப்பு வைத்து நடத்த வேண்டுமென்று சென்னைச் சர்வகலாசாலையை இம்மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

(c) that the Vernacular be adopted as the medium of instruction in schools and colleges for all subjects other than English.

கல்லூரிகளில் ஆங்கில பாடமொழிய ஏனைய பாடங்கள் யாவும் நாட்டு மொழியின் வாயிலாகப் பயிற்றப்படவேண்டும் என்று இம்மகாநாடு தீர்மானிக்கின்றது.

———

## திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள்

## நான்காம் ஆண்டுவிழா

1936-ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் 8-ஆம் நாள் 5-மணி முதல் 8-மணிவரை சென்னைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக மேடையில் திவான் பகதூர் டாக்டர் C. நடேச முதலியாரவர்கள் தலைமையில் சென்னை வித்வான் பா. கண்ணப்ப முதலியாரவர்கள் 'தமிழ்ப் பெருமை' என்பது பற்றியும், சென்னை நகராண்மைக்கழகக் கல்வித் தலைவர் திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் 'திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கர் வரலாறும் நூலராய்ச்சியும்' என்னும் பொருள் பற்றியும் மிகவும் திறம்படவும், கேட்பவருக்கு மகிழ்வும் ஊக்கமும் உண்டாமாறும் பேசினார்கள். பின் திருவாளர் செ. தெ. நாயகம் அவர்கள் திரு. நாயக்கரவர்களைப்பற்றித் தமக்குத் தெரிந்த இரண்டொரு சிறந்த குறிப்புக்களை நன்கு விளக்கிப் பேசினார்கள். பின் தலைவரவர்கள் முடிப்புரையாகத் திரு. நாயக்கரவர்களின் வியத்தகு புலமையினையும் ஆற்றலையும் பற்றிப் பேசினார்கள். பின் திருவாளர் வ. சுப்பையாபிள்ளை அவர்கள் திரு. நாயக்கரவர்களின் அருமைப் புதல்வர் திரு. முருகமாணிக்கம் என்பவர் கண்டுபிடித்திருக்கிற புதிய பொறிகளைப் பற்றியும், புதல்விகளின் கல்விப் புலமையினைப் பற்றியும் பேசித் திருத்தலைவரவர்கட்கும் சொற்பொழிவாளர்கட்கும் வணக்கவுரை கூறக் கூட்டம் கலைந்தது.

கூட்டத்துக்கு வந்திருந்த அன்பர்கட்குச் சிற்றுண்டியும் வழங்கப்பெற்றது.

---


## புதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருப்புகழ் (1361 பாடல்கள்) | ரூ. 3 | 0 |
| பெருங்கதை உரை 2-ம் பதிப்பு | 7 | 0 |
| புறநானூறு உரை 3-ம் பதிப்பு | 5 | 0 |
| சைவசித்தாந்த ஞானபோதம் (3-ம் பதிப்பு) மறைமலையடிகள் | 3 | 0 |
| சாமவேதம் (மொழிபெயர்ப்பு) | 1 | 8 |

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
6. பவளக்காரத் தெரு, சென்னை.

செண்டார் கயற்கொடியை மகமேருவில் வரகுணத்
தென்னவன் பொறித்த பொழுதே
சேலைப் பருந்தொடா மற்காவ லாய்மேலே
தீட்டும்வ ளரிக் கொடியினர்
வண்டாரும் முல்லையந் தாரினர் துர்க்கைதர
வந்த மந்திர வாளினல்
மதுரா புரிச்சொக்க ருக்குள்ள விருதுகன
வரிசைபெறு தலைமைபெறுவோர்
வெண்டா மரைச்சரசு வதிநாவில் விளையாட
விசய மகள் நிர்த்த மாட
மேவல ருடன்பொரு சமர்க்களத் திற்பரியின்
மிசைப்பட்டு வித்துவசனங்
கொண்டாட வென்றட்ட திக்குந் திசைக்கம்ப*
கொடிகட்டி யுலகத்தில் வாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்களேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே. ருரு

மாலைகள்நிறைந்த மீனக்கொடியை வரகுணபாண்டியன் மகா மேருமலையில் பொறித்தநாளில் அம்மீனைப் பருந்து எடாவண்ணம் அதன்கண் வளரி என்னும் ஆயுதத்தின் வடிவத்தையும் பொறித்தோர்; வண்டுகள் நிறைந்து மொய்த்த முல்லைமலர் மாலையை யுடையோர்; துர்க்காதேவியின் அருளால்பெற்ற சிறந்த மந்திர வாளாயுதத்தினல் மதுரைப்பெருநகரில் எழுந்தருளியிருக்கும் சொக்கநாதப் பெருமானுக்குரிய சிறப்பான மரியாதைக்குரிய வரிசைகளைப்பெறும் தலைமையினை எய்தியவர்கள்; வெண்தாமரை மலரில் வீற்றிருக்கும் கலைமகள் நாவில்வந்து விளையாட; வெற்றிக்குரிய ஜல இலக்குமி பருத்த தோள்களில் நடனம்செய்ய; பகைவருடன் செய்யும் சண்டையில் யுத்தகளத்தில் குதிரைமீதமர்ந்து வித்துவான்கள் வெற்றியைப் புகழ்ந்து கொண்டாடும்படி வெற்றியோடு பகைவர்களை அழித்தும் எண்திசைகளிலும் திசைக்கம்பம் கட்டிக் கொடிநாட்டி யுலகில் வாளாயுதங் கொண்டு கோட்டைகளைக் கைப்பற்றும்படை வீட்டவர்களான ஐந்து கோட்டை வளநாட்டவர்கள் மறவர்கள்.

---

* நிரைக்கம்பம் என்றும் பாடம்.

கையெடுப் பதுபரஞ் சோதியைக் கடவுளைக்
கைதவனை யன்றி வேறு
கையெடார் சந்திரா தித்தர்திசை மாறினுங்
கடவ ரிவராணை யுலகில்
மெய்யெடுத் தவர்களிரு கையெடுத்துப் பரவ
விசயஞ் செலுத்தி யாணை
மேதினி யெலாஞ்செல நடாத்துமாக் கினைசக்ர
வெயிலிடுங் காவலாளர்;
வையம்பி டிக்கின்ற வாளெடுத் துறைவிட்ட
மாத்திரத்திற் கருதலார்
வாடிவிட் டொருவரொரு வரைவிட்டு நிலைகெட்டு
மனைவிகளை விட்டுமேறும்
கொய்யுளைப் பரிவீதி போய்மீள வொருசாரி
கொண்டுபகை வென்றுவடிவாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே. ருச

கைஎடுத்துக் குவித்து வணங்குவது மேலான ஒளிமயமாகிய கடவுளையே; கை எடுத்து அணைத்து அடக்கிக் கைக்குள் ஆக்கிக்கொள்வது வஞ்சகனை; அல்லாமல் பிறர் எவர்க்கும் கையெடுக்கமாட்டார்கள்; சூரிய சந்திரர்கள் திசைமாறி நடப்பினும் இவர் மறுவானையிற் கடவார்; உண்மையை யடுத்தவர்கள் தம் கைகளை எடுத்து வணங்க, வெற்றியைநாட்டித் தம் ஆணையை உலகமெங்கும் நடத்தும் ஆக்கினை சக்கரத்தின் ஒளியைப் பரப்பும் காவலாளர்; உலகத்தை எல்லாம் பிடித்துக்கொள்கின்ற வாளை உறையினின்றும் எடுத்தவிட்ட மாத்திரத்தில் பகைவர் வாட்டமுற்று ஒவ்வொருவரும் தத்தம் நிலைகெட, மனைவிகளை விடுத்தும் பிடரிமயிரையுடைய குதிரைமேல் ஏறிக் குதிரைப் படை செல்லும் (அரசுலாம்) தெருவழிச்சென்று மீண்டு ஒரு சவாரி செய்து பகைவர்களைவென்று வடிக்கப்பட்ட வாளாயுதங்கொண்டு கோட்டைகளைக் கைப்பற்றிக் காக்கின்ற படை வீட்டவர்களான ஐந்து கோட்டை வள நாட்டவர்கள் மறவர்கள்.

பெறுபே றினிற்றேவ ரிற்றலைவ ரிற்புவி
பிறங்கிட விளங்கு பேரோர்,
பிறவியுள சனனவா சனையின்மிக மனுமரபு
பெருகநிலை பெறுபுலமையோர்
சிறுவூழி யப்பரிச னங்கள்வள மிக்கினுஞ்
சேர்வைப்பினிற் பிறக்குஞ்
செல்வமக வாகினும் பெண்கொடார் தங்கள் முறை
செயலுங்கொடா மரபினோர்
உறுகால் வலிப்பெரும் படையாளர் செய்ந்நன்றி
யொருநாளு மறவாதவர்
உட்பகை விளைத்தகப டர்க்குமிடி யேறுதய
வுற்றவருயிர்க் குயிருளார்
குறுகார்க ளிட்டதளி யதிலேறி யவரிட்ட
கோட்டைதுக ளாக்கும் வடிவாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே. ௬௫

அடையக்கூடிய சிறந்த பெயரில் தேவர்களிலும், தலைமையான வர்களிலும் பூமியில் விளங்கும்படியாகப்பெற்ற பெயரினையுடையோர்; பிறப்பையுடைய சனனத் தொடர்பில் மிக்க மனுகுலம் பெருகுதலா யிற் றெனும்படி நிலைமையான சிறந்த அறிவினையுடையோர்; சிறு தொண்டுகளைச் செய்யும் மக்கள், செல்வத்தால் மிகினும், சேர்ந்த நிதிக்குப்பையில் விளங்கும் செல்வம் பொருந்தியவர்களாயினும் பெண் கொடாதவர்கள்; தங்கள் குலத்திற்குரிய முறைமையையும் செயலை யும் கொடாதவர்கள்; வலிமைபெற்ற மிக்க செருவென்ற படையாள ரின் செய்ந்நன்றியை என்றும் மறவாதவர்; தம் கூட்டத்தார்க்குள் பகைமையை விளைவித்த கபடர்களுக்கு சிறந்த பேரிடி போன்றவர் கள்; தம் தயவையும் அருளையும் எதிர்நோக்கி நிற்பார்க்கு உயிரையும் அளிக்கும் தன்மையுள்ள உயிர்போன்றவர்; பகைவர்கள் எடுத்த அர சர்க்குரிய கோயில்களில் ஏறிச்சென்று அவர்கள் கோட்டையைப் பொடியாக்கும் வடிக்கப்பட்ட வாளாயுதத்தைக்கொண்டு கோட்டை களைக் கைப்பற்றிக்காக்கும் படைவீட்டவர்களான ஐந்து கோட்டை வளநாட்டவர்கள் மறவர்கள்.

செண்டுசெலா ராதுவச மண்டலா திபனுன
தென்னனிரு கண்மணியெனத்
தினவரிசை பெற்றரச நிலையிடும தாசூர
செயவிசய புயவலியினேர்
துண்டவான் மதியணி சடைக்கடவு ளிவர்வாய்ச்
சுவைத்தசையி மனச்சிறின்று
சுற்றங் கலந்தபின் வளப்பிலொரு பெண்ணவன்
ருேன்றலுக்குக் கொடுத்தோர்
கண்டுபா தங்கள்பணி கின்றிலா ரைப்புறங்
கண்டுகழு காடவென்று
கண்டநா டதுகொண்டு கொண்டநா டெதிர்கண்டு
கப்பங் கொடுத்தடிதொழக்
கொண்டநா டருமைகள் கைக்குநீர் வார்த்துக்
கொடுத்ததிசை யோருலகில்வாட்
கோட்டையிடு கின்றபடை வீட்டவர்க ளேவைந்து
கோட்டைவள நாட்டவர்களே. ௩௬

செண்டு செல்லாத இடமில்லாத கொடியையுடைய மண்டலாதிப னுன பாண்டியனுக்கு இருகண்மணிகளைப்போன்று, தினமும் அரசர்க்குரிய வரிசைகளைப்பெற்று அரசாட்சியை நிலைபெறச்செய்யும், ஆசுர வெற்றியும் வீரமும் வாய்ந்த புயவலிமையையுடையோர்; பிறைச் சந்திரனை யணிந்த கடவுளான சிவபெருமான் விளங்கிய தம் திருவாயால், மறவன் சுவைத்த மாமிச எச்சிலைத் தின்று; சுற்றத்தோடு உறவு கொண்டபின்பு வளப்பமான ஒருபெண்ணை அவன் மகனுக்கு அளித்தவர்கள்; தங்களைக்கண்டு பாதங்களைப் பணிகின்றவர்க ளல்லாத பகைவர்களை முதுகுகாட்டி யோடும்படிசெய்து அவர்கள் கழுகுகள் தின்னும்படியாகப் பார்த்தவர்களும் அவர்கள் நாட்டைக் கைக்கொண்டு, அவர்கண்டு தாம் கப்பம் இறுப்பதாக முறையிட்டு நாடளிக்குமாறு அடிகளில் வணங்க, தாம் கொண்ட நாட்டரசியின் கைகளில் நீர் வார்த்துக் கொடுத்தாற்போல் அவர்கள் நாட்டை யளிக்கும் கீர்த்தியை யுடையோர்கள்; உலகில் வாளாயுதங்கொண்டு கோட்டைகளைக் கைப்பற்றிக் காக்கின்ற படைவீட்டவர்களான ஐந்து கோட்டை வளநாட்டவர்கள் மறவர்கள்.

### சே - சிவ, (சிவந்த நிறம் கோள்)

வினைச்சொல் ஏவல்

[ச்+அ - இ=இ - அ+உ+அ=சிவ=சே] நயமாகிய குளிர்ச்சி தட்டு நிலையில் தூரத்துக்கு ஒளிகொண்டே தடித்திருள்பட்டும் சமீபத்தில் மெலிந்து வெளிறியும் கறுப்பு வெள்ளை என்று சொல்லத்தகாத வேறோர் நிறமாகு என்னலின், சே=சிவ சிவந்த நிறப்படு எனல் ஆயிற்று.

### சே - சிவப்பு

பெயர்ச்சொல்

[ச்+இ+உ—சிவ=சே] மேற்கூறிய அமைதியின் வண்ணமே—சே=சிவப்பு நிறம் எனலாயிற்று.

### சே - சேமரம், சேரான்மரம், அழிஞ்சில் *

பெயர்ச்சொல்

[ச்+அ, இ. இ+அ+உ+அ=சிவ, சே] மேற்கூறிய சிவப்பு நிறம் அல்லது செங்காழ்கொண்ட ஓர் நிலையுயிர்ப் பொருள் என்னலின், சே=செம்மரம், சேரான்மரம், அழிஞ்சில் எனல் ஆயிற்று.

### சே - விலங்கேற்றின் போது

பெயர்ச்சொல்

[ச்+ஏ=சே] இரைச்சலை ஏவிநிற்கும் அலை உயிர்ப் பொருள்களாதலின், சே=விலங்கேற்றின் பொதுவெனல் ஆயிற்று.

### சே - எருது, குதிரை, புல்வாய் (மான்) †

பெயர்ச்சொல்

[ச்+ஏ=சே] இரைச்சலாகிய முக்காரங்கொண்டு, ஊர்தியாயமைதலின், நாட்டுச் சேவினமாய் எருதுக்கும், நாட்டினும் காட்டினும் செல்வதாய ஆண் குதிரைக்கும்,

---

* அங்கோலஞ் சேவழிஞ்சில் சேமரமென்றுமாகும்.
—சூடாமணி நிகண்டு.

† கடுவன், மா, ஒருத்தல், போத்துக், கலை, தகர், களிறு, சேவினொடு பகடும்ப லேறோ டேரி யீராறு மாண்பேர்.
—சூடாமணி நிகண்டு.

இரைச்சலுக்கு அஞ்சி அலைந்து காட்டில் உலவுவதாகிய மானுக்கும், சிறப்பிற்சேவினம் எனல் ஆயிற்று. "சே" என்பது ஒலிக்குறிப்பிற் சத்தத்தை ஏவி நிற்பது என்னும் குறிநிலைக்கு வழக்கத்தில், கூட்டமும் இரைச்சலும் கொண்ட ஓரிடத்தை "அங்கு சேசே எனக் கிடக்கின்றது" என்று சொல்லுதலானும் உணர்க.

### சே - இடபம்

பெயர்ச்சொல்

[ச்+ஏ=சே] இடபவிராசி சேவினத்துண் முதன்மையான எருதுபோன்றுள்ள தென்பதால், சே=இடபவிராசி எனல் ஆயிற்று.

### சே - (மேன்மை) உயர்வு

பண்புப்பெயர்

[ச்+ஏ=சே] மனக்குளிர்ச்சி பொருத்தும் நயத்தையேவி நிற்பதோர் குணமெனப்படுதலின், சே=மேன்மையாகிய உயர்ந்த என்னும் பண்பாயிற்று.

'சே' என்பது எதிர்மறைப்பொருள் ஆய உரப்பலின் ஏ=அடே என்பதுபோல, சே என்பது 'இது என்ன பேச்சு!' எனும் குறிநிலையில் எதிர்மறைப்படுவதாயிற்று.

### தே - (கிருபை) அருள், இரக்கம்

பெயர்ச்சொல்

[த்+ஏ=தே - உ+உ=தே=தே] இம்மொழியை-ஓயா என்பதன் திரிபாய் வடசொல்லென்றே வழக்கும் பற்றும் பெற்று நின்றாலும் தமிழ்ச் சொல்லாக அமைத்துப் பார்ப்பதினும் அப்பொருளமைதி பெறுமற் போகவில்லை. எவ்வாறெனில் த்—அகமுக விழிக்குத் தோற்றப்படு நிலையில் தன்பாற்படும் ஒன்றை நல்ல நிலைமைக்குச் செலுத்தி நிற்கும் பண்பு அல்லது, தன்னுள் மிகுந்த துயரத்தோடும் வருந்திநிற்பாரைக் காணநேரின், அத்துயரமும் வருத்தமும் தன்னில் நிகழ்ந்தனவாகவே ஏற்று ஆகவேண்டுவன செய்துமாற்ற ஏவப்படும் பண்பு எனவும் அமைதிபெறுதலின், தே=தேவு-தயவு என்னும் அருள்—தே=தயை என்னும் இரக்கம் என்னும் பொருள் கொள்ளலாயிற்று எனக் காண்க.

---

* செருமலி குதிரை பெற்றம் புல்வாயே சேவென்றாகும்.
—சூடாமணி நிகண்டு.

## தே - கடவுள்

பெயர்ச்சொல்

[த்+ஏ+உ+உ்=தேவு, தே] அகமுகப் பார்வைக்கு எட்டும் தோற்றங்களாகிய எல்லா உயிர்களிலும் ஏவியாண்டு நிற்கும் ஒப்பற்ற ஓர்பொருளாயும், முற்கூறிய அருளையும், இரக்கத்தையுமே வடிவாகக்கொண்டதாயும் உள்ளதே தேவெனப்படுதலின், தே=கடவுள் என்றாயிற்று. இது *தேவ: என்னும் வடமொழித் திரிபாக வன்று, இயன்மொழியாகிய தேவு—தே என்பதற்கே, மேற்கூறிய அமைதி என நன் குணர்க.

## நே - நேயம் (நட்பு)

பெயர்ச்சொல்

[ந்+இ+உ+அ=நிவ—நே—ந்+இ. அ. அ. இ-நே] ந்-உயிர்த்துணைத்தன்மை இதுவே மற்றதுவென அமைவது என்றும், இதுதானே அது? அதுதானே இதுவென வினவு விப்பதென்றும் அமைதலால், நே=நேயம், நட்பு என்னலாயிற்று.

## பே - நுரை

பெயர்ச்சொல்

[ப்+ஏ=பே] நீர்மேற் பொதிபொருளாய் நீரிலிருந்தும் ஏவப்பட்டமைந்த தோற்றமாதலின், பே=நீர் நுரை என்று யிற்று. வடநூலார் ஃபே-நுரை எனவும், அதன் திரிபே இதுவெனவும் கூறுவர். உரப்பலற்ற தமிழ்மொழியாகக் கொள்ளினும் மேற்பொருளமைதி ஒத்தே நிற்றல் காண்க.

## பே - முகில்

பெயர்ச்சொல்

[ப்+ஏ=பே] மண்ணிலிருந்தும் விண்ணுக்கு நீராவியா யெழுந்து விண்பொதி பொருள வுருக்கொண்டு பரந்துநின்று தன்னுள் அடங்கி நிற்கும் நீரை விண்ணிலிருந்தும் ஏவி மண் மேற்பொதி பொருளாகிய மழை பெய்வித்தலின், பே=முகில் எனலாயிற்று.

---

* ஈனமிலணங்கு புத்தேள் எற்றசூர் கடவுள் தேவே.

—சூடாமணி நிகண்டு.

### மே - அன்பு

பெயர்ச்சொல்

[ம்+ஏ=மே] மனம் ஒப்புநிலே, மனநிறைவு, மன மகிழ்ச்சி, இன்பம் இவற்றைத் தன்னிலிருந்தும் ஒன்றுக்கு ஏவிப் பொருத்துவிப்பது அன்பே.—ஆதலின், மே=அன்பு என்னும் பண்புப் பெயராயிற்று.

### மே - ஆசை

பெயர்ச்சொல்

மேவு—மே என விகாரப்பட்ட வினைச்சொல்லாகுங்கால். [ம்+ஏவு] என்னும் அமைதியில், ஒப்புநிறைவு மகிழ்ச்சி இன்பு என்பவற்றை ஏவு-(அனுப்பு, எய், எழுப்பிவிடு, கட்டளை யிடு, கற்பி, செலுத்து, தூண்டிவிடு, என்ருகி, உண்ணல், ஒப் பாக்கல், சேரல், நிரவல், பொருந்தல் என ஆங்காங்கு குறி நிலைக்கோள் பெற்றமைதலின், இவையாவும் ஆசையின்பாற் படுவன ஆதலின், மே=மேவு—ஆசை எனல் அமையும்.

மே என்பது எதிர்மறைத் தெரிநிலைவினை; வினைஎச்ச விகுதி உருபிடைச்சொல் ஆகுங்கால், உண்ணுமே போனுய்- உண்ணு நிலைமையில் மனவொப்புமேவிப் போனுய் என்னும் குறிநிலை யமைதல் காண்க.

### வே - வேகு, அவி.

வினைச்சொல் ஏவல்

[வ்+இஃகு+அஃகு=வேகு=வே] வ்—உள்ளிலிருந்தும் வெளிப்படத்தக்க வலிமையை இப்புறம் போக்கித் தன்னி லொடுங்கி அஃகிவலி குறைந்தழிஎன அமைதலின், ஓர் பொருளை வேகுவித்தலும் நீரிற்பெய்து அடுப்பேற்றித் தீயிட் டெரித்து வேகுவித்தல், அப்பொருளில் முன்பு ஒத்திருந்த உறுதிப்பாடு ஒழிந்து மெலிந்து நொய்வதே அவிதல் என லால், வே=அவி, வேகு எனல் அமைந்தது. இவ்வினைச் சொல் சாவென்பது ஒரே முறை நிகழுந் தொழிலாய், மறு நிகழ்ச்சி இல்லாமையை விளக்க இறந்த காலத்துக்குச் செத்து, செத்த என்றுனற்போல, வே என்பதும் ஒரே நிகழ்ச்சித் தொழிலாதலின் வெந்த வெந்தது என வந்தமை காண்க.




சிலம்பு-கச] யுவ—தை [பரல்-சு

## திருநாவுக்கரசு அடிகள் தேவாரம்

### திருவையாறு—திருவிருத்தம்

சிந்திப்பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப்பொழிவன முத்திகொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்துநின்ற பழவினை தீர்ப்பன பாம்பு சுற்றி
அந்திப்பிறை அணிந்தாடு மையாற னடித்தலமே.

பதவுரை:—

பாம்புசுற்றி (உம்.)—சடையினைச் சுற்றிப் பாம்பினைத் தரித்துக் கொண்டும்,

அந்திப்பிறை அணிந்து (உம்)—பகலுமிரவும் சேர்கிற அந்திநேரத்திலுள்ள செவ்வானம்போன்ற நிறத்தினையுடைய இளம்பிறைத் திங்களை அணிந்துகொண்டும்,

ஆடும்ஐயாறன் அடித்தலம்—(உயிர்கள் இன்பநலமடையும் பொருட்டு எப்பொழுதும்) பொதுவில் திருநடனம் செய்கின்ற திருவையாறு என்ற திருப்பதியில் வீற்றிருக்கின்ற சிவபெருமானுடைய திருவடிகள் இரண்டும்,

சிந்திப்புஅரியன—(நுகரப்படாமல் எஞ்சி நின்றதாகிய முன்செய்த தீவினையினால் தடைபட்டு முயலாதிருக்கின்ற உள்ளத்தை உடையவர்கள்) தங்கள் உள்ளத்தில் நினைந்து உருகி வணங்குதற்குக் கடந்திருப்பனவாயுள்ளன.

மொய்த்துஇருண்டு பந்தித்துநின்ற பழவினை தீர்ப்பன—(முன்செய்த தீவினை தடைசெய்யினும், அதனைப்பொருட்படுத்தாது திருவருளை நினைந்து அதனைத் துணையாகக்கொண்டு முயலும் உள்ளத்தை உடையவர்களுக்கு) அவர்களைநெருங்கி அறியாமையைச் செய்து கட்டுறுத்தின பழையதீவினைப்பயனை நீக்குவனவாகி,

சிறந்துசெந்தேன் முந்திப்பொழிவன—அவர்களுடைய உள்ளத்தில் சிறப்பாகவிளங்கி நாவிற்கு இனியசுவைபயக்கும் சிவந்த தேனைப் போலச் சுத்தமாயா புவனபோக இன்பத்தை நினைந்தவுடனே இடையறாது அளிப்பனவாயுள்ளன;

முத்திகொடுப்பன—தீவிரதர சத்திநிபாதம் நிரம்பப்பெற்றுப் பக்குவ மடைந்தகாலத்தில் அவர்களுக்கு வீட்டின்பத்தையும் கொடுப் பனவாயுள்ளன.

விளக்கவுரை:—

பாம்புசுற்றி—பாம்பு என்பது குண்டலினி ஆகிய சுத்தமாயையைக் குறிக்கிறது. சிவபெருமான் சுத்தமாயையை நேரே இயக்குதலி ஞல் அவனைப் பாம்புசுற்றி நடனஞ்செய்கின்ருன் என்று அடி கள் கூறினர்.

அந்திப்பிறை அணிந்து—அந்திப்பிறை அணிந்து என்றதனுல் சிவ பெருமான் தன்னைஅடைந்தவர்களைக் காத்தருள்செய்கின்ருன் என்பது குறிப்பிடப்பட்டது.

அடித்தலம்—அடிகளாகிய தலம்; இருபெயரொட்டுப் பண்புத்தொகை —தலம் என்பது (அருள்) இடம்; எல்லாஉயிர்களும் வீடுபேறு அடைதற்கு உரிய இடமாயிருத்தலின் அடித்தலம் என்ருர். ஏ—அசை.

சிந்திப்பு அரியன—சிந்திப்பு என்பது நினைத்தல்; அதாவது சிவபெரு மான் தங்கள்பொருட்டுச் செய்துவரும் அருட்செயலை நினைந்து உருகி அன்புசெய்தல். அரியன—அருமையை உடையன; அருமைஇங்கே இன்மை என்னும் பொருள்பட நின்றது; இதனை அடுத்துப்பின் 'மொய்த்திருண்டு பந்தித்துநின்ற பழவினை தீர்ப் பன' என்று வருதலின் சிந்திப்பு அரியன என்பதற்கு நுகரப் படாது எஞ்சிநிற்பதாகிய முன்செய்த தீவினையினுல் தடைப் பட்டு முயலாதிருக்கின்ற உள்ளத்தை உடையவர்களுக்கு என்ற அவாய்நிலைக் கருத்தை வருவித்துப் பொருள்கூறப்பட்டது. அடிகள் சிந்திப்பரியன என்று கூறியபின் சிந்திப்பவர்க்கு என்று கூறுதலால் அவ்வாறு பொருள்கொள்ளுதல் பொருத்த முடை யது என அறிக. சிவபெருமானது திருவருளின் துணையால், முன் செய்த தீவினையின் பயன் நீங்கப்பெறும் என்று தேவார திருவாச கங்களில் பல பாட்டுக்களிற் கூறப்பட்டிருக்கின்றன: "வாழ்கின் ருய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்—டாழ்கின்ருய் ஆழாமற் காப்பானை யேத்தாதே—என்று மாணிக்கவாசக அடிகள் திரு வாசகத்திற் கூறினமை காண்க.

மொய்த்திருண்டு பந்தித்துநின்ற பழவினை தீர்ப்பன—மொய்த்து= நெருங்கி; இருண்டு என்பது இருளானது கண்ணுக்குப் பக் கத்திலிருக்கிற பொருளைத் தெரியவொட்டாமல் மறைத்தல்

போல உலகவிடயங்களை அறியவொட்டாது மயக்கி என்று பொருள்படும். மொய்த்திருண்டு பந்தித்துநின்ற என்று பழ வினைக்கு அடைகொடுத்தலால் பழவினை என்பதற்குத் தீவினை என்று பொருளுரைக்கப்பட்டது. நல்வினையும் தீவினைபோல வீட்டுநெறியை அடைதற்குத் தடையாயிருப்பினும், அருளுக்கு மாறுகாத அறத்தின்வழி யொழுகுதலாலுண்டாகும் அவ்வினை அதனைச் செய்கிறவர்களுக்கு உலக இன்பத்தைப் பயந்து அவர் களுடைய உள்ளத்தில் அறஉணர்வை (Moral sensibility) உண்டுபண்ணி அதனால் அவர்கள் உலகநெறியைக்கடந்து வீட்டு நெறியை அடைதற்கு நேரே ஏதுவாயுள்ளது. தீவினையானது அதனைச் செய்கிறவர்களுக்குத் துன்பத்தைப் பயந்து அதனால் அவர்களை அதினின்றும் விலக்கி நல்வினையைச் செய்தலில் உறுதியாய் நிற்கும்படிசெய்து நல்வினைவழியாக வீட்டு நெறி யை அடைதற்கு ஏதுவாயுள்ளது. இந்தக்காரணத்தாலும் பழ வினை என்பதற்குத் தீவினைஎன்ற பொருள் பொருத்தமுடையது எனஅறிக. பழவினைதீர்தலும் பின்னே கூறப்படுகிற செந்தேன் பொழிதலும், ஏதுவும் பயனுமாயிருத்தலின் தீர்ப்பன என்ற வினைமுற்றைத் தீர்ப்பனவாகி என வினையெச்சப் பொருளாகக் கொண்டு பொருள் உரைக்கப்பட்டது.

சிறந்து செந்தேன் முந்திப்பொழிவன—சிறந்து என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவாய் விளங்குவதுபோல அன்றிச் சிறப் பாக விளங்குகின்ற பொருளில் வந்தது.

செந்தேன்—தூய தேன் சிவப்புநிறமுடையதா யிருத்தலின் செந்தேன் என்றார். செந்தேன் பொழிவன என்பது உருவகம். நாவிற்கு இனியசுவைதரும் தூய தேன்போல, உள்ளத்தில் தூய இன் பம் பொழிவன என்பது அவ்வுருவகத்தின் பொருள். இந்த இன்பமானது அசுத்தமாயாபுவன போக இன்பம்போல அல் லாது சுத்தமாயா புவனபோக இன்பத்தைக் குறித்தற்கு அடி கள் செந்தேன்போல தூயதான இன்பம் என்று கூறினர்.

பொழிதல் என்பது இடையறாது மிகும்படி அளித்தல். முந்தி என்ற சொல் சிந்தித்தவுடனே இன்பம் அளித்தலைக் குறிக்கிறது. பின்னே முத்திகொடுப்பன என்று வருதலால் செந்தேன் என் பதற்குச் சுத்தமாயா புவனபோக இன்பம் என்று பொருள் உரைக்கப்பட்டது.

இது அபரமுத்தி இன்பம்; பின் கூறப்படுகிற இன்பம் பரமுத்திஇன் பம் ஆகும்.

மா. வே. நெல்லையப்பபிள்ளை.

---

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## "வெண்பாவில் புகழேந்தி"

(உஉசு-ஆம் பக்கத் தொடர்சசி)

[வேலணையூர் பண்டிதர் திரு. கா. போ. இரத்தினம் அவர்கள்]

இறுதிச் செய்யுள் இடைக்காலத் துள்ளவர்களால் புகழேந்தியாரை உயர்வுபடுத்தி ஒட்டக்கூத்தரை இழிவுபடுத்துவதற்காக ஆக்கப்பட்டு வழங்கப்பட்டு வருகின்றதோ? அன்றேல் அவ்விரு கலைவாணர்களும் பாடியதுதானே வெனத் தெரியவில்லை. அவ்விருவரும் பாடியதுதா னெனில் இவ்வெண்பாவிலும் புலவர் புகழேந்தியிருக்கிறார் என்பது வெள்ளிடை. என்னை? செம்பியனைச் சிறப்பிக்கும் நோக்கமாகப் பாடத் தொடங்கிய கூத்தர் தம் பாட்டின் பாதியை முடிக்க முன்னுவதற்குள் புகழேந்தியார், வெண்பா விசைப்பதில் தமக்குள்ள அளவிறந்த ஆற்றலால் முட்டின்றி யதனை முடித்துத் தம் மரையனைப் புகழ்ந்து செம்பியனைப் பழித்தமையினா லென்க.

வழுதி தன்வரமகளைப் பொன்னி நாடாளும் புரவலனுங் குலோத்துங்கனுக்கு மனைவியாக்க மனமிசைந்தான். கூத்தர் சோனுடு சென்று செய்தியைத் தெரிவித்தார். மணச்செய்தியை யறிந்த மாந்தரனைவரும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தனர்.

மணவினை மதுரைமாநகரில் பல சிறப்புக்களோடு நடத்தப்பட்டது. சில நாட்களில் சோழன் தன் மனைவியுடன் தன்னுடு சென்றான். புகழேந்தியாரும் அந்நாடு சென்றார். புகழேந்தியாரது வருகையையறிந்த கூத்தர் முன்னரே அவர் மீது தமக்கிருந்த புலமைக் காய்ச்சலால் அவரைச் சிறைசெய்வித்தார். ஊழ்வினை உயர்வு தாழ்வு பாராது எவரையும் ஒரு தன்மையராகவே மதித்துத் துன்புறுத்தும் வன்கண்மையுடையது.

"ஒள்ளியர் தெள்ளியராயினும் ஊழ்வினை வைபயநுழைந்துவிடும்" என்பதை நம் புகழேந்திப்புலவர் நன்கறிந்தவ ராதலால், அவர் தமக்கு நேர்ந்த விதியை வெறுத்துரையாராய் அதனைத் துய்த்து வந்தார். இன்னுமிவர் தமது நளவெண்பாவில் இவ்விதியைப்பற்றி இடையிடையே "கடப்பாரெவரே

கடுவினையை'' "பண்டைவினைப்பயனைப் பாரிடத்தில் யார் கடப்பார்"? " மாயம் பல சூழ்ந்து தெய்வங்கெடுத்தாற் செய லுண்டோ '' எனக்கூறியிருப்பன ஈண்டுக் கவனித்தற்குரியன. சிறையிலிருந்த புலவர் அவ்வழியால் தண்ணீர் மொள்ளச் செல்லும் பெண்கள் காதுக்கு இனிமையாயும் எளிதிற் பொருள் விளங்கும்படியாயும் பாரதத்தின் சிலகதைகளை அல்லியரசாணி மாலை, பவளக்கொடி மாலை, முதலிய நூல் களாகச் சொற்சுவை, பொருட் சுவை தோன்ற யாத்து அவர் கள் கேட்கும்படி கூறினர்.

அவர் கூறியன யாவும் மாதர் நிறையினை விளக்கி அவர் மனதை ஈர்க்கும் இயற்கை நலம் வாய்ந்திருந்ததினால் அப் பெண்கள் பல உணவுப் பொருட்களைக் கொடுத்து அவரை உபசரித்தனர். இவ்வாறு இவர் சிறையிலிருப்பதை யறிந்த பாண்டியன் திருமகள் தன் நாயகனுற்றும் அரசியல் வழுவால் தன் ஆசிரியராகிய தண்டமிழ்ப் புலவர் சிறையிலிடப் பட்ட னர் என்றெண்ணி அதனைத் தீர்ப்பதற்காக அரண்மனையின் பொற்கதவைச் சாத்தித் தாழிட்டாள். அரசியின் செயலிற் குக் காரணம் விளங்காத அரசன் தேவியின் ஊடலைத் தணிப் பதற்குத் தனது தமிழ்ப்பேரவையின் தமிழ்ப்புலவரும் தனது ஆசிரியருமான ஒட்டக்கூத்தரை யழைத்து, அரசியின் பிணக் கைத் தீர்க்குமாறு அனுப்பினன். கூத்தரு மரசன் விருப்பப் படி அந்தப்புரத்தை யடைந்து தாழிட்ட கதவின் அருகி லிருந்து பாடினர். அவர் பாடலைக் கேட்ட பாண்டியன் மகள் மிகுந்த சிற்றமுடையவளாய் 'ஒட்டக்கூத்தர் பாட்டிற்கிரட் டைத்தாழ்' என்று மற்றொரு தாழையும் சடக்கென இட்ட னள். கூத்தர் மிகவும் வெட்கமும், துக்கமு முடைய வராய்க் குலோத்துங்கனிடஞ் சென்று நிகழ்ந்ததை யுரைத் தனர். பின்னர், புகழேந்தியாரைச் சிறையிலிட்டமையே அரசியின் ஊடலுக்குக் காரணமென உணர்ந்த அரையன் அவரைச் சிறையகத்தினின்றும் அழைப்பித்து இன்னுரை கூறி அரசியின் ஊடலைத் தணிக்குமாறு அனுப்பினன். புலவர் பாண்டியன் புதல்வியின் பள்ளியறையின் பொற்கதவு அருகு போய்.

"நானே யினியுன்னை வேண்டுவதில்லை நளின மலர்த்
தேனே கவாடம் திறந்திடுவாய் திறவா விடிலோ
வானே றனைய இரவி குலாதிபன் வாசல் வந்தால்
தானே திறக்கு நின் கைத்தல மாகிய தாமரையே''

எனும் விழுமிய பொருளையுடைய இனிய செய்யுளைச் செப் பினர். இச்செய்யுளைக் கூத்தர் கூறியதாகக் கூறுவார் கூற்

றப் பொருத்தமுடைய தொன்றன்று. இச் செய்யுளில் "நளினமலர்த் தேனே"யென வழுதிமகளை அன்பு கலந்த இன் சொற்களா லழைத்தமையும் 'இரவிகுலாதிபன் வந்தவிடத்து, கைத்தலமாகிய தாமரை கதவைத்திறக்க வேண்டு'மெனக் குறித்தமையும், வியக்கத்தக்கன. புலவர் செப்பிய செய்யு ளின் நுண் பொருள் நலத்தைத் தெள்ளிதி னுணர்ந்த பாண் டியன் புதல்வி புனிற்றுவின் குரலைக் கேட்டுச் செல்லுமிளங் கன்றைப்போல் கவாடத்தைச் சடக்கெனத் திறந்து அவ ரருகு சென்று வணங்கினுள். அவர் அவளுக்குப் பல ஆறுதல் மொழிகளை யறிவுறுத்தி அவளுடைய சிற்றத்தையும், துக்கத் தையுமாற்றினர். அப்பால் புலவர் புரவலனால் மிகவும் போற் றப்பட்டு அவன்றனவைக்களப் புலவராய் விளங்கிவந்தார். சில நாட்களின் பின்னர் புகழேந்தியார் சோணுடு நீங்கி, புலவர் களைப் பொன்போற் போற்றுவதிலும் தமிழாராய்வதிலும் மிகவும் சிறப்புடையவனுய் விளங்கிய மள்ளுவநாட்டுக் குறுநில மன்னனுகிய சந்திரன் சுவர்க்கியிடம் சென்றனர். புலவரைக் கண்ட புரவலன் மனமிக மகிழ்ந்து வரவேற்று, இருக்கை நல்கி, இன்னுரை கூறி உபசரித்தான். நம் புலவர் அவனது அருந்தமிழ் அவையில் தலைமை தாங்கி அவனுடனுறைந்து வந்தார். அருந்தமிழ் அன்னையாகிய ஔவையாரைப் பாந்த னென்பானும்; கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பரைச் சடையப் பவள்ளலும்; வில்லிபுத்தூராழ்வாரைக் கொங்கர் கோமானும்; மண்டல புருடரை, விஜய நகரத்து வேந்தனும் எவ்வாறு போற்றி யாதரித்து வந்தனரோ அவ்வாறு புலியேறுபோன்ற புகழேந்திப் புலவரைச் சந்திரன் சுவர்க்கியு மன்புடன்போற்றி யாதரித்து வந்தான்.

இவ்வாறு, ஆதரித்துவரும் நாட்களில், புரவலன் புக ழேந்திப் புலவரை நோக்கி வடமொழிப் பாரதத்திலுள்ள நளனது வரலாற்றைச் செந்தமிழ்ப்பாவிற் செவ்வனே பாடித் தமிழுலகத்துக்கு நல்விருந்தளிக்க வேண்டுமென்று கேட் டான். அதனைச் செவிமடுத்த செந்தமிழ்வாணர் அவனது செவ்விய உள்ளத்தையும் பிறர்க்குதவும் பான்மையையும், புலவரை யாதரிக்கும் தன்மையையும், தமிழிடத்துக் கொண்ட ஆர்வத்தையும், தமது நன்றியறிதலையும், சூதாடலின் தீமையையும், பண்டைவினைப் பயனைப் பாரிடத்தில் ஆர் கடப் பார் என்பதனையும், இன்னும் பன்னீதிகளையும் உலகினர்க் கறிவிக்க எண்ணி, 'புலவர்க்கு வெண்பாப்புலி' யெனச்சிறப் பித்தோதப்பெறும் வெண்பாயாப்பில் நானூற்றுக் கதிகமான செய்யுட்களால் நள சரித்திரத்தைத் தெண்டிரை அமுது

மொவ்வாத் தீஞ்சுவை நனி சொட்டச் செவ்விதிற்பாடி, யாவ ரும் கேட்டு இன்பவாரிதியி லழுந்துமாறு, அவனது அவைக் களத்தில் அரங்கேற்றினர்.

நளவெண்பா வென்பது நளனுடைய சரித்திரத்தைக் கூறும் வெண்பாவாலாகிய நூலெனப் பொருள் படுதலின் அடையடுத்த கருவியாகு பெயர். இதற்கு முதனூல் வியாச பாரதத்திலுள்ள நளோபாக்கியனம் என்பர். இது பாயிரம், கலிதொடர் காண்டம், கலி நீங்குகாண்டம், சுயம்வர காண் டம் என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வட மொழி நைடதத்தின் வழிநூலாக அதிவீரராம பாண்டிய னியற்றிய நைடதமும் நள சரித்திரமே கூறுகின்ற தெனினும் புகழேந்தியார் கூற்றிற்கும் பாண்டியனுடைய கூற்றுக்கும் பல வேற்றுமைகள் காணப்படுகின்றன.

தேவர்களால் தூதனுக அனுப்பப்பட்ட நளனொடு தமயந்தி உரையாடினுளென்று நளவெண்பா கூற, நைடதமோ தோழியர்களே உரையாடினுர்களென்று கூறுகிறது. நைட தத்திற் கூறப்படும் நளன் தமயந்தியிடம் தூதுசென்று மீண்ட பின் அன்னம் தமயந்தியைச் சந்தித்தது என்பதும், தமயந்தி நளனுக்குச் சுயம்வர மாலை சூட்டியதைப் பொருத இந்திர னேவலால் மற்றைய அரசர்கள் அவனோடு பொருதனர் என்ப தும், நள வெண்பாவிற் காணப்பட்டில. இன்னும் வேடனை நீருக்கியபின் தமயந்தி வணிகனொருவனைச் சந்தித்தாளென் றும் அவனுற் சேதிநகர்க்கேகும் வழியை யறிந்தாளென்றும் நளவெண்பா கூற நைடதம், அவள் முனிவர்களைச் சந்தித்தா ளென்றும், வணிகர்கள் பலரைக் கொன்ற யானையொன்றைச் சந்தித்தாளென்றும் கூறுகிறது. இவ் வேறுபாடுகளுக்கு இவற்றின் முதனூல்கள்தாம் காரணம் போலும். நிற்க.

முதல் முதல் நள சரித்திரம் சுருக்கமாகப் பொறிக்கப் பெற்றுள்ள தமிழ்நூல் சேரர் சிகாமணி செய்த சிலப்பதிகார மேயாகும். அதில்.

“வல்லா டாயத்து மண்ணர சிழந்து
மெல்லியல் தன்னுடன் வெங்கா னடைந்தோன்
காதலிற் பிரிந்தோ னல்லன் காதலி
தீதொடு படூஉஞ் சிறுமைய ளல்லள்
அடவிக் கானகத் தாயிழை தன்னை
இடையிருள் யாமத்திட்டு நீக்கியது வல்வினையன்றோ”

எனமிக நன்ருய்க் கூறப்பட்டிருக்கிறது.

---

# மெய்யறிவின் மாண்பு*

[திரு. வித்துவான் S. மஹாலிங்கம் அவர்கள்]

உலகிலுள்ள உயிர்ப்பொருள்கள் அனைத்தும் ஒவ்வொரு வகையில் அறிவுடையனவாகவே தோன்றுகின்றன. இயற்கையாக அமைந்த அறிவுக்கு மேன்மேலும் பயிற்சி அளிக்கப் படும்பொழுது நாற்புறமும் தீட்டப்பெற்ற வைரம் போன்று ஒளிவிட்டு இலங்குகிறது. இன்றேல் தீட்டப்பெறாத வைரக் கல் போன்று ஒளியிழந்து கிடக்கின்றது. நன்கு பண்படுத்தப்பட்ட அறிவானது, நமது கண் மறைவில் நின்று உலகினை இயக்கிவரும் இறைவன் போன்று மக்களது புறக்கண்ணுக்குப் புலப்படாமல் நின்று உலகினை உய்விக்கின்றது. அவ்வறிவு ஒருவனுக்கு நல்வழி உய்க்கும் நற்றுணையாகவும், பேரின்பமளிக்கும் பெருஞ் செல்வமாகவும், பகைவரை அழிக்கும் படைக்கலமாகவும் உதவுகிறது.

இத்தகைய ஆற்றலை அறிவானது புத்தகக் கல்வியால் மட்டும் அடைய இயலாது. நூல் நிலையங்களில் காணப் படுகின்றகோடிக் கணக்கான நூல்களெல்லாம் நம் முன்னோர்களின் அனுபவ அறிவினால் ஆக்கப்பட்டனவே யன்றி வேறல்ல. ஆதலால் சிறந்த அனுபவ அறிவின்றி நிறைந்த நூலறிவால் மட்டும் அடையும் பயன் அதிகம் இல்லை. ஒரு நூலில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைத் தம் அறிவிற்கும் அனுபவத்திற்கும் ஏற்றனவா என்று ஆராய்ந்து தாம் கொள்ளும் முடிவுக்கு ஏற்ப வாழ்க்கையின் போக்கினை ஒருவர் செப்பஞ் செய்தல்வேண்டும். ஆனால் நூல்களைக் கணக்கின்றிப் படிக்கிற பெரும் பாலோரிடம் இதனைக் காண்பதரிது.

அவ்வாறு படிப்போருட் பலர் தமக்கென ஒரு குறிக்கோள் இன்றிக் கண்ணில் காண நேரும் நூல்களையெல்லாம் ஆழ்ந்த கவனமின்றிப் படித்துப் பொழுதைக் கழிக்கின்றனர். அவர்கள் பயின்ற நூல்களிற் சில சிறந்த நூல்களாய் இருந்த போதிலும், அவற்றில் கூறப்பட்ட பொருள்கள் நன்கு ஆராய்தலின்றி விடப்பட்டமையால் அவர்தமது கல்வி "சமயத்திற்கு உதவாக் கல்வியாக" ஆகிவிடுகிறது. இங்ஙனமின்றி ஒருநூலில் கூறப்படும் கருத்துக்களை யெல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருதலும் அனைவருக்கும் இயலக்

---

* [G. S. Marden அவர்கள் இயற்றிய Push to the Front என்ற நூலில் Tact or Common Sense என்ற கட்டுரையின் சில கருத்துக்கள் இங்கு ஆளப் பட்டுள்ளன]

கூடியதாகத் தோன்றவில்லை. ஏனெனில் அதற்குப் பெரும் உழைப்பும் பொறுமையும் வேண்டும். மேலும் மிக நுட்பமாகவும் தர்க்கமுறையினும் ஆராய்ந்து கொள்ளும் முடிவுதான் பிறரால் அசைக்க முடியாத திண்மையுடன் காணப்படுகிறது. அவ்வாறு பேருழைப்புடன் புரியும் ஆராய்ச்சியும் அவரவரது சக்திக்கு ஏற்பச் சிறிதுசிறிது அளவு தூரஞ் சென்று நின்று விடுகிறது.

ஆதலால் கற்றவன் எனப்படும் ஒருவனது உள்ளமானது பெரும்பாலும் பிறருடைய கருத்துக்களால் (அதாவது புத்தக ஞானத்தால்) நிரம்பப் பெற்றிருத்தலையே அனுபவத்தில் காண்கின்றோம். அவன் இயற்கையறிவு பெற்றிருப்பினும் அது மேலும் நன்கு வளர்க்கப் படாமையால் வலிகுன்றிய நிலையில் காணப்படுகிறது. ஆதலால், அவனுக்குத் தன் திறமையினும் பகுத்தறிவினும் இருக்கும் நம்பிக்கை அகன்று விடுகிறது. அவன் சொற்பொழிவு நிகழ்த்தவோ நூல்கள் எழுதவோ தலைப்பட்டால் அவற்றில் பிறருடைய கருத்துக்களைத் தவிர வேறு காண்பதரிது. அவன் புத்தகக் கடலிலேயே மூழ்கியவனாக இருக்கலாம்; ஆனால் அவனுக்கு மக்களைப் பற்றியோ, தொழில் வகைகளைப் பற்றியோ, உலக இயல்புகளைப்பற்றியோ ஒன்றுமே தெரிவதற்கிடமில்லை. ஆகையால் அன்றாட வாழ்க்கையில் அவன் ஒரு பச்சிளங் குழந்தையே. அவன் சுலபமாக ஏமாற்றப்படலாம்; சிறு துன்பங்களுக்குப் பெருங்கலக்கம் அடையலாம்; மிக இழிந்த காரியங்களைத் தனது அறியாமையால் செய்யலாம்.

இஃது ஒரு புறமிருக்க, புத்தக அறிவுமட்டும் நிரம்பப் பெற்றோரைப் போலவே, கல்வியின் ஒரு துறையில் மட்டும் தமது வாழ்நாளைக் கழித்த பெரும் புலமையாளருட் சிலரும் பிற உலக நிகழ்ச்சிகளில் தமது நுண்ணறிவைச் செலுத்தாமல் நகைக்கத்தக்க வகையில் நடந்திருக்கின்றனர். உதாரணமாக, விஞ்ஞான உலகில் தலைசிறந்து விளங்கும் ஐஸாக் நியூடன் என்பாரைப் பற்றிய நிகழ்ச்சி யொன்றைக் கீழே தருகிறேன். ஒருநாள் நியூட்டன் தமது வீட்டின் கதவினருகில் ஒரு நூலைப் படித்துக் கொண்டிருந்தார். அப்போது அவர் வீட்டுப் பூனையும் அதன் குட்டிகளும் உள்ளே நுழைவதற்காக வெளியில் கத்திக் கொண்டிருந்தன. இதனை உணர்ந்த நியூட்டன் தமது இருக்கையினின்றும் எழுவதற்குச் சோம்பலுற்றுத் தமது அருகிலுள்ள, மெல்லிய பலகையால் செய்யப்பட்ட கதவில் பூனை வருவதற்கு ஒரு பெரிய துவாரமும்,

அதன் குட்டிகள் வர ஒருசிறு துவாரமும் செய்தார். பூனைக்குச் செய்யப்பட்ட பெருந்துவாரத்தின் வழியாய்க் குட்டிகளும் நுழையக்கூடும் என்பது அவரது புலமை நிரம்பிய அறிவுக்குத் தோன்றவில்லை.

இதுபோன்ற மற்றொரு நிகழ்ச்சியையும் இங்குக் கூறுகிறேன். இங்கிலாந்து தேசத்திலுள்ள ஒரு கல்லூரியிலே கணிதப் பேராசிரியர் ஒருவர் இருந்தார். அவர் கணிதத் துறையிலுள்ள கணக்கிறந்த நூல்களைப் பயின்று பெரும் புலமை பெற்றிருந்தாரேனும் உலகறிவு ஒரு கடுகளவும் இல்லாதவர். ஒருநாள் அவர் மனைவியார் அவரைத் தாம் அருந்துதற்குத் தேநீர் வாங்கிவருமாறு கடைக்கு அனுப்பினர். அங்கே கடைக்காரன் அவரை 'உமக்கு' எவ்வளவு வேண்டுமென்று கேட்டான். அதற்கு அவர், "என்மனைவி இவ்வளவு வேண்டுமென்று என்னிடம் கூறவில்லை. ஆனால் ஒரு புஷல் அளவுள்ள தேனீர் வேண்டியிருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்றாராம். ஒரு புஷல் (Bushel) என்பது எட்டு காலன் (Gallon) கொள்ளத்தக்க ஓர் அளவு. இவ்வளவுள்ள கருவியைத் தானியங்களையும் பழங்களையும் அளக்கவே பயன் படுத்துவர். ஆதலால் இவர் இவ்வாறு பதில்கூறியது பெருநகைப்புக்கு இடமன்றோ?

இவ்வாறு நூலறிவோடு அமையாது தமது நுண்ணறிவையும் வளர்த்துத் தம்முடைய விவேகத்தாலும், யுக்திகளினாலும் பெருஞ்சிறப்புப் பெற்றிருக்கின்ற பல பண்டைக்காலப் பெரியோர்களைப்பற்றி அவர்களது சரித்திரவாயிலாக நன்கு அறிகிறோம். அவற்றுள்ளும் சில நிகழ்ச்சிகள் வருமாறு:—முற்காலத்தில் சிறப்புற்றிருந்த செந்தமிழ்ப் புலவர்களில் காளமேகப் புலவரும் ஒருவர். அவர் ஒரு சமயம் திருமலைராயன் சபைக்குச் சென்றார். அவரது தோற்றத்தைக் கண்ட அரசன், இவர் இன்னார் என்று அறியாது, வெறுப்போடு "இவர் என்ன அண்டங்காக்கையா?" என்றான். அவன் தம்மை அறியாமல் கூறிய புன்மொழிக்குச் சினமுறாது "நீதான் அண்டங்காக்கை, உன் தந்தை அண்டங்காக்கை, உன் முன்னோர் அண்டங்காக்கை" என்று அமைதியாகக் கூறினர். அரசன் "என்னை இழித்துக் கூறற்குத் துணிந்த உமது ஆண்மைதான் என்ன? நீர் யார்? கூறும்," என்றான். அதுகேட்ட புலவர் பெருந்தகையார், "மாநிலம் புரக்கும் மன்னவ! நான் புகன்ற மொழிகளில் இழிவு என்பது எள்ளளவும் இல்லை; அண்டம் என்றால் உலகம்; காக்கை என்றால் காத்தற்றொழிலையுடையை; ஆகவே உலகம் புரக்கும் வேந்தனே!

என்று புகழ்ச்சியுறவல்லவோமொழிந்தேன்" என்று மன்னவன் வியப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கெய்துமாறு கூறினர்.

ஒருசமயம் கொலம்பஸ் அமெரிக்க நாட்டுப் பழங்குடிகளாகிய செவ்விந்தியர் தலைவர்களிடம் பின்வருமாறு கூறினர். "சில வாரங்களாக நாங்கள் உங்களிடையே இருந்து வருகிறோம். முதலில் நீங்கள் நண்பர்களைப்போல எங்களை அன்புடன் நடத்தினீர்கள். இப்பொழுதோ எங்களிடம் பொறுமை கொண்டு எங்களை ஒட்டிவிடவும் முயல்கின்றீர்கள். முன்பு அளவிறந்த உணவுப் பொருள்களை அளித்துவந்த நீங்கள் இப்போது மிகச் சிறிதே அளிக்கிறீர்கள். அதுவும் வரவரக் குறைந்து கொண்டே போகிறது. நீங்கள் எமக்கு வாக்களித்தபடி நடக்காமையால் எல்லாம் வல்ல இறைவன் உங்கள் மீது கடுஞ்சினம் உற்று இருக்கின்றார். அவருடைய கோபத்தை உங்கட்குத் தெரிவிக்க அவர் சூரியனைக் கருமையாக்கி விடப் போகிறார்" என்பதாகும்.

இவர் சூரிய கிரகணம் வரப்போவதை முன்னமே உணர்ந்திருந்தார். ஆதலால் தமக்கு நேரவிருந்த பேராபத்தைத் தமது விவேகத்தால் நேராமல் தடுக்கவே இவ்வுபாயம் செய்தார். ஆனல் அப்போது செவ்விந்தியர் அவர் மொழியை நம்பாமல் மேலும் மேலும் உணவைக் குறைத்துக் கொண்டே வந்தனர். சூரிய கிரகண நாளும் வந்தது. கிழைத் திசையிலே ஞாயிறு எழுந்து களங்கம் சிறிதுமின்றி மேல் எழுவதாயிற்று. அதுகண்ட செவ்விந்தியர் நகைப்பும் பகைப்பும் தோன்ற தமது தலைகளை ஆட்டினர். ஆனல் சிறிது பொழுது கழிந்ததும் பரிதியில் ஒருசிறு கோடுபோலக் கருநிறம் பற்றத் தொடங்கிப் பொழுது ஏறஏற அதுவும் பெரிதாகிக் கொண்டே வந்தது. உடனே அம்மக்கள் அச்சத்தால் உடல் நடுங்கி, கொலம்பஸ் இருந்த பாசறைக்கு ஒடி, தம்மைக் காக்குமாறு அவர்தம் தாள்களில் விழுந்து வேண்டினர். இவ்விவேகியும் தம்மால் இயன்றவரையில் அவர்களைக் காப்பதாக உறுதி கூறினர்.

கிரகணம் விடப்படும் நேரத்திற்குச் சிறிது முன்பாக வெளியே வந்தார். அவர்கள் அவருக்கு யாதொரு இடையூறும் இழைக்காமல் வேண்டிய உதவிகளையும் புரிவதாயிருந்தால் கடவுள் அவர்களை மன்னிப்பதாகவும், இனி என்றுமே சூரியனை அவ்விருள் நிறமான அரக்கன் பற்றுதிருக்குமாறு செய்வதாகவும் தம்மிடம் கூறியதாகக் கூறினர். மறு வார்த்தை யுரையாமல் அம்மக்களெல்லாம் தம்மாலியன்ற

உதவியனைத்தும் செய்வதாக ஆணையிட்டு மொழிந்தனர். கருநிறமும் சூரியனை விட்டுச் சிறிதுசிறிதாக அகன்றது. செவ்விந்தியரும் மகிழ்ச்சி பொங்க ஆடினர், பாடினர்; இவ்வறிஞரை மனமாரப் புகழ்ந்தனர். அன்றுமுதல் கொலம்பஸ் தேவையான பொருளனைத்தும் எய்தி இன்புற்றார்.

ஈடெடுப்பில்லாத போர்மறவனாகக் கருதப்படும் ஜூலியஸ் ஸீஸர் ஒருகாலத்தில் அகில மெல்லாம் கட்டி ஆளும் பிரிட்டனையும் வெல்லக் கருதிப் படையெடுத்துச் சென்றார். அந்நாட்டுக் கடற்கரையில் செல்லும்போது திடீரெனக் கால் இடறி விழுந்துவிட்டார். விழுந்த விநாடியிலேயே ஒருபிடி மண்ணைப் பற்றிக்கொண்டு நிமிர்ந்து நின்று, கைகளை மேலுயர்த்தி "பின்வரும் பெருவெற்றிக்கு முன் அறிகுறியாக ஒருபிடி மண்ணும் பற்றிவிட்டேன். வெற்றி திண்ணமாக நம்முடையதே" என்று கூறிப் போர்வீரர்களுக்கு ஆண்மை ஊட்டினராம். விழுந்தது உண்மையில் கெட்ட சகுனமேயாகும். என்றாலும் அதனைத் தம் வீரர்கள் உணர்ந்துவிடின் மனம் தளர்ந்து பின்வாங்குவர் என்று கருதி அதனை எப்பொழுதுமே மறையுமாறு அவ்வாறு செய்தனராம்.

மேலை நாட்டிலே ஹென்ரி வார்டு என்ற இளைஞர் ஒருவர் சிறந்த சொற் பொழிவாளராக விளங்கினார். அவர் ஒருநாள் கிறிஸ்துவ இளைஞர் சங்கத்திலிருந்து தந்தியொன்று கிடைக்கப் பெற்றார். அதில் "புகழின் பொருட்டு நீர் எமக்கு உபந்யாசம் செய்வீரா?" (Will you lecture for us for fame?) என்றிருந்தது. அதுகண்ட நுண்மதியுடைய அவ்விளைஞர், "Yes, F. A. M. E. Fifty and My Expenses" என்று பதில்தந்தி அனுப்பினராம்.

ஐரோப்பியர் நாட்டிலுள்ள பல்கலைக் கழகமொன்றில் பயின்றுவந்த மாணவனொருவன் மிகவும் கர்வமுள்ளவனாக இருந்தான். அவன் ஒரு சமயம் தலைவர் வேலாண்டு என்னும் அறிஞருடன் பேசும்போது "சாலமனுடைய பழமொழிகளில் மிக உயரிய அறிவுரைகள் நிறைந்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அவற்றினும் பதின் மடங்கு சிறந்ததாக அனேக பழமொழிகளை என்னால் இயற்ற இயலும்" என்றான். அவனுடைய உண்மையான இயல்பை உணர்ந்திருந்த வேலாண்டு அவனைப் பார்த்து, "சரி, அப்படியானால் நாளைக் காலையில் இரண்டு பழமொழிகளை நீயே செய்துகொண்டுவா பார்க்கலாம்" என்று பதில் இறுத்தார். இப்பதிலை எதிர்பாராத அம்மாணவன் முதலில் திகைப்

படைந்து பிறகு காலையில் செய்துகொண்டு வருவதாகக் கூறிச்சென்றான். ஆனால் அவன் பின்னர் திரும்பவே இல்லை.

இவைபோலும் அறிஞர் வரலாறுகளில் எண்ணிறந்த நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. அவைகளைப் பயில்வதால் நாம் அடையும்பயன் நம் வாழ்க்கையில் நேரும் திகைப்புண்டு பண்ணும் சமயங்களில் மனம் தடுமாறாமல் விவேகத்துடன் நடந்துகொள்வதேயாகும். நம்மில் பலர் பிறரால் பரிகசிக்கப் படும் பொழுது அவர்களது நாவின் துடுக்கடக்க வழியறி யாது விழிக்கின்றனர். சிலர் அவர்களோடு பகைத்தும் கொள்கின்றனர். அதனால் நகைப்பு அதிகப்படுகின்ற தேயன்றி வேறல்ல.

இவ்வாறு பலர் கூடிக்கொண்டு ஒருவனைக் கேலிசெய் வதும், அவன் விழித்தால் கடைசியில் அவனுக்கு முட்டாள் பட்டம் கட்டிவிடுவதும் ஆங்கிலக் கல்லூரி மாணவர்களிடையே பெரிதும் காணப்படுகிறது. இச்ச மயங்களில் தந்திரமாகப் பதிலிறுக்க வழியறியாத மாண வர் நிலை இரங்கத்தக்கதாகும். சமயம் நேர்ந்தால் உரை யாடும் சமயங்களில் வஞ்சப் புகழ்ச்சியாகப் பேசிப் பிறரைத் தலையிறங்கச் செய்வதும் இக்காலத்தில் ஒரு திறமையாக ஆகிவிட்டது. ஆகையால் இக்குணமுடையோர் நம்மிடத்தும் அவரது திறமையைக் காட்ட முயல்வராயின் அக்காலங்களில் அவர் முறையைக் கொண்டே அவர்களைப் படியச்செய்வது அறிஞர் ஒவ்வொருவரும் தமக்கு இழுக்கு நேராமல் காக்கும் வழியாகும்.

---

பண்டைக்காலத்திருந்து இறந்த மொழிகளின் பொருட்செறி வையோ, இற்றை நாளில் வழங்கும் மொழிகளின் பொருட்செறி வையோ அறிவதற்கு மக்கள்தம் பெயர்களும் ஊர்களின் பெயர் களுமே மக்கட்டொகுதியால் உதவப்படும் கருவிகளாம்.

—சர். டி. பிலிப்ஸ்.




## சிவஞானபோதக் கருத்து

[திரு மா. வே நெல்லையப்ப பிள்ளை அவர்கள், B. A.]

பதிப்புரிமை ஆக்கியோர்க்குரியது

(உசக-ஆம் பக்கத்தொடர்ச்சி)

### நான்காவது சூத்திரம் இரண்டாம் அதிகரணம்

45. இன்னும் ஒரு சாரார் (சாங்கியர்) உயிர் குண குணித்தன்மை இன்றிக் கேவலம் அறிவு மாத்திரமாய் நிற்கும் இயல்பு உடையது என்று கூறுவர். அறிவு மாத்திரையாய் நிற்கும் இயல்புடைய உயிரின்கண் நாம் காணுகிற படி அறிவு வேட்கை (இச்சை) செயல்கள் நிகழ்தற்குக் காரணமில்லையே என்று அவரைக் கேட்பின் உயிரின்சந்நிதியில் உடலின்கண் கரணங்கள் செயற்படுதல் பற்றி அறிவு வேட்கை செயல்கள் நிகழும் என்று அவர் விடை பகர்வர்: அவ்வாறுயின் உடல் பிணமாகிற காலத்திலும் உறங்கும் காலத்திலும் அறிவு வேட்கை செயல்கள் நிகழ்தலை நாம் காணவில்லையே என்று அவரைக் கேட்பின் கரணம் ஒடுங்கினமையால் உடலின்கண் அறிவு வேட்கை செயல்கள் அப்பொழுது நிகழவில்லை என்றும் உயிரின் சந்நிதி என்பது எங்கும் நிறைந்து நிற்றல் (வியாபகம்) என்பது அல்லாமல் காந்தத்தின் முன் இரும்பு தொழிற்படுதல் போல உயிரின் முன் உடல் தொழிற்படுவதற்கு ஏதுவாயதோர் குண விசேடமே என்றும் அவர் விடை கூறுவர். சந்நிதி என்பதற்குச் சாங்கியர் கூறுகிற பொருள் கொண்டாலும் காந்தமானது தன் முன்பாக உள்ள இரும்பைத் தன் பக்கம் வரும்படி இழுத்தல் அல்லாமல் அதனைத் தன்னினின்றும் அகற்றுதல் செய்யாது; ஆனால் உயிரானது உடலினால் நினைத்தல் மறத்தல்களாகிய மாறுபட்ட தொழில்களையும் நிற்றல் இருத்தல்களும் ஓடல் நடத்தல்களும் ஆகிய மாறுபட்ட தொழில்களையும் செய்கின்றது. ஆதலால் காந்தமுன் இரும்பு போல உயிரின் சந்நிதியில் உடல் சேட்டிக்கும் என்று சாங்கியர் கூறும் கொள்கை பொருந்தாது என்று சைவ ஆசிரியர் கூறியருளினர்.

46. இன்னும் புராணிகர், கவுணர், பாதஞ்சலர், மிருதி நூலார், ஐக்கவாத சைவர் முதலியோர் ஆணவ மலத்தினுடைய உண்மையையும் இயல்பையும் அறியாமை காரணமாக உயிரின் இயல்பு பற்றி வேறு வேறு கொள்கைகள் கூறுவர். அக்கொள்கைகள் பற்றியும், அவை ஒன்றும் பொருந்தாமாறில்லை என்பது பற்றியும் ஆசிரியர் கூறிய உரைகளைச் சிவநேயர்கள், சிவஞான சித்தியாரில் காண்க. அவற்றையெல்லாம் இங்கே கூறப்புகின் உரை மட்டின்றி விரியும்.

47. இனி, மேலே கூறியவாறு ஆசிரியர் உயிரின் இயல்பைப் பற்றிய பல வேறு சமயக்கொள்கைகளையும் தத்துவக் கொள்கைகளையும் மொழிந்து அவையெல்லாம் உண்மைக்குப் பொருந்துவன அல்ல என்று மறுத்தபின் ஆன்மாவின் உண்மை இயல்பு குறித்து அடியில் வருமாறு கூறுகின்றார்.— உயிர், என்றும் அழிவின்றி யிருக்கும் நித்தியப்பொருளாயும் எங்கும் நிறைந்திருக்கும் வியாபகப் பொருளாயு முள்ளது. குணமானது குணியினின்றும் பிரிக்கப்படாத தன்மையுடையதாதலின் உயிரின் குணமாகிய அறிவும் அவ்வாறே நித்தியமாயும் வியாபகமாயு முள்ளது. நித்தியம் என்பது என்றும் அழிவில்லாது நிற்குந்தன்மை (immortality); வியாபகமென்பது எங்கும் நிறைந்து மேலிட்டிருக்கும் தன்மை (that which pervades) வியாப்பியம் என்பது வியாபகப்பொருளில் நிறைந்து அதன்கண் அடங்கியிருக்குந் தன்மை (That which is pervaded) வியாத்தி என்பது சம நிறைவு. வியாபகம், வியாப்பியம், வியாத்தி என்னும் வடமொழிச் சொற்களுக்கு முறையே ‘மேலிடும் நிறைவு’ ‘அடங்கும் நிறைவு’ ‘ஒப்பு நிறைவு’ என்று நாம் தமிழ்மொழியிற் கூறலாம். உயிரின் வியாபகமானது ஒன்றனைச் சார்ந்து நிற்கும் வசித்துவரும் வியாபகமாகும். உயிரின் வியாபகம் சிவத்தினுடைய வியாபகம் போல் ஒரு பொருளைச் சாராது தனித்து நிற்கும் வியாபக முடையதன்று. உயிரும் சிவமும் வியாபகப் பொருள்களாயினும் உயிர் சிவத்தினால் அறிவிக்கப்படும் தூல சித்து; சிவம் எவராலும் அறிவிக்கப்படாமல் தானே தனிப்பேரொளிப் பொருளாய் எவற்றையும் அறியுஞ் சூக்கும சித்து; சிவம் அருட்சித்து; “உயிர் அவ்வருளைச் சேருஞ் சித்து. சிவம் உயிரினது பிறப்பு இறப்புக்களைக் கெடுத்துப் புத்தி முத்தி அளிக்குஞ் சித்து.” உயிர் அப்புத்தி முத்தி போகங்களில் அழுந்துஞ் சித்து. இங்ஙனம் உயிர் தன் இயல்பில் (சொரூபஇயலில்) நித்தியத்துவமும் வசித்துவரும் வியாபக முடையதாயினும் செம்பிற் களிம்புபோல அநாதியே அதனைப் பற்றியுள்ள ஆணவமல மறைப்பால் தனது அறிவு வேட்கை (இச்சை)

செயல்கள் கெடாத வண்ணம் மறைக்கப்பட்டு அறியாமை (அவிச்சை) யை அடைந்து மலத்தன்மையாகிய பசுத்துவ முடையதாயிற்று. பசுத்துவ மடைந்த உயிர், கருவிகளைச் சாராத கேவல நிலையில் ஆணவமலத்தை மாத்திரம் சார்ந்திருத்தலினல் விறகிற்றீப்போல ஆணவமலத்தின் அளவு வியாபக முடையதாயிருக்கும் பின் உயிரின் அறியாமை நீங்கும் பொருட்டு, தோற்றுவிக்கும் முறையில் முறையே அசுத்தமாயா காரியங்களாகிய காரண சரீரம், கஞ்சுக சரீரம், குணசரீரம், சூக்கும சரீரம், தூல சரீரம், ஆகிய கருவிகளுடன் இறைவனல் சேர்க்கப்படுகின்றது; காரண சரீரமுதலிய ஐந்து அசுத்தமாயா உடல்களைக் குறிக்கிற வடமொழிப் பெயர்களுக்கு முறையே காரண உடல், சட்டை உடல், குண உடல், நுண் உடல், பரு உடல் என நாம் தமிழிற் கூறலாம்.

48. உயிர் எதனை எதனைப் பற்றியதோ அதன் அதன் மயமாய் வியாபித்து நிற்கும் இயல்புடையது ஆதலின் அது காரண சரீரம் முதலிய ஐந்து உடல்களில் எதனை எதனைப் பற்றியதோ அந்த அந்த உடல் மயமாய் அந்த அந்த உடலோடு ஒற்றித்து நிற்கும் வியாத்தி உடையதாய்த் தனது அறிவு வேட்கை செயல்களை நிகழ்த்துகின்றது. இவ்வாறு உயிருக்கு அறிவு வேட்கை செயல்கள் நிகழுங்கால் அந்த அந்த உடலாகிய கருவியில் விளங்கும் அருளொளியே அவ்வறிவு வேட்கை செயல்கள் விளக்க முறுதற்குத் துணையாயிருந்து அவ்விளக்கத்திற்குத் தக்கவாறு உலக போகத்தை நுகரச் செய்கின்றது. ஒடுக்கமுறையில் உயிர் கீழே முறையே தூல உடலிலிருந்து ஒவ்வொரு உடலினும் விளங்குகிற அருளொளிக்குள் அடங்கித் தன் அறிவு வேட்கை செயல்களை நிகழ்த்தி ஒழுகும் பொழுது அவ்வுடல்களில் வியாபகமுடையதாய் அவற்றை யெல்லாம் முற்றிலும் தன்னுளடங்கித் தொழிற் படும்படி செய்து அவற்றின் பற்றுக்களை விட்டு நீங்குகிறது. இங்ஙனம் உயிர் அசுத்தமாயா கருவி உடல்களில் வியாபக மடைந்தபின் சுத்தமாயா கருவிகளினல் சுத்தமாயா உலக போகத்தை நுகர்கின்றது. பின் உயிர் சுத்தமாயா கருவிகளினும் வியாபகமும் அவ் வியாபகத்துக்குரிய நித்தியத்துவமும் அடைந்து அதன் பற்றையும் விட்டு நீங்கி மேலான வீட்டின்பம் பெறுகின்றது.

49. மேலே சுருக்கமாகக் கூறப்பட்ட உயிரின் சகல நிலை வளர்ச்சி முறைமையினல் உயிரானது மலமறைப்பினல் அடைந்திருக்கிற வியாபகத் தடையையும் நித்தியத்துவத் தடையையும் தன்னை விட்டு நீக்கும் பொருட்டு அதற்கு உலக

வாழ்வை இறைவன் பேரருளினால் தந்தருளினன் என்பதும், உயிரானது எந்தெந்தக் கருவியில் விளங்கும் அருளொளிக்குள் ளடங்கி ஒழுகுமோ அந்த அந்தக் கருவியில் வியாபகமாயிருக் கிற மலமறைப்பினின்று நீங்கி, மலமறைப்பு நீங்கின அளவுக் குத் தக்கவாறு வியாபகத்துவத்தையும் நித்தியத்துவத்தையும் அடையும் என்பதும், உயிரானது உலக வாழ்வில் தன் அறிவு வேட்கை செயல்களை நிகழ்த்தி அநுபவமடைந்து அவ் வநுபவத்தின் பயனாக அறிவு வேட்கை செயல்கள் திருந்தப் பெற்றுச் சுத்த மாயா புவன போகத்தைச் சுத்த மாயா கருவி களால் நுகர்தற்கு ஆயிரக்கணக்கான பிறவிகளும் வினைச் சட்டமும் (Law of Karma) இன்றியமையாது வேண்டப் படுவன என்பதும் தெளிவாகும். உயிரானது அசுத்த மாயை யின் தொடர்பையும் சுத்தமாயையின் தொடர்பையும் விட்டு நீங்குதற்கு வேண்டப்படும் சாதனங்களும் சாதனங்களாற் பெறப்படும் பயன்களும் பின்னர் உண்மை அதிகாரத்திற் கூறப்படும்.

(தொடரும்)

---

# பண்டைத் தத்துவம்

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

நமக்கு மேலும், கீழும், நம்மைச் சுற்றிலுமுள்ள இவ்வுலகம் எல்லாம்வல்ல ஒரு பொருளாற் படைக்கப்பட்டது. அப்பொரு ளின் ஆற்றலை மக்களாய்ப் பிறந்தவர்களாற் கணக்கிட்டறிய முடியாது; அப்பொருளுக்கு எத்தகைய இயற்பெயருங் கிடை யாது; ஏன்? பெயரென ஒன்றிருந்தால் ஒரு தனிப்பட்ட ஆள் இருத்தல் வேண்டப்படுமாகலின். எனவே, பெயர் குறி யாமலும், பரம்பொருள் ஒன்று உண்டென்பதை மட்டுங் குறிக்கும் வகையிலும் "நான்" என்றும், "அவன்" என் றும் "கடந்த அறிவினன்" என்றும் அப்பொருள் வணக்கத் துடன் கூறப்பட்டு வந்தது.

ஒருவரும் "அவனை"த் தேடிக் கண்டறிதல் முடியாது; எனினும், அவனுடைய படைப்புக்களை நோக்கி ஆழ்ந்து உன் னிய ஞானிகள் மட்டும் அவனைப்பற்றிய சில உண்மைகளைக் குறிப்பாய் அறியக்கூடும்.

அவனால் உலகிற் படைக்கப்பட்ட இயற்கைப் பொருள் கள் பலவற்றுள்ளுஞ் சிறந்தவையாக மக்களனைவர்க்குந் தோன்றியவை ஞாயிறும், திங்களும், நாள்களும், திரிதரும்

ஏனைய கோள்களுமே யாம். அவற்றின் செலவு நுட்பங்களை ஆய்ந்து கற்றலே அவற்றைப் படைத்தவனை ஆராய்ந்தறிவ தாகும். எனவே, கோணூல் என்னும் ஒளிநூலறிவு வளர வளரத் தத்துவம் வளர்ச்சியுற்றது. ஞாயிறு பருவத்திற் கேற்றவாறு பெயர் மாறுவானாயினன். கோடைப் பருவத்திற் படைப்பவன் என்றும், கூதிர்ப்பருவத்திற் காப்பவன் என்றும், மாரிகாலத்தில் அழிப்பவன் என்றும் அவனுக்குப் பெயர் கள் உண்டாயின. அதன்பின் மக்கள் தம் பகைவர்களை அழிக்கக்கருதிய காலத்தில் ஞாயிற்றின் அழித்தற் பெற்றி யைப் பராவுதலும், இனவளர்ச்சியையோ செல்வ வாழ்க்கை யையோ விரும்பியபோது முறையே படைத்தற் பெற்றியை யும் காத்தற் பெற்றியையும் பராவுதலும் இயற்கையாயின.

இவ்வாறு ஒன்றாக வெழுந்த ஞாயிற்றிற்குப் பலவாகிய பெயர்கள் உண்டாகவே, அப்பெயர்கள் ஒவ்வொன்றிற்கும் நாளாவட்டத்தில் ஒவ்வொரு தனிப்பட்ட வடிவு படைக்கப் படுவதாயிற்று. ஒரு பொருளுக்கு வடிவு படைக்கவேண்டு மென்றால் மக்களறிவைப் பொறுத்தவரையிற் பால் குறி யாமற் படைத்தல் என்பது முடியாது. பழக்க அறிவினால் பெண்ணைவிட ஆணை சிறந்ததென்று மக்கள் கண்டிருந்தார் களானாலும், ஆணும் பெண்ணுமாகிய அவ்விரண்டும் இல்லா விடின் உயிர்வளர்ச்சி யென்பதில்லை என்பதையும் அவர்கள் உணர்ந்திருந்தார்கள். உணரவே, கதிரொளி வீசும் ஞாயிறு ஆணென்றும், (பகலவன்) அக்கதிர்களை ஏற்கும் நிலம் பெண் ணென்றும் (நிலமகள்) இயல்பாக வகுத்துக்கொண்டார்கள்: இக்கொள்கை இந்நிலத்திற் பிறந்த மக்கட்கு உரியதேயா யினும், வானுலகங்களினுள்ளோராகக் கருதப்படுவர்களுக்கு ஏற்றதாகாது என்பதை எளிதில் உணர்ந்தார்கள். ஆகவே முற்கூறிய இரண்டு உணர்வுகளையும் ஒன்றுபடுத்திப் பரம் பொருள் என்பது ஆணும் பெண்ணுமாகிய இருவடிவுங் கலந்த ஒன்று என்ற முடிவிற்கு வந்தனர் (அம்மையப்பன்). எனினும், மக்களைப்போன்றே இருபெற்றித்தாய இப்பரம் பொருளும் இணைவிழைச்சு வேண்டுமென்றல் கடவுட் பழி யாமாதலின் பெண்பெற்றி என்றும் முதிரா இளங்கன் னியே என முடித்தனர்.

> "அகிலாண்டகோடி யீன்ற அன்னையே பின்னையுங்
> கன்னி யெனமறைபேசும் ஆனந்த ரூப மயிலே."

என்றார் தாயுமானார்.

[இக்கட்டுரை தாமஸ் இன்மன் என்ற ஆங்கிலப் பேரறிஞரின் கருத்தைத் தழுவியெழுதப்பட்டதாகும்.]

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## குறுந்தொகை

[இலந்தையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

(முன் கஙக-ம் பக்கத்தொடர்ச்சி)

தமிழ்நூல் தொகைகளுள் எட்டுத்தொகை நூலைச் சார்ந்த குறுந்தொகை என்னும் நூல் மிகப் பழமையானது. அத்தொகை நூல் பூரிக்கோ என்பவரால் தொகுக்கப் பட்டதாகும். அந்நூல் செம்மையான முறையில் திருத்தமான பாடங்களுடன் செய்யுட்கள் பதிப்பிக்கப்பெற்றுக் கிடைக்கப்பெறாமை வருந்தத்தக்கது. எனினும் அக்குறைபாட்டினை ஒருவாறு நீக்குதற் பொருட்டுச் சென்னைச் சர்வகலாசங்கத்தார், திரிசிபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களின் மாணவரும், புறநானூறு, மணிமேகலை, பெருங் கதை, சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, ஐங்குறுநூறு, பரிபாடல் முதலாய பன்னூற் பதிப்பாசிரியருமான மகாமகோபாத்தியாய, தாக்ஷிணாத்திய கலாநிதி, டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களைக் கொண்டு பதிப்பிக்க ஏற்பாடுசெய்துள்ளமை நந்தமிழுலகம் அறிந்ததே.

குறுந்தொகையில் ஒவ்வொரு செய்யுளிலும் விழுமியபொருளும் சொற்சுவையும் அமைந்து விளங்குவதைக் காணலாம். ஆயினும் பெரும்பாலும் ஒவ்வொரு செய்யுளும் பல்வேறான பாடங்களைக் கொண்டுள்ளது. செய்யுட்களின் ஆசிரியர்கள் பெயர்களிலும் பாட பேதங்கள் பலவாகக் காணப்படுகின்றன. ஆசிரியர் பெயர் இல்லாப்பாடல்களும் பல உள. படுமத்து மோசிகீரனார், படிமத்து மோசிகீரனார், படுமரத்து மோசிகீரனார், படமத்து மோசிகீரனார், படுமாற்றூர் மோசிகீரனார் எனப் பெயர்கள் பல காணப்படுதலை அறிக. மேற்குறிக்கப்பட்ட பெயர்கள் யாவும் படுமாற்றூர் மோசி கீரனார் என்னும் ஒரு புலவரையே குறிக்கும் என்பது சற்று நுணுகி ஆராய்வார்க்குப் புலனாகாது போகாது. புலவர் பெயர்களே ஐயுறத்தக்க வாறு பல்வேறு பாடங்களுடன் காணக்கிடக்கும் நிலையில் அன்னார் தம் செய்யுட்களில்பாடபேதங்கள் பலவாகக் காணப்படுதலும் பெரு வியப்பாமோ? பன்னூறாண்டுகளாகச் செய்யுட்களைப்பெயர்த் துப் பெயர்த்து ஓலைகளில் எழுதிவந்தனர் நம் முன்னோர். ஓலையெழுத்துக்களின் வடிவநிலை எழுதுவோர் திறனுக்கேற்ப அமைந்து, கற்போர் தகைமைக்கியையப் பல்வேறு பாடபேதங் களுடன் பிற்காலத்தில் வெளிப்படலாயிற்று. ஏடெழுதுவோர்களால்

நிகழ்ந்துள்ள பிழைகள் மிகப் பலவாகும் என்பதை ஓலையினின்றும் ஒரு நூலைப் பெயர்த்தெழுதுவோர் தம் அநுபவத்தில் நன்கறிவர்.

பாடபேதங்கள் பலவாதலினால் செய்யுட்களின் செம்பொருள் காணலில் ஐயுறவு தோன்றுகின்றது. நேரான பொருளைவிடுத்து வலிந்து பொருள் கொள்ளவும் முரணான பொருள் கொள்ளவும் முந்துகின்றோம். அத்தகைய நிலையில் குறுந்தொகையில் பல செய்யுட்கள் உள்ளன. ஆராய்ச்சியில், செம்பொருள் காணுங்கால் பாடபேதங்கள் பலவற்றையும் கொண்டு பொருள்கண்டு அவற்றுள் விழுமியபொருளைக்கொண்டு பிறவற்றையும் குறிப்பித்திடின் பின்னர் அப்பகுதிகளை ஓதுவார் தம் ஆராய்ச்சிக்கு அவற்றைப் பெரிதும்பயன் படுத்திக் கொள்வர். நம் கருத்திற்குரிய பாடத்தைக்கொண்டு பிற வற்றை மிகைஎன்று குறிக்காது விடலும் நேரிதன்றாம்.

ஆதலின் ஒரு செய்யுளை எல்லாவகையிலும் ஆராய்தற்குரிய முறையை நாம் அமைத்தல்வேண்டும். சிறந்தபாடபேதமாக நமக்குப் பழைய ஏடுகளினாலோ, சான்றோர்கள் இலக்கண இலக்கிய உரை களில் உதகரித்துக் காட்டியுள்ள இடங்களினாலோ ஆதாரம் காட்டு தற் கில்லையெனில் நம் மதியூகத்தினால் இவ்வாறுதல் வேண்டும் எனத்திருத்தியமைத்தல் சிறந்ததன்றாம். அம்மட்டோ, பிற்காலத் தில் தோன்றும் தமிழ்நூற் பயிற்சிபெறுவார் தவறான நெறியில் பல பொருள்களைப் பயில்வாராகித் தமிழ்மொழி தன் பண்டைப் பெருமை யிழத்தற்குரிய நிலையை எய்துமாறு செய்திடத்தக்காரு மாவர். ஆதலின், நெறியின் ஆராய்ந்து பல்வேறு பாடங்களில் சிறந்த பாடத்தின் உண்மைப்பொருளை விளக்கிப் பிறபாடபேதங் களையும் கீழ்க்குறித்திடுதலே நன்முறையாம். அதுவன்றி, நமக்குத் தோற்றுமாறு பொருள் பொருந்துவதாயினும் பிறிதோர்பாடம் கற்பித்தல் தக்கதன்றாம். அந்நிலையில் குறுந்தொகையில் ஒவ்வொரு செய்யுளும் அமைந்துள்ளன; எனினும் அவற்றில் ஒன்றை ஈண்டு ஆராய்வோம்:—

## மருதம்

“நீகண் டனையோ கண்டார்க் கேட்டனையோ
ஒன்று தெளிய நசையினம் மொழிமோ
வெண்கோட் டியானை சோனை படியும்
பொன்மலி பாடிலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே.” (75)

என்பது தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது. இதனை இயற்றியவர் படிமத்து மோசிகீரனார் என்பவர் ஆவர். குறுந்தொகையில் படிமத்து மோசிகீரன் பாடியதாக 33, 75, 383 என்னும் மூன்று செய்யுட்களும், படுமாற்றூர் மோசிகீரன் கொற்றன் பாடியதாக (376) ஒருசெய்யுளு முள்ளன. படிமத்து மோசிகீரனார் என்பது படுமரத்துமோசிகீரனார் என்றும் படுமாற்றூர் மோசிகீரனார்

என்றும் படமாத்து மோசிகீரனார் என்றும் காணப்படுகின்றன. படுமாற்றூர் மோசிகீரன் கொற்றனார் என்றும் ஒருபெயர் காணப்படுகின்றது. மோசி என்பதையடையாகக்கொண்டு எனிச்சேரிமுடமோசியார், மோசிகீரனார், மோசி கொற்றனார், மோசிக்கரையனார், மோசிசாத்தனார் என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. குறுந்தொகையில் 377-வது செய்யுளை பாடியவர் மோசிகொற்றன் என்றும் 59, 84-வது செய்யுட்களைப்பாடியவர் மோசிகீரனார் என்றும் அறியலாம். நினைவொடு ஆராயுமிடத்து மோசி என்பது ஒரூரின் பெயராகவும் கீரன் என்பது இயற்பெயராகவும் கொள்ளுதல் வேண்டும். சிலர் மோசி என்பது தந்தையின் பெயர் என்பர். படித்து, படமாத்து, படுமாத்து, படிமரத்து, என்பன யாவும் பாடபேதங்கள் என்பதும் படுமாற்றூர் சிவகங்கைக் கருகிலுள்ள ஓரூர் என்றும் அறியலாம். மோசிகீரன் என்னும் புலவரையே மோசுகீரன் எனவும் படிமத்து மோசிகீரன் எனவும், படமாத்து மோசிகீரன் எனவும், படிமத்து மோசிகீரன் எனவும், படிமத்து மோசிகீரன் கொற்றன் எனவும், படுமாற்றூர் மோசிகீரன் என்றும் கூறினர் என்பதும் புலனாகும். இப்பாடலை ஆராய்ந்துவிட்டு ஆசிரியர் மோசிகீரனாரைப் பற்றியும் அவரால் இயற்றப்பட்ட பிறபாடல்களைப் பற்றியும் ஆராய்வாம்.

### படுமோற்றூர் மோசிகீரனார் பாடியது

| | |
|---|---|
| படுமாத்து மோசி கீரனார்<br>படுமரத்து மோசி கீரனார்<br>படிமத்து மோசி கீரனார்<br>படமரத்து மோசி கீரனார் | பிரதிபேதங்கள் |

நீகண் டனையோ? கண்டார்க்கேட் டனையோ?
ஒன்று தெளிய நசையினம் மொழிமோ;
வெண்கோட் டியானை சோனை படியும்
பொன்மலி பாடிலி பெறீஇயர்;
யார்வாய்க் கேட்டனை? காதலர் வரவே.

என்பது, தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது. அதாவது, தலைவன் பரத்தையைச் சார்ந்தொழுகி வந்தமையை அறிந்த தலைவி ஊடினளாக; அதனை உணர்ந்த தலைவன் அவளது ஊடலைத் தணிப்பான் கருதிப் பாணனை வாயிலாக விடுப்ப, வந்தடைந்த பாணனை நோக்கித் தலைவி கூறியது என்க.

### பிரதி பேதங்கள்

1. 'ஒன்று தெளிய நசையினம் மொழிமோ'—

(அ) 'என்று கேளிய தகையினை மொழிமோ'
(ஆ) 'ஒன்று தெளிய நகையின மொழிமோ'

2. பொன்மலி பாடிலி பெறீஇயர்'—

(அ) 'பொன் மலி பாடிலி பெறீஇயர்'
(ஆ) 'பொன் மலி பாடினி பொறீஇயர்'
(இ) 'பொன் மலி பாடினி பெறீஇயர்'

3. 'கண்டார் கேட்டனையோ'—
'கண்டார்க் கேட்டனையோ'

4. 'வெண் கோட்டியானை பூஞ்சுனை படியும்'—

(அ) 'வெண் கோட்டியானை சோனை படியும்'
(ஆ) 'வெண் கோட்டியானை பூஞ்சுனை படியும்'
(இ) 'வெண் கோட்டியானைச் சேரனைப் பாடியும்'
(ஈ) 'வெண் கோட்டியானைச் சேனை படியும்'

இவை பாடபேதங்களாகக் காணப்படினும் இவைகளில் ஒன்றைக் கொள்ளாது, 'வெண்கோட்டியானை சோணை படியும், பொன்மலி பாடலி பெறீஇயர்,' என்னும்பாடங் கொள்வாருமுண்டு. டாக்டர் உ.வே. சாமிநாத அய்யரும் இப்பாடங் கொண்டுள்ளார் என்பது தெரியவருகிறது. அத்தகைய பாடம் பிரதிகளில் காணப்படவில்லை. ஆதலால் அது நுண்மதிகொண்டு ஆய்ந்து கூறும் பாடமாகும்.'கிடைத் துள்ள பிரதிபேதங்களைக்கொண்டு ஒருவகையான் உரைகூறிப் பின் பொருந்துமாறு ஊகித்த பாடவகையாலும் உரை காண்போம்.

**பதவுரை**

பாடுஇலி — பெருமையில்லாத பாணனே; (காதலர் வரவு— காதலர் வருகையை;) நீ கண்டனையோ — நீயே பார்த்தாயோ?; கண்டார்க் கேட்டனையோ — தலைவன் வருதலைக் கண்டவர்களைக் கேட்டு அறிந்தனையோ?; ஒன்று தெளிய நசையினம் — இவ்விரண் டில் ஒன்றை அறிந்துதேற விரும்பினேம்; மொழிமோ — சொல்லு வாயாக: வெண் கோட்டு யானைசோனைபடியும் — வெண்மையான கொம்பு (தந்தங்) களையுடைய யானை வெள்ளநீர்ப் பெருக்கிலேதான் படியும்; (அதுபோல், தலைவன் பரத்தையர் சேரியிற்றான் தங்கு வான்) பொன் மலிபெறீஇயர் — பொன்னை மிகுதியாகப் பெறும் பொருட்டு; காதலர் வரவு—(என்னை மகிழ்விக்க உரைக்கும்) காதலர் வருகையை; யார் வாய்க்கேட்டனை — எவரிடமிருந்து கேட்டாய்? ஏ—அசை.

"வெண்கோட்டியானை சோனை படியும்' என்றது, வெண் மையான கொம்புகளை யுடைய யானை வெள்ளநீர்ப் பெருக்கிலேதான் படியும். அதுபோலத் தலைவன் பரத்தையர் சேரியில் தங்கியவனாய் அவர்களைத் தனிவிடாது தானும் அவரோடு சென்று நீர் குடைந் தாடுவன் என்பது தோன்றக் கூறினள் என்க. இது தலைவி புலந்து கூறியமொழி.

இச்செய்யுள் மருதத்திணைக் குரியதாகலின் 'பூஞ்சுனை' என்பது பொருந்தாது. சுனை — குறிஞ்சித் திணையது. கண்டனையோ,

கேட்டனையோ — ஒகாரங்கள் வினப்பொருளன. நசை — விருப்பம். நசையினம் — தன்மைப்பன்மை. மொழிமோ — மோ — முன்னிலையசை. கோடுயானை — கோட்டியானை — இகரம், குற்றியலிகரம். பொன்மலி — மலிபொன் — நிறைந்தபொன் — முன்பின் மாறிய மொழித்தொடர். பாடு — பெருமை, பெறீஇயர் — உயிராளபெடை, பெறும் பொருட்டு என்னும் பொருளது. வரவு — தொழிற்பெயர்.

பாணனைப் 'பாடிலி' என்றாள், பாணன் தலைவனிடத்தும் தன்னிடத்தும், பரத்தையரிடத்தும், பொன்பெறற்காகப் பொய்யும் மொழிவான் ஆதலினாலும், முன்னர்ப் பலர், தலைவர்வரவு கூறிப் பொய்புகன்று தலைவியிடம் பொன் பெற்றுச் சென்றுள்ளார் ஆதலினாலும், அத்தகையாரிடம் வினவித்தெரிந்து வந்தவனோ என்பது கருதிப் பாடுஇலி எனவிளித்துப் பின் தன் ஆவல் மீதூரத் தலைவன் வருகையிற் றலைவி விருப்பு மிக்குடையாளாதலின் அவன் வரவுண்மையை அறிதல் வேண்டியும், 'கண்டனையோ? கேட்டனையோ? யார்வாய்க்கேட்டனை?' என்று வினவி, உண்மை புணர விரும்பினாள் என்க.

இச்செய்யுள் ஐந்தடிகளையுடையதாகக் காணப்படுகின்றது. இச்செய்யுள் தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியலில், நச்சினார்க்கினியர், இளம்பூரணர் என்னும் இருபேருரையாசிரியர்களாலும் தரப்பட்ட இரண்டே இடங்களில் முழுமையும் கிடைக்கின்றது. தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கத்தில் ஓரிடத்தில் ஓரடிமட்டும் உதகரிக்கப்பட்டுள்ளது. 'வெண்கோட்டியானை சோனைபடியும்' என்னும் மூன்றாம் அடிக்கும், பொன்மலி பாடிலிபெறீஇயர்' என்னும் நான்காம் அடிக்கும் தொடர்பு நன்கு பொருந்துவதாக இல்லை. பொருந்துமாறு மூன்றாம் அடியை இயைத்து ஆங்கு வேண்டுவன தந்துரைக்கவேண்டி யுள்ளது. ஆதலின் இச்செய்யுளில் ஓரடி விடுபட்டிருத்தலும் கூடும் என்பதும் கருதற்குரியதே. ஆதலின் இச்செய்யுளின் உண்மை நிலை ஆராயத்தக்கதே.

## மேற்கோள் விளக்கம்

1. "நீகண்டனையோ......காதலர்வரவே"—
"இது தலைவன் வரவை விரும்பிக் கூறியது"

(தோல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல். 673 பக் (பவானந்)

2. "நீ கண்டனையோ...... காதலர்வரவே"—"இது வருகின்றான் என்று உழையர்க்குக் கூறியது"

தோல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், இளம்பூ-பக் 247-8.

3. "வெண்கோட்டியானை சேனைபடியும்"—"இனச்
சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை,
வழக்காறல்ல செய்யுளாறே"

—(தோல், சொல்-சூ18, இளம்பூரணம்-மேற்கோள்.)

4. இச்செய்யுளைத் தலைவன்வரவை 'விரும்பிக்கூறியது' என்னும் துறைக்கு உதாரணம் கூறுவர் நச்சினர்க்கினியர்.

'வெண்கோட்டியானை பூஞ்சுனை படியும்' என்றுகொள்ளின், யானை-தலைவனாகவும், பூக்கள்-பரத்தையராகவும்; சுனை-பரத்தையர் சேரியாகவும், புலனாகுமாறு அமைத்தது உன்னி மகிழற்பாலது.

தலைவன் பரத்தையரோடு சென்று நீராடலுமுண்டு என்பதை விளக்குவதும் அறிக. இதனை, 'காலை எழுந்து கடுந்தேர் பண்ணி' என்ற குறுந்தொகைச் செய்யுளாலும் அறிக. யாழ்ப்பாணம், திரு வாளர் சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்கள், தம் தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்பில்,

"நீகண் டனையோ கண்டார்க் கேட்டனையோ
வென்று கேளிய தகையினை மொழிமோ
வெண்கோட் டியானை சோனை படியும்
பொன்மலி பாடிலி யெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே"

என, 382ம் பக்கத்தில் பதிப்பித்திருத்தல் அறிக.

மெய்ப்பாடு—இளிவரலைச் சார்ந்த நகை.

பயன்—ஊடலொழித்தல்.

நீகண் டனையோ கண்டார்க் கேட்டனையோ
ஒன்று தெளிய நசையின மொழிமோ
வெண்கோட் டியானை பூஞ்சுனை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே.

என்று பாடங்கொண்டு,

"காதலர் வருகையை நீ கண்டயோ? கண்டாரைக்கேட்டு அறிந்தனையோ? யார்சொல்லக் கேட்டனை? இவற்றில் ஒன்றைத் தெளிய நாம் விரும்பினம்; சொல்லுக; வெண்மையான தந்தங்களையுடைய யானையானது பூக்கள் நிறைந்த சுனையிற் படியும் பொன்மிக்க பாடலி என்னும் (திருப்பாதிரிப் புலியூர்) நகரைப் பெறுவாயாக" என்று உரை கூறலும் பொருந்தும். பாணர்களுக்குப் பொன்னாற் செய்த தாமரை மலரை யளித்து வந்தமைபோலப் பொன்னாற் செய்த பாடலி மலரையும் அளித்து வந்தனர் என்க. பல்லவவரசர் காலத்தில் திருப் பாதிரிப்புலியூர் மிகச் சிறப்புற்றிருந்தமையும், அதற்குப் பாடலிபுத் திரம் என்னும் பெயர் இருந்தமையும் அறிக. பெறீஇயர் என்பதை வியங்கோள் வினைமுற்றாக்கி உரை கூறியதாம். பொன்மிக்க பாடலி மலரைப் பெறற்பொருட்டு எனக்கொண்டு வினை யெச்சமாக்கி,

'வெண்கோட்டியானை சோணைபடியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்'

எனப்பாடம் கொண்டு 'வெண்மையான தந்தங்களையுடைய யானை சோணை நதியிற்படிகின்ற பொன்மிக்க பாடலிபுரத்தைப் பெறும் பொருட்டு' எனப்பொருளும் கூறுவர்! இயர், இய, என்பன எதிர் காலம் பற்றிவரும் வினையெச்சம்; தொல்-சொல்-வினை இயல் 228 (31.) பாடலிபுரத்தைப்போன்ற சிறப்பினைப் பெறுதல் என்க. இங்ஙனம் கூறலை நற்றிணை எட்டாவது செய்யுளாலு மறிக. சோணை, கங்கையின் உபநதி. அதன் கரையில் அமைந்தது கி. மு. 5 ம் நூற்றாண்டில் அஜாதசத்துருவால் நிருமிக்கப்பட்டு, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுவரைச் சிறந்து விளங்கி அழிவுற்ற பாடலிபுரம். இந்நகர் பொன் முதலிய வளம் மிக்கது. அதனால் அந்நகரைப் பெறுதலைச் சிறப்பாகக் கொள்வர். சோணைநதிக்கரையி லிருக்கும் பாடலிபுரத்தைப்பற்றி, அகநானூற்றில், 265-ஞ் செய்யுளில்,

"பல்புகழ் நிறைந்த வெல்போர், நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லே"

என்று கூறப்பட்டிருத்தல் அறிதற்பாலது. இவ்வடிகள் வந்த அகநானூற்றுச் செய்யுள் மாமூலனாரால் பாடப்பட்டது. அம் மாமூலனாரும் மோசிகீரனார் காலத்தவரே. இச் செய்யுள் பொருள் வயிற் பிரிந்ததலைவனது பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குக் கூறியது. "தோழியே, வெம்முனை அருஞ்சுரம் இறந்தோராகிய தலைவர், நம்மினும் வலிதாத் தூக்கிய பொருள், இமயச் செவ்வரை மானுங் கொல்லோ? பல்புகழ் நிறைந்த வெல் போர் நந்தர், சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கைநீர்முதற் கரந்த நிதியங்கொல்லோ? எத்தகையது?" (நம்மினும் அது சிறப்பின் றாயின் நம்மைத் தனித்து விடுத்துப் பிரிந்து செல்வரோ) என்னும் பொருள்பட அமைந்திருத்தலை யறிக. சோணைநதிக்கரையில் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் நிறுவிய பாடலிபுத்திரம் பொன் மிகுதியும் வாய்ந்தது என்பது மெய்ம்மையே எனினும் இக்குறுந் தொகைச் செய்யுளில் அந்நகரையே குறித்தோதினர் ஆசிரியர் என் றற்குப் பிரசான்று ஒன்றுங்காணேம். பெறுதற்குரிய நகராகவும் அதுவே பேருகவும் கூறுதலில் ஏதேனும் சிறப்புப் பொருள் இருத் தல் வேண்டும். வடமொழி நூல்களில் அப்பொன்வளம் பழுநிய நன்னகர் குறிக்கப் பட்டிருத்தலில் யாதொரு வியப்பும் இன்று. என்னையோ எனின், சிறந்த வடமொழிவாணரிற் பல்லோர் வடநாட் டவரும், வடநாட்டு மன்னர்களால் போற்றிப் புரக்கப்பட்டவர் களுமேயாவர் ஆதலின் என்க. மற்றும் மோசிகீரனார் பாடியபாடற் றெருகுதிகளில் பிற செய்யுட்களில் யாண்டும் இப்பொன்மலி நன் னகரைக் குறியாதிருத்தலும் அறியலாம். தலைவன் தலைவி தமக் கிடைச்சென்று ஊடலொழிப்பான் புக்க பாணன் நகர் பெறற்கோ கருதுவன்! அவன் மகிழப் பொன்னோ, பொன்னாலாய பூணோபெறின்

அமையும் அன்றோ? ஆதலின் தமிழ்நாட்டில் நிகழ்வதாகக் கருதப் படும் ஒரு புலனறிவழக்கத்திற்கு வடநாட்டிலுள்ள ஓரூரினைப் பெறற்பொருட்டுத் தலைவன் வருகையைத் தலைவியிடம்சென்று பாணன் கூறியதாகக் கொள்ளல் வலிந்து பொருள் கொள்ளுதலாம். மற்றும், வடநாட்டுநகர் ஒன்று தமிழ் நாட்டுப் பழைமையான நூலில் காணக்கிடக்கின்றது. ஆதலின், தமிழர்க்கு அவ்வடநாட்டுச் சம்பந்த முண்டு எனக் கற்பிப்பதுவேண்டிக் கூறல் பொருந்துவதாமோ?

'பரத்தையர் தனித்தாராய்ச் சென்றாடவிடாது' என்பது ஆதார மின்றிக் கூறுவதுமன்றாம்.

> "காலை எழுந்து கடுந்தேர் பண்ணி
> வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
> மல்லல் ஊரன் எல்லினன் பெரிதென" —நற். 45

என்னும் செய்யுளால் தலைவன் பரத்தையரோடு நீராடல் உண்டு என்பது புலனும்.

பாடலி—என்பதற்குப் பாடலமலர் (பாதிரிப்பூ) என்று கொள்ளுதலேனும், திருப்பாதிரிப் புலியூர் என்னும் தமிழ் நாட்டு நன்னகரையே கொள்ளுதலேனும் இயைபுடைத்தாமன்றோ! தென்னாட்டுப் பாடலிபுரமான திருப்பாதிரிப்புலியூர்க்கு அத்தகைய பெருமையுண்டோ என்பதை ஆராய்வதும் நலமாகும். சரித்திர ஆசிரியரான ஸ்மித் துரைமகனார்:—'திருப்பாதிரிப் புலியூர் என்பதற்குப் பாடலி புத்திரம் என்றபெயர் உண்டு' என்பதை நன்குவிளக்குகின்றார். சமணர் காலத்து அந்நகர் பீடுற்றிருந்தது என்பது பெரிய புராணம் முதலிய நூல்களால் அறியலாம். மாணிக்கவாசகர் காலத்தும் அந்நகர் சிறப்புற்றிருந்தது. கடலூர் எனவழங்கும் நகர் பண்டு கூடலூர் எனவழங்கிவந்தது. அங்கு ஓராறு கடலோடு கலப்பதாம் என்பதும் அப்பெயரான் விளங்கும். அப்பேராறு கெடிலம் என்னும் பெயரோடு இக்காலத்து வழங்குவதும் அறிவோம். ஆதலின், 'வெண்கோட்டியானை சோனைபடியும், பொன்மலி பாடலி; என்று கொண்டு, 'வெண்மையான கொம்புகளையுடைய யானை, மழைநீர்ப் பெருக்கு மிக்குடையநீரிற் படியும் பொன்மிக்க பாடலிபுரம்' என்று தமிழ் நாட்டிலுள்ள திருப்பாதிரிப்புலியூரான பாடலிபுரத்தைக் குறித்தார் என்பதும் பொருந்து மன்றோ? சிலப்பதிகாரத்தில் சோனை, அல்லது சோணை என்னும் நதி வச்சிரநாட்டிலுள்ளதென்பது மட்டும் அறிகின்றோம். சோணை நதிக்கரைக்கண் இருந்த பாடலிபுரத்தைப்பற்றித் தமிழ்நூல்களில் பரக்கக் கூறக்காண்கிலோம். திருப்பாதிரிப்புலியூர்த் தலபுராணமேனும், சிலாஸாஸனங்களேனும், கெடிலத்திற்குச் சோணை என்னும் பெயர் உண்டு என்பதையும், அந்நகர்க்குப் பாடலிபுரம் என்னும் பெயர் உண்டு என்பதையும் வலியுறுத்துமாயின் தமிழ்நாட்டுப்பழம்பதியொன்றின் சிறப்பு விளங்குவதாகும். பாடலிமலரைப்போல் பொன்னாற் செய்து வழங்கும் மரபுஉண்டு என்பதைப் பழந்தமிழ்நூல்கள் வலி

யுறுத்துமாயினும் சிறந்ததாம். அவ்வாறு ஆதாரங்கள் கிடைக்கப் பெறாத வரையில், 'வெள்ள நீர்ப்பெருக்கிலேதான் யானை படியும். அதுபோல் பரத்தையர்சேரியிற்றான் தலைவன் உறைவான்; என் காதலன் வருகையை நீ—பொன்னை மிகுதியாகப் பெறும்பொருட்டுக்கூறினையோ? நீயே கண்டனையோ? கண்டாரைக் கேட்டனையோ? யார் வாய்க்கேட்டனை? இவற்றில் ஒன்றை அறியவிரும்பினம், சொல்' எனப் பொருள்கோடலே பொருத்தமாகும்.

மோசி கீரனாரைப்பற்றியும் அவருடைய செய்யுட்களைப் பற்றியும் அடுத்த இதழில் ஆராய்வோம்.

(தொடரும்)

---

# அகப்பொருள் அழகு

[வித்துவான் மணி. திருஞானசம்பந்த முதலியாரவர்கள்]

(முன் ௧௭௬-ம் பக்கத்தொடர்ச்சி)

நுகர்ந்த பின்னர் வெறுப்படையாமல் அவள் அருமைகளையும், பெருமைகளையும், அழகுகளையும் பற்பலவாறு புகழ்ந்து பிறரிடத்தில் கூறுவதற்கும், தானே உலகிலுள்ள பற்பல பொருள்களைக் கண்டபோது தான் இன்பம் புதிதாக வரப்பெற்று, அவளைத்தன் விருப்பின்படி தானே தலைசிறந்த நிலையில் புகழ்ந்து சொல்லிக் கொள்ளுவதற்கும் அகப்பொருளில் ஒரு துறை உண்டு. அதை "நலம்புனைந்துரைத்தல்" என்று அறிஞர் கூறுவர். அவ்விடத்தே நாயனார் ஒரு தலைமகன் தன் காதலியின் சிறப்பைக் குறித்துக்கூறுகின்ற விஷயங்களில்,

"நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்."

என்பது ஒன்று.

இங்குத் தலைமகன் தன் காதலியின் செவ்விய குணங்களை அறிந்துகொண்டதுமன்றி, மென்மைத் தன்மையின் மாட்சிமையை அறிந்து எய்திய இன்பத்தினை மிகவும் சிறப்பாகக் கூறுகின்றான். அவன் இன்பம் எய்திய பின்னர்ச் சிறிதும் சலிப்பும், வெறுப்பும் அடையாமல், முன்போல் விருப்பும், இன்பும் ஒருசிறிதும் குறையாமல் பெற்றிருக்கின்றான் என்பது அறியத் தக்க விஷயமாகும். பெண் மக்களுக்கே இயல்பாக ஒளிரும் பெருமை யாதெனின் மென்மைத் தன்மையாகும். ஆடவர்க்கும் வன்மையும், மாதர்கட்கு மென்மையும் இயல்

பாக அமைந்துள்ளன என்பது யாவரும் அறிந்த விஷய மாகும். மென்மைத் தன்மையில் மங்கையர்கட்கு ஒரு தனிச் சிறப்பும் உண்டு. அம்மென்மையின் மேன்மையை ஒரு தலை மகன் அவன் காதலியினிடத்தே இன்பம் நுகர்ந்த பின்னர் மிகவும் சிறப்பாகக் கூறுகின்றான். மலர்களே பொதுவாக மென்மைத்தன்மை வாய்க்கப்பெற்றவை. அம்மலர்களின் மென்மையை நம் பண்டைய புலவர் பெருந்தகையாளர்கள் மங்கையர் மென்மைக்கு ஒப்புமை கூறியதே மிகவும் பாராட் டத்தக்கதாகும். அத்தகைய மலர்கள் எல்லாவற்றினும் மென்மை உடையது அனிச்சமலராகும். அம்மலரின் மென் மையைக் காட்டினும் தான் அனுபவித்த தன் காதலியின் மென்மை அதிகம் என்று சிறப்பித்துக் கூறுவது எத்துணை அழகும், ஆழமும், அருமையும், அறிவும் பெற்று ஒளிர் கின்றது என்பதைச் சிறிது கூர்ந்து நோக்குங்கள். தலைமகன் அனிச்ச மலரை நோக்கி, "அனிச்ச மலரே! நீ வாழ்வாயாக! மென்மையால் நீ பிறமலர்கள் எல்லாவற்றினும் நல்ல தன்மை பெற்றுள்ளாய் எனபதில் ஐயமின்று. அங்ஙனமாயினும், நான் விழைகின்ற என் அருமைக்காதலியின் மென்மையோ உனது மென்மையைக் காட்டினும் சாலவும் பெரிதேயாகும் என்று நீ அறிவாயாக. இனி நீ, யானே எல்லா மலரினும் மென்மை யுடையேன்என்று இதுகாறும்கொண்டிருந்த செருக்கை ஒழிப் பாயாக." என்று கூறுவது எத்துணைய விழுமிய இன்பத்தை ஒவ்வொருவர் உள்ளத்திலும் கொட்டுகின்றது என்று இயம்ப வும் வேண்டுமோ? இத்துணையும் கூறியதின் காரணம் யாதெனின், ஓர் ஆடவன் தன் காதலியின் மாட்டு இன்பம் நுகர்ந்த பின்னர்ப் புதிய இன்பத்தை நாடுதல் கூடாது என் பதை விளக்கும் பொருட்டே யாகும்.

ஒரு தலைமகன் பெரிதும் விழைந்த தன்காதலியின் தலை சிறந்த இன்பத்தில் தவழ்ந்து, பின்னர் அவள்பால் அளப்பரிய அன்பு பூண்டு, தனது உள்ளத்தில் அவளை அழகுற அமைத்து, அவளைப்பற்றிப் பற்பல விழுமிய எண்ணங்கள் கொண்டு, தான் காணும் களிமிக நல்கும் பொருள்களிடத்தெல்லாம் தன் அருமை நாயகியின் பெருமையை நயந்துரைப்பான். அத் தகைய சீரிய எண்ணங்கள் பெறுகின்ற தலைமகன் எய்தும் இன்பத்திற்கு இணையான பொருள்கள் இப்பூவுலகில் ஒன்றுமே யில்லை. ஒருவன் தான் பெரிதும் விரும்புகின்ற தன் மகனையோ, மகளையோ பிறர் புகழக்கேட்டல் அவனுக்கு விழுமிய இன்பத்தை நல்குகின்றதன்றோ? அங்ஙனமே ஒரு தலைமகன் தான் சாலவும் காதலிக்கின்ற இளம்பாவையைப்

பிற மடவார் வர்ணித்துரைக்கக் கேட்டல் கூடுமாயின், அஃ தும் அவனுக்குப் பேரின்பத்தையே நல்கும் என்பதில் ஐய மின்று. ஆனால், அத்தகைய நிகழ்ச்சியை ஒரு தலைமகன் நேரில் காண்டல் அருமையான காரியமாகும். தன் காதலி யின் சிறப்பை விளக்க அவன் தனக்குத் தோன்றியவாறெல் லாம் தன் இன்பத்தின் பான்மையை விளக்குவான்.

அங்ஙனம் ஒரு தலைமகன் புகழும் புகழ்ச்சிக்கு ஓர் எல்லை வகுக்க ஒருவராலும் ஆகாது. அவன் புகழ்ச்சியின் அளவு அவன் தன் தலைவியின்பால் வைத்துள்ள அன்பின் அளவிற் கும், அவன் அவனைப் புகழப்பெற்றுள்ள கல்விக்கும், அறிவிற் கும், மனோபாவனையின் ஆற்றலுக்கும், விழுமிய குணத்திற்கும் ஏற்பச் சிறந்து ஒளிரும். அத்தகைய புகழ்ச்சி விளக்குவது யாதெனில், ஒரு தலைவன் தன் காதலியின்மாட்டு எத்துணை விழுமிய தலைசிறந்த அன்பு வைத்துள்ளான் என்பதே யாகும். ஒழுக்கத்தில் தலைசிறந்த புலவர் பெருந்தகையாராகிய பெரு நாவலர் ஒரு தலைவன் தன் உவப்புறு வாழ்வும், சிறப்பும், பூரிப்பும், செருக்குமாகத் துலங்கிய தன் தேவியை வாயாரச், சிந்தையாரத், தன் இன்னுயிர் இனிக்கப் புகழ்வதாகப் பாவித்து இசைத்த அரும்பாக்களின் அழகுகளையும், நயங் களையும் சிறிது ஆராய்வது அறிஞர்க்கு ஓர் இன்பத்தொழிலே யாகும்.

தலைவியின்மாட்டுப் பேரின்பத்தின் சுவையைப் பருகிய ஒரு தலைமகன் அவளைப் பிரிந்த பின்னர் அவள் கள்ளப்பார் வையையும், மென்சாயலையும், இன்பத்தோற்றத்தையும் தன் சிந்தையில் எழுதிவைத்துக் கொண்டவன்போல் அவையிற் றின் செம்மையில் திளைத்து, அவளைப்பற்றிக் கீழ்வருமாறு புகழ்கின்றான். அங்ஙனம் அவன் புகழ்வதாக நாயனார் கூறுகின்ற,

"நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்."

என்னும் பொன்வாக்கின் நயத்தைச் சிறிது ஆராய்வோம். மண்ணுலகில் மன்னுகின்ற மாண்பொருள்கள் அனைத்தினும் கண்ணிற்குக் காட்சியும், மனத்திற்கு மகிழ்ச்சியும், பரிசத் திற்கு மென்மையும் அளிக்கவல்ல சிறந்த பொருள் மலரே யாகும். மலரினும் சிறந்த பொருளாக ஒன்றையும் இசைக்க இயலாது; அதன் மணமும், தனிச்சிறப்பும், எழிலும் ஒரு புறம் கிடப்ப, அதன் மென்மையை நோக்குகின்ற காலத்து, அம்மென்மைக்கு இணையான பொருள் உலகில் ஒன்றுமே

யில்லை என்பது வெளிப்படை. ஈண்டு நாம் மென்மையைத் தான் எடுத்துக் கொள்ளல்வேண்டும். ஏனெனில், மென்மை என்னும் ஒரு குணம் எல்லாப் பொருள்களினும் விழுமிதாக ஒரு தனிச்சிறப்பை அடைந்துளது. மென்மை என்பதையே ஓர் உருவாகப் பாவித்து அதனைச் சிறப்பாக ஒரு மாதினுக்கு அமைப்பதும் உண்டு. "மெல்லியலார்" என்று மங்கையர்களைக் கூறுகின்றோம் அல்லவா? அஃது எக்காரணம் பற்றி எனச் சிறிது சிந்தித்துப் பார்ப்போமாயின், மென்மையின் மேன்மை விளங்குமல்லவா? வன்மனத்தான் ஒருவனைக் காட்டினும் மென்மனத்தான் எத்துணைச் சிறந்த மனப்பான்மையுடையவன் என இயம்பவும் வேண்டுமோ? வன்பொருள்கள் அனைத்தினும் நம் உள்ளத்திற்கு விழுமிய இன்பம் ஊட்டவல்ல பொருள்கள் மென்பொருள்கள் அல்லவா? சுருக்கிச் சொல்லுமிடத்து, "மென்மை என்னும் குணத்திற்குத் தனிச்சிறப்பும் தனியின்பமும் உண்டு எனவும், அதனை விரும்பாத ஆடவரும், மகளிரும் இலர் எனவும், விலங்குகளும், பறவைகளும் ஏனைய தாழ்ந்த உயிர்களுங்கூட மென்மையை விழைகின்றன" எனவும் அறிதல் வேண்டும்.

அத்தகைய தனிச்சிறப்பு எய்தியுள்ள "மென்மை" தலைசிறந்து ஒளிருமிடம் மலரகமேயாகும். மலரினும் மென்மையான பொருள் உலகில் ஒன்றில்லை; அம்மலர்கள் அனைத்தினும் சிறந்த மென்மையை உடைய மலர் "அனிச்ச மலரே" யாகும். ஆகவே, மென்மைக்கு இருப்பிடம் "அனிச்ச மலர்" என்றே கூறவும் தகும். அப்பெற்றித்தாய தலைசிறந்த மென்மையைத் தன்னகத்தே கொண்டுள்ள அனிச்சமலரும் தனது தலைசிறந்த பண்பினையும், சிறப்பினையும் இழந்துவிட்டதாம். எஞ்ஞான்று அங்ஙனம் அம்மலர் தனது பண்பினையும், சிறப்பினையும் இழந்ததெனின், ஒரு தலைமகன் ஒரு தலைமகளிடத்துச் சிறிய இன்பம் துய்த்து, அவன் அவள் மென்மையை அறிந்த பின்னரேயாகும். அவன் அதுகாறும் அறியாத மென்மையைத் தன் தலைவியின்மாட்டு அறிந்தானாகலின், அவன் அச்சிறப்புறு பொருளைப் புகழ்வானாயினன். அப்புகழ்ச்சியைத்தான் மேற்கூறிய அருமைப்பா இனிது விளக்குகின்றது.

இன்னும் விளக்கமாக உரைப்பின், ஒரு தலைமகன் விழுமிய தலைசிறந்த இன்பம் தன் மெல்லியலாள்மாட்டுத் துய்த்த பின்னர் அனிச்சமலரை நோக்கி, "ஓ! அனிச்ச மலரே! நீயே உலகில் உள்ள எல்லாப் பொருள்களினுஞ்

சிறந்த மென்மையை உடையாய் என இதுகாறும் செருக்கி வாழ்ந்திருந்தாய். ஆனால், நீ இனி உன் செருக்கை ஒழித்தல் வேண்டும். ஏனெனின், உன்னினும் சிறந்த மென்மையைத் தன்னகத்தே கொண்டவள் என் இன்பக்காதலி என்பதை நீ அறிவாயாக. அவளது மென்மையையும், உனது மென்மையையும் ஒருங்கு நோக்குமிடத்து, உனது "மென்மை" என்பது உலகில் உளதாகிய ஒரு பொருளாகவும் உரைக்க முடியாது. அத்துணைய வித்தியாசம் உனது மென்மைக்கும் என் காதலியின் மென்மைக்கும் அமைந்துளது என்பதை நீ அறிவாயாக. ஆனால், நீ அக்காரணம்பற்றி ஞானமடைந்து உயிர்துறத்தல் கூடாது. நீ வாழ்ந்திருக்கக் கடவாய். ஏனெனில், உன்னை உலகம் இழந்தால், என் காதலியின் மென்மையை, உலகில் எப்பொருளோடு நான் வேற்றுமை காட்டி விளக்கமுடியும்? ஆதலால், நீ இனிது வாழ்ந்திருத்தல் அத்தியாவசியமேயாகும்." என்று கூறுவதுபோல் பாவித்துத் தெய்வப்புலவர் ஆழ்ந்த செவ்விய பொருள்களின் நுணுக்கங்களை எங்ஙனம் செம்மையுற விளக்குகின்றார் என்று சிறிது சிந்திப்போமாயின் நமக்குள் நம்மை அறியாமல் எத்துணைய பேரின்பம் பொங்கி வழிகின்றது என்று பகரவும் வேண்டுமோ ?

தலைவன் பிறிதோரிடத்தில் தன் காதலியின் செவ்விய முகத்தின் இன்ப வொளியைத் தன் மனத்திற்குள் மகிழ்ந்து வெளியே புகழ்கின்ற ஞான்று, அவன் கூறுவதாகப் பாவித்து நாயனார் இயம்பிய ஒப்புயர்வற்ற பிறிதோர் செம்மையும், ஆழமும் பொதிந்துள்ள பொன்வாக்கு,

> "மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
> காதலை வாழி மதி."

என்பதாகும். தலைவன் உலகுக்கெல்லாம் இன்பம் நிறைந்த குளிர்ச்சி கெழுமிய ஒளியை நல்கும் சந்திரனை நோக்கி, "ஓ! வெண்மதியே! நீயும் வாழ்வாயாக! நான் இன்பம் துய்த்த என் அருமைக் காதலியின் பொலிவுள்ள முகம் ஒளி வீசுகின்ற தன்மையைப் போல் நீயும் ஒளி வீசும் ஆற்றலுடையையாயின், நான் அவளைக் காதலிப்பது போன்றே உன்னையும் காதலிப்பேன். ஆனால் உனக்கு அத்தகைய வன்மை அமைந்திலதே. அந்தோ! பாவம்! நீ என் செய்வாய்? உனக்கு இயற்கையாக மாசு அமைந்துளதே. நீ உலகுக்கெல்லாம் ஒளி கொழிப்பினும், உன் மாசு அனைவரும் அறிந்ததன்றோ? ஆதலால், உனது ஒளியின் மாண்பு ஒரு வழியில் பொலிவிழந்தன்றோ

நிலவுகின்றது. என் இன்பக்காதலியின் செவ்விய முகம் கொழிக்கின்ற என் உயிரைக்கவரும் ஒப்புயர்வில்லாத ஒளிக்கு நீயே ஒப்பாகமாட்டாய் என்றால், வேறுயாவர் இப்பூவுலகில் அவள் மாண்புறு இன்பம் செறிந்த ஒளிக்கு இணையாவார்? உனக்கு மறு இருத்தல் பற்றி உன்னால் தூயவொளியை வீச இயலவில்லை. ஆதலால், நான் உன்னைக் காதலிக்கவும் இயலாது. அந்தோ! பாவம்! நீ அங்ஙனம் மாசோடுகூடியே ஒளியைக் கொழித்தாலும், நீயும் உயிர் பெற்றிருத்தல் அத்தியாவசியமேயாகும். ஏனெனில், நீ உலகில் இருந்தால்தான் என் கண்மணியாகிய காமக்காதலியின் மாசில்லாச்செம்மை பொதிந்த இன்பவொளியின் மாட்சிமை இனிது புலனாகும். ஓ! மதியே! நீ வாழ்வாயாக!" என்று கூறுவதின் நயமும், அழகும் எத்துணைச் சிறந்தனவாக மிளிர்கின்றன என்று சற்றுச் சிந்தித்துப் பார்ப்போமாயின், ஒரு தலைமகன் தன் காதலியின்மாட்டுக் கொண்டுள்ள தலையன்பின் மாட்சி இனிது விளங்குகின்றதன்றோ? இங்ஙனம் தலைவன் தன் காதலியின் சிறப்புக்களை அவ்வப்போது தன் சிந்தைமகிழ, உயிர் தளிர்ப்பப் புகழ்வது விளக்குவது யாதெனில், அவன் அவளையன்றிப் பிறிதோர் மகள் இந்திராணியைப்போல் எழில் நலம் பெற்றவளாக மிளிரினும் அவளைத் தினைத்துணையும் விரும்பான் என்பதேயாகும். (தொடரும்)

---

## மலைபு வினாக்கள்

1. ஒன்றும் ஐந்தும் என்ன நிறம்?

   (கருநிறம்) (1=க; 5=ரு).

2. எந்த எண் பயிர்களை நன்றாய் விளையச் செய்யும்?

   75. (7-எ; 5-ரு=எரு.)

3. ஆறு பார்ப்பார்க்கு இரண்டு கண் எப்படி?

   (ஆற்றைப் பார்ப்பவருக்கு இரண்டு கண்)

—கா. சிவ. க.

---

## புதுக் கவிகள் - Original Poetry

(தாயினும் இனிய நம் தமிழ் மொழியைப் போற்றுங்கள். எல்லா அறங்களிலும் தமிழை வளர்க்கும் அறமே சாலச் சிறந்தது.)

### தமிழ் மொழி வாழ்த்து

'மாற்றறியாத'

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
தென்னாடு விளங்குறத் திகழுந்தென் மொழியே
ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ் மொழியே
வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
மாந்தருக் கிருகண்ணு வயங்குநன் மொழியே
தானியல் சிறப்புறுந் தனித்தமிழ் மொழியே
தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே.

கா. நமச்சிவாயன்

### தமிழ்மொழி வணக்கம்

பல்லுயிரும் பல வுலகும்
படைத் தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள் முன்
இருந்தபடி இருப்பதுபோல்,
கன்னடமுங் களி தெலுங்கும்
கவின் மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித் தெழுந்தே
ஒன்று பல ஆயிடினும்,
ஆரியம்போல் உலக வழக்
கழிந்தொழிந்து சிதையா உன்
சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே.

கடல்குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாட்டில்
தொடுகடலை உனக்குவமை சொல்லுவதும் புகழாமே?
ஒருபிழைக்கா அரனார்முன் உரையிழந்து விழிப்பாரேல்
அரியதுன திலக்கணமென் றறைவதுமற் புதமாமே?
சதுமறை ஆரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே?
வேகவதிக் கெதிரேற விட்டதொரு சிற்றேடு
காலநதி நினைக்கவராக் காரணத்தின் அறிகுறியே.
கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையார் உன் வாசகத்தில் ஒருபிரதி கருதினதே.
தக்கவழி விரிந்திலகுஞ் சங்கத்தார் சிறுபலகை
மிக்கநலஞ் சிறந்த உன்றன் மெய்ச்சரித வியஞ்சனமே.
வடமொழிதென் மொழியெனவே வந்த இரு வழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே கிழக்கொடுமேற் குணராரே.
வீறுடைய கலைமகட்கு விழியிரண்டும் மொழியானால்,
கூறுவட மொழிவலமாக் கொள்வர்குண திசையறியார்.
கலைமகள்தன் பூர்வதிசை காணுங்கால் அவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா மதியாரோ மதியுடையார்.
பத்துப்பாட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே.

ராவ் பஹதூர் பி. சுந்தரம் பிள்ளை.

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ சொல்லீர்
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்.
யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மைவெறும் புகழ்ச்சி யில்லை
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம் ஒருசொற் கேளீர்
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்.

சுப்பிரமணிய பாரதி.

## தமிழ் இசை ஸ்வரங்களும், கணித அளவும்

புராதனத் தமிழ் இசை வல்லுநர்கள் ஆரம்பத்தில் உபயோகித்து வந்தது இரு யாழ்களாகும். ஒன்று பேரியாழ்; மற்றொன்று செங்கோட்டியாழ். பேரியாழுக்கு 21 தந்திகள்; செங்கோட்டியாழ் அல்லது சிறு யாழுக்கு 7 தந்திகள். கிறிஸ்து பிறந்த இரண்டொரு நூற்றாண்டுகளில் 17 தந்திகளையுடைய மகரயாழும் 14 தந்திகளையுடைய சகோட யாழும் தோன்றலாயின. கி. பி. 10-வது நூற்றாண்டிலோ அல்லது, அதற்குப் பின்னரோ வாழ்ந்த கல்லாடர் என்ற புலவர் இதர நான்கு யாழ்களைக் குறிப்பிடுகின்றார். அவையாவன:—1000 தந்திகளையுடைய நாரதப் பேரியாழ்; 100 தந்திகளையுடைய கீசகப் பேரியாழ்; 9 தந்திகளையுடைய தும்புருயாழ்; ஒரே தந்தியுடைய மருத்துவயாழ்; தும்புரு யாழும், மருத்துவ யாழும் வீணை போன்றவையாகும். நூல்களில் காணும் வருணையிலிருந்து அந்த இசைக் கருவிகள் அழகிய வேலைப்பாடமைந்தன வென்றும், விலையுயர்ந்த ரத்னங்களை அக்கருவிகளுக்குள் போட்டிருந்தனரென்றும் அழகிய மாதர்கள் உபயோகிக்கும் யாழ்களைப் பட்டால் செய்த அழகிய பெட்டிகளில் வைப்ப ரென்றும் தெரிகிறது.

### யாழின் வருணனைகள்

யாழின் வருணனைகளை இரு பாணாற்றுப் படைகளிலும், பொருநராற்றுப் படையிலும், மலைபடுகடாமிலும், சிலப்பதிகாரம், கல்லாடம் இவைகளிலும் விரிவாகக் காணலாம். இனி நான் கூறப் போகும் விஷயங்கள் எல்லாம் அந்த வருணனைகளையே அடிப்படையாகக் கொண்டவையாகும். பேரி யாழ் கையில் தூக்கிச் செல்லக் கூடியதாகும்; பிற்காலத்து நாரதப் பேரி யாழ், தும்புரு யாழ் போன்றதல்ல. பேரி யாழ் மூன்று ஸ்தாயிகளிலும், ஏழு ஸ்வரங்களை ஒலிக்கும் 21 தந்திகளையுடையதாகும். 7 ஸ்வரங்களுக்கும் தமிழ்ப் பெயர்கள் வருமாறு:—

குரல்
துத்தம்
கைக்கிளை
உழை
இளி
விளரி
தாரம்

தாரம் என்பது சம்ஸ்கிருதச்சொல்லன்று. சமஸ்கிருதத்திலுள்ள தாரம் என்பதற்கு வேறு பொருள் உண்டு. புராதனத்

தமிழ் ஸ்வரங்கள் என்ன வென்பதையும், அவைகளுக்கும் தற்போதுள்ள ஸ்வரங்களுக்கு முள்ள சம்பந்தம் என்ன வென்பதையும் விவாதிக்கு முன், நாம் 7 ஸ்வரங்களின் தோற்றத்தைப்பற்றியும், பாணன் தமது யாழை எம்முறையில் வாசித்தானென்பதையும் கவனிக்கவேண்டும். முதலில் தோன்றிய ஸ்வரம் தார மென்பதாகும். இதர ஸ்வரங்கள் எவ்விதம் தோன்றின வென்பது கீழ்க்காணும் பாட்டால் அறியலாகும்:—

"தாரத்துட் டோன்று முழையுழையுட் டோன்று
மோருங்குரல் குரலினுட் டோன்றிச்—சேருமிளி
யுட்டோன்றுந் துத்தத்துட் டோன்றும் விளரியுட்
கைக்கிளை தோன்றும் பிறப்பு"

தாரத்திலிருந்து உழையும், உழையிலிருந்து குரலும், குரலிலிருந்து இளியும், இளியிலிருந்து துத்தமும், துத்தத்திலிருந்து விளரியும், விளரியிலிருந்து கைக்கிளையும் தோன்றியது. தமிழ்ப்பாணன் ஒவ்வொரு ஸ்வரத்தையும் இதர ஸ்வரங்களோடு கூட்டிக்கூட்டி வாசிக்க ஆரம்பித்தான். ஒரு ஸ்வரத்தையும் அதன் பஞ்சமத்தையும் கூட்டி வாசித்தபோது இனிமையான நாதம் ஏற்பட்டதைக் கண்டான். ஒரு தந்தியால் ஒரு ஸ்வரம் ஏற்பட்டால் அதன் மூன்றில் இரண்டு பாகம் அந்த ஸ்வரத்தில் பஞ்சமத்தையும், அரை பாகம் உச்ச ஸ்தாயியில் எட்டாவது ஸ்வரத்தையும் தோற்றுவிக்கு மென்பதைப் பாணன் ஆரம்பத்திலேயே கண்டுகொண்டானென்று தெரிகிறது. இந்த விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு இசைப் புலவனும், இசைக்கருவி செய்வோனும் சங்கீத சாஸ்திரமொன்றை சிருஷ்டித்தனர்.

### தந்தி நீள கணிதம்

முதன்முதலாகப் பேரியாழின் 21 தந்திகளின் நீளத்தைக் கணித்துக்கொள்ளலாம். முதல் தந்தி 36 விரல் அளவு நீளமிருக்குமானல் 8-வது தந்தியும், 15-வது தந்தியும் முறையே 18 விரல் அளவும், 9 விரலளவு மிருக்கும். 5, 9, 13, 17, 21-வது இந்த தந்திகள் முறையே 21, 16, 10 2/3, 7 1/9, 4 20/27 விரல் அளவு இருக்கும். 16-வது தந்தி 9-வதை விட உச்சஸ்தாயியில் 8-வது ஸ்வரமாகையாலும், 2-வது தந்தி கீழ் ஸ்தாயியில் 8-வது ஸ்வரமாகையாலும் இவை இரண்டின் நீளம் முறையே, 8,32 விரல் அளவாகும். இது போலவே இதர தந்திகளின் நீளத்தையும் கணிக்க வேண்டும்.

### சுருதி ஸ்தானங்கள்

பிறகு பாணன் ஸ்வர ஸ்தானங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்து 7 ஸ்வரங்களோடு புதிய 5 ஸ்வர ஸ்தா

னங்களைக் கண்டு பிடித்தான். அடுத்தபடியாக 12 ஸ்வர ஸ்தானங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து மேலும், 10 ஸ்வர ஸ்தானங்களைக் கண்டுபிடித்தான். ஸ்வர ஸ்தான மென்பதற்குத் தமிழில் அலகு என்பார்கள்.

கி. பி. 2-வது நூற்றாண்டிலேயே இந்த 22 சுருதி ஸ்தானங்களையும் தமிழர் கண்டு பிடித்து விட்டனர்; ஆனால், ஆராய்ச்சி அம்மட்டோடு நிற்கவில்லை. பாணன் அலகை (ஸ்ருதி ஸ்தானம்) பின்னப்படுத்திக்கொண்டே போனான். இதனால் 41 அரை சுருதி ஸ்தானங்களும், 94 கால் சுருதி ஸ்தானங்களும், 421 அரைக்கால் சுருதி ஸ்தானங்களும், 388 வீச (1/8) சுருதி ஸ்தானங்களும் கண்டு பிடிக்கப்பட்டன. பாணனது 1000 தந்தியுடைய யாழ் அரைவீச (1/16) சுருதி ஸ்தானத்தையும் காட்டியது. அந்த யாழில் பெரிய தந்தியின் நீளம், 84 விரல் அளவாகும்; சிறிய தந்தியின் நீளம் 32 விரல் அளவாகும்.

22 அலகுகள் அல்லது, சுருதிகளைப் பாணன் கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்தான்:

| | | |
|---|---|---|
| குரல் | 4 | அலகுகள் |
| துத்தம் | 4 | ,, |
| கைக்கிளை | 3 | ,, |
| உழை | 2 | ,, |
| இளி | 4 | ,, |
| விளரி | 3 | ,, |
| தாரம் | 2 | ,, |

புராதன தமிழ் இசைக் கணிதத்தின்படி மாவே முதல் ஸ்வரமாகும். இதற்குப் பல ஆதாரங்கள் உண்டு. இந்த ஸ்வரங்களைச் சில மிருகங்கள், பறவைகள் இவைகளின் சப்தத்தோடு தமிழர் ஒப்பிட்டுள்ளனர். புராதனத் தமிழரின் குரல்-ம; துத்தம்-ப; கைக்கிளை-த; உழை-நி; இளி-ச; விளரி-ரி; தாரம்-க.

புராதனத் தமிழர் சோதிட சாஸ்திரத்தையும், இசைக் கணிதத்தையும் சம்பந்தப்படுத்தியிருப்பது மற்றொரு விசேஷமாகும். கீழ்க்கண்ட செய்யுள் அதனை வலியுறுத்தும்:—

இளியிட பங்கற் கடகமாம் விளரி சிங்கம்
தளராத தார மதுவாந்-தளராக்
குரல்கோற் றனுத்துத்தங் கும்பங் கிளையாம்
வரலா றுழைமீன மாம்.

12 ராசிகளில் தமிழர் கீழ்க்கண்ட ஏழைமட்டும் தெரிந்து கொண்டனர்; ரிஷபம், கடகம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம், மீனம். இளியை ரிஷபமும், விளரியை கடகமும், தாரத்தை சிங்கமும், குரலை துலாமும், துத்தத்தை தனுசும், கைக்கிளையை கும்பமும், உழையை மீனமும் குறித்தன.

சிலப்பதிகாரத்தில், 7 இடைச்சிகள் குரவைக் கூத்தாடுகையில் மேலே கண்ட ராசிகளின் ஸ்தானங்கள் அமைந்திருப்பது போலவே வரிசையாக நிற்பார்களென்று கண்டிருக்கிறது.

தற்போது கர்நாடக சங்கீத சாஸ்திரப்படி அலகுகளைக் கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்துள்ளனர். ச 4; ரி 3; க 2; ம 4; ப 4; த 3; நி 2.

(தொடரும்)

—விடுதலை.

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் சென்ற பிப்ரவரித் திங்கள் 22, 24, 25, 26, 28, 29-ஆம் நாட்களில் உயர்திரு. சுவாமி விபுலாநந்தர் அவர்கள் பி. எஸ். ஸி. (இலண்டன்) "பண்டைத் தமிழிசை" என்ற பொருள்பற்றி நான்கு சொற்பொழிவுகளும், "தமிழ்க்கலையும் சிற்பமும்" என்ற பொருள்பற்றியும், "தமிழும் அறிவியலாராய்ச்சியும்" என்ற பொருள்பற்றியும் இரண்டு சொற்பொழிவுகளும் நிகழ்த்தினார்கள். பல அறிஞர்களும், மாணவர்களும், பொதுமக்களும் நாடோறும் பெருந் தொகையினராகக் குழுமி, பொருட்செறிவும் புதுக்கருத்துகளும் நிறைந்த அச்சொற்பொழிவுகளைச் செவிமாந்தினர். தலைமை தாங்கிய மகாமகோபாத்தியாய குப்புசாமி சாஸ்திரியாரவர்கள் சுவாமிகளின் அறிவுப் பெருக்கத்தையும் ஆராய்ச்சி வன்மையையும் வியந்து பாராட்டியதுடன் தமிழ் நூற்களில் இற்றை நாளுக்கு இன்றியமையாது வேண்டப்படுவனவாய எல்லா அறிவியற் கருத்துக்களும் பொதிந்து கிடப்பது மிகவும் போற்றத்தக்கதாகும் என்றும், இந்திய நாட்டின் பண்டைய மக்களுக்குத் தமிழ் மொழியும் வடமொழியும் இரண்டுகண்களாகவே திகழ்ந்திருக்க வேண்டுமெனத் தாம் கருதுவதாகவும் கூறி முடித்தார்கள்.

* * *

தேங்காய் எவ்வெவ்வகையிற் பயன்படும்? இதற்கு விடை இலங்கைத் தேங்காய்க் களஞ்சியத்திற்கு அனுப்பப்பட்டுவரும் பொருள்களை ஆராய்ந்தால் எளிதிற் கிடைக்கும். தேங்காயெண்ணெய், தேங்காய்ச் சாராயம், தேங்காய் ரொட்டி, டாஃபி என்ற தின்பண்டம், தேங்காய் வெல்லம், தேங்காய் நறுமணப்பொருள்கள், தேங்காயோட்டினுற் செய்யப்பட்டுப் பொன்னாலும் வெள்ளியாலும் கட்டப்பட்ட நகைகள், கிண்ணங்கள், பொத்தான்கள், தீக்குச்சிகள் ஆகியவையும் இன்னும் இவைபோன்ற பிறவும் அப்பொருள்களாம்.

* * *

இராஜ புதனத்திலுள்ள கோட்டா சமஸ்தானத்தில் பண்டைக் கல்வெட்டுகளும் கட்டிடங்களும் இப்பொழுது முதன் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கண்டு பிடித்தவர் வாரணாசி இந்துப் பல்கலைக்கழகப் பண்டை வரலாற்றுக் கலைநூற் பேராசிரியர் டாக்டர் ஏ. எஸ். அல்டேக்கார் மனீந்திரசந்திர நந்தி என்பார். கல்வெட்டுகள் இதுவரையில் அப்பகுதியிற் கண்டு பிடிக்கப்பட்டுள்ளவைகளெல்லாவற்றிற்கும் முற்பட்டவை; சிறிது திரிந்த வடமொழியிலுள்ள அவை விக்ரம சகாப்தம் 2391-க்கு உரியனவென்றும் கி. பி. மூன்றும் நூற்றுண்டிற்கு முன்பாகவே முகரி வழியினர் ஆங்கு அரசுரிமை பூண்டிருந்தனரென்பது அவற்றால் நிலைநாட்டப்படுகின்றனவென்றும் ஆசிரியர் கூறுகிறார். அக்கல்வெட்டுகளில் ஒன்று சிவலிங்கவழிபாடு குறிக்கின்றதாம்; ஒன்று சோமநாத சுவாமிக்குப் பல மானியங்கள் விடப்பட்டமையைக் குறிக்கின்றதாம்; ஒன்று ஜெயசிங்க மன்னன் அவனுடைய புலவர் நாயகமாகிய நாராயணு என்பவர்க்கு ஒரு சிற்றூரைப் பரிசிலாக அளித்ததைக் குறிக்கின்றதாம். வேலைப்பாடமைந்த பல கோயில்களும் ஆண்டுத் தோண்டப்பட்டுள்ளன.

* * *

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் சென்ற மார்கழி௴ ௰௬௨ (30-12-1935) திங்களன்று காலை 9½ மணிக்குச் சென்னை மாகாணத் தமிழர் இரண்டாவது மாநாடு மேலைத்தஞ்சாவூர் நாட்டாண்மைக்கழகத் தலைவர், திரு. வி. நாடிமுத்துப்பிள்ளை அவர்கள் தலைமையில் திருநெல்வேலிப்பாலம், இந்து கலாசாலையில் தொடங்கி நடைபெற்றது.

அக்காலை பத்துத் தீர்மானங்கள் நிறைவேறின. அவை பின் வருவன:—

**தீர்மானம் க.**—திருப்பனந்தாள் மடாதிபதி மறைத்திரு காசிவாசி சுவாமிநாத சுவாமி அவர்கள் இச்சங்கத்தார் ஆக்கிவரும் தமிழ்க்கலைச்சொற்களை இருமுறை அச்சிடவும் முதற்பதிப்பிலுள்ள சொற்களைச் சீர்திருத்துவோர்களுக்குப் பரிசுகள் கொடுக்கவும் முன் வந்தருளியதை இம்மாநாடு போற்றுவதுடன் அன்னாருக்குத் தமது உளங்குளிர் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றது.

**தீர்மானம் உ.**—மொழிகளுள் தமிழ் மிகப் பழமை வாய்ந்ததும், பலதுறைக் கல்விகளும் அமைந்துள்ளதும், கிளைமொழி பல

உடையதுமாகையால், அதனை உயர்தனிச் செம்மொழி (Classical language) என்று கருதி நடத்தவேண்டுமென்று இந்த மாநாடு சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார்களையும் சென்னைக் கல்வித்துறை அரசியல் அமைச்சரையும் ஆட்சியாளரையும் வேண்டிக் கொள்கிறது.

தீர்மானம் ௩.—கல்லூரிகளிலும் உயர்நிலைப் பள்ளிக்கூடங்களிலும் ஆங்கிலமொழிந்த எல்லாப் பாடங்களையும் தாய்மொழியிலேயே கற்பித்தல் வேண்டுமென்ற விதியை வற்புறுத்தி நடத்த வேண்டுமென்றும், இந்தச் சங்கத்தார் இயற்றியமைக்கும் அறிவு நூல் தமிழ்ச் சொற்களையே பயன்படுத்த ஏற்பாடுசெய்ய வேண்டுமென்றும் கல்வித்துறை ஆட்சியாளர்களையும் பொறுப்பாளர்களையும் இந்த மாநாடு வேண்டிக்கொள்ளுகிறது.

தீர்மானம் ௪.—ஆங்கில ஆசிரியர்களுக்குள்ள தகுதிகளும் பொறுப்புகளும் தமிழாசிரியர்கட்கும் இருத்தலினாலே, அவ்வப்பள்ளிக்கூடங்களில் உள்ள ஆங்கில ஆசிரியர்கள் ஏனைய ஆசிரியர்கள் இவர்களுக்குத் தருவதுபோலச் சம்பளம் தமிழாசிரியர்கட்கும் தர வேண்டுமென்று அரசியல் தலைவர்களையும் கல்லூரி நடத்தும் செல்வர்களையும் இம்மாநாடு வேண்டிக்கொள்கிறது.

தீர்மானம் ௫.—தமிழ்மக்கள் தாய்மொழியில் மிகுந்த பற்று வைத்து அதை வளர்க்க முன்வரவேண்டுமென்றும், கூடியவரை தமிழ்ச்சொற்களையே நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்றும், தமிழ்மக்கள் ஒருவர்க்கொருவர் தமிழிலேயே பேசவும் எழுதவும் வேண்டுமென்றும், தமிழ்த்தாய்க்கு என்றே ஆண்டில் ஒரு நாளைத் தனியாக ஏற்படுத்தித் தமிழ்நாடெங்கும் விழாவாகக் கொண்டாட வேண்டுமென்றும் இந்த மாநாடு தமிழ்மக்களைக் கேட்டுக் கொள்ளுகிறது.

தீர்மானம் ௬.—ஆங்கிலத்திலும் வடமொழியிலும் இருப்பது போலத் தமிழிலும் துணைமொழி யில்லாமல் B. A., Hons, M. A., பட்டங்களுக்குத் தமிழிலேயே தேர்வு ஏற்படுத்தியிருக்கிற அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தாரைப் பாராட்டுவதோடு அப்படியே சென்னைப் பல்கலைக்கழகத்திலும் ஏற்படுத்தப்படவேண்டுமென்று இந்த மாநாடு சென்னைப் பல்கலைக்கழகத்தாரை வேண்டிக்கொள்கிறது.

தீர்மானம் ௭.—இப்போது தமிழ்நாட்டில் காணப்படுகிற தமிழ் அசைவொலிப்படங்களும் (Talkie pictures) பாடுதட்டுக்களும், (Gramaphone records) பல்வகைக் குற்றங்களுடையனவாய் இருப்பதுகண்டு வருந்துவதோடு, உண்மையில் அவை தமிழ் மக்களின் வாழ்க்கையையாவது மன நிகழ்வுகளையாவது காட்டுவன அல்ல வென்று உணர்ந்து இனிமேல் தமிழ்மணம் செறிந்தனவும் தமிழ் மக்களின் உயர்நிலைக்கும் பெருமைக்கும் பொருந்துவனவும் தமிழ் மக்கள் இயல்பை உள்ளவாறு காட்டக்கூடியனவும் ஆகிய படங்களையும் பாடுதட்டுக்களையும் ஆக்கத் தமிழ் மக்கள் முன்வரவேண்டும் என்று இம்மாநாடு தீர்மானிக்கிறது.

தீர்மானம் அ.—அரசியல் பாடநூற் கழகத்தா (Text Book Committee)ரால் ஒப்புக்கொள்ளப்பட்ட நூல்களிலும் அரசியலாரால் வெளியிடப்பட்ட பள்ளி இறுதித் தேர்தலுக் (S. S. L. C.) குரிய தமிழ்ப்பாடச் சுவடிகளிலும் பிழை மலிந்து கிடப்பதைக் கண்டு இந்த மாநாடு வருந்துவதோடு தக்க தமிழறிஞர்களை அக்கழக அங்கத்தின ராய் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று அரசியல் தலைவர்களைக் கேட்டுக் கொள்கிறது.

தீர்மானம் க:—இப்பொழுதிருக்கும் கல்விமுறையால் வேலை யில்லாக்குறைவு மிகுகின்றபடியால் பொதுக்கல்வியுடன் தொழிற் கல்வியும் சேர்த்துக் கல்விமுறை தக்கவாறு மாற்றியமைக்கப்பெற வேண்டுமென்று இம்மாநாடு தீர்மானிக்கிறது.

தீர்மானம் ம.—இதில் கண்ட தீர்மானங்களை அனுப்பவேண் டியவர்களுக்கு அனுப்பி வேண்டுவன செய்ய இந்த மாநாடு அமைச்சர் அவர்களுக்கு ஆணை தருகிறது.

* * *

திருவள்ளுவர் திருநாட் கழகத்தினரால் வெளியிடப்பட்ட **1935**-ஆம் ஆண்டு நினைவுமலர் வெளிவந்து பார்வையிட்டோம். நினைவுமலர் கண்ணைக்கவரும் வனப்புடையதாய்ப் பல நிழலுருவப் படங்களோடு கூடியதாய், திருக்குறளைப் பற்றிய சிறந்த பல உண்மை களைக் கொண்டதாய்த் திகழ்கிறது. 160 பக்கங்ளுக்குக் குறையாமல் உயர்ந்த தாளில் மிகவும் அழகாக அச்சிடப்பட்டுள்ள இம்மலர்விலை அணா ஒன்பதே. நம்மிடங் கிடைக்கும்.

* * *

தேவார திருப்புகழ் இசைவாணர் வேலூர். மு. அப்பாத்துரை ஆச்சாரியார் அவர்கள் சென்ற 4-3-36 புதனன்று திடுமெனக் காலஞ் சென்றமை தமிழிசை யுலகிற்கும் தமிழுக்கும் ஈரப்பொணா இழப் பாகும். அவன் புகழை விண்ணுலகிற் பாடச் சென்ற பெரியாரின் உயிர் அமைதி யடைவதாக.

---

தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களிற் சிறந்தவரும், பல தமிழ் நூல்களுக் காசிரியரும், திருவள்ளுவர் திருநாட் கழகத்தலைவ ருமாயிருந்த புலவர்ப் புரவலர், மாபெரும் வள்ளல் உயர் திரு. கா. நமச்சிவாய முதலியார், இத்திங்கள் 13-ஆம் நாள் இறைவன் திருவடி சேர்ந்தமை கேட்டு ஆருத்துயரடைகின் றோம். அவர் உயிர் அமைதி பெறுவதாக.

---

## சென்னைப் பச்சையப்பன் கலாசாலை

"கட்டுக கோயில் வெட்டுக குளம்" என்பது பெரியோர் ஆணையாக விருந்த காலத்தில் அதற்கியைய பல கோயில்களுக்குப் பல்லாற்றானும் பொருளுதவி புரிந்து நிலம் மனைமுதலியவற்றை முற்றூட்டாக எழுதிவைத்த பெரியார் சென்னையில் முன்னை நாள் வதிந்த பச்சையப்ப முதலியாரவர்கள் ஆவர். நடுநாட்டிலும் சோழநாட்டிலும் உள்ள திருப்பதிகளுள் அவருடைய வள்ளற்றன்மை யென்னும் வலைக்கட்படாத பெருந் திருப்பதி எதுவும் இல்லையென்றே துணிந்து கூறலாம். அப் பெருவள்ளல் வருங்காலத்தின் தேவையை அப்பொழுதே நன்குணர்ந்த பெருமானாக இலகினார் என்பதற்கு அக் கொடைகளோடு அவர் கல்வித்துறையில் பல பள்ளிக்கூடங்களை நிறுவியமையே சான்றாகும். இம் மாகாணத்தின் தலைநகராகிய இச் சென்னை நகரின்கண் நடுநாயகமாய் விளங்கும் ஜியார்ஜ்டவுன் என்ற பகுதியின் நடுவண் அவர் அக்காலையமைத்த, அவர் பெயர் கொண்டு எழுந்துள்ள கலாசாலை எழிலுறத் திகழ்வது யாவருமறிந்ததே. தேர்ந்தமுறையிலும் சிறந்த மேற்பார்வையிலும் பொதுமக்களுக்குக் கல்வி வழங்கிவந்த அக் கலாசாலை இற்றைநாள் பொருள் வலிவு குன்றி ஆதரவுகுறைந்துவருவது வருந்தத்தக்கதாகும் அக் கலாசாலையின் ஆண்டுச் செலவை ஈடுசெய்வதே பெரிதுங் கடினமாக இருக்கிறதென்றும், தக்க பெருவள்ளல்களின் பேராதரவு இருந்தாலொழிய அக் கலாசாலை தான் மேற்கொண்ட பெருந்தொண்டை நன்காற்றி வருதல் முடியாதென்றும் தெரியவருகிறது. இந்நிலையறிந்த சென்னைப் பல்கலைக் கழகத்தார் ரூ. 10000 நன்கொடையாக இவ்வாண்டு உதவ முன்வந்துள்ளமை தமிழ்நாட்டாராற் பெரிதும் பாராட்டற்குரியதாகும். ஆயினும் இவ்வுதவி நிலையான அரணை அளிக்காதாகையால் அக் கலாசாலையிற் பயின்ற மாணவர்கள், பயிலும் மாணவர்கள் ஆகியோர் தத்தம்மாலியன்ற பொருளுதவியை யளிக்க முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம். "சிறுதுளி பெருவெள்ளம்". பெருவள்ளல்கள் பெரும் பொருளுதவுமாறு திருவுளம் பற்றின் அதுவும் தமிழ்நாடுசெய்த பெரும் பயனேயாகும்.

---




சிலம்பு-கச] யுவ—பங்குனி ❧ [பரல்-அ

## திருவாசகம்

### கோயிற்றிருப்பதிகம்

அநுபோக இலக்கணம்

உணர்ந்த மாமுனிவ ரும்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி எல்லா வுயிர்கட்கும் உயிரே
யெனைப் பிறப்பறுக்கு மெம்மருந்தே
திணிந்ததோ ரிருளிற் றெளிந்ததூ வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கள் தாமில்லா இன்பமே யுன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே.

பதவுரை :—

உணர்ந்த மாமுனிவர்—நின்னோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று நின்னைச் சிறப்புவகையால் உணர்ந்து பொதுவகையால் மாத்திரம் அறிந்த பெரிய முனிவர்கள்

உம்பரொடு—தேவர்கள் ஆகிய இவர்களொடு

ஒழிந்தார்—பொதுவகையால் நின்னை அறிந்த ஏனைய மக்களும் தேவர்களும்

உணர்வுக்கும் தெரிவு அரும் பொருளே—நின்னைத் தங்கள் பொது இயல் அறிவால் அறிதற்கு அறியமுடியாத மெய்ப்பொருளே

இணங்கிலி—(எல்லா உயிர்களும் நின்னை அடைந்து பேரின்பம் நுகரல் வேண்டும், என்ற நின் கருத்தை அறிந்து) அக்கருத்துக்கு இணங்கி யொழுகாதிருக்கிற

எல்லா உயிர்கட்கும் உயிரே—(எல்லா உயிர்களுக்கும் அவற்றின் மேல் வைத்த பேரன்பால் அவை நின்னை அடைதற்குத் தகுதி பெறும் வண்ணம்) அவற்றொடு இரண்டறக் கலந்து நின்று இடையறாது அறிவித்தும் அறிந்தும் வருகின்ற பேரன்புப் பொருளே

திணிந்தது ஓரிருளில் தெளிந்த தூவெளியே—அவ்வாறு நின்னோடிணங்காத உயிர்களை நெருங்கி மறைத்துநின்று நின்னை அறியவொட்டாமற் செய்கிற ஒப்பற்ற ஆணவமல இருளோடு நீயும் தாக்கின்றி அருட்பேரொளியாய்க் கலந்து நிற்றல்பற்றி அவ்வுயிர்களிடத்திலுள்ள நெருங்கிய இருள் சிறிது சிறிதாகக் குறைந்து குறைந்து முடிவில் அவ்விருள் முழுவதும் நீங்கி அதனால் அவ்வுயிர்களில், தெளிவாய் விளங்கும் பேரொளிப் பொருளே

எனைப்பிறப்பு அறுக்கும் எம்மருந்தே—(இவ்வாறு நீ உயிர்களுக்கு எப்பொழுதுஞ் சலியாது செய்கிற முறைமைப்படி) என் மேலும் நீ பேரன்பு வைத்து (திருப்பெருந்துறைக்கு வந்து என்னை ஆண்டு அடிமை கொண்டு) மலத்தாலாகிய எனது பிறவிப்பிணி முற்றிலும் நீங்குதற்கு மருந்துபோ லிருந்தவனே

திருப்பெருந் துறையுறை சிவனே—திருப்பெருந்துறையில் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கின்ற சிவபெருமானே

குணங்கள் தாம் இல்லா இன்பமே—தாமதம், இராசதம், சாத்துவிகம் என்னும் மாயா குணங்களின் தொடர்பு சிறிதுமின்றி அருட்குணங்களோடு விளங்கும் பேரின்பப் பொருளே

நின்னைக் குறுகினேற்கு இனி என்ன குறையே—இவ்வாறு நீ என்னை ஆண்டருளியதனால் பேரின்ப நிலையடைந்த எனக்கு நான் கேட்டு நீ தரும்படி என்ன குறை இருக்கின்றது? (ஒரு குறையுமில்லை என்றபடி)

விளக்கவுரை :—

உணர்ந்தமா முனிவர் உம்பரொடு ஒழிந்தார் உணர்வுக்கு தெரிவரும் பொருளே—உணர்ந்தமா முனிவர் என்பதில் உணர்வு என்பது, இங்கே "உரையற் றுணர்வற்று உயிர்பரம் அற்று உணரும்" மோன நிலையிலுள்ள மெய்யுணர்வு அன்று (திருமந்திரம் 1593) நூல்களைக் கற்றுக் கேட்டு ஆராய்ந்து அறியும் உணர்வு. இந்த உணர்வு இறைவனோடு கலந்து நின்றுணராது அவன் பொது இயல்பை அவனின் வேறாய் நின்று அறியும் சுட்டுணர்வு, ஆத

வின் 'உணர்ந்த மாமுனிவ ரும்பரோ டொழிந்தார் உணர்வுக் குந் தெரிவரும் பொருளே' என்றார். அடிகள் அற்புதப் பத்து எட்டாவது பாட்டில் "ஓசையுணர்வார்க் குணர்வரிய வன்" என்று இதே கருத்தைக் கூறியருளினர். திருமூலர் 430-வது திருமந்திரத்தில் இந்த உணர்வை 'ஆயுணர்வு' என்றும், திருமாளிகைத் தேவர் தமது கோயில், திருவிசைப்பா முதலாவது பாட்டில் 'சூழ்உணர்வு' என்றும், இறைவன் இந்த சூழ் உணர்வைக் கடந்து நின்றதோர் உணர்வு என்றும் கூறி யிருத்தல் காண்க—முனிவர், உம்பர் என்று மக்கள் தேவர்கள் கூறப்பட்டதனுல் ஒழிந்தாரென்பதற்கு ஏனைய மக்களும் தேவ ரும் என்று உரை கூறப்பட்டது.

இணங்கிலி எல்லா உயிர்கட்கும் உயிரே—இணங்கு + இலி = இணங் கிலி; இறைவனது கருத்துக்கு இணக்கமில்லாது ஒழுகுகிற உயிர் கள். தங்கள் கட்டுநிலையில், இறைவன் தங்கள் பொருட்டுச் செய்யும் அருட்செயலை அறியாதிருத்தல் காரணமாக அவன் செயலுக்கு நேரொத்து ஒழுகாதிருக்கின்றமை பற்றி அவ்வுயிர் களை இணங்கிலிகள் என்று அடிகள் கூறினர். இறைவன் எல்லா வுயிர்களுக்கும் பிராணனுய் நின்று அவற்றை இயக்கியும் அறிவித்தும் செய்து வருதலால் அவனை அடிகள் எல்லா வுயிர் கட்கும் உயிரே என்றார்.

திணிந்தது ஓர் இருளில் தெளிந்த தூவெளியே--திணிந்த = நெருங்கிய; தூவெளி = ஞானகாசம்; சிதம்பரம். உயிர்களுக்குக் கட்டு நிலை யில் தன்னையடையும் பக்குவம் வருவிக்கும் பொருட்டு இறைவ னது அருட்சத்தியானது திரோதான சத்தியாய் நின்று உலக போகம் நுகர்வித்தும் பாகம் வந்த அளவில் அருட்சத்தியாக மாறி நின்றும் இவ்வாறு உயிர்களுக்கு முழுப்பக்குவம் வந்து மலம் நீங்கியபின் முழுவதும் அருட்சத்தியாக மாறி, தூவெளியில் பேரொளியாக விளங்குதலின் அடிகள் இறைவனைத் "திணிந்த தோரிருளிற் றெளிந்ததூ வெளியே" என்றார்.

எனைப் பிறப்பறுக்கும் எம்மருந்து—எனை = எனது; உருபு மயக்கம். உடற்பிணிக்கு மருந்துபோல உயிர்ப்பிணியாகிய தமது பிற வியைத் திருப்பெருந் துறைக்கு வந்து ஆண்டருள் செய்து நீக்கி னன் என்பார், 'எனைப் பிறப்பறுக்கும் எம்மருந்தே' என்றார். தம்மைப் போன்ற எல்லா உயிர்களுடைய பிறவிப் பிணிக்கும் இறைவன் மருந்தாகலின் அடிகள் 'எம்மருந்தே' என்று பன்மை யால் விளித்தார்.

குணங்கள்தாம் இல்லா இன்பமே—குணங்கள் என்பது இங்கே மாயையொடு தொடர்புடைய சாத்துவிகம் முதலிய மூன்று குணங்களையும் குறிக்கிறது. இறைவன் தன்வயத்தனுதல் முதலிய எட்டு அருட்குணங்களையும் உடையவன். உயிர்களுக்கு இறைவனை அடையும் பேரின்பம் அவன் அருட்குணங்களோட்

இயற்கையோடு மாறுபட்டது. மேலை நாடுகள் இற்றை நாள் செயற்கை வாழ்க்கையில் இறங்கி முன்னேறுவதைக் கண்டு, கீழ்நாடுகள் பல அவற்றைப் பின்பற்றுகின்றன. 150 ஆண்டு களாக ஆங்கில ஆட்சி நிலவினும், 150 ஆண்டுகளாக ஆங்கில மொழி பொதுமொழியாக வழங்கினும், இந்திய நாடு முழுவ தும் மேனாட்டார் வாழ்க்கை முறையைப் பின் பற்றிற்றோ? ஏன்? இந்திய நாட்டில்தான் இயற்கை இன்னமும் உரங் கொண்டு வாழ்கின்றது. இத்தகைய நாட்டில் வாழுமொரு வனைத் தாய்மொழிப் பயிற்சியாகிய இயற்கை வாழ்க்கையி னின்று வேற்று மொழிப் பயிற்சியாகிய செயற்கை வாழ்க் கைக்குத் திருப்ப முடியுமா? ஆங்கில மொழி அறிவோடுமட்டும் பிரயாணம் செய்வோர் சிலர் வங்காளத்தில் பிரயாணம் செய்வது எளிதில்லை என்பர். ஏனெனில் வங்காளிகள் ஆங்கிலம் அறிந்தாராயினும் தாய்மொழியிலேயே உரையாடு கின்றன ராம். உண்மைதான். செயற்கையில் ஒருவாறு ஒருமொழியைப் பேச அறிந்தும் இயற்கைக்குப் படிந்து உரையாடுவதே யார்க் கும் எளிதன்றோ! இன்பமு மன்றோ! செயற்கை மொழிப்பயிற் சியில் இறங்குவதென்றாலும் தமிழர்கள் ஆங்கிலத்தில் ஒரு வேளை இறங்கிவிடலாம். ஹிந்தியில் இறங்குவதென்றால் அரி தினும் அரிதே. ஏனெனில் தமிழ் மொழியாளர் ஒரே ஓசை யெழுத்துப்பயிற்சியோடு மூச்சுச்செட்டும் சொற்செட்டும் பொருந்தியதோர் இனியமொழியைப் பேசும் பழக்கத்தினர்.

ஹிந்தி மொழியை நிறுவமுயல்வோர் அதனால் இந்திய மக்களிடையில் ஓர் கட்டுணர்ச்சியும் திண்ண நிலையும் ஏற்பட லாம் என்பர். அவ்வித நிலையைத் தடுத்து நிற்பது நாட்டில் நிலவும் பல்வேறு மொழிகள் அல்ல என்பதை அவர்கள் ஓர்தல் வேண்டும். நந்தம் பல்வேறுய வர்ணக் கட்டுகளும் ஒழுக்க வேறுபாடுகளும் பழக்க வழக்கங்களும் நாட்டில் நிலவுங் கால மளவும் மக்களிடையில் ஓர் கட்டுணர்ச்சியைக் காண்பது கனவிலும் கூடாத தோர் காரியமே ஆகும். தமிழ் நாட் டின் கண்ணுள்ள தாழ்த்தப்பட்ட மக்கள் தமிழ் மொழியே பேசுகின்றனர். மொழிஉரிமையில் ஒன்று பட்டிருந்தும் வாழ்க்கை முறையில் ஒத்த உரிமையை அவர்கள் அடைந் துளரோ? இந்நிலையையே தமிழ் நாடன்றி ஏனைய நம் நாடு களிலும் காணலாம். எனவே, ஒற்றுமையை உண்டாக்கற் பாலது வாய்ப்பேச்சு அன்று, உள்ளத்தின் தன்மையே என் பது கண்கூடு.

தவிர, நம்மக்களிடை மதப்பற்றும் மொழிப்பற்றும் ஒன்றை யொன்று விரவி விளங்குதலைக் காணலாம். மகம்மதி

யர் கொரானைப்படிக்க வேண்டுமானல் உருதுப்பயிற்சி உடையராதல் வேண்டும். பெரியபுராணம் தேவாரம் முதலிய நூல்களும் அந்நூல்களைக் கற்கும் தமிழ் ஆர்வமும் இந்து சைவர்களுக்கு இன்றியமையாததே. மதத்தோடு பொருந்திய மொழிப்பற்றே மதத்தை வளர்ப்பதற்கும் மொழியைப் பேணுதற்கும் கருவியாய் அமைந்துளது. ஒரே கடவுள் வழிபாட்டில் படியாமல் பல்வேறு கடவுள் வழிபாடுகளில் படிந்து, மதப்பற்றும் மதத்தை வளர்க்கும் மொழிப்பற்றும் வாய்ந்த இந்திய நாட்டு மக்களை யெல்லாம் மதத்தோடு கலவாத ஹிந்தி மொழி எவ்வாறு ஒரு முகப்படுத்த வல்லதோ? நாட்டில் நிலவும் பல்வேறு மதங்களையும் அறிவீனத்தையும் ஒழித்தாலன்றி ஈண்டு நிலவும் மொழிகளை ஒழிக்கவும் இயலாது, ஹிந்தி செழிக்கவும் இயலாது என்பது ஒருதலை.

ஹிந்தி பொதுமொழியாயின், ஏனையமொழிகளைப் போலவே தமிழும் தன்மணத்தையும் குணத்தையும் வலிமையையும் இழக்கும் என்பதில் ஐயமில்லை. நம்தமிழ்மொழி அந்நாண் முதல் பல்வேறு மொழிகளின் சேர்க்கையினல் பல்வேறு மாற்றங்களைப் பெற்றுளது. ஆரியர்கள் இந்நாட்டில் குடியேறித் தங்கள் செல்வாக்கைத் தமிழர்மீது செலுத்தா நிற்கையில், அந்தோ! நம்தமிழ்மொழி பல்வேறு வடமொழிகளை விரவப்பெற்றது. நாலைந்து மொழிகளை ஈன்றும் நாளும் மாருக் கன்னித்தன்மை வாய்ந்த நம்மொழி ஆரியக்கலப்பின் காரணத்தால் வடமொழியினின்றும் வந்ததோ என்று பலரும் ஐயுறற்கு இடனய்த் தன் சிறப்பிழக்கப் பார்த்தது. பிற்றை நாளில் மகம்மதியர்களின் கூட்டுறவினல் ஹிந்துஸ்தானி பாரசிகம் முதலிய மொழிகளின் சேர்க்கையுற்று, கிராமமுனிசிபு, தாசில்தார் முதலிய அரசியல் அலுவலார் நந்தமிழரசில் இல்லையோ என்னும் ஐயத்தைக் கிளப்பிவிட்டது. நாயக்கர் அரசர்காலத்தில் தெலுங்குமொழி தமிழுலகில் அரசியல் மொழியாக நிலவிற்றென்பர். தெலுங்குமொழி தமிழ்த்தாயின் செல்வக் குழந்தைகளிலொன்ருகலின் அக்குழந்தையால் தாயானவள் ஒருவாறு கெடாது வாழ்ந்தனள் எனலாம். இக்காலத்தில் ஆங்கிலமொழி அரசியல் மொழியாக நிலவ, நந்தமிழ்மொழியும் தமிழ்மக்களும் மொழியளவில் அடைந்த அவநிலைமை மொழிதற்கு வெட்கமானதே. ஆங்கிலங் கற்ருர்க்கு நாட்டு மொழிப்பற்று ஒருவாறு அற்றது. அவர்களது உரையாடலும் உணர்ச்சியும் வேறுவழிக்குத் திரும்பின. அன்னவர்க்கும் அறிவிலார்க்கும் இடையில் கூட்டுறவு என்பது கடவுள்வந்து கூட்டினும் அமையாது போலும்! தமிழ் எழுத்தறியாதாரும் பேச்சுவழக்கில் ஆங்கிலமும் தமி

மூம் கலந்து உரையாடுகின்றனர். பின்னை ஆங்கிலம் கற்றவர்களைக் கேட்பானேன்.

இவ்வாறு கற்றோரது கல்வியானது கல்லாத நாட்டுமக்களுக்குப்பயன்படாது கழிதலின் நாடானது கல்வியில் முன்னேற்றங் கண்டபாடில்லை. இந்திய நாடுகள் எல்லாம் கல்வியிலும் ஒற்றுமையிலும் முன்னேற்றம் காணவேண்டுமானால் அவ்வந்நாடுகள் தத்தம் தாய்மொழிகளின் மூலமாகவே முன்னேற்றத்தைக் காணல் கூடும். இது ஏனைய நாடுகளில் கண்கூடாகக்கண்ட காரியம். இப்பரந்த கண்டத்தில் இந்நலங்களை வளர்க்கவேண்டுமானால் மொழிப்படர்ச்சியைப் பின்பற்றி மொழிவாரியாக நாடுகளைப் பிரித்து அந்தந்த மொழிவழக்கினருக்குள் அந்தந்த தாய்மொழிகளின் மூலமாகவே தொண்டாற்றுதல் வேண்டும். இவ்வாறு இந்நலங்களை அடைந்த பின்னரே ஒருங்கிணைக்கப்பட்டதோர் கூட்டு வாழ்க்கைக்கு மக்களை எளிதில் வழிநடத்தலாம். தாய்மொழியின் மணமறிந்த மக்கள் நம்நாட்டிடை நூற்றிற்கு $6\frac{1}{2}$ பேர்கள்தான் உண்டு. ஹிந்தி ஒருமொழியாகி இற்றை நாளில் நன்மை செய்யக்கூடுமானால் ஏறிய அளவில் இந்த $6\frac{1}{2}$ பேர்களுக்கு மட்டுமே நன்மை செய்தல் கூடுமென்றே, ஹிந்திபரவுவதற்கு உழைக்கின்றவர்கள் தாய்மொழியும் பிறமொழியும் அறிந்த மக்களிடமே உழைக்கின்றனர்! அவர்கள் தாய்மொழி அறிவும் இல்லாது தயங்கும் நாட்டுமக்களுக்கு ஹிந்திமொழியைக்கற்பிக்க முனைந்துளரோ? அது அவர்களால் எங்ஙனம் கூடும்! நாவிலிருக்கும் தாய்மொழி அறிவே சாலாத மக்களுக்கு நாவுக்கடாத ஹிந்திமொழியைப்புகட்டுவது இயலாது என்பதை அவர்களும் அறிந்திருக்கின்றனர் என்பது வெளிப்படை. ஆதலின் நாட்டுக் கல்வியின் ஏழ்மை நிலையை உன்னி, மக்களை எம்மொழியின் மூலமாய்ச் செலவின்றியும் வீண்காலக் கழிவின்றியும் நாவுக்கு இடர் இன்றியும் உள்ளத்துச் சோர்வுக்கு இடனின்றியும் கல்விபயிற்றல் கூடுமோ அம்மொழியின் மூலமாகவே பயிற்றல் நன்று. அம்மொழி தாய்மொழியே என்பது அறிஞர் அனைவருக்கும் உடன்பாடு என்பது உறுதியாம்.

இப்படியிருக்க ஹிந்திமொழியைப் பொதுமொழியாக்க நினைப்பதன் காரணம் யாதோ? பரந்த வடநாட்டினர் ஒடுங்கிக் கிடக்கும் தென்னாட்டின்கண் தங்கள் செல்வாக்கைத் திணிக்க வேண்டுமென்று நினைப்பதாலோ? இது தொடங்கியநாள் தொட்டு வடநாட்டில் வேலையில்லாது திண்டாடிய சிலர் தென்னாட்டின்கண் நல்லூதியம் பெறுகின்றனர். ஹிந்தி நூல்கள் வெளியிடும் கடைகளும் போதிய பணவரவைப்

பெறுகின்றன. மாணவர்களில் பலர் ஹிந்திமொழியைக் கற்கப் புகுந்து தமிழ்த்தேர்ச்சி பெறுவதிலும் திண்டாடு கின்றனர். நாளடைவில் ஹிந்திமொழியாசிரியர்கள் தாய் மொழியாசிரியர்களைவிட உயர்வாகவே கருதப்படுவதும் எதிர்கொள்ளக் கிடக்கின்றது. ஆங்கிலம் கற்றவர்க்கே வேலை யில்லாத் திண்டாட்டமாயின் ஹிந்தியைக் கற்போருக்கும் அதே திண்டாட்டந்தானே? தவிர பிற மொழிகளை முதன்மை யாகக் கொள்வது கொண்டவர்மீது அடிமைத்தனத்தைச் சுமத்தியதே எனலும் இழுக்காகாது.

இதன் மற்றோர் காரணம் ஆரியர் சூழ்ச்சியோ என் றும் கொள்ளக் கிடந்தது. ஹிந்திமொழி பெரிதும் வட மொழிக்கலப்பும் வடிவமும் பொருந்தியது. அத்தகையதோர் மொழியைப் பழகுவது ஆரியக் கலப்புடையவர்களுக்கு எளி தாயும் சிறப்பாயும் அமைந்துளது. தவிர இறந்துபட்ட வட மொழி ஹிந்திமொழியால் உயிருடன் இயங்கமுயல்கின்றது என உள்ளத்தை ஆறுதல் செய்து கொள்ளவும் இடனுயுள்ளது. தற் போதைய இந்தியாவில் இறந்துபட்டதோர் மொழியை உடை யராய் நாட்டுமொழிப்பற்றின்றி வாழும் ஒரு குழுவினரே ஆங்கிலத்தைப் பற்றிக்கற்றதுபோல, ஹிந்தியையும் கற்கத் தொடங்கியிருப்பதிலிருந்து அவர்களாலாயே ஹிந்தி மொழிப் படர்ச்சி வளர்கின்றது எனலாம். ஆதலின் இக் கொள்கையை நாட்டினவர்கள் அவர்களேயோ என்று ஐயுற வேண்டி இருக் கின்றது. இதற்கு வடநாட்டினரோ பார்ப்பனரோ எவர் கார ணமாயிருந்தாலும், அத் தொண்டர்கள் தம் கருத்தை மற்றவர் மீது வற்புறுத்தி வருகின்றனர். ஜில்லாபோர்டு முதலிய பொது நிலையங்களின் பணங்களைக்கொண்டு ஹிந்தியைக் கற்பிக்க வேண்டுமென்று ஆணைகளை அமுலுக்குக் கொண்டுவருகின்ற னர். இடம் விட்டுப் பெயர இயலா எளிமை வாய்ந்த இந் நாட்டு மக்களுக்கு எள்ளளவும் பயன்படாத ஹிந்தி மொழி யைக் கற்பிப்பதற்குத் தம் சொந்தப்பணத்தை விடுத்துப் பொதுப்பணங்களை வாரி இறைப்பது நேரியது ஆகாது. தாய் மொழிப் பயிற்சியைத் தள்ளி ஹிந்தி மொழியை வற்புறுத்தும் பழக்கம் நாட்டிடை இப்பொழுதே தலைகாட்டத் தொடங்கி இருப்பது மிகவும் வருந்தத்தக்கதோர் செயலாகும். ஆதலின் கற்றவர்களிடை ஹிந்தி பரவுதலில் முயற்சி எடுக்கும் தொண் டர்கள் அதைவிடுத்துக் கல்லாத மக்களிடை அவரவர்கள் தம் தாய்மொழி அறிவை அடைய முயற்சி செய்வார்களாயின், நாடு விரைவில் புத்தறிவுற்றுத் தன் நெடுங்கால நிந்தையை நீக்கிக்கொள்ளும் என்பதை அனைவரும் அறிவார்களாக.

## இலக்கணமும் இலக்கியமும் :
## LANGUAGE AND LITERATURE

### பாயிரப் பொருள் தோகையும் விரிவும்
[பேஸ்கி என்னும் வீரமாமுனிவர்]

*பதிகத்துட் பொருட்டொகைப்பட வுரைக்குமாறு ணர்த்துதும். பதிகத்துள் தொகைப்படப் பொருளை யுரைத் துக் காட்டுந் தன்மையாற் கேட்பதற் கிணக்கமு மாசையு மற்றையவரிடத் துண்டாகவும், தன் பொருடெளிவொடு தோன்றவும், பதிகவுரிமை வழுவாதொழுகவு முரைப்பது முறையெனக்கொள்க. இவற்றுட் கேட்போரிடத்தி லிணக்க மாதற் கவையடக்கமாகும். கேட்பதற் காசையாவதற் கெடுத்தபொருளின் மாட்சியு மருமையும் பயனுங் காட்டுவ தாகும். தெளிவுண்டாவதற் கேற்ற பொருளொன்றுகச் சுருங்கச் சொல்லிப் பின்னதனுறுப்பென வதனை யிரண்டு மூன்று பிரிவாகப் பிரிப்பவு மூன்று பிரிவுமிக்கது சிறப்பு மன்று. மீண்டப் பிரிவிலொன்ருயினு முன்ருெகையாகச் சொன்ன பொருளிலடங்கா. பிரிதாய் நிற்றலும் வழுவே. அங் ஙனம், இந்நாட்டரசன் கைக்கிணையில்லையென்பது தொகையா யுரைத்த புகழின்ருேற்றப் பொருளாம். இனிப் பிரிவாக வவன்கை பொன்மழை வழங்க வின்மையொழிதலும் விண் மழை வழங்க வெம்பகை யொழிதலு மாமென்பது தொகைப் பொருளிரண்டாய்ப் பிரித்தவாறு. இவ்வாறன்றி யவனே சொன்மழை வழங்க வறியாமையொழியு மென்ருலிது முத் தொகையா யுரைப்பவெடுத்த பொருளிலடங்காமையால் வழு வெனக் கொள்க. பிறவுமன்ன.

அன்றியும், பதிகத்துரிமை வேண்டும். இஃது பொருட் குரிமையும் அளவிற்குரிமையும் என விருவகைப்படும். இவற் றுட் பொருட்குரிமையாவது, தான் விரித்துரைக்க வெடுத்த பொருட்கன்றியே மற்ருெரு பொருட்கேலாதாம்படி சிறப் பினையுடைய பதிகங்கூற லதன் பொருட்குரிமை யெனப்படும். இதனைப்பற்றி முன்னோர் பதிகமே நூன்முகமென்ருர்.

---

* இஃது இவ்வாசிரியர் எழுதிய 'தொன்னூல் விளக்கம்' என்ற நூலிற் கண்டது. இந்நூல் பதினெட்டாம் நூற்ருண்டின் முற்பகுதி யில் இயற்றப்பட்டு 1838-ல் முதன்முதல் அச்சிடப்பட்டது.

என்னை யோவெனில் அணியுடை முதலிய பலர்க்குப்பொது மையவாகச் செய்யினும் இருவர்க்கேற்கும் பொதுமுகச் சாயற்காண்பதரிது. அளவிற்குரிமையாவது; எலியுடற்கியானைத் தலையும் யானையுடற்கெலித்தலையு மேலாதனபோற் பொருளை விரித்தவளவிற்கதன் முகமாகிய பதிகவளவுந் தகுவதாத லளவிற்குரிமை யெனப்படும். ஆயினும் பதிகவுறுப் பின் மிக்கநெடுமையிற் குறுமை நன்றெனக் கோள்க.

இதற்கெலா முதாரணமாம்படி திருவள்ளுவநாயனார் பயனென்றெடுத்துத் தேற்றப் பொருள்வகைக் கியற்றமிழாய் விரித்துரைப்பப் பதிகமாவது, வேதநூன்முத லெவ்வகை நூலுங் கல்லாதுணரவுஞ் சொல்லாதுணர்த்தவும் வல்லவராகி, மெய்ஞ்ஞானத் திருக்கடலாகிய வொருமெய்க் கடவுடன்றிரு வடிமலரே தலைக்கணியெனக் கொண்டேத்தி, யிருளிரா விடத்து விளங்கிய வொருமீன் போலவும் பாலைச்சுரத்தரி தலர்ந்த பதுமம்போலவு மெய்யாஞ் சுருதிவிளக்காதிருளே மொய்த்த நாட்டின் கண்ணுங் கடவுளேற்றிய ஞானத் திரு விளக்கெறிப்பத் தெளிந்துணர்ந் தெங்குமொரு விளக்கென நின்றுயர்ந்த திருவள்ளுவருரைத்த பலவற்றொன்றை நான் றெரிந்துரைப்பத் துணிந்தேன். அந்நாயனார் தந்தபயனெனும் பெருங்கடலாழத்தின் மூழ்கி யாங்குடை யருமணி யொருங் கெடுத்தொரு சிறு செப்பினடைத்தாற் போலத் திருவள்ளு வரது பயனெலாம் விரித்துப் பகரும்படி நான் வல்லனல் லேனாகையினக் கடற்றுறை சேர்ந்தொரு மணியெடுத்துக் காட்டலுணர்ந்தேன். அவர் சொன்ன குறளினொன்றே யிங் ஙன நான் விரித்துரைப்பத் துணிந்தேன். அஃதாவது:—

“மனத்துக் கண் மாசிலனாத லனைத்தற
னாகுல நீர பிற”.

என்றது. இல்லறந் துறவறமென் றிவ்விரண்டனுள்ளு மடங்கி நிற்கு மெல்லா வறங்களு மனத்தின் றூய்மையாற் பெறும் பெருமையே தருமமெனவும், மனத்தினுண் மாசு கொண்ட வன் செய்யுந் தவமுந் தானமு மற்றையாவு மறத்தினாவ மாவதன்றி யறத்தின் பயனுள வல்ல வெனவு, மக்குறளிரு பயனிவை யென விரித்துக் காட்டுதும். விரிப்பவே மெய்யும் பொய்யும் விளக்கி யுட்பயன்றரு மெய்யறத்தின் றன்மையே வெளியாயிஃதொன்றுணர்ந்து நாமதற் கொப்ப நடந்தாலிது வீடெய்தும் வழி யெனக் காணப்படும். பெரும் பொருணோர்ந்து பொய்ம்மணி கொள்வது கேடன்றாயினும் பொருளை நேர்ந்து முடலை வாட்டியுமுயிரை வருத்தியு மேற்

கதி வீட்டிற்செல்லாச் சில பொய்யறங்களை யீட்டுவதிலுங் கேடாமன்றோ? இதனை விலகித் தன்னுயிராக்கங் காப்பது வேண்டியிக்குறட் பயனாராய்வது நன்றேயெனவிப்பதிகத்துரிய தெய்வவணக்கமுஞ் சொல்லக் குறித்த பொருளைத்தொகையா யுரைத்ததுந் தெளிவாயிரு பிரிவாக வகுத்ததுஞ் சேட்பதற் கிணக்கமாவதற் கவையடக்கமு மாசையாவதற் கப்பொருண் மாட்சியு மருமையும் பயனு முறையே வந்தவாறு காண்க. இசைத்தமிழ்ப் பதிகத் துதாரணமாகக் கம்பருரைத்த பதிக முப்பாப் பாயிரத்தைக் காண்க. அவற்றுண் முதற்பாத் தெய்வ வணக்கமும் பின்னிரு பாவுஞ் செய்பொருளுரைத் தலும் பின்னாற்பாவினோ டவையடக்கமு மற்றவை தன் கதை மாட்சியு மருமையும் பயனும் வந்ததறிக.

(தொடரும்)

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### பாலை

பொருள்வயிற் பிரிந்து செல்லுந் தலைமகனது கருத்தைத் தன் னிடம் சொல்லிய தோழிக்குத் தலைவி வருந்திக் கூறுவது.

### கோப்பெருஞ்சோழன்

20. அருளு மன்பு நீக்கித் துணை துறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின்
உரவோ ருரவோ ராக;
மடவமாக மடந்தை நாமே.

என்பது செலவுணர்த்திய தோழிக்குக் கிழத்தியுரைத்தது.

பதவுரை:—மடந்தை—தோழி, அருளும் அன்பும் நீக்கி—அருளையும் அன்பையும் நீக்கிவிட்டு, துணை துறந்து—துணை யானவர்களையும் நீக்கிவிட்டு, பொருள்வயின் பிரிவோர்—பொருள் காரணமாக அதனை விரும்பிப் பிரிந்து செல்பவர், உரவோராயின்—அறிவுடையோர் என்பாயாயின், உரவோர்

உரவோராக—அவ்வாறு பிரிந்து செல்லும் வன்மையுடையார் அறிவுடையோராகவே இருக்கட்டும், நாம் மடவம் ஆக—நாம் அறிவில்லாதவராகவே இருப்போம்.

அருள்—வருந்தும் எல்லா வுயிரிடத்தும் இயல்பாகச் செல்வதாகிய கருணை.

அன்பு—தொடர்புடையார் மாட்டே செல்வதாகிய நேசம்.

உரம்—வன்மை, அறிவு. மடவம்—அறியாத்தன்மை யுடையேம். மடமை—அறியாமை. மடந்தை—தோழி—அண்மைவிளி.

## மேற்கோள் விளக்கம்

1. 'அன்பிலன் அறனிலன்' —(கலி. 74—6)
2. "அன்பும் அறனும் உடைத்தாயின்" —(குறள்-45)
3. 'அன்பும் அருளும் நீக்கி' —(புறம். 5—5)
4. 'பல்வேறு நிலையினும்' என்றதில் தோழி பிரிவுணர்த்திய வழிச் செலவழுங்கக் கூறியதற்கு இச்செய்யுள் மேற்கோள். —(தொல்—கற்பு—669)
5. 'மடவமாக மடந்தை நாமே'—வியங்கோள் ஐம்பால் மூவிடத் தும் வரும்; ஏவலுளடங்கா என்பதற்கு மேற்கோள் —(நன். மயிலை. பக். 212)
6. "அருளு மன்பு......மடந்தை நாமே" பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறியதற்குச் செய்யுள் —(தொல். அகத். இளம். சூ. 44-உரை)

உரன்—அறிவுடைமை, வலிமை

1. "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து" —(குறள். 34)
2. கரவில் வளமலைக் கல்லருவி நாட
வுரவில் வலியா யொருநீ—யிரவின்
வழிகடாஞ் சால வரவரிய வார
விழிகடா யர்னை யெதிர். —(திணைமாலை. 150—11)

"மடவமாக மடந்தைநாமே" வியங்கோள்வினை முற்று வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்ததற்கு மேற்கோள். —(இலக்கணவிளக்கம் பக். 213)

"தலைவர் உரனுடைமை மடமை, தலைவி மடமை உரனுடைமை" என்பது குறிப்பால் விளங்கிற்று.

மெய்ப்பாடு—அசைவுபற்றிய அழுகை
பயன்—செலவழுங்குவித்தல்.

## முல்லை

கார்காலத்து மீள்வதாகக் கூறிச் சென்ற தலைமகன், அப்பருவம் வந்தும் வாராததனல், "இனித் தலைவியை ஆற்றுவிப்பது எவ்வாறு?" எனக் கவன்ற தோழிக்குத் தலைவி "ஆற்றுவல்" என்று கூறியது.

ஓதலாந்தையார் பாடியது

21. வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறே னவர்பொய் வழங்கலரே.

என்பது பருவம் வருந்துணையும் ஆற்றுவித்த தோழி அவர் வரக் குறித்த பருவவரவின்கண், இனி ஆற்றுவிக்குமாறு எவ்வாறு என்று தன்னுள்ளே கவன்றாட்கு அவளது குறிப்பறிந்த தலைமகள், "கானம் அவர் வரும் கார்காலத்தைக் காட்டிற்றாயினும், யான் இது கார்காலம் என்று தேறேன், அவர் பொய் கூறார் ஆகலின்" எனத் தான் ஆற்றுவல் என்பது படச் சொல்லியது.

பதவுரை:—வண்டு படத் ததைந்தகொடி - வண்டுகள் மொய்க்கும்படியாக நெருங்கிய முல்லைக் கொடியின், இணர் இடை இடுபு—பூங்கொத்துக்களை நடுவில் அமைத்து வைத்து; பொன் செய் புனை யிழை கட்டிய மகளிர் - பொன்னாற் செய்த அழகிய ஆபரணங்களை யணிந்த பெண்களது, கதுப்பில் தோன்றும்—கூந்தலைப் போலக் காணப்படும், புதுப் பூங் கொன்றைக் கானம்—புதிதாகிய பூவை யுடைய கொன்றை மரங்கள் நிறைந்த காடு; கார் எனக் கூறினும் — கார் காலம் வந்து விட்டது என (பூ, காய்களைக் காட்டி) அறிவித்தாலும், யானோ—நானோ, தேறேன் - அதனைக் கார் காலம் என்று தெளிய மாட்டேன், (ஏனெனில்) அவர் பொய் வழங்கலரே அவர் ஒருகாலும் பொய் பேசமாட்டார் ஆதலின். யானோ - ஓகாரம் பிரிநிலை.

ததைந்த - நெருங்கிய. கொடி - கொன்றையைச் சேர்ந்த முல்லைக்கொடி. முல்லைக்கொடி கொன்றை மரத்திற் படர்ந்து இருப்பப் பூட்பித்துக் காய்த்திருப்பது பெண்கள் அணிகளணிந்து நிறைந்த கூந்தலோடு விளங்கும் காட்சி யைப் பொருந்தும். கொன்றை மரத்தைப் பெண்களா

கவும், தன் மீது படர்ந்திருக்கும் முல்லையின் பூ உடையாகவும், கொன்றையின் மஞ்சள் நிறப்பூக்கள் பொற்கலன்களாகவும், காய்கள் சுருண்டு அவிழ்ந்து தொங்கும் கூந்தலாகவும் கூறப் பட்டிருத்தல் அறிக. முல்லை நிலத்திற்குரிய முல்லையும் கொன்றையும் கார்காலத்தில் பூக்கு மியல்பின.

மேற்கோள் விளக்கம்

1. "வண்டுபட.........வழங்கலரே"—இதுபருவங் கண்டுழியும் பொய் கூறூர் என்று ஆற்றியிருந்தது.

—(தொல்—அகத். 46)

2. "வண்டுபட......வழங்கலரே"—இது கானங் காரெனக் கூற வும் வாரார் என்றவழி அது கூறினும் யான்தேறேன் எனப் பிரிநிலை ஓகாரத்தாற் பிரிந்தது. (தொல்—கற்பு. 666)

3. "யானே தேறேனவர் பொய்வழங்கலரே"—எனப் பிரி நிலைக்கு உதாரணம். (தொல்—எழுத்து—நச்—சூ 290)

—(தொல்—சொல்—சேனா—சூ 256)

4. "கானங்..........வழங்கலரே"—பிரிநிலைக்கு உதாரணம்

—(தொல்—சொல்—தெய்வ சூ 252)

'யானே தேறேன்'—'யானேதெறேன்,'—(பிரதிபேதம்.)

வண்டு படத்ததைந்த என்பதற்கு வண்டு வீழ்ந்து சிதறின என் றும் கூறலாம்.

"வண்டுபடத்ததைந்த கண்ணி" (அகநானூறு—களிற்றியானை நிரை 11)

பெண்கள் கூந்தலுக்குக் கொன்றைக்காய் உவமை கூறுவது இயல்பு.

"கொண்டலுங் கூந்தற் பனியும்
கொன்றைக் காயும் மிருளுந்
தண்டலை யுங்கார் மணலுஞ் சைவலமும்
வண்டினமுந் தண்குழலை யொப்பாம்"—

(உவமானசங்கிரகம். 1)

மெய்ப்பாடு-பிறன் கட்டோன்றிய வருத்தம் பற்றிய இளிவரல்
பயன்—ஆற்றுமாறு அறிவித்தல்

பாலை

தலைவனது செலவைக் குறிப்பால் அறிந்த தலைவி ஆற்றாளாக வருந்துவதைக்கண்டு தோழி, "தலைவர் கருதிய செலவு நின்னைவிட் டுப்பிரிந்து செல்லும் செலவன்று; நின்னை யுடன்கொண்டு செல்லும் செலவாகும்" எனத்தலைவியைத் தெருட்டி வற்புறுத்திக் கூறியது.

சேரமானெந்தை பாடியது

22. நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய
யாரோ பிரிகிற் பவரே சாரல்
சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து
வேனி லஞ்சினை கமழும்
தேமூர் எண்ணுதல் நின்னொடுஞ் செலவே.

என்பது செலவுக் குறிப்பறிந்து ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

பதவுரை:—நீர் வார் கண்ணை—(அழுவதால்) நீரைச் சொரிகின்ற கண்ணை யுடையவளாய், நீ இவண் ஒழிய—நீ இவ்விடத்தில் வருந்தியிருக்க, யாரோ பிரிகிற்பவரே—உன்னை விட்டுப் பிரிந்து செல்லற்கு வல்லார் யாவரே? சாரல்—மலைச் சாரலினிடத்து, சிலம்பு அணிகொண்ட வலஞ்சுரி மராஅத்து —மலை தனக்கு அழகுமிக்க அணியாகக் கொண்ட வலமாகச் சுழலும் சுழியினைக்கொண்ட மலர்களையுடைய வெண் கடம்பமரத்தினது, அம்சினை—அழகிய கிளைகள், வேனில் கமழும்—இளவேனிற் பருவத்து மணம் வீசுகின்ற, தேம் ஊர்—இனிய இவ்வூரிலுள்ளார், எண்ணுதல்—எண்ணுவது (என்னையோ எனின்), நின்னொடும் செலவே—நின்னை அவர் உடன் கூட்டிச் செல்லும் செலவினையேயாம். (ஆதலின் வருந்தாதே என்றவாறு.)

"தேம் ஊர் எண்ணுதல்—இனிய ஊருக்குச் செல்லத் துணிந்து தலைவர் எண்ணுதல், நின்னொடும் செலவே—நின்னையும் உடன் கூட்டிச் செல்லும் செலவினையேயாம்" என்று கூறுதலும் பொருந்தும்.

வார் கண்—வினைத்தொகை. கண்ணை—குறிப்பு முற்றெச்சம். யாரோ—ஓகாரம் எதிர்மறை. வலம் சுரி மராஅத்து—வலமாகச் சுழித்த பூக்களை யுடைய வெண் கடம்பு மலர் என்பதை

"கொடுங்கால் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு." (ஐங். 383)

என்பதாலறிக.

வெண்கடம்பு இளவேனிற் பருவத்துப் பூக்கும்:—

"அவரோ வாரார் தான்வந் தன்றே
வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம்

மணங்கமழ் தண்பொழில்மலரும்பொழுதே'' (ஐங்.)
என்பதாலறிக.

சிலம்பு—மலை. தேம்—இனிமை. ஊர்—இடவாகுபெயர்.

மேற்கோள் விளக்கம்:—

'நீர்வார்கண்ணே.'—மூவிடத்து ஐம்பாலினும் தன்மைப் பன்மை வினைக்குறிப்பு முற்றுவினை எச்சக்குறிப்பாயினதற்கு உதாரணம்.

(நன். சங்கர. பக். 185: நன். மயிலை. பக். 222.)

'நீர் வார்கண்'—'நீர்வார் கண்'—(புறம் 113-6)

'நீர் வார்கண்ணேம்'—(நற். 143.)

''தன்மைப்பன்மை வினைக்குறிப்பு முற்றுவினை எச்சக்குறிப்பாயினதற்கு மேற்கோள்''—(நன் மயிலை. சூ. 350: நன். விருத். சூ. 351: இலக் விளக்—சூ. 250—உரை)

மெய்ப்பாடு—பிறன்கண் தோன்றிய இழிவுபற்றிய அழுகை.

பயன்—ஆற்றுவித்தல்.

---

# காணப்படாது காண்டல்

[திரு. அ. சிதம்பரநாதஞ் செட்டியார். B. A. (Hons.)]

ஆங்கிலப்புலவர்களுள் ஒருவராகிய ஸ்டிவன்சன் (Stevenson) என்பவர் எழுதிய கட்டுரையொன்றுள் * அவர் கூறியிருப்பதுகொண்டு அன்னார் மிசெண்டன் (Missenden) என்ற ஒரு நகரத்தின்கண் ஓரிரவிற் சுற்றிவருங்கால் ஓரோவியத்தைப் பிறராற் காணப்படாது கண்டதாகவும், அதனால் அளப்பரிய வுவகை யெய்தியதாகவும் அறிகின்றோம். அவ்வூரில் இருள் சூழ்ந்த ஓரிரவில் அவர் ஓர் இல்லத்தின் சாளர வழியே உள் நோக்கியதாகவும், அக்காலை ஆண்டுக் கவனித்துக் கேட்டுக் கொண்டு மடிமீதிருந்த ஒரு குழவிக்கு அழகுடைச்சிறுமி ஒருத்தி ஒரு கதை சொல்லிக் கொண்டிருந்ததாகவும், அவண் மருங்கே ஒரு கிழவி கணப்பின் முன்னர் அமர்ந்தவண்ணம் தூங்கி விழுந்து கொண்டிருந்ததாகவும், அதனைத் தாம் உள்ளிருப்பவர் காணாது கண்டதாகவும், கண்டு பெருமகிழ்ச்சியடைந்ததாகவும் அவர் வரைந்துள்ளார்.

இன்னணம், பிறராற் காணப்படாமல் பிறரைக்காணும் வழக்கம் தமிழரிடத்துமுண்டு என்பது தமிழிலக்கியத்தால் அறியக்கிடக்கின்றது. காட்டாகச் சில ஈண்டுத் தருவல். சீவ

* Autumn Effect.

களைத் தனியளாய்ப் பிணமலிகாட்டில் விசயை யென்னும் அரசி பெற்றெடுக்க நேர்ந்த இடுக்கணைப் பலர் சீவகசிந்தாமணி யால் அறிந்திருப்பர். அவள் அவலித்திருந்துழிச் சண்பக மாலை யென்னும் தோழிவடிவு தாங்கி ஒரு தெய்வதம் அவள் பால் அணைந்து "இந்நம்பியின் ஆணைப்படி உலகமெல்லாம் பின்னர் நடக்கும். பகைவனை இவன் வெல்லும் பொருட்டு இவனை விரைவினில் ஒருவன் கொண்டுபோவன். நாம் மறை வது கடன்." எனக் கூறிற்று, அவளுங் குழவியிடம் விடை சொல்லிக்கொண்டு அத்தோழியோடு மறையநின்ருள். அவள் மறைய நின்றுழித் தற்செயலாக ஒருவன் வந்து அக்குழந் தையை எடுத்தணைத்துச் சென்ருன். அவன் குழவியை எடுக்குங்கால் அது தும்ம, தோழி "சீவ" என வாழ்த்தினுள். விசயையும் "பகைதவ நூறுவாயாக" என மனத்திற் கூறி யேத்தினுள். அவள் அந்நேரம் மறைய நின்றதைத் திருத்தக்க தேவர்,

"புல்லிய கொம்பு தானோர் கருவிளை பூத்ததேபோல்
ஒல்கியோர் கொம்புபற்றி ஒருகணுல் நோக்கி நின்ருள்"

என வரைகின்ருர். அவள் கொம்பின் பாங்கர் நின்ற தற்கு ஒப்பாகக் கொம்பைப் பற்றிநின்ற கருவிளைக் கொடி யையும், அவள் ஒரு கண்ணினுல் நோக்கியதற்கு ஒப்பாகக் கருவிளைக் கொடியிற் பூத்த ஒரு பூவினையும் வைத்தமைத்த தேவர்நயம் வியக்கற்பாற்று. அவள் ஒரு கொடியென்றும், அவளது கண் கருவிளைப்பூ என்றும் உவமம் பொருந்துமாறு வைக்கப்பட்டுள்ள சிறப்புக்கண்டு இன்புருது வேறென் செய் வது? கொம்பின் பக்கத்தே மறைந்து நின்ற அவள் இருகண் ணும் தோன்றுமாறு நின்றனளேயாயின், தனதாடை முதலான சிலவும் தோன்றுதலு மாகும் என அஞ்சி, ஒருசார் ஒதுங்கி, ஒரு கண்ணுல் குழந்தையது போக்கில் நோக்கம் வைத்து, வந்தவன் தன்னைக்காணுது, அவன் குழவியை யாது செய்கின்ருன் எனத் தான்மட்டும் பார்த்துநின்ற படத்தைத் திருத்தக்கதேவர் ஈண்டுத் தந்துள்ளார்.

இனி, சில பெண்டிருடைய இயல்பு பிறர் தம்மைக்காணுங் காற் காணுது, காணுக்கால் காண்பது என்பதைப் பண்டைத் தமிழர் கண்டறிந்திருந்தனர். அதுபற்றியே திருவள்ளுவரும்,

"யானோக்குங் காலை நிலனோக்கும்; நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்."

எனக் "குறிப்பறிதல்" என்னும் அதிகாரத்தின் கண்ணே பொறித்து வைத்தார். "நோக்கினுலும் நோக்காமல், நோக்

காக்காலும் நோக்காமல் தலைகுனிந்தோ அன்றி வேறு பக்கம் பார்த்தோ அசட்டைசெய்து செல்லும் பெண்ணல்லள் உன்னை விரும்புபவள்'' என்பதை ஒவ்வொருவனும் அறிந்துகொள்ள வேண்டும் என்று அவர் கருதினர்போலும்! ஆனால், அக்குறளை அறிந்த சில விலைமாதரும் பிறர் நோக்காக்காலும் தாம் நோக்காதிருத்தல் கூடும். அதுபற்றி அவர் நல்லார் எனக்கோடலோ, அன்றிக் குலமகளிர் சிலர் பிறர் நோக்குங்காலும் தாமும் நோக்குதலால் நல்லரல்லர் எனக் கோடலோ நியாயமன்று. பெரும் பான்மையும், பிறர் நோக்குழிப் பெண்டிர் நாணத்தாற் றலைகுனிவர் என்பதும், பிறர் நோக்காதகாலையில் தாம் பிறரறியாத விதத்தில் பார்த்துக் கொள்வர் என்பதுமே கொள்ளக் கிடப்பது. இனி, தனக்கினிய தலைவனைக் காணும் பெண், அவனோடு புணர்ச்சி தலைப்படாமுன், எதிரெதிர்நோக்காள் நாணத்தால் வெட்கி என்பதும் ஈண்டறியத்தக்கது. அவள் தன்னை அவன் பாராதநேரத்தில் தான்மட்டும் தனக்கினிய அவனைப் பார்த்து உள்ளத்தே கழிபேருவகை யெய்துவது தமிழர் மரபுவழிப் பட்டது என்பது முற்காட்டிய குறளால் இனிது விளங்கும்.

இங்ஙனம், பிறர் தன்னைக் காணாது தான் பிறரைக் காண்பதற்கு உதவியாயிருப்பன தூண், கதவு முதலியன. இவற்றையே பெரும்பாலும் பெண்டிர் துணைக்கொள்வது கண்கூடு. இலக்கியச் சான்றாகப் புறநானூற்றில்,

> "சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
> யாண்டுளனோ என வினவுதி"

என்னும் அடிகளைக் காண்கின்றோம். இதனால், காவற் பெண்டு என்ற செவிலித்தாயொருத்தியை ஒரு சிறு பெண் தனக்குரிய அவளது மகன் எங்குச் சென்றிருக்கிறான் என வினவினாளென்றும், வினவியக்கால் அவள் ஒரு நல்ல தூணைப் பிடித்துக் கொண்டு மறைய நின்றாள் என்றும் அறிகின்றோம்.

வினவப்பட்டார்க்குத் தான் தோன்றாது ஒருபுறம் மறையநின்று இச்சிறுமி கேட்டது போன்ற இன்னொரு படத்தை நாம் காணக்கூடும். அது சிலப்பதிகாரத்தே இளங்கோவடிகளாற் றீட்டப்பட்டுளது. கண்ணகியுங் கோவலனுஞ் சிலம்பினை விற்று வாணிகஞ் செய்ய மதுரையை நோக்கிப் புறப்பட்டவர்கள் காட்டுவழியே சென்று ஐயையது கோட்டத்தை அடைந்தாராக, ஆங்கு வேட்டுவ மகளாகிய சாலினி என்னுந் தேவராட்டி சீறடி நொந்து வருந்தியிருந்த கண்ணகியை நோக்கி "இவளோ, கொங்கைச்செல்வி, குட

மலையாட்டி, தென்றமிழ்ப்பாவை செய்த தவக்கொழுந்து, ஒருமாமணியாய் உலகினுக்கு ஓங்கிய திருமாமணி'' என்று தான் தெய்வமுற்ற தன்மையினுற் கூறினுள். கணவனெதிரே இன்னனம் தன்னைப் புகழ்ந்த மூதுறவாட்டியின் மயக்கத்தை நினைந்து கண்ணகி வெட்கி நகைத்தாள். ஆனுல், இப் புன்னகை அத்தேவராட்டிக்குப் புலப்பட்டதோவெனின், இல்லை. ஏன்? கண்ணகி அங்ஙனம் மூரலரும்பினதைக் கண்டாளல்லள் தேவராட்டி. தன்முகத்தை மூடிக்கொண் டிருந்தனளோ தேவராட்டியெனின், அல்லள். பின் யாதே காரணம் அவள் காணுமைக்கு? கண்ணகி, தனது அரும்பெறற் கணவனது பெரும் புறத்து ஒடுங்கிய பின்னரே புன்முறுவல் பூத்தமை என்க. இயல்பாக அவள் முகத்தே புன்சிரிப்பு இருப்பதுண்டு. ஆனுல், தேவராட்டியின் சொல்லைக் கேட்ட வுடன் ஏற்பட்ட உணர்ச்சியினுல் புதிதான ஒரு புன்னகை தோன்றிற்று. அத்தோற்றத்தைத் தேவராட்டி காணக் கூடாது என்பது கண்ணகியின் கருத்து. தான் புகழப்பட்ட அந்நிலையில் தன் முகத்தைக் கணவன் காணக்கூடாது என் பதுங் கண்ணகியின் கருத்து. அவள் அதனுல் கோவலனது முதுகுபுறமாக மறைந்து கொண்டு தேவராட்டியின் செயலைக் காண்பாளாயினுள். ஈண்டு, அவள் மறையநின்று காணத் தூணேபோல உதவியது கணவன்றன் தோளே என்க.

மற்ருேரிடத்தில், மறைய நின்று காணவுதவியது கத வொன்று என்பது அகநானூற்றுப் பாடலொன்றுல் புலப் படுகின்றது. பவளம் முன்னில்லாத வாயினையும், மாசில்லா அங்கையினையும், நகைபடு தீஞ்சொல்லினையும் உடைய பொலந் தொடிப் புதல்வனெருவன் சிறுதேருருட்டித் தெருவில் விளை யாடிக்கொண்டிருந்தான். அவன் தனியனு யிருத்தலையும், தன்னிடம் வந்து செல்வானை யொத்திருத்தலையும், காண்போர் இல்லாமையையும் நினைத்து, அவ்வழி வந்த ஒரு பரத்தை அவனை "என்னுயிரே, வருக" என மார்போடு அணைக்குந் தறுவாயில், ஒரு சொல்எழுந்தது. அது யாது? "என், குட்டி, மயங்குகிறுய்? நீயுந் தாயே இவற்கு" என்பதே. இதைக் கேட்ட பரத்தை தனது குட்டு வெளிப்பட்டதற்கு நாணி, கையொடுபட்ட கள்வனைப்போலத் தலைகுனிந்து நின்றுள். இவ்வளவுக்குங் காரணம் யாது? தெருப்பக்கத்துக் கதவண் டைப் பிறர் தன்னைக் காணுமற் ருன்மட்டும் நின்று தனது தனயனைப் பிறர் எடுத்துச் செல்லாவண்ணம் பார்த்துக்கொண் டிருந்த ஒரு பெண்மணியன்ருே? ஒருவருங் காணவில்லை என நினைத்துக் குழவியைப் பரத்தை எடுக்குங்கால், தன்வருத்தம் ஒருபுறம் இருப்ப, இப்பெண்மணி பரத்தையின் அறியாமை

காரணமாக எவ்வளவு நகைத்திருப்பள் என்பதை ஊகித்தறியின், காணப்படாது காண்டலால் வருமின்பத்தை நாம் அறிந்தவராவோம்.

இன்னொரு சிறந்த படத்தை மருதக்கலியிற் காணலாம். பரத்தை காரணமாகப்பிரிந்து சென்ற தலைவனால் நிகழ்ந்த நோயைத் தன் மகன்முகம் நோக்கித் தணித்துக்கொண்டு வந்தாள் ஒரு பெண். அவள்தன் புதல்வன் நடைவண்டியைச் செலுத்தி நடைபயின்று கொண்டு வந்தான். அவனை அவள் எடுத்தணைத்து உச்சிமோந்து "கண்ணே! உன்னை வளர்க்குந் தாயார் சொல்லித்தந்த சொற்கள் சில சொல்லு. அவை எனக்கு அமிழ்தம் போன்றிருக்குமே" எனக் கூறினள். கூறிய அக்காலையில், அவளது தோழியும் உடனிருந்தாள். புதல்வனோ "அப்பா, அப்பா" எனச் சொல்லிக்கொண்டேயிருந்தான். தாய்க்குச் சினம் உண்டாய் விட்டது. அவள் தோழியை நோக்கி, "பார்த்தாயா இதனை? கருணையற்ற அவர் இவன்வாயினின்றும் நீங்கவேமாட்டேன் என்கிறார்!" என்றாள்; என்று சொல்லி அவனைத் தனது தோளொடு சேர்த்து அவன் வாயை யடக்கமுயன்றாள். ஆனால், அவன் பின்னும் "அப்பா, அப்பா" என அழைத்த படியே யிருந்தான். திரும்பிப் பார்த்தனள் தாய். அவள் கண்டது யாது? தனது கணவனுருவம். அவர் வந்து முன்னரே ஆண்டு நின்று தன் செய்கையைக் கண்டுவந்தார் என்பதை அறிந்தாள், நாணினள், பேச்சை மாற்றினள். அவளாற் காணப்படாமல் அவள் செய்கையைக் கண்டு நின்ற கணவன் மனத்தெழுந்த உணர்ச்சி காணப்பட்டுக் கண்டக்கால் நிகழ்ந்திருக்காது என்பது திண்ணமேயன்றோ?

அன்பர்களே, காணப்படாது காணுங்கள். காணுங்கால், காணப்படாமல் யாவரையும் எதனையும் காண்பானொருவன் உளன் என்பதையும் நினையுங்கள். அந்நினைப்போடு காண்பீர்களாயின், அக்காட்சியான் வருமின்பம் மாட்சி மிக்கதாகும்.

---

விரைந்து பெறுமின்கள்　　விரைந்து பெறுமின்கள்

**திருவள்ளுவர் நினைவுமலர் (1935)**

அழகிற் சிறந்தது; படங்கள், நிறைந்தது

பொருள்வள மிகுந்தது

(நம்மிடங் கிடைக்கும்)　　குறைந்த விலை அணா 9.

# உவகைப் பகுதி

## மல்லிகையும் கனகாம்பரமும்

[திரு. வே. பா. கமலநாத முதலியார் அவர்கள்]

ஆகாயந்தன்னில் வாகாய்த் தோன்றி, அதனிடை ஊர்ந்து சென்று, பகலெல்லாம் வெந்தழலைப் பரப்பிய பரிதியும் மேற்கடலில் ஆழ்கின்றான்; வயிறாரப் புல் மேய்ந்த ஆனினங்கள் வீடு நோக்கி விரைந்து செல்கின்றன; புள்ளினங்களும் தத்தம் கூடும், மரப்பொந்தும் நோக்கிப்பறந்து செல்கின்றன; வண்டினமும் மலர்களில் மதுவுண்டு மயங்கி அமர்கின்றன. வெய்யவன் மேற்கடலில் படவே செய்யவளுடன் பிறந்தோனும், இன்னலுற்றார்க்கு இன்பம் நல்குவான்போல் அந்தரந்தன்னில் சுந்தரமாய்த் தோன்றுகிறான். பன்மீனடுவே வெண்ணிலவு தோன்றியது கண்ட தாமரையும் தன் கலையிதழ் மூடிக்கொள்கின்றாள்! நாயகன் வரவுகண்ட குமுதமும் அது கண்டு 'பக்கெனச் சிரிக்கின்றாள்'. மென்காற்றின் சுகத்தால் செடிகளும், கொடிகளும் தாபம் நீங்கி அசைந்தாடுகின்றன! எங்கும் பாலொளி! எங்கும் சாந்தம்!! எல்லாம் இன்பமயம்!!!

மதனபுரமென்னும் அழகிய ஜமீனின் சொந்தக்காரராகிய சுந்தரேசரின் மாளிகை இந்நிலவொளியில் வெகு அழகியதாய்க் காணப்படுகின்றது. சலவைக் கற்களால் அமைக்கப்பட்ட அம்மாளிகை அதிகச் சித்திரப்பாடமைந்தது. அமரரும் விரும்பும் அழகினைப் பெற்று அது விளங்கியதென்பது மிகையாகாது.

இதோ! கண்கவர்வனப்பொடு திகழும் மாளிகையினின்றும் மங்கையரிருவர் வெளியே வருகின்றனர். இவர்கள் ஜமீன்தாரரின் பெண்கள்; மாளிகையின் எதிரிலிருந்த பூங்காவனத்தை நோக்கிச் செல்கின்றனர். இவ்விரு பூங்கோதையருள் மூத்தவளாகிய மோஹனா, அழகெலாந் திரண்டு ஒருருவெடுத்தாலன்ன பேரெழில் வாய்ந்து விளங்குகின்றாள். இளையவளாகிய சுலோசனாவோ சற்றுக் கறுத்து இருந்தாலும் நல்ல முகக்களையும் அழகுமுடையவளாய் இருக்கின்றாள். அழகுக்கேற்றவாறு அருங்குணமுமுடையவர்களாய் இவர்கள் இருந்தமை பொன்மலர் நாற்றமும் பெற்றதுபோலிருந்தது.

பூங்காவுட் புகுதலும், மோஹனா தன் தங்கையை நோக்கி, "தங்காய்! இந் நிலவு என்ன அழகாய் வீசுகின்றது! தாரகைக் கணங்கள் தன்னைச்சூழ, உடுபதி பவனி வருவது அரசர், அமைச்சர் முதலானோர் தம்மைச்சூழ உலாவிவருதல் போலன்றோ இருக்கிறது! நீலவானத்தில் கோலத் தாரகைகள், வைரக் கற்கள் பதித்தனபோல் விளங்கி, 'மினுக் மினுக்' எனக் கண் சிமிட்டுவதுபோல் ஒளி கால்வது என்ன அழகாக விருக்கிறது! மென்காற்றுச் 'சில்'லென வீசுவது உடலுக்கின்பம் தருகின்றது. கண்ணுக்கு இனிமையும், உடலிற்கின்பமும், மனத்திற்கு மட்டிலா மகிழ்ச்சியும் தரும் இந்நிலவொளியில் உல்லாசமாய் நாம் இந்தப் பூங்காவில் பேசிச் சுற்றிவரலாம் வா!" என்றாள் சுலோசனா. "அக்காள்! அப்படியே செய்யலாம். பாலொளி பரப்பும் அம்புலியைக் கண்டாலே கள்ளமனமுடையவர் உள்ளமும் குளிருமல்லவா? எங்கும் சாந்தமே நிலவும் இவ்வேளை நாம் ஏகாந்தமாய்ப் பூம்பொழிலில் ஓரிடமமர்ந்து இனிமையான பாட்டுக்களைப் பாடிக் களிக்கலாமே!" என்றாள். "அப்படியே செய்யலாம் வா" என்று மோஹனா தன் தங்கையின் கையைப் பிடித்துக் கொண்டு மெள்ளப் பூங்காவில் நுழைந்தாள்.

பூஞ்சோலை யினழகைக் கண்டு, உவகையுற்று உலாவிய பெண்மணிகள், ஆங்கிருந்ததொரு மல்லிகைச்செடியை நெருங்கிவரலும், திடுக்கென அசைவற்று அப்படியேநின்றுவிட்டனர். பேச்சரவம் ஆங்குக் கேட்டதே இவர்களுக்கு அச்சத்தை விளைத்ததுபோலும்! பேயோ, பிசாசோவென மருண்ட இவர்கள், பின்னர் ஒருவாறு மனந்தேறி மேற்சென்றார்கள். "ஒரு வேளை ஆதரம் பெருகும் காதலர் யாரேனும் கரந்து நின்று உரையாடக்கூடுமோ?" என்றாள் சுலோசனா. "மனித வடிவமே புலனாகவில்லையே, நிலவொளி பட்டம் பகலாய்க் காய்கின்றதே" என்று கூறிக்கொண்டே, சுற்றிலும் பார்த்த மோஹனா 'தங்காய்! இதென்ன ஆச்சரியம்! இதோ பார்!! இந்தக் கனகாம்பரமன்றோ பேசுகிறது!" என்றாள். தான் ஒன்றும் செடிகள் பேசுவதைக் கேட்டிராதவளாதலால் சுலோசனா, பெருவியப்புடன், "ஆம் அக்காள்! நாம் இங்கே மறைந்து நின்று கேட்போமா?" என்றாள். "ஆஹா! அப்படியே செய்யலாம்" எனக்கூறி, மோஹனாவும் சுலோசனாவும் மறைவில் நின்று, கனகாம்பரமும் மல்லிகையும் உரையாடுவதைக் கவனித்துக் கேட்டிருந்தனர்.

"மல்லிகையாளே! நான் பூக்கத் தொடங்கியபின் உன்னை இவ்விடம் இருப்பார் அதிகம் முன் போல் விரும்புவது

காணேமே! வர, வர, உன் மதிப்பே குறைந்துவிட்டதே! "கர்நாடகக்காரி" என்று உன்னைக் கருதி நாகரிக நாரீமணிகள் சட்டை செய்வதில்லைபோலும்!" என்று இறுமாப்புடன், மல்லிகையைப்பார்த்து, மஞ்சட் கனகாம்பரம் மொழியலுற்றது.

"அடடா! அப்படியா சங்கதி!! நன்று! நன்று! என்னைக் கேலிசெய்யவும் வந்து விட்டனையே! நேற்று வந்த உனக்கு, எங்கிருந்தடி அம்மா வந்தது இவ்வளவு செருக்கும் துணிச்சலும்! பார்ப்பாரும் பறிப்பாருமற்றுச் சாலைகளிலும், வேலிகளும், வயலிலும், பாதையோரங்களிலும் முளைத்து வெயிலிற்பட்டு வாடி உலரும் பூவாயிருந்த உன்னைச் சில காலமாகத்தையலர் தேடி வாங்கித் தலையிற்சூடும் மலராய் மாற்றினதாலோ, இவ்வளவு வாய்வீச்சு உனக்கு! காற்றிலகப்பட்டால் காததூரம், இலேசாய்ப் பறந்து செல்லும் பாக்கியமுடைய நீ என்னைப் பரிகசிக்கவும் வந்துவிட்டாய். குண நலம் சிறிதுமில்லாத விலைமகளை விரும்பும் காமுகர் போல, மண நலம் கொஞ்சமுமில்லாத "மேனுமினுக்கி" யாகிய உன்னைக் காரிகையார் விரும்புவது, உன் வண்ணப் பகட்டால் தானே! மலர்கடோறும் சென்று மது உண்டு களிக்கும் சுரும்புகளும் உன்னை விரும்புவது இல்லையே! எங்களைப்போல மண நலம் உனக்கு உண்டா? மணமில்லாப் பூவும் ஒரு பூவாமா? "மல்லிகை, முல்லை மலர்கொய்வோம்; மணமுள்ள மலர்ச்செண்டுகள் செய்வோம்" என்று முற்காலத்தில் பாவையர் பாடி விளையாடினதும் பாரறிந்தது தானே! மணப் பந்தலிலும், மணமக்கள் கழுத்திலும் நாங்களன்றே அழகுற விளங்குகின்றேம்! சீமந்தப் பெண்களுக்குச் சிங்காரமாய்த் தலையிற் சூட்டுவதும் மல்லிகைதானே! குழந்தைகள் தாலாட்டிலும் "மாமன் அடிச்சானே மல்லிகைப்பூச் செண்டாலே" என்றெரு அடி இருப்பதும் அறியாயோ? அன்று ஆயர்பாடியில் சோதைப் பிராட்டியார் கமலக் கண்ணனை மலர் சூடிக்கொள்ள அழைத்த காலை "மருவி மணங்கமழ்கின்ற மல்லிகைப்பூச் சூட்டவாராய்'! என்று கூறியிருக்கிறாரன்றே? இப்போதும் குழந்தைகட்கு நிலாவைக் காட்டுவார், 'நிலா! நிலா! ஓடிவா!" நில்லாமல் ஓடிவா! மலைமேலே ஏறி வா! மல்லிகைப்பூக் கொண்டு வா!" என்றல்லவா பாடுகின்றனர். மற்றும், காமன் விடு கணைகள் ஐந்தினில் முல்லை மலரும் ஒன்றல்லவா? அதுவும் விடுத்த காலை, சென்று பாயுமிடம் உச்சியன்றே? மலர் தோறும் சென்று மதுவுண்டு மயங்கித் திரியும் மதுகரம் மல்லிகையே வெண்சங்காகக் கொண்டு ஊதுவதாய்க் கற்பித்து, எங்களைச்

சிறப்பித்தன்றோ பாடியுள்ளார் புகழேந்திப் புலவரும்! முற்காலத்துக் காவலரின் கன்னிகைகள் காதலோடும் மல்லிகைக் கொடிகளை அருமையாய் வளர்த்தார்களன்றோ? அக்கொடி மலர்ந்த காலத்து அதற்கு வசந்தகால விழாவை, மன்னரும் மகிழ்ந்திருக்கக் கொண்டாடுவது பண்டைய வழக்கல்லவா? விரகதாபந் தணிய மங்கையர் கொள்வது மல்லிகை மலர்ப்பாயல்லாது கனகாம்பாரப் பாயலோ? முல்லையினழகும் மணமும் உலகறிந்ததுதானே. முருகு விரியும் முல்லைக்கொடிக்கு அன்று கொழுகொம்பிலாது அது அலைதலைப் பொறுத பாரி தன் தேரையே ஈந்தது பாரறிந்தது தானே! விரிவஞ்சி இதோடு நிறுத்துகின்றேன். இனியேனும் எங்களை அறியாது அலர்தூற்ற முற்படாய் என்று எண்ணுகிறேன். எங்களை மக்கள் அறவே விரும்பாதிரார். எவ்வாறு நம் தமிழ் நாட்டினில் பல்வேறு சமயங்கள் தோன்றிப் பரவி அழிந்தும் பண்டைச் சமயமாகிய இந்து சமயம் மாத்திரம் இன்றும் அழியாது நிலவுகின்றதோ, எவ்வாறு தமிழ்த் தாய் தன் பண்டைப் பொலிவினை இழந்து, தன் மக்கள் ஆதரவும் குன்றி, தளர்வுற்று நிற்பினும், சீரிளமையுடனும் திடமனத்தோடும் நற்காலம் நோக்கி இருக்கின்றனளோ, அவ்வாறே, பன்னெடுங் காலமாய்ப் பெருமையுடன் வாழ்ந்து வரும் நாங்களும் விதவிதமான மலர்கள் தோன்றி மக்கள் மனதைக் கவர்ந்து நின்றும், சீரும் சிறப்புமாய்த்தா னிருந்துவருகிறோம். மக்களும் எங்களை ஆதரித்துத்தான் வருகின்றனர். "ரோஜா" மலரை "ஜோராய்"த் தலையில் அணிய சிலர் விரும்பலாம்; சிலர் தாழம் பூவைச் சடை தைத்துக்கொள்ள விரும்பலாம்; மற்றுஞ் சிலர் லில்லிப் பூக்களை அடுக்காய்த் தொடுத்து அணியலாம்; வேறு சிலர் *செத்த குரங்கைத் தலைமேற்சூடி உகக்கலாம். நாகரிக நாரீ மணிகள் உங்களைத் தலைமேல் 'அரி' 'அரி'யாய்ச் சுமந்து உவகையடையலாம். இதெல்லாம் அவரவர் விருப்பம். இதனாலே மல்லிகையை அவர்கள் அறவே வெறுப்பதாகக் கொள்ளுவதோ? நீங்களுங்கூட இப்போது மெள்ள மெள்ள எங்களுடைய தொடர்பைப் பெறத்தானே விழைகின்றீர்கள்? இதிலிருந்தேனும் எங்கள் மதிப்பு விளங்கவில்லையா?" என்று இடித்துரைத்தது. கனகாம்பரம் தலை குனிந்து, வாளாநின்றது.

மல்லிகையும் கனகாம்பரமும் இவ்வாறு உரையாடியதெல்லாம் மறைவில் கேட்ட மங்கையர் மகிழ்ச்சியுடன் மேற்சென்று தாங்களன்போடும் வளர்த்த மல்லிகைக் கொடியைப் பார்த்துவிட்டு மாளிகைக்குத் திரும்பினர். மாளிகையை

*செத்த குரங்கு என்பது சாமந்தி.

அடைந்ததும், மோஹனை "தங்காய்! மணமில்லாத பூ என் மனதிற்கு பிடிக்கவில்லை. இனி, மல்லிகையே நான் உகந்து சூடுவேன்" என்றாள். "ஆம் அக்காள்! காகிதப் பூ போன்ற கனகாம்பரத்தை அணிவதில் எனக்குக்கூட விருப்பமில்லை. அது உள்ளே சென்றாலும் உயிரே போய்விடுமாம்" என்றாள் சுலோசனை.

---

## மலைபுத்தொடர்கள்

"பண்புளோர்க்கொரு பறவை பாபத்திற் கோரிலக்கம்
நண்பிலரைக் கண்டக்கா னற்காலி"

(பறவை - ஈ (கொடு). இலக்கம் - அஞ்சு (அச்சங்கொள்). நாற்காலி - விலங்கு.)

சென்னிமலை வேலவர்க்குச்
சேர்ந்த கொம்பு இரண்டு முண்டு
கன்னிகுற வள்ளியர்க்குக் கையில்லை
ஆட்டுக்குக் கொம்பில்லை ஆனைக்குக் காலில்லை
பாட்டுக்குள் ளாராய்ந்து பார்.

(கொம்பிரண்டு - "ெ" "ே" (சென்னிமலை வேலவன்). கன்னி என்பதில் கன்னிகை என்பதற்குரிய "கை" இல்லை. ஆடு என்பதில் "ே" கொம்பில்லை. ஆனை என்பதில் "ா" காலில்லை.)




## சிவஞானபோதக் கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள், B. A.]

பதிப்புரிமை ஆக்கியோர்க்குரியது

(௩௩௭-ஆம் பக்கத்தொடர்ச்சி)

### ஐந்தாஞ் சூத்திரம்

மேலே நான்காஞ் சூத்திரத்தில் உயிரினிலக்கணங் கூறு முகத்தான் சகசமலமாகிய ஆணவமலத்தாற் கட்டுண்டு உணராதிருக்கும் உயிரினுடைய கேவலாவத்தையினியல்பை விளக்கிக் கூறிய ஆசிரியர் அடுத்த ஐந்தாஞ் சூத்திரத்தில் சகலாவத்தையினியல்புபற்றி உயிருக்கு முதல்வனுணர்த்தும் முறைமை கூறுகின்றார். இங்ஙனம் நான்காஞ் சூத்திரத்திற்கும் ஐந்தாஞ் சூத்திரத்திற்குங் கூறப்பட்ட முறைமை பற்றிய இயைபினால் சூத்திர இயைபு விளங்கும். சூத்திர இயைபு, பாத இயைபு என்றுங் கூறப்படும்.

2. பிரமாண இயல் முதலாவது சூத்திரத்தில் உலகிற்கு நிமித்த காரணாகிய பதியினது உண்மை கூறிய ஆசிரியர், அடுத்த இரண்டாஞ் சூத்திரத்தில் அப்பதி ஐந்தொழில் செய்தற்கண் இன்றியமையாது வேண்டப்படுவதாய் எஞ்சி நின்ற முதற்காரணம் துணைக்காரணங்களினது உண்மை கூறியவாறே, இலக்கண இயல் நான்காஞ் சூத்திரத்தில் உயிரினிலக்கணங் கூறிய ஆசிரியர் அடுத்த ஐந்தாஞ் சூத்திரத்தில் உயிரினது இலக்கணமாகிய அறிவு விளங்குதற்கு இன்றி அமையாது வேண்டப்படுவதாய் எஞ்சி நின்ற முதல்வனது அருட்சத்தியாகிய திரோதான சத்தியினிலக்கணங் கூறுகின்றார். மாயையும் கன்மமும் திரோதான சத்திக்குக் கருவிகளாயிருத்தலின் அதனுள் அடங்கும். இதனால் பாசஇலக்கணங் கூறப்பட்டவாறாயிற்று. இங்ஙனம் அவாய்நிலைபற்றிய இயைபினால் இயல்இயைபு விளங்கும். இயல்இயைபு, ஒத்தியைபு என்றுங் கூறப்படும்.

3. ஆசிரியர் நான்காஞ் சூத்திரம் மூன்றும் அதிகரணத்தில் உயிர் கருவிகளோடுகூடி அஞ்சவத்தைப்பட்டு வினைப்பயன் நுகரும் என்று கூறினர். அவ்வாறு உயிர் வினைப்பயன் நுகர்தற்கு முதல்வனது உதவி வேண்டப்படுமோ வேண்டப்படாதோ என்னும் ஆசங்கை (ஐயம்) நிகழ்கின்றது. ஆசிரியர் அவ்வாசங்கையை நீக்கி ஐந்தாம் சூத்திரம் முதல் அதிகரணம் இரண்டாம் அதிகரணங்களில் வினைப்பயன் நுகரும் உயிர்க்கு முதல்வனது உதவி இன்றியமையாது வேண்டப்படும் என்று கூறுகின்றார். முதல் அதிகரணம், இரண்டாவது அதிகரணப்பொருளை விளக்கும் உவமையாய் அதனுள் அடங்கி நிற்றலால் இரண்டு அதிகரணங்களும் சேர்ந்து கூறப்பட்டன. இங்ஙனம் ஆசங்கைபற்றி ஆசிரியர் கூறும் இயைபான் அதிகரண இயைபு நன்கு புலனும்.

4. இச்சூத்திரம் இரண்டு அதிகரணங்களை உடையது. அவை பின்முறைமையிற் கூறப்படும்.

## முதல் அதிகரணம்

5. "ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவானுணரும்" என்பது முதல் அதிகரணத்தின் மேற்கோள்:—ஈண்டு என்பது இம்முதல் அதிகரணத்தில். ஐ உணர்வுகள் என்பது இங்கே உணர்வுகளுக்கு ஏதுவாயுள்ள செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐம்பொறிகளைக் குறிக்கிறது. உணரும் என்பது சத்தபரிச உருவரச கந்தங்களாகிய விடயங்களைக் குறிக்கிறது. ஆகவே முதலாவது உலகவிடயங்களை அறிதற்குக் கருவிகளாயமைந்துள்ள செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐம்பொறிகளும் உயிரினுல் விடயங்களை அறியும் என்பது மேற்கோளின்பொருள் ஆகும். ஐம்பொறிகளும்உயிரினுல் அதிட்டிக்கப்பட்டு விடயங்களை யறியுமேயன்றித் தாமாகஅறியமாட்டா; அங்ஙனம் விடயங்களை அறிகின்ற தம்மையும் அறியமாட்டா—இங்கே ஐ உணர்வுகள் என்றதனுல் இனம்பற்றிப் பிறகருவிகளும் கொள்ளப்படும்.

6. பற்றுஅற்ற புருடன் சந்நிதியில் புத்திதத்துவமானது விடயங்களை அறியுமன்றிப் புருடன் ஐம்பொறிகள் முதலிய கருவிகளோடு சேர்ந்து விடயங்களை அறியவேண்டுவதில்லை என்று கூறும் சாங்கியர் கொள்கையை மறுத்தற்கு எழுந்தது இம்முதல் அதிகரணம்—ஆசிரியர், சாங்கியர் கொள்கையை மறுத்துக் கூறும் மறுப்புரையானது மேலே நான்காவது சூத்திரம் 45-வது பந்தியில் விரிவாய்க் கூறப்பட்டிருத்தலால்

ஆண்டுக்காண்க (பரல் 6 பக்கம் 266 பார்க்க)—முதல் அதி கரணமானது சாங்கியர் கொள்கையை மறுத்து ஐம்பொறிகள் முதலியன ஆன்மாவாலுணரும் என்ற சைவசித்தாந்தக் கொள்கையை நிலைநாட்டுதலுடன் இரண்டாவது அதிகரணப் பொருளுக்கு உவமையாக அமைந்து அதனை விளக்குவதாயு முள்ளது.

7. ஆசிரியர் தாம்கூறிய மேற்கோளை ஒரேதுவினால் வலியுறுத்துகின்றார்—"அவற்றினுன் ஆன்மா ஒற்றித்துக் காணின் அல்லது அவையொன்றையும் விடயியா ஆகலான்" என்பது அவ்வேது. அவற்றினுன் என்பது செவி, மெய், கண், வாய், மூக்கு என்ற ஐந்துபொறிகளோடு.—உயிரானது ஐம் பொறிகள் முதலியவற்றோடு கூடி அதுவதுவாய் ஒன்று பட்டுக் காணினல்லது யாதொரு உலகவிடயத்தையும் அறிந்து விடயிக்கமாட்டாது என்பது ஏதுவினாற் போந்தபொருள். அரசனொருவன் அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்து அரசி யற்றொழில் செய்யும் அமைச்சர் முதலாயினோரை அவரவர்க் குரியதொழிலைச் செய்யும்படி ஏவித் தன் ஆணையைச்செலுத்தி அரசகாரியம் செய்தல் போல, புருடன் சாக்கிரத்தில் புருவ நடுவில் நின்று ஐம்பொறிகள் முதலிய கருவிகளை ஆண்டு அந்தஅந்தக் கருவிக்குரிய விடயங்களை விடயிக்கும்படி ஏவித் தன் ஆணையைச்செலுத்தி அவற்றால் விடயங்களை யறிந்து நுகர்கின்றது. அமைச்சர் முதலிய அதிகாரிகள் அரசன் ஆணையை மீறிச்செல்லாததுபோல ஐம்பொறிகள் முதலிய கருவிகளும் புருடன் ஆணையைக் கடந்துசெல்லா.

8. ஒருவர் தன்கண்முன், பழகின நண்பர் ஒருவர் வந்து நின்றாலும் அந்நேரத்தில் தம்முடைய அந்தக்கரணங்கள் யாதாமொரு விடயத்தை நினைத்து நிச்சயித்தற்கண் ஈடுபட் டிருப்பின், தம் நண்பர் நின்று கொண்டிருத்தலை அறிய மாட்டார். இது உலக அநுபவத்தில் நாம் காண்கிற உண்மை. இங்கே கண்முன்னே நண்பர் நின்றாலும் கண் உயிரோ டொற்றித்து நின்று காணவில்லை யாதலின் நண்பர் உருவம் கண்ணுக்குத் தெரியவில்லை—ஆசிரியர் இந்த அநுபவ உண்மையை ஏதுவாகக் காட்டி முதல் அதிகரணப்பொருளை வலியுறுத்துதலை அறிக.

9. ஐம்பொறிகள் ஆன்மாவின் சந்நிதியில் புத்திதத்து வத்தினால் விடயங்களை அறியும் என்று சாங்கியர் கூறும் கொள்கையினும் ஆன்மாவின் சந்நிதி இன்றியமையாமை கூறப்படுகின்றது. அங்ஙனமாயின் ஆன்மாவின் சந்நிதி என்

பதற்குச் சாங்கியர் சைவசித்தாந்தம் கூறுகிறபடி ஆன்மா ஐம்பொறி முதலியவற்றோடு ஒற்றித்து நின்று சங்கற்பித்துக் காணுதல் என்று பொருள் கொள்ளாமல் காந்தத்தின் முன் இரும்புபோல அபிமுகம் என்று மாத்திரம் பொருள் கொள்ளுதலால் கருத்து வேறுபடுகின்றனர்—"மன்னு சிவன் சந்நிதி" என்ற இரண்டாவது அதிகரணவெண்பாப்பாட்டில் வருகிற "சந்நிதி" என்ற சொல்லுக்குச் சிவஞான சுவாமிகள் "சிவசத்தி அவ்வக்காரியங்களில் உன்முகமாதலாகிய சங்கற்பமேயன்றி அவிகாரவாதிகள் கூறும் அபிமுகம் மாத்திரை அன்று" என்று கூறுதல் காண்க.

10. ஐம்பொறிகள் உயிரையின்றி விடயங்களையறியாதிருத்தல்போல உயிரும் ஐம்பொறிகளையின்றி விடயங்களை அறியா—இவ்வுண்மை உயிரானது ஐம்பொறிகள் நீங்கிய கனவுநிலையில் விடயப்பொருள்களைத் தூலமாய்க் காணாது நிற்றலால் நாம் அறியலாம். ஆனால் உயிர் விடயத்தையறிதற்கு ஐம்பொறிகள் முதலியன இன்றியமையாதிருத்தல் அதன் கட்டு நிலையில் மாத்திரமேயன்றி வீட்டுநிலையிலில்லை என்பதறிக.

---

"F" (எஃப்) என்னும் எழுத்து எபிரேய மொழியிற் கிடையாது.

* * *

மீன் என்பது பெண்பாலுக்குரிய சின்னம். அதனாலேயே அஃது எப்பொழுதும் சத்திவடிவமாகிய இறைவியுடன் தொடர்பு படுத்தப்படுகிறது.

* * *

பேய்பிசாசு முதலியவற்றிற்கு அஞ்சுந்தன்மை சில மக்களிட மட்டுமன்று; நாய்கள், கரடிகள், புலிகள் முதலிய விலங்குகளிடமும் காணப்படுவதாகும். இடியோசை கேட்ட எல்லா விலங்குகளும் நடுக்க முறுகின்றன. உடையேதுமில்லாத ஒரு திருடனைக்கண்ட நாய் குலைப்பதில்லை. ஒரு சங்கிலியை எடுத்து ஒரு குதிரையின் அருகில் ஆட்டி ஓசையுண்டாக்கினால் அது மிகவும் மருட்சி கொள்ளும்.

---

# புதுக் கவிகள்-Original Poetry

## தமிழ் அருமை வெளிப்படுத்தல்

[திரு. பெ. கோவிந்தன் அவர்கள், கோடுமுடி.]

அஞ்சிறைய மடவண்டே அழகியசெந் தமிழ்மணம்போல்
நெஞ்சினுக்கும் நாவினுக்கும் நிமிர்செவிக்கும் மூக்கினுக்கும்
எஞ்சுதலி லாதுமணம் ஈயவல்ல மலமணர்மொன்
றஞ்சுநிலத் தறுகாலோ டலையும்நீ அறிவாயோ 1.

தண்டலையம் வண்டினமே சாருமையம் உண்டினமே
கண்டாலும் உரைத்தாலும் காதாலே கேட்டாலும்
உண்டாலும் தித்திக்கும் ஒண்டமிழ்த்தேன் போலொருதேன்
கண்டீரோ கண்ணாலே காதாலும் கேட்டீரோ 2.

மன்றலிளந் தென்றால்நீ வந்தெமக்கு நல்குமணம்
குன்றிலுள்ள அகில்மணமோ குளிர்நெய்தற் பூமணமோ
துன்றுபொழிற் கனிமணமோ தொன்னகர்ப்பெண் குழல்மணமோ
ஒன்றியியைந் தடைமணமோ ஒண்டமிழின் தொடைமணமோ

பூந்தொடையின் தேனுண்ணும் பொறிவண்டே இனிப்பன்றித்
தீந்தமிழின் தொடையிலெங்கும் திகழ்கின்ற எண்சுவையும்
மாந்திமகிழ் வுறவுனக்கு வழியுண்டோ நிறமுருவம்
ஆய்ந்தறித லன்றிப்பத் தழகறிய வல்லுநையோ 4.

மயிலேநீ ஆடுகின்றாய் வண்டேநீ ஊதுகின்றாய்
குயிலேநீ பாடுகின்றாய் கொண்மூநீ கொட்டுகின்றாய்
மயலேய்ந்த கொன்றாய்பொன் வழங்குகின்றாய் தமிழ்நடிப்பை
அயலேவந் தறிவித்தோர் ஆரென்று கூறுவீரோ 5.

காட்டினுறை பைங்கிளியே கன்னிச்செந் தமிழ்த்தாயை
வேட்டணையின் சிலம்புமணி மேகலையா ரொடுபத்துப்
பாட்டறிவாய் பொருளறிவாய் பலதொகைமுப் பால்பெறுவாய்
கேட்டுவக்கும் திருப்புகழும் கிடைக்கும் நினைப் புனக்குண்டோ

இன்றமிழ்ப்பண் பலபாடும் இளம்பூவாய் நாற்புறமும்
வென்றிசைகொண் டுயிர்வாழ விருப்புண்டோ வெல்லுவையால்
தென்றமிழ்ச்சொல் லென்றுரைக்கத் தெரிந்தாரு மில்லைஅவர்
என்றுமுயன் றாலும்அதை எழுதஎழுத் தும்மில்லை 7.

அலைகின்ற இளங்காற்றே அறிவையுல கத்தனையும்
இலையென்னு தெங்நாளும் ஈவோர்கள் வாழ்நாடு
கலைதெரிந்தோர் வாழ்நாடு கற்புடையோர் வாழ்நாடு
தலைமையறம் வாழ்நாடு தமிழ்நாடோ பிறநாடோ. 8.

ஆழ்கடலின் வாழ்முதலாய் அன்பின்றி நின்னோடு
வாழ்மீனைக் கொன்றுண்பாய் வள்ளுவர்செல் வழிச்சென்று
மூழ்கிச்செந் தமிழ்க்கடலில் முப்பாலுண் டெப்பாலும்
தாழ்வாகும் கொலைவிடுத்தோம் தமிழ்க்கடற்கன் றேவுயர்வு. 9.

இருநாட்டுக் கிடைநின்றே எப்புறமும் காண்கின்ற
கருங்கோட்டு வேங்கடமே களங்கமனத் தாரியப்பெண்
பெருங்காட்டைச் சென்றடையப் பேசுந்தோ றெமக்கினித்து
மருளோட்டுந் தமிழ்க்கன்னி வாழும்வகை யறிவாயோ. 10.

---

## வரலாற்றுப் பகுதி History & Biography

# தெலுங்குமொழிப் புலவர் பெருமக்கள்

[கோவை. திரு. சி. கு. நாராயணசாமி முதலியாரவர்கள்]

ஆந்திரம் எனப்படும் தெலுங்குமொழி நூல்களுள், அம்மொழியில்வல்ல புலவர் பெருமக்கள் வரலாறுகள் காணப் படுவபோல், பிறமொழிகளில் வரலாறுகள் காணப்படுவ தில்லை. ஆந்திர அரசர்களும், பிற பிரபுக்களும் தெலுங்கு மொழியில் மிக்குயர்ந்த புலமைக்கு அரசராக விளங்கிய கவிவாணர்களையும், அவர்கள் இயற்றிய அரும்பெரும் நூல் களையும் அன்புடன் வரவேற்று, பெரும்பொருளுதவிப் பெரி தும் பேணி வந்தார்கள். இவற்றால் அம்மொழி வளர்ச்சி பெற்று ஆந்திர நாடனைத்திலும் தெலுங்கு மொழிப் புலவர் கள் பெருக்கமடைந்து பெயர் சிறந்து விளங்கலாயினர். இங்ஙனம் பெருக்கமடைந்த புலவர்களுள் முதன்மையாக வைத்தெண்ணக்கூடிய தகுதியும், புலமை ஆற்றலும் வாய்ந்த புலவர் பெருமக்கள் சிலர் விளங்கிப் பெயர் சிறந்திருந்தனர். அவர்கள், வால்மீகி முனிவரது வடமொழி இராமகாதையைத் தெலுங்குமொழியில் இயற்றிய 'பாஸ்கரன்,' சமஸ்கிருத வியாசபாரதத்தை ஆந்திரபாஷையில் செய்த 'திக்கன்ன சோமயாஜி'; மார்க்கண்டேய புராணத்தைத் தெலுங்கிலாக்கிய மாரன்னகவி'; 'பிரதாப ருத்ரீயம்' என்ற அலங்கார நூலை, உலகம் உள்ளளவும் நிலைபெறும்படி பாடியருளிய 'வித்யா நாதன்,' நீதிகள் நிரம்பிய வேமன்ன பத்தியத்தை இயற்றிய 'வேமனகவி;' 'பத்தேன்னகவி;' விடலராசன்,' 'கோளபுத்தா ரேட்டி;' 'திம்மரசு' முதலிய புலவர் திலகர்களாம். இவ் வரும்பெருங் கவிவாணர்கள், அரசர்களாலும், அறிவுடை யோர்களாலும் பெரிதும் பாராட்டப்பெற்றுப் பொன்னு பரணங்களும், பொற்றுகிலும், வெண்பட்டுச் சால்வைகளும் பரிசுகளாகப் பெற்றிருந்தனர். இங்ஙனம் மதிப்புக்கும், புகழுக்கும் உரியராக விளங்கிய கவிவாணர்களின் கவிகளையும் பிரபந்தங்களையும், ஓதியும், உணர்ந்தும், குணதோஷங்களை ஆராய்ந்தும் கூறக்கூடிய அறிவுமிக்க ஆந்திரப்பிரபுக்களும், அரசர்களும் ஆந்திர நாட்டிலிருந்ததாக அறியப்படுகிறது. இங்ஙனம் செல்வர்களும் அரசர்களும், புலவர்களைப் போலவே இலக்கிய இலக்கணங்களை ஐயந்திரிபறக் கற்றுக் கவிபாடவும், பிரபந்தங்கள் புனையவும், காவியங்கள் இயற்றவும்

ஆற்றல் பெற்றிருந்தார்களென்றால், அந்நாட்டினரது மொழிப் பற்று எவ்வளவு உயர்வு பெற்றிருக்கவேண்டுமென யூகித்துக் கொள்ளலாம். இம்முயற்சியினால் ஆந்திரமொழி மிகவும் முன்னேற்ற மடைந்து ஆந்திராநாடனைத்தும் மிகுதியாகப் பரவி வியாபகம் பெற்றுக் கீர்த்திசிறந்து விளங்கியது. ஆந்திர அரசர்களும், புலமை சிறந்து திகழ்ந்தார்களென்பதற்கு விஜயநகர வேந்தன் ஸ்ரீ கிருஷ்ணதேவராயனும், நிஜாம் ராஜ்யத்திலுள்ள 'ஓரங்கல்' (வாரங்கல்) இரண்டாம் பிரபுட தேவராயனும், அவர்களியற்றிய "ஆமுக்த மால்யம்' 'பிரதாப ருத்ரீயம்" என்ற நூல்களுமே சிறந்த சான்றுகளாம்.

அன்றியும், ஆந்திரநாட்டரசர்களும், செல்வர்களும் தெலுங்கு மொழிவாணர்களைப் பெரிதும் பேணியும், ஆதரித்தும்; அவர்கள் அருமையாகவியற்றிய பிரபந்தங்களுக்குப் பாட்டுடைத்தலைவர்களாவும் இருந்ததனால், ஆந்திரப்புலவர்கள் பெயர் சிறந்து, கீர்த்தியையும் நிலை நாட்டினார்கள். அப்புலவர்கள் சிலருடைய வரலாறுகளைச் சுருக்கமாகத் தருகின்றோம்:

## 1. நன்னய சோழகவி

இவர், தெலுங்கு மொழிப்புலவர்களுள், முதன்மையாக வைத்தெண்ணக்கூடிய பெருமை சிறந்தவர். இப்பெரியார் வடமொழிப் பயிற்சியிலும் வல்லாராய்ப் பெரும்புலவரெனப் பெயர்சிறந்தும் விளங்கினர். இப்பெருமான், சோழநாட்டுத் திரிசிரபுரத்துள்ள உறையூரை இராசமாநகரமாகக் கொண்டு அதனையும்; கோதாவரி நதிக்கரைப் பிரதேசங்களையும்; சிங்கள மத்தியபூமியிலுள்ள நாடுகளையும் அரசு செய்து வந்த சோழ மன்னர்களின் வமிசத்தைச் சார்ந்தவர். மிகவும் பிரசித்தி பெற்றவர். இப்புலவருடைய தந்தை 'சோழவல்லி பாகநாடு' என்ற ஊருக்குத் தலைவராக விளங்கியிருந்தார். நம் நன்னய கவிவாணர் வாழ்ந்திருந்த காலம் கி. பி. 1650 என்று மான பல்லி ஸ்ரீ இராமகிருஷ்ணகவி கூறுகின்றனர். "ஆந்திரப் புலவர்கள் வரலாறு" என்ற நூலை எழுதிய ஸ்ரீ வீரேசலிங்கம் பந்துலு அவர்கள், நன்னய்யருடைய காலம், கி. பி. 1153-ஆம் ஆண்டென்று தமது நூலில் விளக்கியிருக்கின்றனர். நன்னய கவியின் காலம்பற்றி மானபல்லி இராமகிருஷ்ண கவிக்கும், ஸ்ரீவீரேசலிங்கம் பந்துலுக்கும் பத்திரிகைகளில் வாதப்பிரதிவாதம் நிகழ்ந்து வந்தன. இந்நன்னய சோழகவி சிவத்தொடர்புடைய சைவசமயத்தில் பெரும்பற்றும், சிவபெருமானிடத்தில் பெருகிய அன்பும் வாய்ந்தவர். இவ்வுண்மை இப்புலவர் இயற்றிய "குமார சம்பவம்" என்ற நூலினால்

விளக்கமாம். இவ்வரிய நூல், பிறமொழிகளில் சிறந்ததாக மதிக்கப்பட்டுக் கொண்டாடப்படுகின்ற உயர்ந்த காவியங்கட்கு எவ்வகையிலும் தாழ்ந்ததன்று. குமார சம்பவ காவியத்தின் உயர்வைப்பற்றி, தேருமல்லி ஸ்ரீ ராஜகோபால ராவ் அவர்கள் சென்னைக் கிறிஸ்தவ கலாசாலை மாதப்பத்திரிகை ஒன்றில் அடியில் வருமாறு எழுதியிருக்கின்றனர்:—

"Kumarasambavamu is the Paradise Lost of the Telugu Language; only the theme is set in an oriental atmosphere under oriental conditions"

இயற்கையையும், அதன் பேரழகையும் உண்மையாகவே அறிந்து, திறமையாக வருணிக்கும் பேராற்றலுடைய ஆங்கில மகாகவி "வோர்ட்ஸ்வர்த்" தைப் போலவே, ஆந்திர மொழியில் மிகத்தேர்ந்து பெரும் புலவராகப் பெயர்சிறந்த நன்னய கவியும், ஆந்திர மொழியில் இயற்கையை நன்றாகவும், அழகாகவும் வருணித்து அதன் ஒப்பற்ற சௌந்தர்யத்தை வியந்து அற்புதமான கற்பனைகளால் கவி புனைந்து பாடியிருக்கின்றனர். இக்கவிராயரவர்களது புலமையையும், புத்தமுதமனைய கவிகளையும் புலமையறிவு பெற்றவர்கள் சுவைத்து, "இது அற்புத விவேக சம்பத்துடையது; சுவையமுதம் நிரம்பியது" என்று மனமாரப் பெரிதும் போற்றிப் புகழ்ந்து கூறியிருக்கின்றனர். இதனால், நன்னய கவியினுடைய பேறிவும், பெரும்புலமையும் எத்துணை உயர்வுடைத்தென விளக்கமாகின்றது. உதாரணத்திற்குக் குமார சம்பவத்திலிருந்து சிலபகுதிகளைக் காட்டுகின்றோம்.

I. குமாரசம்பவத்தின் நான்காம் அதிகாரத்தில் சிவபெருமானுடைய விரதத்தைப் பங்கம் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் மன்மதன் தோன்றியதை விளக்கும் சந்தர்ப்பத்தில் நன்னய கவியால் வருணிக்கப்பட்ட வசந்தருதுவின் சிறப்பு மிகவும் அற்புதமானது. தெலுங்குமொழி நூல்களில் காணப்படும் திவ்விய வருணனைகளில் இதுவே தலைசிறந்ததென்று கூறினும் மிகையாகாது. அல்லாமலும் வாசகர்களின் மனக்கண்களின் முன்னே இயற்கைக்கவர்ச்சி, புலவர் புனைவாற்றல் ஆகியவைகளைத் தோற்றுவித்து நிகரற்றதெனக்கூறும்படி செய்வதில் இப்புலவர் பிரானுக்குச் சமானமான புலவர்களும் உளரோ! என்ற ஐயத்தையும் கொள்ளச் செய்கிறது. ஆதிகவியாகிய வால்மீகி முனிவர் ஒருவர்மட்டும் மேற்குறித்த வருணனைகளில் நன்னய கவியவர்களுடன் போட்டியிடத் தகுதியுடையவராவர். பிற

மொழிப்புலவர்கள் கூட பிரகிருதியின் சாரமான கவிதையின் சிருஷ்டியைக் கற்பித்தனரே யன்றி, இக்கவியைப்போல் கற்பனை வாயிலாக நூற்றுக் கணக்கான உருவங்களை வாசகர்களின் உள்ளக் காட்சியில் இடைவிடாமல் உண்மைக் கவியின் மகிமையைக்கொண்டு சிருஷ்டித்து, "பயாஸ் கோப்" சித்திரங்களைப்போல் தோன்றச் செய்தாரில்லை. ஆனதால், இவ்வகையிலிவரைவிடச் சிறந்த புலவரைக் காணமுடியாது. மேலும், குமாரசம்பவத்தில் சில பாகங்களை வாசிக்கும்போது கவியின் மனோபாவம், வானளாவிய மலைச்சிகரத்தைப்போல் உயர்ந்து காண்கின்றது. இயற்கையழகின் மென்மையும், உயரிய தன்மையும் படிப்போர் உள்ளத்தில் பதிந்து வியக்கும்படி அவ்வளவு மேலானமுறையில் தமது கற்பனை சக்தியைக் கொண்டுவருணித்திருப்பது கவியின் திறமைக்கும், உயர்ந்த புலமைக்கும் எடுத்துக் காட்டுக்களாம். இவ்வகைச் சாமர்த்தியங்களில் சில ஆந்திரக் கவிராயர்கள், தெலுங்கு மொழியில் சிலகவிகளை இயற்றியுள்ளா ரெனினும், அவை நன்னய கவியின் வருணனைகளுக்குமுன்னே தலையெடுக்கமாட்டாமல் வெட்கித் தாழ்ந்து போகின்றன.

II. கவிதா சிருஷ்டியில் தான் இவ்வாறெனில், எண்ணத்தின் உயர்விலும், நன்னய மகாகவியை வெல்லவல்ல ஆந்திரக் கவிகள் யாருமேயில்லையென்று உறுதியாகக் கூறலாம். பிரகிருதியினால் ஒன்றுபட்ட எண்ணத்தின் உயர்வினால் கற்பிக்கப்பட்ட கதாபாகத்தில், சிவபெருமானைக் கணவனாகப் பெறுவதற்கு மலையரசன் மகளாகிய அம்பிகை தபசு செய்வதற்கு வனத்தை நோக்கிச் செல்லும் பகுதி, இனிமையும், மனோகரமும் சிறந்து காண்கின்றது. இந்தக் கட்டத்தை வாசிக்கின்ற அன்பர்களது மனம், சுவை மலிவு, சொற்சாதுரியம், பொருள் வனப்பு, வாக்கியாலங்காரம் ஆதிய சிறப்புக்களால் வியப்புற்றுப் பெருகிய களிப்பினால் பூரித்து விடுகின்றது. இத்தகைய பூரிப்பினால் பேரானந்த வாரிதியில் ஆழச் செய்யும் பகுதிகள் குமாரசம்பவத்தில் மிகுதியாக வுள்ளன.

ஏற்ற சொற்களையும், தொடர்களையும், கற்பனைகளையும் தங் கவிகளில் பெய்து பாடுவதில் கவிராயரவர்களுக்கிருந்த இத்தகைய சக்தியைத் தெரிந்துதான் ஆந்திர அரசன் நன்னய மகாகவிக்கு, "கவிராஜ சிகாமணி" என்ற விருதுப் பெயரை வழங்கினன் போலும். அங்ஙனமாயின், அவ்விருதுப் பெயர் இவர்க்குப் பெரிதும் தகுதியுடையதேயாம்.

---

## திரு. கா. நமச்சிவாய முதலியார் வரலாற்றில் ஒருகுறிப்பு

[திரு. சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை அவர்கள்]

திங்களணி திருவால வாயெம் மண்ணல்
திருவிளையாட் டிவையன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வ மோங்கித்
தகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர்
மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார்
வாழ்நாளு நனி பெறுவர்......

என்னுந் திருவிளையாடற் செய்யுளிற்கு இலக்கியமாக விளங்கினர் காலஞ்சென்ற நமச்சிவாய முதலியார் என்பதனை அவர் வாழ்க்கைப் பகுதியிலிருந்து காட்டுவாம்.

இற்றைக்கு 35 ஆண்டுகளுக்கு முன்னர் முதலியாரைத் தமிழுலகம் அறியாது. முதன்முதல் அவரை அறிய நேர்ந்தது அவர் 1901-ம் ஆண்டில் வெளியிட்ட திருவிளையாடற் புராண வசன சஞ்சிகையாலேயாம். புராண மஞ்சரி என்னும் வரிசையில் திருவிளையாடற் புராணம், பெரிய புராணம், கந்த புராணம் முதலியவற்றையும் பாகவதம், இராமாயணம், பாரதம், முதலிய பத்திநூல்களை எளியவசன நடையில் எழுதிக் குறைந்த விலைக்குக் கொடுக்கக்கருதி 32 பக்கம் "பாக்கெட்" (Pocket) (அளவில்) வாரசஞ்சிகை யொன்று காலணு விதம் வெளியிட்டுவந்தனர். முதலில் திருவிளையாடற் புராண வசனம் ஆரம்பிக்கப்பட்டு அதில் 35 சஞ்சிகைகள் விரைவில் வெளிவந்து நின்றது. அப்போது முதலியார் பிடாரியார் கோவில் தெருவில் 12-வது இல்லத்தில் வசித்து வந்தனர். பிறகு யாது காரணத்தாலோ புராணமஞ்சரி வரிசை கைநெகிழ விடப்பட்டது. மஞ்சரி வெளிவந்ததன் பின்னர்த்தான் முதலியார் பள்ளிப்புத்தகங்கள் எழுதத் தொடங்கியதும் விவாகம் செய்துகொண்டதும், செல்வம், அதிகாரம் கௌரவம் முதலியவற்றால் சிறப்புற்று விளங்கியதுமாகும். இவற்றால் முதலியாரை ஊக்கிவிட்டது திருவிளையாடற் புராணமென்பது வெளியாகின்றது. அவர் அப்புராணத்தை முழுவதும் வெளியிட்டிருந்திருப்பாராகில் இன்னும் மேம்பாடுற்று விளங்கியிருப்பார் என்பது கூறாமலே விளங்கும்.

## சிலப்பதிகாரம் : அரங்கேற்று காதை

### (3-வது பிரசங்கம்)

[திரு. சுவாமி விபுலாநந்தர்]

சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை என்பதுபற்றி தமது 3-வது பிரசங்கத்தில் சுவாமி விபுலானந்தா பேசினார்கள். அப் பிரசங்கத்தில் அவர் குறிப்பிட்டதாவது:—

சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதை மாதவி என்ற நாட்டியப்பெண் அரங்கேறியதுபற்றியும், கி. பி. ஆரம்ப நூற்றுண்டுகளிலே தமிழரது நாகரிகம் எவ்வாறிருந்த தென்பதைப்பற்றியும் விபரமாகக் கூறுகிறது. '1800 ஆண்டுகளுக்கு முன் தமிழர் நிலை' என்ற தலைப்புடன் கனகசபை பிள்ளை வெளியிட்ட நூலிலிருந்து ஒரு பாகத்தை வாசித்துக்காட்ட விரும்புகின்றேன். 'சமூக வாழ்க்கை' என்ற அத்தியாயத்திலே அந்தத் தமிழறிஞர் கூறுவதாவது:—அக்காலத்தில் நடிகச் சிறுமி 5-வது பிராயத்தில் கல்விகற்க ஆரம்பிப்பாள்; 3 வருஷகாலம்தொடர்ச்சியாகக் கல்வி கற்பாள். அச்சிறுமியின் கல்வி தற்காலத்தில் பூரண கலையுணர்ச்சியுள்ள மாதரின் படிப்புக்குக் குறைவானதல்ல. அவளுக்கு ஆடவும், பாடவும், வசீகரத்துடனிருக்கவும் கற்றுக் கொடுத்தனர். யாழ், குழல், மத்தளம் இவை வாசிக்கவும், அயல்நாட்டு பாஷைகளில் இயற்றிய பாடல்களைப்பாடவும், சித்திரம் எழுதவும், உல்லாசமாக நீராடவும், நல்ல நிறமுள்ள மாவுகளை (பவுடரை)ப் பூசிக்கொள்ளவும், அழகிய மாலைகள் தொடுக்கவும், நகைகளால் தன்னைத்தானே அலங்கரித்துக் கொள்ளவும், படுக்கையை அழகாகப் போடவும், பருவகாலங்களைக் கவனிப்பதோடு அந்தந்த பருவத்திற்கு பொருத்தமானது எதுவென்பதை அறிந்துகொள்ளவும், பதவித கலைகளின் முக்கிய விஷயங்களைப்பற்றி விவாதிக்கவும், மற்றவர்களது எண்ணங்களைத் தெரிந்து கொள்ளவும் கற்றுக்கொடுத்தனர் ஆடவரது மனதை வசீகரப்படுத்துவதற்கானதும் அவர்களுக்குச் சந்தோஷமுண்டு பண்ணுவதற்கானதுமான ஒவ்வொரு விஷயத்தையும் அவள் கற்றுக்கொண்டாள். 12-வது வயதில் அவள் மன்னர் முன்பும், பிரபுக்கள் முன்பும் அரங்கேறுவாள். அவளுடன் ஒரு கவிஞனும், ஒரு இசையாசிரியனும், யாழ் வாசிப்பவன் ஒருவனும், குழல் வாசிப்பவனொருவனும் மத்தளக்காரன் ஒருவனும் இருப்பார்கள். அரங்கமானது இரண்டி

உயரம், 14அடி அகலமும், 16 அடி நீளமுள்ள மேடையைப் போன்றிருக்கும். தூண்களின் மேல் மேடைக்கு மேல் 8 அடி உயரத்தில் விமான மொன்று அமைப்பார்கள். அந்த விமானத்தின் மீது இஷ்ட தெய்வங்களின் படங்கள் இருக்கும். விமானத்தின் நாலா பக்கங்களிலும் திரைகள் விட்டிருப்பார்கள். இரவிலே அரங்கத்தை தீபாலங்காரம் செய்த பிறகே ஆடல் ஆரம்பமாகும். மேடையின் முன்பாகத்தில் 6 அடி அகலத்தை நடிகப்பெண்ணுக்காக ஒதுக்கியிருப்பார்கள். அவளுக்குப்பின் இரண்டு அல்லது மூன்று பழைய நடிகப் பெண்கள் நின்றவண்ணம் அவ்வப்போது சொல்லிக்கொடுப்பார்கள் அவர்களுக்குப் பின் இசைகாரர்கள் சிலரிருப்பார்கள். இவர்கள் இடையிடையே பாடுவார்கள். அப்போது நடிகச் சிறுமி ஓய்வு எடுத்துக்கொள்வாள். திரையைத் தூக்கியதும் மிக்க அலங்காரம் செய்து கொண்டிருக்கும் அச்சிறுமி தோத்திரம் செய்வாள். பிறகு பல பாடல்களைப் பாடுவாள், ஆடுவாள்; வசீகரத்துடன் அபிநயங்கள் செய்வாள். அவள் தனது யௌவனத்தாலும், அழகாலும் இனிய குரலாலும் வசீகரத் தோற்றத்தாலும் இசை வல்லமையாலும் சபையினரது உள்ளத்தைக் கொள்ளைகொள்வாள். அரசன் 1008 பொன்காசு விலையுள்ள பொன் மாலை யொன்று வெகுமதியாகக் கொடுப்பான். அதுவே பெரிய வெகுமானமாகும்.

ஒரு நாடகக் கணிகை அரங்கேறுவதற்கு அவசியமானவர்கள் வருமாறு:—

1. நாடகக் கணிகை
2. ஆடலாசிரியன்
3. இசையாசிரியன்
4. கவிஞன்
5. மத்தளக்காரன்
6. குழலோன்
7. யாழிசைப்போன்
8. அரங்கம்
9. அரங்கத்தின் மீது ஆடல்

அரங்கேறுவது சம்பந்தமாக சிலப்பதிகாரத்திலுள்ள செய்யுட்களில் பல விபரங்களைக் காணலாம். அரங்கேற்று காதையில் 70-வது வரி முதல் 94-வது வரிவரையில் யாழிசைப்

போனைக் குறிக்கின்றன. அந்த வரிகளுக்குப் பூரணமாக அர்த்தம் தெரிந்து கொண்டால் பண்டைத்தமிழ் இசையினர் பொக்கிஷத்திற்குத் திறவுகோல் கிடைத்துவிடும். 5 வருஷ காலத்திற்கு மேலாக நான் ஆராய்ச்சி செய்ததன் பலனுக சிறிது ஒளி கிடைத்துள்ளது. அந்த வரிகளுக்கு அடியாருக்கு நல்லார் வியாக்கியானம் எழுதவே இல்லை. அடியார்க்கு நல்லார் காலத்திலேயே பண்டைத் தமிழ் இசை புறக் கணிக்கப் பட்ட தென்று தெரிகிறது. மத்திய காலத்தில் கலை வல்லவர்களாக விருந்த ஜெயின சன்யாசிகளும், பௌத்த சன்யாசிகளும், ஆடல், பாடல் என்ற இருகலைகளையும் புறக் கணித்தனர்.

நாடகக் கணிகை அரங்கேறும் போது மகரயாழையே உபயோகித்தனள். இந்த யாழுக்கு 14 நரம்புகளிருந்த தோடு அந்தரக் கோல்களும் இருந்தன. இந்தயாழால் நி முதல் த வரையில் 14 ஸ்வரங்களில் மூன்று ஸ்தாயிகள் வாசிப் பார்கள். நி, ச, ரி, க, இந்த நான்கு ஸ்வரங்களும் கீழ் ஸ்தாயி; ம, ப, த, நி, ச, ரி, க, இந்த 7 ஸ்வரங் களும் மத்திம ஸ்தாயி; ம, ப, த, இவை மேல் ஸ்தாயி. புல் லாங் குழலையே முதலில் வாசிப்பார்கள்; பிறகு யாழ், மத் தளம் முதலியவற்றை வாசிப்பார்கள்.

ஏக காலத்தில் குழலால் கோடிப்பாலை வாசிக்க ஆரம் பிப்பார்கள்; யாழால் செம்பாலை வாசிப்பார்கள்.

பண்டைத் தமிழிசை உயிர் பெறவேண்டுமானல் புராதன கருவிகளும் தோன்ற வேண்டும்.

குரவை, வரிக் கூத்துகளைப்பற்றிச் சிறிது கூற விரும்பு கிறேன். குரவைக் கூத்து என்பது பலர் சேர்ந்து ஆடுவதா கும். வரிக் கூத்து ஒருவரே ஆடுவது.

குரவைப் பாட்டென்பது பலர் சேர்ந்து தெய்வ வழிபாடு செய்வது. வரிப்பாட்டு ஒருவரது கருத்துத் தோன்றப் பாடு வது.

(தொடரும்.)

—"விடுதலை."

---

# செய்திகளும் குறிப்புகளும் :
# News and Notes

"சைவசித்தாந்தம்" என்ற பொருள் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியனுப்பிய திருமதி வயலெட் பரஞ்சோதி என்னும் இந்தியக் கிறித்தவ அம்மையாருக்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் பிஎச். டி. என்ற பட்டத்தை வழங்கியுள்ளார்கள்.

* * *

"இந்திய வரலாறும் சிற்பமும்" என்ற துறையில் ஆராய்ச்சி செய்து வந்த திருமதி மீனாட்சி என்ற அம்மையாருக்கும் சென்னைப் பல்கலைக் கழகத்தார் பிஎச். டி. பட்டம் அளித்துள்ளார்கள்.

* * *

காலஞ்சென்ற திரு. கா. நமச்சிவாய முதலியாரவர்கள் இறுதி நாட்கடன் சென்ற மார்ச்சுத் திங்கள் 29-ம் நாள் சிறப்பாக நடைபெற்றது. அன்று மாலை திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் பெரியதொரு கூட்டம் கூட்டப்பட்டது. திரு. சச்சிதானந்தம் பிள்ளை, அலர்மேல்மங்கைத்தாயார், பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார் முதலிய பல அறிஞர்கள் பாராட்டுரை பகர்ந்தார்கள்.

* * *

ஆந்திரப் பல்கலைக் கழக வைஸ் சான்ஸெலராக இருந்த புகழ்மிகு ஸர். எஸ். இராதாகிருஷ்ணன் என்பார் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த "கீழ் நாட்டு மதங்கள், நீதிகள்" என்ற துறையின் பேராசிரியராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது மிகவும் பாராட்டற்குரியதாகும்.

---

# மதிப்புரை

**தஞ்சைவாணன் கோவை:**—மூலமும் குன்றத்தூர் அஷ்டாவதானி சொக்கப்ப நாவலர் உரையும் வித்துவான் ந. சுப்பைய பிள்ளை அவர்கள் ஆராய்ச்சிக் குறிப்புக்களும். இந்நூல் யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபையாரின் 46-வது வெளியீடாகும். நம்மிடமும், யாழ்ப்பாணம், வண்ணார்பண்ணை "இந்து சாதன" ஆபீஸிலுங் கிடைக்கும். விலை ரூ. 3-8-0; காலிக்கோ கட்டடம் ரூ. 4

அகப்பொருட்டுறைக்கு அருமணி விளக்காகிய செம்மைசால் இக்கோவை நூலுக்கு ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு கூடியதொரு விளக்கவுரை இல்லாமலிருந்தமை தமிழுக்கே ஒரு பெருங்குறையாகும். அக்குறையை மிகவும் முயன்று உழைத்து வியந்து பாராட்டத்தக்க வகையில் நிரப்பி வைத்த இயற்றமிழ்ப் போதாகாசிரியர் திரு. ந. சுப்பையா பிள்ளை அவர்களின் பேராற்றல் பாராட்டற்பாற்று. ஆண்டிற் சிறியராயினும் அறிவில் முதிர்ந்தவராகிய இப்பதிப்பாசிரியர் இன்னும் பற்பல இலக்கிய நூல்களை இவ்வாறே செம்மை செய்து திறம்படப் பதித்துதவுவார்கள் என நம்புகிறோம். பல பழைய ஏட்டுச் சுவடிகளைத் துருவியாராய்ந்து கண்ட வியத்தக்க குறிப்புக்கள் இந்நூலின்கண் சேர்க்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். தருமபுர ஆதீன வித்துவசிகாமணி காழி. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை அவர்கள் இந்நூலுக்கு ஓரணிந்துரை பாடி யுதவியுள்ளார்கள்.

* * *

**கபிலர்:**—சென்னைப் பல்கலைக் கழகத்து ஓரியண்டல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் தமிழ் இளஞ்சொற்பொழிவாளர் வித்வான் திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் எழுதியது. சென்னைப் பல்கலைக் கழகத்தினரின் 5 வது வெளியீடு. விலை ரூ. 2

கீழ்நாட்டுமொழி யாராச்சிக் கழகம் ஒன்றை நிறுவியதன் பயனாக இத்தகையதொரு சிறந்த புதுமுறை ஆராய்ச்சி நூல் ஒன்று வெளிவந்தது புகழ்தற்குரித்தாகும். தமிழ் நூல்களில் தமிழ்ப் புலவர்களைக் குறித்த முறையான வரலாற்றாராய்ச்சி நூல்கள் மிகவுஞ் சிலவே இதுகாறும் வெளிவர்துள்ளன. அவற்றுள்ளும் "பரணர்" என்ற சீரிய ஆராய்ச்சி நூல் திரு. ரெட்டியாரவர்களின் அறிவுக் கொடையே யாகும். திரு. ரெட்டியார் அவர்கள் வடமொழி, தெலுங்கு, கன்னடம், தமிழ் ஆகிய பலமொழிகளில் மிகவுந் தேர்ந்தவர்கள்; இலக்கணக் கடலின் கரைகாணும் பெற்றியர்கள். இப்பெரியார் தம் ஆராய்ச்சி நூலாக இப்பொழுது வெளிவந்துள்ள கபிலர் என்னும் இந்நூல் பல்லாற்றானும் தமிழாராய்ச்சிக்குக் கைகொடுத்துதவுவதாகும். ஆராய்ச்சி உணர்ச்சி மிக்குள்ள இந்நாளுக்கேற்ற நூல் இதுவாகும்.

**பைந்தமிழ்ச்சோலை** : சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதியது. சிங்கப்பூர் டாங்க்ரோட்டு 11-ம் எண் அன்பு நிலைய வெளியீடு. விலை அணா 4.

தமிழின் பெருமை, உயர்நிலை, பிறப்பு, வளர்ச்சி, வளமை, நூற் சிறப்பு ஆகிய பல பொருள்களை நெஞ்சு பிணிக்கத்தக்க வகையில் மொழிநயம் புலப்படுமாறு வரைந்துள்ள சுவாமி சுத்தாநந்த பாரதி யாரின் தமிழ் அறிவும் பிறமொழி அறிவும் மட்டற்று வரையும் ஆற்றலும் தமிழ் நாட்டார் நன்கறிந்ததே. பல தாள்களில் எழுதப்பட்டு வந்த பல கட்டுரைகளை இவ்வாறு சீரிய முறையிற் கோவை செய்து குறைந்த விலைக்கு வெளியிட்டுதவும் அன்பு நிலயத்தார் முயற்சியைப் பாராட்டுகிறோம்.

* * *

**சாயத்தொழில் மாணவன்** : திரு. மே. சக்கரவர்த்தி நயினார் எழுதியது. அரசியலார் ஒப்புக்கொண்டது. குடிசைத் தொழில் வரிசை மலர். க. விலை அணா 4.

அழகிய இச் சிறுநூலின்கண் சாயம் உண்டு பண்ணும் முறைகளும், அவற்றை ஆடைகளுக்குத் தோய்க்குமுறையும் மிகவுந் தெளிவாக எளிய தமிழில் எழுதப்பட்டுள்ளன. பள்ளிமாணவர்களுக்கு இந்நூல் பெரிதும் பயன்படுவதாகும். நாட்டுக் கைத் தொழில் சிறக்கப் பெரும்பாடுபட்டு வரும் இக்காலத்தில் இத்தகைய பயன்தரும் பலநூல்கள் வருவது இன்றியமையததாகும்.

* * *

**திருவருணை யமக அந்தாதி**: (முதற்பாகம்) சேலம் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் கவிராஜ பண்டிதர் திம்மப்ப ஐயர் அவர்கள் இயற்றியது. விலை அணா ஒன்று. வகை தொகையற்ற சொற்சேர் புகளெல்லாம் செய்யுள்களாகவும் ஒண் புலமையாகவும் பாராட்டப் படும் இக்காலத்தில் உண்மைக்கவிப்புலமை யறிவிக்கும் வகையில் யமக அந்தாதி பாடிய ஆசிரியர் திம்மப்ப ஐயரவர்களைப் பாராட்டுகி றோம்.

* * *

**நவீனம்** : இஃது திங்கள்தோறும் வெளிவரும் ஒரு புதினப் பத்திரிகை. இதன் ஆசிரியர் திருக்குறள் அறத்துப்பாலுக்கு விருத்தி யுரை யொன்றெழுதி மங்காப் புகழீட்டிய நாகை. சொ. தண்ட பாணிப் பிள்ளையின் மகனார் திரு. குமாரசாமியாராகும். வேண்டு வோர் வி. எஸ். டி. சாமி அண்டு கோ வேப்பேரி, சென்னை என்ற முகவரிக்கு எழுதிக்கொள்ளவும்.

---

# ஓர் அறிவிப்பு

## ஆயிரம் ரூபாய் தமிழ்ப் பரிசு

இப்போது திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்களாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத ஸ்வாமிகளவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்துத் தனித்தமிழ் வித்வான் முடிவுப் பரீக்ஷையில் முதன் முறையிலேயே முதல் வகுப்பில் முதல்வராகத் தேறும் ஒருவருக்கு ஆயிரம் (1000) ரூபாய்ப் பரிசை வருஷந்தோறும் சாசுவதமாக அளித்து வருதற்கு ஒரு மூலதனம் இருக்கும் பொருட்டு ரூபாய் நாற்பதினாயிரத்துக்குத் தமது ஆயுளை அமெரிக்கா கண்டத்தில் டாரன்டோ என்னும் நகரத்திலுள்ள "தி மானுபாக்சரர்ஸ் லைப் இன்ஷ்யூரேன்ஸ் கம்பேனி"யில் இன்ஷ்யூர் செய்து கி. பி. 1943-ஆம் வருஷம் ஆகஸ்டுமீ 1உ பூர்த்தியாகிற 4,46,416 நெம்பர் பாலிஸியை 1928-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 1-ஆந்தேதியில் எடுத்துக்கொண்டிருப்பதில் நாளது வரையில் பிரீமியம் தொகை ரூபாய் இருபத்தைந்தாயிரத்தெண்பது (25080) செலுத்தப்பட்டிருக்கிறது.

மேற்கண்டவாறு 1929-ம் வருஷம் முதல் நாளது வரையில் எழு (7) வித்வான்கள் தேர்ச்சியடைந்து ரூபாய் எழாயிரம் (7000) பரிசு பெற்றிருக்கிறார்கள்.

வடஆர்காடு ஜில்லா திருப்பத்தூர் தாலூக்கா திருப்பத்தூரில் இருக்கும் வித்வான் M. வரதராஜ முதலியார் நாளது வருஷம் அவ்விதம் தேர்ச்சியுற்று ரூபாய் ஆயிரம் (1000) பரிசு பெற்றிருக்கிறார் என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவிக்கின்றேன்.

இந்த வித்வான் முடிவுப் பரீக்ஷையில் முதன் முறையிலேயே முதல் வகுப்பில் முதல்வராகத் தேறுபவர்களில் ஒருவருக்கு மேற்பட்டவர்கள் சமமான மார்க்குகள் வாங்குவார்களாயின் அவர்களுடைய பெயர்களைத் தனித்தனியே சீட்டுக்களில் எழுதித் தக்கவர்கள் முன்னிலையில் அவற்றைக் குலுக்கிப் போட்டு எடுப்பதில் தெய்வ சம்மதமாக எவருடைய பெயர் கிடைக்கிறதோ அவரே ஷை பரிசைப் பெறுவதற்கு உரிமையுள்ளவராவர்.

இதனைக் கண்ணுறும் தமிழ் மாணக்கர்கள் இந்தப் பரிசைப் பெறும்படி விசேஷமான முயற்சியுடன் தமிழைப் படிக்கும்பொருட்டு இவ்வாறு தெரிவிக்கலானேன்.

இங்ஙனம்
சுப்பராய பிள்ளை,
சூபர்வைசர்.

---

### வே - கோடுமை கோள், வன்கண்ணூறு

வினைச்சொல் ஏவல்

[வ்+இஃகு+அஃகு=வேகு=வே] உள்ளிலிருந்து புறப் படத்தக்க கோபத்தை வெளிப்படுத்தி ஓங்கி எழுதலின், வே=வன்கண்ணூறு எனல் ஆயிற்று; (வன்கண்=கொடுமை).

### வே - மனம் புழுங்கு, எரிந்து விழு, காய்

வினைச்சொல் ஏவல்

[வ்+இஃகு+அஃகு=வேகு=வே] உள்ளில் சமாதானத்தை இப்புறம் போக்கிப் பொறுமை கோபமுதலியவைகள் மேற்கொண்டோங்க உள் எரிந்து நில் என அமைதலின், வே=மனம் புழுங்கு, எரிந்துவிழு, காய் எனலாயிற்று.

### வே - அணி, தரி, மூடு

வினைச்சொல் ஏவல்

[வ்+இ+அ+இ=வேய்-வே] தன்னிலிருந்தும் பின்விடுபட்டுப்போகும் தன்மையுள்ள ஆடை, அணிகலன், போர்வை முதலியவற்றை, ஏற்றுத் தரித்துக்கொள் எனவாகலின், வே= (வேய்) அணி, தரி, மூடு என்னலும் ஆயிற்று.

### வே - (மனப்புழுக்கம், எரிச்சல், காய்வு) வேவு

வினைமுதல் தொழிற்பெயர்

[வ்+இஃகு+அஃகு=வேகு=வே] வேவு—மனப்புழுக்கம், எரிச்சல், காய்வு என்னும் பொருள்படத்தக்கதாய் அவ்வினையினின்றும் மேற்கூறியபடி ஆயிற்று.

### வே - ஒன்று, ஒற்றர், (வேவு)

பெயர்ச்சொல்

[வ்+ஏ+உ=வேவு=வே] தன்னிடமிருந்தும் ஏவப்பட்டு வெளிப்போய் உளவறிந்து வரும் தொழிலுக்கும், அத்தொழில் புரிவோர்க்கும் அமைதலின், வே=வே வென்னும் ஒற்று, ஒற்றர் எனல் ஆயிற்று,

### * ஐ - அழகு

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] மருணிலையில் அதுவோ இதுவோ எது வென நிற்கும் ஏகாரக் குறிநிலைப்பொருளைப்போல் ஆகாது, ஐகாரம் தெருணிலையில், அதுவே இதுவென்னும் மெய்ந்நிலைத் தேற்றம் தரும். ஆகையால், ஒருவன் எவ்வடிவம் நல்வடிவம் என எண்ணிநிற்கின்றானோ அவ்வடிவமே இவ்வடிவம் பார் என எதிர்ப்படுவது போல வாய்த்துக் கொள்ளும் தோற்றமே அழகாதலின், ஐ=அழகு என்றது.

### ஐ - அரசன்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] ஒருவன் கண்ணாடிக்கருகில் நின்று மகிழ் முகங்கொண்டு பார்த்தால் தன்மனங்குளிர மகிழ்ந்த முகமும், கோபத்தோடும்வெறுப்பான பார்வையாகப் பார்த்தால் தனக் கே பயங்கொள்ளத்தக்க வெறுப்பான தோற்றமுடைய முகமு மாக யார்யார் எப்படித்தன்னைப் பார்க்கின்றார்களோ அதுவே தன் வடிவமென நல்லார்க்கு நல்லன், தீயார்க்குத் தீயன், உறவுக்கு உறவு, பகைக்குப் பகையாக எண்ணும் அவ்வண்ணம் தோற்றி நிற்பதே அரசன் இயல்பாகையால், ஐ=அரசன் எனக் கொள்ளல் ஆயிற்று.

### ஐ - ஆசான் (கல்விகற்பிப்போன்)

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] எவ்வகைக் கல்வி தன்னிடம் கற்றுக் கொள்ள வேண்டுமெனத் தன்னை அடைகின்றானோ அவ்வகைக் கல்விக்குத்தான் தான் இருப்பிடமாகவுள்ளவன் என நின்று மெய்ப்பிக்கின்றவனே ஆசிரியனாதலின், ஐ=கல்விகற்பிப் போன் ஆகியஆசான் என அமைந்தது.

### ஐ - ஞானசிரியன்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] உடல், பொருள், ஆவி மூன்றும் தன் னுடையதாக ஏற்றுக்கொண்டு மெய்ஞ்ஞானப் பொருளை உப

---

* ஐயழகிடைச் சொல் கோழை,
அரசனோடிருமல்சாமி. —சூடாமணி நிகண்டு

தேசிக்கும் மாணாக்கனுக்கு அவ்வுபதேசச் சுட்டுப்பொருளே தானாக விளங்க ஆண்டருள்கின்றவனே ஞானாசாரியன் என்பதால், ஐ=ஞானகுரு எனலாயிற்று.

### ஐ - கடவுள் (சுவாமி)

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] கல்வி, கேள்வி, ஆராய்ச்சியாலும் ஞானகுருவின் உபதேசக்குறிப்பாலும் தெரிந்து வழிபட நிற்கும் பொருளெதுவோ அதுதான் இறைவன் என்னப்படுதலின், ஐ=கடவுள் எனலாயிற்று.

### ஐ - இருமல்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] இன்ன நோய் என்று சொல்ல வாயெடுக்கு முன், அது தான் இது, அது தான் இது எனத்தானே எதிர்ப்பட்டு நின்றாற்போல அடுத்தடுத்துவரத் தக்கது இருமலே ஆதலின், ஐ—இருமல் எனலாயிற்று.

### ஐ - கோழை

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] வாய்க்குள் வருவதும் தொண்டைக்குட் புகுவதுமாக, அது தான் இது, அது தான் இது என நெடுநேரம் காணத்தக்க விதத்திலும் நின்று வெளிப்படுவதாதலின், ஐ=கோழை எனலாயிற்று.

### ஐ - கபம்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] உயிர்க்கிறுதியாகிய வேளையில் அச்சாக் காட்டுக்குரிய குறிப்பே இதுவெனப் போவதும் வருவதுமான மூச்சுக்கொண்டு வருந்தச் செய்வது கபமேயாதலின், ஐ=கபம் எனலாயிற்று.

### ஐ - சிவன்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] பாசமுடைய பசுக்களாகிய உயிர்களுக்குப் பதி தான் தான் என அமைதலின், ஐ=சிவன் எனலாயிற்று.

### ஐ - இறைவன்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] எதற்கும் தானே தலைவன் எனவேற்று முன்னின்றுள்பவனாதலின், ஐ=இறைவன் என்பது.

### ஐ - சவ்வீரம்

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] உட்கொண்டவுடனே, சிறிதும் பின்னிடையாது, தன் கடுமையைக்காட்டித் தான்தான் உட்சென்றது வென உணர்த்துவதாதலின், ஐ=சவ்வீரம் எனலாயிற்று.

### ஐ - நுண்மை

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] புலப்படாது தேடிப் பார்க்கும் நிலைமையில் ஆராயுங்கால் நெடுநேரம் வரைக்கும் தோற்றாது பின் அதுவே தான் எனக் காண்பது நுண்மைப்படு பொருளாதலால், ஐ= நுண்மை எனப்பட்டது.

### ஐ - தந்தை

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] தான் ஆளாவதற்கு வேண்டுவன வெல்லாம் உதவிக் காப்பதற்குரியவனும் பின் தன்னால் காக்க வேண்டியவனுமாயுள்ளவன் இம்மையில் தான்தான் என வரும் தந்தையே ஆதலின், ஐ=தந்தை எனலாயிற்று.

### ஐ - யானையைப் பாகன் அதட்டும் ஓசை

பெயர்ச்சொல்

[அ+இ=ஐ] யானை மதங்கொண்டு அகங்கரித்து எழுங் காலத்து அதை அடக்கி ஆளுவதற்குரிய அங்குச முதலி கருவிகளைக்கொண்டுத் தக்கபடி ஒறுத்து அடங்கிநிற்க நிறுத்தியவன் தானேனனத் தெரிந்துகொள்ளுமாறு, ஐ என்றதட்டலின் அவன்தான் இவன் என அறிவித்தல் எனல் ஆயிற்று. இது ஒலிக்குறிப்பிடைச் சொல்லாயினும். பெயர்ச்

சொல்போல வேற்றுமை ஏற்கவும் ஆகலின், பெயர்ச் சொல் வரிசையிற் கொண்டதென்க.

ஐ என்பது இண்டாம் வேற்றுமை உருபிடைச் சொல்லாக ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை என்னும் பொருளை ஏற்று நிற்கும் பொழுதும், ஐ='அப் பொருளாகிய இதனை' என்னும் குறிநிலைக்குப் பொருந்தும்.

ஐ என்பது முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி உருபிடைச் சொல்லாகுங்கால் அன்சாரியை பெற்றே 'அன்னவன் நீ ஆனய்' என்னும் குறிநிலைக்குப் பொருந்தும்.

ஐ என்பது தொழிற்பெயர் விகுதி யுருபிடைச்சொல் ஆகுங்கால், 'அச் செயலே இது' என்னும் குறிநிலைக்குப் பொருந்தும்.

ஐ என்பது வினைமுதற் பொருண்மை, கருவிப் பொருண்மை, செயப்படு பொருண்மை விகுதியுருபிடைச் சொல் லாகுங்கால் 'அதுவே இது' என்னும் குறிநிலைப் பொருத்தமே கொள்ளும்.

ஐ என்பது பண்புப்பெயர் விகுதி உருபிடைச் சொல் லாகுங் காலத்தும் 'அத்தன்மையே இத்தன்மை' என்னும் குறிநிலைக்குப் பொருந்தும். ஐ—பெயர் விகுதியாமிடத்தும் மற்றும் இங்ஙனமே, குறிநிலைக்குப் பொருந்தி நிகழும் என்க.

### * கை - கைப்பாகு-வெறு, மனங்கச

வினைச்சொல் ஏவல்

[க்+ஐ=கை] அது அதுவெனப் புதுமையாக விரும்பி நின்ற ஒன்று தன் கைவசபட்ட ஒன்றேதான், புதுமையாக நாட ஒன்றுமில்லை யெனத் தீருங்கால் உடன் நிகழ்வது மனக் கைப்பேயாதலின், கைதொடப்படக் கூடிய நிலைமையில் அதுதான் இதுவென அமைந்த கை என்பது மனம்கச, கைப் பாகு, வெறு எனலாயிற்று.

### கை - அழகுசெய், அலங்கரி

வினைச்சொல் ஏவல்

[க்+ஐ=கை] தன் கைக்கெட்டிய ஒரு பொருளே நெடு நாளாக ஆவலித்து நின்ற ஒரு பொருள் இதுதான் எனவும்

* கையிடம் படையுறுப்பொப்
பனைசெங்கை சிறுமை சீலம். —சூ. நிகண்டு

அப்பொருளைக் கைக்கொண்டு பேணி நின்றால் விருப்பம் கைகூடும் எனக் கண்டவுடன் அம் முயற்சியில் முற்படச் செய்யத்தக்கது, அலங்கரிப்பே யாதலின், கை=அலங்கரி, அழகுசெய் என்றாயிற்று.

## கை - அலை (அலைப்புறுத்து)

### வினைச்சொல் ஏவல்

[க்+ஐ=கை] ஒரு பொருளைப்பற்றி இன்ன இன்ன இயல்பினையுடைய அது தான் இது வெனக் கேள்வி பெறுங் கால் அதைப் புலப்படப் பார்க்கவேண்டுமென எழும் முயற்சி யிலும், திரிபாகக் கைக்கொண்டு வெறுப்பதினும் அலைத் தலையே கொள்ளவேண்டு மாகலின், கை=அலைத்தலைக்கொள் என்றாயிற்று.

## கை - வெகுள் (கோபி)

### வினைச்சொல் ஏவல்

[க்+ஐ=கை] தொடவும் படவுங் கூடிய ஒரு பொருளை அவாக்கொண்டு மேலும் மேலும் விரும்புங்கால் கிட்டத்தக்க அவ்வளவு இவ்வளவுதான் எனத் தீரும்பொழுது நிகழ்வது கோபமென்னும் வெகுளியே ஆதலின், கை=வெகுள் (கோபி) என ஆயிற்று.

## கை - கைப்புறு, கச

### வினைச்சொல் ஏவல்

[க்+ஐ=கை] இனிப்பும் அளவுக்குமேற்பட்டதாய் ஓர் பொருளில் விராவி அதுவே இதுவென நிற்குங்காலத்தும், இனிய பாகை அளவிலதிகம் காய்ச்சி முறுகிய காலத்தும், கைப்பே முந்துறு மாகலின் கை=கைப்புக்கொள், கச வென் றாயிற்று.

## கை - இடம்

### பெயர்ச்சொல்

[க்+ஐ=கை] தன்னை ஒருவர், தொடப்படக்கூடிய பொருளொன்றைப் பற்றித் தன்னிடம் கேட்குங்கால், அது தான் இது, என எடுத்துக்காட்டல், தன் கைவசமாய்த் தன் னிடமிருந்தாலே பொருந்தும் ஆதலின், தொடப்படக்கூடிய

அது தான் இது என்னும் குறிநிலை கொண்ட கை என்பதற்கு இடம் என்னும் பொருள் வழங்கலாயிற்று - இஃது இடப்பெயர். கைப்பணம், கைப்பண்டம், கைப்பொருள், கைம்முதல்; கைத்து (தன்னிடம் உள்ளபொருள்) கையிருப்பு, கைவசம், என்பவற்றுள், கை=இடம், என்றே பொருள்பட்டு நிற்றல் காண்க; மேலும், கைதட்டியது, கைகடந்தது, கைதப்பியது, கைநெகிழ்ந்தது என்பன தன்னிடமிருந்து நீங்கியது தன்னிடத்தில் இல்லை என்றே பொருள்படும்.

## கை - உடனே (அதேவேளையில்)

### பெயர்ச்சொல்

[க்+ஐ=கை] புலப்படக்கூடிய நிலையில் எண்ணம் நிறைவேற்றம்பெறும், அக்காலமே இக்காலம், என ஆகலின் உடனே என்றமைதலால், கை=உடனே, (அதேவேளையில்; என ஆயிற்று. கைகடன் - உடன் தீர்ப்பதாய்ப்பெறுங்கடன்) கைகண்டது—உடன் பலிக்கத்தக்கது, தேறினது; கைச்செட்டு உடனைக் குடன்கொண்டு விற்றடையும் செட்டு; கைம்மாற்று உடன் மாற்று, கைம்மேலே - உடனே, கையுடனே, கையோடே என்று வழங்கல் காண்க.

## கை - ஒப்பனை

### பெயர்ச்சொல்

[க்+ஐ=கை] புலப்படும் விதத்தில், உன்னுடைய இன்பமாகிய அதுவே இதோ இங்கு நிகழும் என்னுடைய இன்பம், உன்னுடைய துன்பமாகிய அதுவே, இதோ என்னுடைய துன்பம் கண்டுகொள் எனக் காட்டி நிற்பதே ஒப்பனை என்னும் தொழிற் பண்பாகலின், கை=ஒப்பனை என வழங்கலாயிற்று. கைக்கீறு, கைக்கீறல், கை நாட்டு, கை போடு, கை யிடு, கையளி, கைஎடு, கைஒப்பம், இவ்வகை வழக்கச் சொற்றொடர்களுள் கை=ஒப்பனை ஒப்புஎன்னும் பொருளே கொண்டு நிற்றல் காண்க. (கைகுளிர்=ஒப்பு.) வினை.

## கை - ஒழுக்கம் (வணக்கம், பழக்கம்)

### பெயர்ச்சொல்

[க்+ஐ=கை] புலப்படக்கூடிய நிலைமையில் நல்லவனே இவன் என மதித்தற்கு முற்படக் காணவேண்டியது, நல் ஒழுக்கம், வணக்கம் என்பனவேயாகலின், கை=ஒழுக்கம்

(வணக்கம்) எனல் ஆயிற்று. கைகட்டு (வணக்கம் காட்டி நில்) கை குவி, கை கூப்பு, கை கூம்பு, கை தொழு - (வணங்கு) கை யறி=(நல்வழிப் பழகு) கை எடு=(வணங்கு), கை ஒழுக்கம் (நற்செய்கை) கை வாரம்=(வாழ்த்து). கை வந்த (பழக்கம் கொண்ட) கை வாக்கு, கை வாறு, கை வாசி, கை வேலை என்பவற்றுள் காண்க.

### * கை - கை (கரம்)

பெயர்ச்சொல்

[க்+ஐ=கை] தொடப்படக்கூடிய விதத்தில், எதையும் எடுத்தாளத்தக்கதாய் அதுவே இது அதுவே இது வெனக் காட்டுவதுபோல, தன் இருப்பை விட்டெழுந்து நடைகொள்ள அங்குபோய் இங்கு மீள்வதாய் முன்போய்ப் பின்னாகிய தன்னிலைக்கு மீண்டு தொழிற்படும் உறுப்புக் கையே யாதலின், கை=கரம் என்னும் கை எனல் ஆயிற்று. எண்ணிய தொழில் எதுவோ அதனை இதுதானெனெ நடத்துறுப்பு.

### கை - கையளவு பிடியளவு

பெயரெச்சம்

[க்+ஐ=கை] முற் கூறியவண்ணமே அமைதி பெற்ற கை என்னும் உறுப்புத் தனக்குள் அடக்கிப் பிடிக்கும் பிடியளவுக்குக் கை எனவும் வழங்கலாயிற்று. 'கற்றது கைம் மண் அளவு கல்லாதுல களவு' என்பதில், கைம் மண்=கைப்பிடிக்குள் அடங்கிய மண் எனவும், இச் சோற்றில் ஒரு கை காக்கைக்குப் போடு, என்பதில், கை=கை அளவு எனவும் பொருள் படல் காண்க.

### கை - முழக்கம், நாதம், (தோனி)

பெயரெச்சம்

[க்+ஐ=கை] எண்ணும் தொழிலை அது தான் இது வென முடித்துக் காட்டும் கையால் தோற்கருவியாகிய முழவு என்னும் மத்தளம், தவில், முரசு முதலியவைகளையும், துளைக் கருவியாகிய நாகசுரம், புல்லாங்குழல் முதலியவைகளையும், நரம்புக் கருவியாகிய யாழ், வீணை முதலியவைகளையும் கஞ்சக்

---

* செயல், முறை, நடை, ஆசாரம் செய்தி,
கை யறையே கையே. —சூடாமணி நிகண்டு



திரு. பா. மா. முருகமாணிக்கம்
புதிதாயமைத்த காற்பொறி
(Windmill)

௪௪௪-ம் பக்கம் பார்க்க.




சிலம்பு-கச] தாது—சித்திரை [பரல்-கூ

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

### திருப்பைஞ்ஞீலி

மருவிலார் திரிபுர மெரிய மால்வரை
பருவிலாக் குனித்த பைஞ்ஞீலி மேவலான்
உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத்
திருவிலா ரவர்களைத் தெருட்ட லாகுமே.

பதவுரை :—

மருவிலார் திரிபுரம் எரிய—தன்னைச் சாராத அரக்கர்களுடைய திரிபுர நகரானது தீயினால் எரிந்து அழியும்படி

மால்வரை—பெரிய மகாமேரு மலையை

பருவிலா குனித்த—பெரிய வில்லாக வளைத்த

பைஞ்ஞீலி மேவலான்—திருப்பைஞ்ஞீலி என்ற திருப்பதியில் (திருக்கோயில் கொண்டு) வீற்றிருக்கிறவனும்

உருவிலான் பெருமையை—யாதொருவடிவமு மில்லாதவனுமாகிய சிவபெருமானது அருட் பெருந்தன்மையை

உளம்கொளாத—மனதில் நினைந்து அறியமாட்டாத

அத்திருவிலா அவர்களை—அந்த அருளில்லாத மக்களை

தெருட்டலாகுமே—(அவ்வருட் பெருந்தன்மையை அறிந்த ஒருவர்) அறிவுறுத்தித் தெளிவாய் அறியும்படி செய்யமுடியாது.

விளக்கவுரை :—

பருவிலாக் குனித்த—பரு வில்லாக என்பது பருவிலா எனத் தொக்கு நின்றது தொகுத்தல் விகாரம். இதனுல் சிவபெருமானுடைய பேராற்றல் குறிப்பிடப்பட்டது.

உருவிலான் பெருமை—உருவில்லான் என்பது உருவிலான் எனக் குறைந்துநின்றது. இனம்பற்றி அருவமும் அருவுருவமும் இல்லாதவன் என்பதும் கொள்ளப்படும். சிவபெருமான் உயிர்கள் பொருட்டு ஐந்தொழில் செய்தற்கண் அருவம் அருவுருவம் உருவம் ஆகிய வடிவங்களைக் கொள்வானுயினும் தனது சிறப்பு நிலையில் உருவமுதலியன இல்லாதவன் என்பார், 'உருவிலான்' என்ருர். "சிவனருவுருவு மில்லான்" எனச் சிவஞான சித்தியார் கூறுதல் காண்க (முதலாவது சூத்திரம் 71-வது பாட்டு). பெருமை என்பது இங்கே அருட்குணங்களால் நிறைந்தபெருந்தன்மை; எல்லா உயிர்களும், தம்மை அநாதியே சேர்ந்துள்ள மலங்களினின்று நீங்கி மெய்யறிவு விளங்கப்பெற்று இன்பநலம் அடையக்கருதி எப்பொழுதும் அருட்செயல்கள் செய்துவரும் பெருந்தன்மை. "பெருமைக்கும் நுண்மைக்கும் பேற்றினருமைக்கு மொப்பின்மையான்" என்ற திருவருட்பயன் முதலாவது அதிகாரச் செய்யுட் கருத்தைநோக்குக.

உளம்கொளாத அத்திரு இல்லார் அவர்கள்—கடவுளிலக்கணம் உயிரிலக்கணம் கடவுளுக்கும் உயிருக்கும் உளதாகிய அத்துவித இலக்கணமாகிய இவ்வுண்மைகளை நூல்கள் ஓதி அறிந்தும், ஓதி அறிந்தவர்பாற் கேட்டும் தெளிந்தவர்கள் மாத்திரம் கடவுளின் அருட்பெருந்தன்மையைத் தமது உள்ளத்தில் விளங்கும்படி அறிவாரன்றி ஏனையோர் அறியார்ஆகலானும், அவ்வாறு, தெளிவாய் அறிதற்குத் திருவருளின் துணைவேண்டுமாகலானும் 'உளங்கொளாத அத்திருவிலார்' என்ருர். அத்திருவிலார் என்பதில் 'அ'என்பது அறிசுட்டுப் பெயராய் உலகில் இக்காலத்தைப் போல் முற்காலத்திலும் காணப்பெறும் கடவுட் கொள்கையில்லாதவர்களை (நாஸ்திகரை)க் குறிக்கிறது. அவர்கள் பகுதிப் பொருள் விகுதி.

தெருட்டலாகுமே—ஏகாரம் இங்கே தெருட்டலாகாது என்ற எதிர்மறைப்பொருள் தந்துநின்றது. தெருட்டல்—பிறவினை; தெருள்—தன்வினை; தெருள்வித்தல்;—தெளிவாய் அறியும்படி செய்வித்தல்; இக்கருத்தைத் திருமூலர் திருமந்திரம் 2327-வது பாட்டில் "அறிவிக்கவேண்டா அறிவிற்றயர்வோர்க்கு" என்று கூறினர். மாணிக்கவாசக அடிகள் "கொடிறும் பேதையும் கொண்டது விடா" என்று அத்திருவிலானை அஃறிணைப் பொருளோடு ஒப்பக்கூறினர்—போற்றித்திரு அகவல், 63-வது வரி: திருவாசகம்.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

# தமிழ்த்தாயின் தண்ணொளி

[செஞ்சி திரு. S. K. இராமசாமி பிள்ளை அவர்கள்]

கட்டுரைப் பொருள் தமிழ், தாய், தண்மை, ஒளி, என நான்கு சொல் மூன்று சந்தியால் ஆன தொடர் ஆம். இங்கு தமிழ் என்பது இனிமை எனும் பொருளில் வரும். அருள், சாந்தம், பெருமை உடைய இடத்துத் தாய்மை விளங்கும். தண்மை குளிர்ச்சி என்பதாகும். ஒளி - பிரகாசம்; இங்கே கீர்த்தி எனும் பொருளில் அடங்கும் ; அதாவது, தாய்மை உடைய தமிழ்தனது கீர்த்தி என்பதாம்.

உலகில் பிறந்த மக்கட் கூட்டத்தினருள் ஜப்பானியர், அமெரிக்கர், மேலையர் இவர்கள் எல்லாம் தம் தாய்மொழிக்கு மதிப்புத் தந்து, பின் பிறமொழியைப் பயில்வர். அதனால் அவர்கள் எல்லை கடந்த பெருநிலை உற்று வருகின்றமை புலப் படக் காண்கின்றோம். அப்படியே தமிழினிடம் ஆர்வம் உள்ள தமிழனும் முன்னேற்றம் அடைவான் என்பதில் ஐய மில்லை.

தமிழ் நம் நாட்டில் எக்காலத்துத் தோன்றியது எனக் காண்கின்றார்கள்! இதற்கு இன்னும் காலவரையறை காண முடியவில்லை. ஆனால் தமிழரோ பேச்சு வழக்கில் தேய்ந்து பிற பாஷையாளர்களாகவும் சிலர் மாறிவிட்டனர். அவர் கள் பாஷை தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் ஆம். இதனைத்தான் திரு. சுந்தரம் பிள்ளை அவர்கள்

"கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்"

எனப்பாராட்டிப் புகழ்ந்தார்.

தமிழில் மிக்கசுவை, கருத்தமைவு, நோக்கப்பெருக்கம் காணலாம். சிலபாஷைகளில் இலக்கண அமைதி இருக்காது. தமிழினிடம் இத்தகைய குறை காணமுடியாது. பாஷை தத்துவம் உணர்ந்தவர்கள் பிறபாஷையின் இன்சுவையைக் காட்டினும் தமிழினிடம் சுவை மிகுதி இருக்கக்கண்டுளோம் எனக்கூறியுள்ளார்கள். இதை நம் பாரதியார் பிரபந்தத்தில்,

"யாம் அறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்"

என்றார். நுட்பம், திறமை, கவர்ச்சி இவைகள் ஒவ் வொன்றினும் பொதிதல் வேண்டும். அவை முற்றும் நம்

தமிழினிடம் இருக்கக் காணலாம். அச்சம், வன்பு முதலிய செருக்குச் சொற்கள் தமிழினிடம் அதிகம் கிடைக்கக் காணேம். அன்பு, தலைமை முதலிய அமைந்த தொடர்களை மிகைபடக்காணலாம்.

இத்தமிழ், பிறபாஷையினிடமிருந்து வந்ததா? அன்றி பிற பாஷையின் உதவியை நாடியயேயுளதா? தனித்தியங் குஞ் சக்தி உண்டா? என்றின்னேரன்ன வினுக்களை வெளி யிட்டு இடர்ப்படலும் உண்டு. தமிழினிடம் மேலே கண்ட குறைபாடு ஒன்று மில்லை. தமிழ் தமிழரதேயாம். ஆங் கிலத்தில் 1000 ஆண்டிற்கு முன்னிருந்த கருத்துச் சொற் கள் எல்லாம் இப்போது மாறி இருக்கக் காணலாம். ஆங்கிலர் அடுத்தடுத்து மாற்றியதைப்போல் இன்றி, ஒன் பதாயிரம் ஆண்டிற்கு முன்னிருந்த தமிழ்க்கருத்து நடை முதலியன இப்போதும் அப்படியே இருக்கக் காண்கின் ரேம். ஆனல் ஆயிரம் ஆண்டிற்குமுன் வட்டெழுத்தாக இருந்ததை மாற்றி இப்போதிருக்கும் எழுத்தாக ஆக்கி னர். இந்த ஒரு மாறுதல்தான் தமிழினுக்குண்டு.

தமிழினுக்குத் தண்ணெளி வர ஒரு காரணம் உண்டு. பிறபாஷைகளில், முன்னர் கதைகள் (இதிகாசம்) தோன்றின; பின்னர் தான் நீதிகள் ஏற்பட்டன. தமிழர் நாகரிகத்தில் மூத்தவர் என்பதற்கு உதாரணமாக "ஆயுந்தொறும் இன்பம் தரும் கல்வி" எனத் தணிகைப் புராணத்தும், "தேருந் தோறும் இனிதாந்தமிழ்" எனக் கோவை ஆராய்ச்சியிலும் விளங்க வைத்துள்ளனர். தமிழில் நீதி முன்னே தோன்றி பின் இதிகாசம் ஏற்பட்டது. இது நம் தமிழினுக்கு ஒரு பெருங் கீர்த்தி விளைப்பதாகும். நம் தமிழ் அறிவுறுத்துவதில் எவ் வளவு ஆழ்ந்த கருத்தை உடன் கொண்டு நிலவவல்லது என் பதைக் காண்பாம். இது,

"கல்வி மம்மர் அறுக்கும் மருந்து"

"உறுங்கவல் ஒன்று உற்றுழியும் கைகொடுக்கும்"

"உற்றுழி உதவும் கல்வி"

"நெஞ்சின் மெலிவிற் கோர் துணையுமாகும்"

என்பனகாணின் புலனும். அன்றியும் கல்வியை மிகை படுத்த எண்ணிய நமது மூலர், கடவுளை யடைதலுக்கும் கல்வி இன்றி அமையாதது என்பதை உட்கொண்டு "எல்லா உயி ருக்கும் இறைவனே ஆயினும் கல்லார் நெஞ்சத்துக்காண

ஒண்ணாதே'' என்றார். "கற்றிலனாயினும் கேட்க அஃ தொருவற் கொற் கத்தினாற்றாந் துணை'' என வள்ளுவர் கேட் டலின் சிறப்பை ஓதுவாராயினர். இங்ஙனம் இதன் புகழ் கேட்கப்புலனாம். உண்மையில் தமிழினிடம் ஒரு பெருஞ்சக்தி உண்டு. ஒருவன் தமிழ் கற்கின் அவன் பெரியோருக்குக் கீழ்ப்படிவான்; தீயசெயலுக்கு அஞ்சுவான்; கடவுளைப் போற் றுவான். பிறபாஷையில் இவைமுடியா. 'அவலைநினைத்து உரலை இடிப்பதா' என்பதுபோலப் பிற ஏதுக்களை நம்பித் தமிழை விடுகின்றனர். இஃது பெற்ற தாயினை மறந்து செவிலித்தா யினைப் பெற்றதாயெனக் கொள்ளுமாறொக்கும். இது சரி யன்று. தமிழின் தண் ணளியை உய்த்துணரின் பின் பெருமை பெருகும்.

---

# இந்து சீன நாகரிகம்

நான்கு ஆண்டுகட்கு முன், ஜப்பானியர் செய்த வெடிகுண் டொன்று வெடித்ததினால் பண்டைக்காலத்ததாகிய "சைனீஸ் வால்'' என்ற சீனச்சுவரின் ஒரு பகுதி வெடித்துச் சிதறியது. அதிலிருந்து ஒரு சீன ஏடு அகப்பட்டது. அதை ஸர் அகஸ்டஸ் பிட்ஸ் ஜீயார்ஜ் என்ற பெரியார் விலைக்கு வாங்கி இலண்டனுக்குக் கொண்டுவந்து சீனப் பண்டை வரலாற்றாராய்ச்சிக்கழகத்தாரிடங்கொடுத்து ஆராய்ச்சி செய்தார். அதன் பலனாகப் பின்வரும் விந்தையான உண்மைகள் வெளியாகின்றன:—

1. வேதமொழியில் 10,000 ஆண்டுகட்குமுன் எழுதப்பட்ட மனுநீதி நூலைப்பற்றிய குறிப்புகள். அவற்றை அடிப்படையாகக் கொண்டு சீனச் சட்டங்கள் இயற்றப்பட்டன.

2 புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி என்ற வளர்ச்சி நெறி முறை அதிற் குறிக்கப்பட்டுளது.

3. காயகற்பங் கண்டுபிடிக்கும் வழி சீன மக்கட்குத் தெரிந் திருந்ததாகப் புலப்படுகிறது.

4. இந்தியா, அமெரிக்கா, சீனா ஆகிய மூன்று நாட்டு மக்க ளிடையே பல ஒற்றுமைக ளிருந்தமைக்குச் சான்றுகள் கிடைக் கின்றன.

(கா. சிவ. க.)—"இந்து''

---



# புதுக்கவிகள்-Original Poetry

## "செந்தமிழ்ச் செல்வி"

[வித்துவான் இரா. சிவ. சாம்பசிவ சர்மா எழுதியது.]

படிபுகழ் செந்தமிழ்ச் செல்வி பண்பெலாம்
முடிமுதல் அடிவரை முழுதுஞ் சொற்றிடக்
கடிகண பதிபதம் கருத்தி ருத்தியே
அடிமையிற் சிறியனே னன்புசெய் வேனே.

---

திருவளர் தெய்வத் தமிழ்மொழித் தாய்க்குப்
பெருமை தருசீர்த் தலேயணி செப்பிற்
சீரார் சித்தாந் தசிகா மணியொடு
பேரார் சூளா மணி,சூ டாமணி;
செந்தமிழ்ச் செல்வியின் செவ்விய கேசம் 5
முந்தையோர் போற்றும் முதுமைசால் நீல
கேசியு மதன்தெருட் டுரையுமாங் கிளப்பின்;
வாசமார் கேசப் பானுறுப் பைந்தும்
பஞ்சம ரபோடு, பஞ்சபா ரதீயம்
என்றே புகல்வர் எழில்நூற் புலவர்; 10
தண்டமி ழன்னையின் தலேத்தெய் வமாலே
விண்டிடக் கேட்பின் வியந்தே வாரமே:
நாட்டுறு புகழ்கொள் நலமிகு மன்னே பூச்
சூட்டுதான் யாதெனில் சுட்டுவன் கேண்மோ
ஆத்தி சூடியு மணிபெருங் குறிஞ்சியும் 15
ஏத்திடு கோன்றை வேந்தனு மென்பரால்;
அற்றெனி லன்னே த னணிதிரு முகத்தைத்
தெற்றெனக் கூறெனிற் றெரிப்பன் கேட்பீர்
பீடார் களிற்றுப் பிறங்குநல் முகம்போல்
ஈடிலா வேழ முகமென இயம்புவன்; 20
சால்புடைக் கண்கள் சச்ச புடமோடு
நூலாம் முத்தோள் ளாயிரம் பகர்ந்தேன்;

மணிநிகர் சொற்கள் மாண்புற மொழியும்
அணிபெறு வாய்திரு வாய்மொழி அறிவீர்;
பற்கடாம் நித்தில வரிசைகொள் முறுவல், 25
கற்பார் விழையுங் கவின்திருப் பல்லாண்
டாமென மொழிவர் அருந்தமிழ்ப் புலவோர்;
தேமொழி வாசகம் திருவா சகமே;
இசையோ என்னில் இசைப்பன் கேண்மோ
நசையுறு சிற்றிசை, பேரிசை நவின்றேன்; 30
ஈரெண் கரண கலைக ளியம்பிடில்
பாரெலாம் புகழிசைத் தமிழோடு பத்தும்
ஆறுங் கூட்டிய படலமாம் அறிவீர்;
வீறுடைத் தமிழ்த்தாய் வியந்திடுந் தெய்வ
இசையின் நுட்பமோ இசைநுணுக் கமேயாம்; 35
இசைப்பா வென்னெனில் எழில்திரு விசைப்பா;
குண்டல மாகுமால் குண்டல கேசியே
கண்டிகை வியாழ மாலையாங் கணிப்பீர்;
சங்கத் தலைவராஞ் சாற்றுநக் கீரர்சொல்
அங்கதப் பாட்டே அணிமிகு தோள்களாம்; 40
வஞ்ச மில்லா நெஞ்சென மிளிர்வது
நெஞ்சு விடுதூ தெனுந்தமிழ் நூலே;
அன்பி னைந்திணை யெனுமடி முதலும்
நன்பொருட் களவியல் நன்பெரு முயிரே;
தோலா நாவின் மேலோர் மொழிகொள் 45
நூலாம் மங்கல நாணென வறிக;
பெருகுறு மன்பு பிறங்கிடக் குருகும்
பெருங்குரு கும்மாம் பீடார் தனங்கள்,
நார்மிகு தமிழ்த்தாய் நலமார் சிறப்பொடு
வார்கட் டியாதென வகுத்திடில் யாப்புக் 50
காரிகை தன்னொடு கவின்யாப் பருங்கலம்
பேரிசை கொள்மா மூலர் யாப்பும்
மகேச்சுரர் யாப்பும் மாண்புறப் பொருந்தும்;
பாகே யனைய பைந்தமிழ் மொழியாட்
கொத்த தனவடம் நித்திலக் கோவையே; 55
புறமுது கதுவே புறத்திரட் டாகும்;

வது சூத்திரத்தில் திரோதான சத்தியினது இலக்கணங் கூறு தலாலே கூறினர். வினையைப்போல மாயையும் திரோதான சத்திக்குக் கருவியாயிருத்தலால் திரோதான சத்தியினது இலக்கணம் கூறுதலால் மாயையினது இலக்கணமும் கூறப் பட்டவா றாயிற்று. மாயையின் பொது இயல்பு, ஆன்மா, விட யங்களை அறியுமாறு கண்ணுக்கு விளக்கொளிபோல் அதற்குக் காட்டாகி நின்று ஆன்ம ஞானத்தை விளக்குதல் என்பது.

10. மாயேயம் மாயையின் காரியமாதலின் மாயைக்குக் கூறப்பட்டது மாயேயத்துக்கும் பொருந்தும்.

11. இங்ஙனம் ஆசிரியர் மாணவர்க்கு அறிவுறுத்தும் பொருட்டுப் பொது அதிகாரத்தில் மேலே அஞ்சு சூத்திரங்களா லும் முப்பொருள்களின் பொதுஇயல்புகள் கூறியபின், அடுத்த ஏழாஞ் சூத்திரமுதற் கூறப்புகும் உண்மை அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்யுமுறையில், அம்முப்பொருள்களில் சத்து யாது, அசத்து யாது, என்னும் ஐயம் நிகழாமைப்பொருட்டுச் சத்தினியல்பு இது, அசத்தினியல்பு இது என்று தெரித் துணர்த்துவான் இந்த ஆறாஞ் சூத்திரம் கூறுகின்றார். அசத்தி னியல்பை, ஆசிரியர் தாமிதுவரையும் கூறிப்போந்த காரிய உலகத்தின் மேல்வைத்து அநுபவங்காட்டி விளக்கியும் சத்தி னியல்பை இனித்தாம் கூறப்போகும் பதிப்பொருளின் சிறப்பி லக்கணத்தின் மேல்வைத்து விளக்கியும் கூறுகின்றார்.

12. உலகமானது சூக்குமமாகிய சத்திவடிவாய் நிற்கும் காரணவத்தையில் சத்துப் பொருளேயாமாயினும் காரியா வத்தையில் அதன் தூலவடிவம் இத்துணைப்பொழுது நிற்கு மென நம்மனோரால் அறியவாராது நீர்மேலெழுத்தும், கன வும், பேய்த்தேரும் போலத் தோன்றிக் காட்சிப்புலனாய் விரை யக் கெட்டு அழிந்துபோந் தன்மையுடையது ஆதலின் அசத் துப் பொருளெனப்பட்டது. காரியவுலகம் தனுகரண புவன போகப் பொருள்களி னுருவங்களாயுள்ளது. கரணங்களோடு கூடிய மக்களுடைய உடல்களழிதலையும், அவை மீண்டும் தாய் வயிற்றில் சுக்கில சுரோணிதமாய்த் தோன்றிப் பரிணமித்து வளர்ந்து உயிரோடு கூடிப்பிறத்தலையும், புவனங்களொருசேர அழிதலையும், மீண்டு தோன்றுதலையும் சில் வாழ்நாள் சிற்றறி வோடு கூடிய மக்களாகிய நாம் பார்க்க முடியாவிட்டாலும், போகப் பொருள்கள் அடிக்கடி நிலைமாறி அழிதலையும் மீண்டு மாதலையும் நாம் கண்கூடாகப் பார்த்துக்கொண் டிருக்கின் றோம். நமது உலக வாழ்விற் காணப்பட்டன அனைத்தும் தோன்றியபொழுதே கெட்டு மறைந்துபோம் இந்திரசாலம்

போலவும், தோன்றியபின் கடைபோதலின்றி இடைக்காலத்திலே கெட்டு மறைந்துபோம் கனுக்காட்சி போலவும், தோன்றியபின் ஒரு காரணங்காட்டிக் கெட்டு மறைந்துபோம் பேய்த்தேர் (mirage) போலவும், நெடுங்காலம் நிலைபெறுவன போலத் தோன்றி விரைந்து கெட்டு மறைந்துபோ மியல்புடையன. இங்ஙனம் தோன்றி அழிந்து மறைந்துபோம் அசத்தா மியல்பையுடைய காரிய உலகத்தை உயிர், பசு பாச ஞானங்களாகிய ஏகதேசச் சுட்டறிவா லறிகின்றது. இந்தச் சுட்டறிவால் முதல்வன் அறியப்படமாட்டான் என்று ஆசிரியர் முதற்கண் முதல்வனுடைய சிறப்பிலக்கணங் கூறுகின்றார். இந்தச் சுட்டறிவால் முதல்வன் அறியப்படுவனென்னில் அவன் காரிய உலகம்போல மேலே கூறப்பட்டவாறு ஏகதேசப் பொருளாகி அழிவெய்துவன். அதுபற்றி முதல்வன் எவ்வாற்றானு மறியப்படா னென்னில் அவன் முயற்கோடுபோல சூனியப் பொருளாகி அவனானுயிர்களுக்கு ஆவதோர் பயன் யாதுமில்லை என்பதாய் முடியும்; அப்படியானால் அவன் எவ்வாறு அறியப்படுவா னென்னில், பதி ஞானத்தால் மாத்திரம் அறியப்படுவன்: பதிஞான மென்பது உயிர் தன்னைக் கருவிகளினின்றும் பிரித்து அருளையே காட்டாகக் கொண்டு அவ்வருளோ டத்துவிதமா யொற்றித்து நின்று தற்போதமின்றி அறியும் வியாபக அறிவு. இந்த வியாபக அறிவால் உயிரானது எங்கணு நிறைந்து வியாபகமாய் விளங்கு முதல்வனை அறியுமென்று ஆசிரியர் முதல்வனுடைய மற்றொரு சிறப்பிலக்கணத்தைக் கூறுகின்றார். இதனால் முதல்வன் பசுபாச ஞானங்களா லறியப்படாமையால் சிவமும், பதிஞானத்தா லறியப்படுதலிற் சத்தும் என்ற இரண்டு இலக்கணங்களாகிய 'சிவசத்து' உடையவன் என்பது பெறப்படும். 'சிவசத்து' என்பது வடமொழி இலக்கண முடிபு இருபெயரொட்டுப் பண்புத்தொகையாதலின் அது தமிழ்மொழியில் சிவச்சத்து என்திருத்தல் வேண்டும். சிவ என்ற சொல்லில் சிகரம் எல்லாப் பொருள்களையுந் தன்னுளடக்கி அவற்றைக் கடந்து நிற்கும் சிவத்தையும், வகரம் எல்லாப் பொருள்களோடுங் கலந்து வியாபித்து நிற்கும் அருளையுங்குறித்தலால் எங்கணும் அருளால் நிறைந்து எவற்றையுங் கடந்து நிற்கும். 'சிவ' என்ற இலக்கணம் பசு பாச ஞானங்களாகிய ஏகதேசச் சுட்டறிவால் அறியப்படமாட்டாது என்பதும், என்றும் ஒரு நிலையுடையதாய் எங்கணும் சூக்குமமாய் விளங்கும் சத்து என்ற இலக்கணம் பதி ஞானமாகிய வியாபக அறிவால்மட்டு மறியப்படும் என்பதும் பொருத்தமுடையதாயிருத்தலை அறிக. மேலே கூறியவாற்றால் 'சிவ' என்பது எவற்றையுந் தன்னுளடக்கி எங்கணும்

வியாபகமா யெவற்றையு மியக்கும் சித்து (அறிவு) என்று பொருள்படுதலால் சிவசத்து என்பது சித்துச்சத்து என்னும் பொருட்டு ஆகும். முதல்வனுடைய சிறப்பிலக்கணத்தைக் குறிக்கும் 'சித்துச்சத்து' என்பதில் அவனுடைய எண்குணங் களும் அடங்கும். என்றும் ஒருதன்மைத்தா யிருக்கும்பொரு ளுக்கே தன்வயத்தனுதல் முடியுமாதலின், சத்து என்பது தன்வயத்தனுதலாகிய குணத்தைக் குறிக்கும். தூய உடம்பி னனுதல் முற்றுமுணர்தல், இயற்கை உணர்வு, இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை ஆகிய இந்த ஆறு குணங்களும் சித்தில் (அறிவில்) அடங்கும். சித்தே ஆநந்தத்தை (இன்பத்தை)ப் பயத்தலால் ஆநந்தமும் சித்திலடங்கும். ஆகவே சத்து சித்து ஆநந்தம் (சச்சிதானந் தம்-உண்மை அறிவின்பம்) என்பது முதல்வனுடைய சிறப்பி லக்கணம் என அறிக.

---

# சிவஞான போதம்

## ஆறுஞ்சூத்திரம்

உணருரு அசத்தெனின் உணராதின்மையின்
இருதிறன் அல்லது சிவசத்தா மென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே.

Translation By

J. M. NALLASAWMI PILLAI B.A., B.L.

That which is perceived by the senses is *Asat* (Changeable). That which is not so perceived does not exist. God is neither the one nor the other and hence called *Siva Sat* or *Chit Sat* by the wise; *Chit* or *Siva* when not understood by the human intelligence and *Sat* when perceived with divine wisdom.

# அறிவியற் பகுதி-Science

## சிற்ப நூல்

[துடிசைகிழார் அ. சிதம்பரனுர் அவர்கள்]

(சிலம்பு கசு, பரல் ம, சசுஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

தற்காலம் நகரத்துச் செட்டியார்கள் செய்யும் திருப்பணிகள் பூராவும் அவர்களுடைய ஏஜண்டுகளாகிய ஆரியப் பிராமணர்களால் நடைபெற்று வருகிறது. ஆகையால், வேலைகள் எப்படி முடியும் என்று எழுதவே வேண்டியதில்லை. இது மிகவும் இரங்கத் தக்கதே.

கோடி கோடியாய் ரூபாய்களைச் செலவழித்துக் கடைசியில் காரியம் பயனில்லாமல் போய்விடுவதை உன்னியே, இதனை எழுத வேண்டுவதாயிற்று.

இனிமேலாகிலும், திருப்பணியாளர்கள் இதனைக் கவனித்து, தாங்கள் நேராகவோ, தங்கள் ஏஜண்டுகளைக் கொண்டோ தூபிகளைச் சீர்திருத்துவார்கள் என்று நம்புகிறேன்.

### தட்சணுமூர்த்தம்

தட்சணுமூர்த்தம் என்பது சிவபெருமானுடைய 64 மூர்த்தங்களில் ஒன்று.

அது பஞ்சகிருத்திய மூர்த்தங்களில் சேர்ந்ததன்று.

சனகர் - சனந்தனர் - சனுதர் - சனற்குமாரர் என்ற நால்வருக்கும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளையும் ஆலின்கீழ் உபதேசித்த அவசரம்.

ஆகையால், அந்த உருவத்தை தூல லிங்கமாகிய தூபியின்கண் தெற்கே தெற்கு முகமாகிய அகோரத்துக்குப் பதிலாகப் போட நியாயம் சிறிதும் இல்லை.

யோக தட்சணுமூர்த்தி என்பது மேற்படி நான்கு முனிவர்களுக்கும், ஆகமங்களிற் கூறிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாற்பாதப் பொருளை உபதேசித்த அவசரம்.

இம்மூர்த்தத்தையும் தூபியின் தெற்கே போட இயைபு சிறிதும் இல்லை

வீணகான தட்சணுமூர்த்தி என்பது தும்புரு - நாரதர் - சுகர் முதலியோருக்கு, வீணை, யாழ் முதலிய கருவிகளைக் கொண்டு இசை ஞானத்தைப் போதித்த அவசரம். ஆகையால் இதனையும் தூபியின்கண் அமைக்கக் காரணம் இல்லை.

மேலும், பிரம விஷ்ணுக்கள் மும்மலம் உடையவர்கள். உருத்திரன் இருமலமுடையவர். மகேசர் - சதாசிவர் ஒரு மலமுடையவர்கள்.

ஆகையால், இருமலமுடைய உருத்திரனுடைய இடத்தில் ஒருமலமுடைய மகேசமூர்த்தங்களில் ஒன்றாகிய தட்சணாமூர்த்தியை அமைத்தல் ஒவ்வாத முறையாகும்.

இருதயம் இருக்கவேண்டிய இடத்தில் இருதயமும், நுரையீரல் இருக்கவேண்டிய இடத்தில் நுரையீரலும், கல்லீரல் இருக்கவேண்டிய இடத்தில் கல்லீரலும் இருக்கவேண்டுமே யொழிய ஒன்று இருக்கக்கூடிய இடத்தில் இன்னொன்றை அமைப்பதானால் என்னாகும் என்று உன்னிப் பாருங்கள்.

பிண்டத்தில் உள்ளது அண்டத்தில். மனிதனுடைய உடம்பு "நடமாடுங் கோவில்", ஊரில் இருக்கும் கற்றளி "படமாடுங் கோவில்"; ஆகையால், கோவில்கள் எல்லாம் தத்துவ நூன்முறைப்படி அமையவேண்டும்.

கோவில்களைக் கட்டும் புண்ணியசீலர்கள் தத்துவநூலும் சிற்பமும் தெரிந்த ஒரு அன்பரைக் கோவில் மேற்பார்வைக்கு வைத்துக் கொண்டால் இந்த மாதிரியான பிசகுகள் நேரா. அவர்கள் சிற்பிகளைக் கொண்டு சரியானபடி தூபியை அமைப்பார்கள்.

தூபிகளில் ஒரு தட்டு உடையனவும், இரண்டு அல்லது மூன்று தட்டுக்களை உடையனவும் உண்டு. (தட்டு=அடுக்குகள்).

ஒரு தட்டு (=அடுக்கு) உள்ள தூபிக்கு வடக்கே வாணியுடன்கூடிய பிரமாவையும், மேற்கே இலக்குமியுடன்கூடிய விண்டுவையும், தெற்கே உமையுடன்கூடிய உருத்திரனையும், கிழக்கே பார்வதியுடன் கூடிய மகேசனையும் அமைக்க வேண்டும்.

இரண்டு தட்டுக்கள் (=அடுக்குகள்) உள்ள தூபிக்கு, அடித்தட்டில் மேலே சொன்ன பிரகாரமும், அதற்கு மேற்றட்டில் மேற்கண்ட பிரமா - விண்டு - உருத்திரன் - மகேசன் இவர்களை இயக்கும் முகங்களாகிய வாமதேவம் - சத்தியோசாதம் - அகோரம் - தற்புருடம் முதலிய முகங்களை அமைக்க வேண்டும்.

மூன்று தட்டுகள் (=அடுக்குகள்) உள்ள தூபியாயிருந்தால், அடித்தட்டிலும் நடுத்தட்டிலும் மேலே கூறிய பிரகாரமும், மூன்றாவதாகிய மேல் தட்டில் ஆதி - இச்சை - ஞானம் - கிரியை என்னும் சத்திகளோடுகூடிய அநாசிருதர் - அநாதர் - அனந்தர் வியோமரூபர் முதலானவர்களை அமைக்கவேண்டும்.

இப்படித் தூபியின்கண் காட்டுவதானது தத்துவ முறைகளை எளிதாக உலகர்களுக்கு எடுத்துக் காட்டுவதாகும்.

பஞ்சகிருத்தியங்களுக்குக் காரணமாகிய தூலமா யிருக்கும் சத்திகளையும் - சூக்குமமாயிருக்கும் சத்திகளையும் - காரணமாய் இருக்கும் சத்திகளையும் - அந்நாளில் பெரியோர்கள், பாமரர்கள் அறிந்து உய்யும் வண்ணம் தூபியின்கண் ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த முறைகள் மறைபட்டுப் போகவே, கோவில்களில் அருள் குன்றிவிட்டது. அருள் குன்றவே உலகில் பஞ்சமும், நோய்களும் மிகுதிப்பட்டன.

தற்காலம் தூபி அமைப்பவர்கள் பஞ்சகிருத்திய நுணுக்கங்களைக் காட்டும் உருவங்களை அமைப்பதை விட்டு, தூபியில் தங்கள் மனம் போனவாறு வேடிக்கையான உருவங்களையும், அம்மணமான உருவங்களையும், உருத்திரனுக்குப் பதிலாக தட்சணாமூர்த்தி உருவங்களையும் அமைக்கிறார்கள்.

இது தமிழ் நாடு செய்த பாவம் ஆகும். திருப்பணியாளர்கள் என்று இந்நுணுக்கங்களை மனதிற்கொண்டு தத்துவ நான்முறையை அனுசரிக்க ஆரம்பிக்கின்றார்களோ அன்றே உலகத்துக்கு நல்லகாலம் என்னலாம். ஆனால், அந்நற்காலத்தை எதிர்பார்ப்பதுதான் கஷ்டமாயிருக்கிறது.

உள்ளே இருக்கும் சூக்குமலிங்கமாகிய சிவலிங்கத்தின் தூலதேகமே கோவில்; அத்தூல தேகத்திற்கு முகம்போன்றது தூபி, அத்தூபி வெளிப்படையான முகங்களை யுடையது; ஆகவே சிவலிங்கத்தின் பஞ்சமுகங்களான ஈசானம் - தற்புருடம் - அகோரம் - வாமம் - சத்தியோசாதம் முதலியவைகளால் இயக்கப்படும் பிரமா - விஷ்ணு - உருத்திரன் - மகேசன் - சதாசிவன் இவர்களுடைய உருவங்கள் அத்தூபியில் இருக்கவேண்டும்; உருத்திரனாகிய ஒருமுகம் இல்லாவிட்டால், கடிகாரத்தில் ஒரு சக்கரம் இல்லாவிட்டால் எப்படி மற்றச் சக்கரங்கள் இருந்தும் பலனில்லையோ அப்படியே கோவிலில் தெய்வ சாந்நித்தியம் இராது என்று ஒவ்வொருவரும் உணர்வார்களானால் எல்லாம் சரிவர நடக்கும்.

இனிமேலாவது திருப்பணியாளர்களும் தமிழ்நாட்டிலுள்ள சைவர்களும் ஏனையோரும் இக்குற்றத்தை உணர்ந்து சீர்திருத்த முன்வருவார்களென்று நம்புகிறேன்.

தூபி வேறு - கோபுரம் வேறு. கோபுரம் என்பது ஆவரணங்களில் நாற்பக்கத்தும் உள்ளது.

கோபுரத்தில் ஆதாரம் - நிராதாரம் - மீதானம் முதலாகிய நிலைகளையும், அண்டங்களின் அடுக்குகளையும், அண்டங்களிலுள்ள புவனங்களையும், அப்புவனங்களுக்கு உள்ள நாயகி நாயகர்களையும் அமைத்துக் காட்டவேண்டும்.

---

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

எளியவனை வலியவன் தாக்குங்கால் விரைந்து முன்னவனுக்கு உதவுவதுபோல் போக்குக் காட்டி மெள்ள மெள்ள நழுவி வலியவன் பக்கம் சேர்ந்துகொள்ள முயல்வது தற்கால அரசியல் தந்திரம் போலும்! "சர்வதேச சங்கம்" ஜெனீவாவில் கூட்டங்கூடி ஒத்துப் பேசி ஏழையான அபிஸீனிய மன்னரைக் கைவிட்டதும் அரசியல் தந்திரமே!!

*　*　*

திவான்பகதூர் ஏ. இராமசாமி முதலியார் அவர்கள் பி.ஏ., பி.எல்., பாராளுமன்றத்தைச் சேர்ந்த இந்தியா கவுன்ஸில் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதவி ஏற்றுச் சென்றமை தமிழ் நாட்டார்க்குப் பெருமை யளிக்கத்தக்க தொன்றாகும். அரசியலலுவற்றுறையில் வேலைபார்க்காமல் பொதுநல உழைப்பாளியாகவே இருந்து தொண்டாற்றி வந்த இந்தியர் ஒருவர் இப் பெரும்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது இதுவே முதன் முறையாகும். ஏற்ற பதவியில் ஏற்றமுற்றுத் திரு. முதலியார் அவர்கள் திகழ்வார்கள் என்பது மறுக்கொணாததோர் உண்மையாகும்.

*　*　*

தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், மலையாளம் முதலிய மொழிகளில் தேர்ச்சியுற்று சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ., எல்.டி., பட்டம்பெற்றுச் சென்னைக் கிறித்துவ கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பல ஆண்டுகள் உழைத்து வந்தவர் உயர் திரு. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை அவர்களாகும் (முகப்புப் படம் பார்க்க). கல்லூரியிலிருந்து விலகி ஏழாண்டுகள்வரைத் தமிழ்ப் பேரகராதிக் கழகத்தில் தனிப்பட்ட முறையில் பேருழைப் புழைத்துப் பெருந் தொண்டாற்றியபின் இப்பெரியாரவர்கள் கொழும்புக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகச் சிறிதுகாலம் உழைத்து வந்தார்கள்; அதன்பின் சென்னைப் பல்கலைக் கழகத் திராவிட மொழி யாராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்த தமிழ்ப் பேராசிரியராக ஆறு ஆண்டுகள் வரையிருந்து வந்தார்கள். இவர்கள் இயற்றிய நூற்கள் பற்பல. இவ்வாண்டு ஜூலைத் திங்கள் முதல்நாள்தொட்டு இவர்கள் அலுவலிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டார்கள். எல்லாம்வல்ல இறைவன் இவர்களுக்கு நீண்ட ஆயுளையும் உடல்நலத்தையுங் கொடுத்து இன்னுந் தமிழ்ப்பணி யாற்றுமாறு உளங்கொள்ள வேண்டுகிறோம்.

———

## மதிப்புரை

நவசக்தி :—பெயரைக் கேட்ட அளவானேயே இஃது உயர்திரு. திரு. வி. கலியாணசுந்தரனார் அவர்கள் வெளியிடும் வாரத்தாளாகத் தானிருக்கவேண்டும் என்பதை அன்பர்கள் தெரிந்துகொண்டிருப்பார்கள். தெள்ளிய தமிழ் நடையில் இலக்கியச் செறிவுடன் வெளிவரும் இத்தாளின் முதல் மூன்று இதழ்கள் வரப்பெற்றோம். வழக்கம்போல் எல்லா நயங்களும் பொருந்தியதாயும் திரு. முதலியாரவர்களின் தனிச்சிறப்பு தெரிப்பதாயும் இத்தாள் விளங்குகின்றது. அழகிய இவ்வாரத்தாள் பல்லாற்றானும் பெருகித் திரு. முதலியாரவர்கள் கொண்ட நோக்கத்தை நிறைவேற்றுவிக்குமென நம்புகிறோம். தமிழ்த் தாளுலகில் நவசக்தியின் வரவு நல்வரவாகுக!

திருப்புகழமிர்தம்:—திங்கள் தோறும் மலரும் இவ்வழகிய தமிழ்மலரின் முதலிரண்டு இதழ்களும் வரப்பெற்றோம். வடமொழி தென்மொழியாகிய இருமொழிக் கடலினுந் தேக்கித் திளைத்த பெருஞ்சொற் கொண்டல் காங்கேய நல்லூர் குகஸ்ரீ கிருபாநந்தவாரி அவர்கள் இவ்வெளியீட்டின் ஆசிரியராவார்கள். இவ் வெளியீட்டின் ஒவ்வோரிதழிலும் ஒவ்வொரு திருப்புகழ்ப் பதிகத்திற்குப் பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரை ஆகிய இவை தக்க மேற்கோள்களுடன் வெளிவருகின்றன. இன்னும் கற்றோர்ப்பிணிக்குங் கருத்துகள் பொதுளும் பிறகட்டுரைகளுங் காணப்படுகின்றன.

இதன் ஆண்டுக்கட்டணம் ரூ. 1 தான். வேண்டுவோர் "திருப்புகழமிர்தம்" ஆபீஸ் 2-7 ஐயாமுதலி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை என்ற முகவரிக்கு எழுதிக்கொள்க.

திருப்பேரூர் தலச்சிறப்பும், ஸ்ரீ ஆனந்த நடராசர் திருநடனக் காட்சியும் :—அழகிய இச்சிறுநூல் கோவை. திரு. சி. கு. நாராயணசாமி முதலியார் அவர்களால் தொகுத்தெழுதப்பட்டது. கோயமுத்தூரை அடுத்துமேற்பால் மூன்றாவது கல்லிலிருக்கும் திருப்பேரூர் என்ற பதியின் ஊர், புனல், உரு ஆகிய மூன்றின் பெருமைகள் இச்சிறு நூலின்கண் மிக அழகாக எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. ஒரூரின் பண்டைப் பெருமைகளையும் ஆராய்ச்சிக் குறிப்புகளையும் ஆய்ந்தறிந்து எடுத்துவிளக்கும் ஆற்றல்வாய்ந்தவர்கள் இக்காலத்தில் ஒருசிலரே தமிழ்நாட்டிலுள்ளார்கள். அவர்களில் இச்சிறுநூல் தொகுத்தியற்றிய திரு. சி. கு. நாராயணசாமி முதலியா

ரவர்களும் ஒருவராவர். இப்பெரியாரின் கல்வியறிவும் ஆராய்ச்சிப்புலனும் இந்நூலைப் படித்தோர்க்கே நன்கு புலனாகும். பலர்க்கும்பயன்படும் இச்சிறு நூலின் விலை அணா ஒன்றுதான்.

அவிநாசித் திருத்தலச் சிறப்பு :—90 பக்கங்கள்கொண்ட இவ்வழகிய நூலும் திரு. சி. கு நாராயணசாமி முதலியாரவர்கள் இயற்றியதே. இதன் விலை அணா 6.

வழக்கம்போல் திரு. முதலியாரவர்கள் மிக அரிதின் ஆராய்ந்து பல அருமையான பொருள்களைத் திரட்டி இதன்கண் தொகுத்துக் கூறியுள்ளார்கள். கொங்குநாட்டு அமைப்புக்களும், அவிநாசிப் பதிச்சிறப்புக்களும், ஆராய்ச்சிக் குறிப்புக்களும் இதன்கண் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சைவசீலரும் செந்தமிழ்ச் செல்வருமாகிய திரு. முதலியாரவர்கள் இதைப்போன்ற இன்னும் பலசிறந்த நூல்களை வெளியிட்டுத் தமிழருக்குதவுமாறு வேண்டுகிறோம்.

முருகமணி மாலை: (விலை அணா 2) திருப்பரங் குன்றத்துறை முருகப்பெருமான்மீது மதுரை மதுரஞ் சுந்தரபாண்டியனார் பாடிய பாடல்கள் இந்நூலின்கண் தொகுத் தச்சிடப்பட்டுள்ளன. இவ்வாசிரியர் எவ்வாறு தமிழ்ச்செய்யுள்கள் பாடி திருப்பரங்குன்றத்தில் மழைபெய்வித்து மாண்புற்றார் என்பது நம் "செல்வி" யன்பர்கள் நன்கறிந்ததே யாகும். உயர்ந்த நீதிகள் தெரிக்கும் இந்நூல் ஒவ்வொரு தமிழரும் கற்றற் குரியதே.

உமர் கய்யாம்: தமிழ் மொழிபெயர்ப்பு நூல்: திரு. வி. எம். ஷம்சுத்தீன் சாஹிப் அவர்களும் திரு. வி. எஸ். அருளானந்தம் அவர்களும் மொழி பெயர்த்தது. இரண்டு பாகங்கள்: 107 பக்கங்கள். விலை ரூ 1. கிடைக்குமிடம்:—வ. மி. ஷம்சுத்தீன் சாஹிப், டீன்ஸ்மன்ஜில், ஸ்ரீவைகுண்டம்.

பாரசீக நாட்டுத் தத்துவஞானியாகிய உமர்கய்யாம் எழுதிய "ருபாயியாத்" என்ற நூலை எட்வர்ட் பிட்ஸ்ஜெரால்டு என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். ஆங்கிலத்திலுள்ள அந்நூலின் தமிழ்மொழி பெயர்ப்பாகவே இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.

கலைவல்லன்: ஆசிரியர், ஆர். வி. ராமசுவாமி, 'பார்வதி விலாஸ்', எக்ஸ்டென்ஷன், சேலம். 178 பக்கங்கள் விலை அணா 12.

அழகிய இந்நூல் ஒரு புதுக்கதையாகும். நல்ல கருத்துக்களும், இனிய நீதிகளும், பற்பல மேற்கோள்களும் இந்நூலில் நிறைந்துள்ளன. கவைக்குதவாக் கட்டுக்கதைகளைப் படித்து வீண்காலம்

போக்குவதில் விருப்பமில்லாதவர்கள் வாங்கிப்படித்துப் பயன் பெறத்தக்க நூலாகும் இது.

**திருக்கயிலாய ஞானவுலா:** பிரசங்க பூஷணம் பு. பா. இரத்தின சபாபதி நாயகர் அவர்களியற்றிய விருத்தியுரையுடன் கூடியது. திரு. பா. ல. முருகேச நாயகர் பதிப்பு. விலை அணா 8. கிடைக்கு மிடம்: அ. ப. எல்லப்ப நாயகர், அமைச்சர், 11. அல்லூர் வேங்க டாத்திரி மந்திரம், கொல்லவார் அக்ரகாரம், பழைய வண்ணாரப் பேட்டை, சென்னை.

"மொழிவளர்ச்சிப் பெயரெழுப்பி முடங்கி, சமயவளர்ச்சிக் குரலெடுத்து ஒடிந்து, உள்ளத்தில் செம்மையின்மையும் அம்மம்ம! தெய்வ நிந்தையுமாக இருந்து மேடைமேல் மட்டும் என்னே இவர் சமயப்பற்று, என்னே இவர் மொழிப்பற்று எனப் பிறர் மதிக்குமாறு வெற்றுக்குப் பேசும் திறத்திற் சாய்ந்து முடியும் பொல்லா நெறியில் போகாமல் சாந்திபெறச் சமயக்கண்சார்க என்பது பண்டைக்காலச் செய்தி." ஆகவே அதுவே நோக்கமாகக் கொண்டு உழைத்ததன் பயனே இவ் வுரை நூலாகும்.

தமிழிலக்கிய வகைகளில் 96 பிரபந்தங்கள் என ஒருவகை யுண்டு. அவ்வகையைச் சேர்ந்ததே உலா என்பது. அது தலைமகன் ஒருவன் உலாப்போகின்ற சிறப்பைப் பேதை முதலிய எழுவகைப் பருவ மாதர் பெருமைப்பட விளக்கிக் கலிவெண்பாவாற் பாடுவ தாகும். இதனையே அடிப்படையாக் கொண்டு பரம்பொருள் பவனி வருவதாகவும் உயிர்களாகிய பெண்கள் அவன் அருமை பெருமைகளை எடுத்து விளக்கிக் கூறுவதாகவும் அமைக்கப்பெற்றதே திருக்கயிலாய ஞானவுலாவாகும்.

சைவசமய குரவர்களில் ஒருவரான சுந்தரருடன் இருந்த சேர மான் பெருமாள் என்ற அரசர்கோன் பாடியது இவ்வுலா. நடை யிலும் பொருளிலும் சிறந்து பண்டைப்பெருமையுடையதாய் விளங் கும் சைவநூலாகிய இதற்கு இதுவரை ஒரு விருத்தியுரை யில்லா திருந்தது பெருங்குறையாகும். அக்குறையை மிகவுந்தேர்ந்த முறையில் நீக்க முன்வந்த பிரசங்க பூஷணம் பு. பா. இரத்தின சபாபதி நாயகர் அவர்களை நாம் பாராட்டுகிறோம். அகப்பொருள் நுட்பங்கள் பல்லாற்றானும் விளங்குவதாய்த் தகுந்த மேற்கோள் களுடன் மிகவும் திருந்திய முறையில் தூய எளிய தமிழ்நடையில் திரு நாயகர் அவர்கள் உரை எழுதியுள்ளமை வியந்து பாராட்டற் குரியதாகும். இன்னும் பல நூல்களுக்கும் இவ்வாறே அன்னார் உரையெழுதி யுதவவேண்டுமென்பதே எம் பேரவாவாகும்.

---

உ—ஒளிப்புற்றொழிதல், அ = ஆகுக—[கைக்கொண்டுள்ள சீர் கண்காணுதொழிக] என்னும் வியங்கோள். ஒவ்-ஒழிக என்னும் வழக்கொழிந்து ஒவென்றாய்விட்டது. இவ்வியங் கோட்பொருள் வெகுளியிலெழும் சாபமொழியே யாயினும், இம்மொழிப்படி நிகழப்பெறுமாயின், வெகுண்டு திட்டி இவ்வாறு கேடு விளைத்தவர்கட்கும் மனதில் உண்டாவது இரக்கமே ஆதலின், ஒ வென்பதும் இரக்கக் குறிப்புச் சொல்லாயிற்று.

## ஓ—அயன் (பிரமன்)

### பெயர்ச்சொல்

[உ + அ = ஒ — அ ÷ உ = ஓ] உலகத்துட் பொருள்கள் உண்ணல், உயிர்த்தல் கொண்டியலும் உயிர்ப்பொருள், உயிரல்லாப்பொருள் என இருவகையுள் அடங்கும். மெய்கொண்டு ஊறுபாடறியும், புல் மரம் முதலியவை ஓரறிவுயிர்கள்; மெய்யும் நாவும் கொண்டு ஊறு, சுவை அறியும் இப்பி, சங்கு முதலியவை ஈரறிவுயிர்கள்; மெய், நா, மூக்குக்கொண்டு, ஊறு, சுவை நாற்றம் அறியும் கறையான் எறும்பு முதலியவை மூவறிவுயிர்கள்; மெய் நா மூக்கு கண்கொண்டு ஊறு சுவை நாற்றம் ஒளி அறியும் தும்பி வண்டு முதலியவை நாலறிவுயிர்கள்; மெய், நா, மூக்கு, கண், செவிகொண்டு ஊறு சுவை, நாற்றம், ஒளி, ஓசை அறியும் மக்கள் விலங்கு புள் முதலியவை ஐயறிவுயிர்கள். உணர்ச்சி அறிவின் மயமாகிய உயிரொன்றுமேயன்றி உடம்பு முதலாகிய உலகத்துப் பொருள்களெல்லாம் உயிரல்லாத பொருள்கள். எவ்வுயிர் எவ்வுடம்பை எடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய் நிற்கும் ஒற்றுமை நயங்கருதிய வழி ஒன்றுபோலத் தோற்றுமாயினும், உயிர் அறிவின் மயமாகியும் உடம்பு அறியாமையாகியும் நிற்கும் வேற்றுமை நயமாகிய உண்மை கருதிய வழி அவ்வுடலும் உயிரும் வேறாம். அறிவு, அருள், ஆசை, அச்சம், மானம், நிறை, பொறை, ஓர்ப்பு, கடைப்பிடி, மையல், நினைவு, வெறுப்பு, உவப்பு, இரக்கம், நாண், வெகுளி, துணிவு, அழுக்காறு, அன்பு, எளிமை, எய்த்தல், துன்பம், இன்பம், இளமை, மூப்பு, இகல், வென்றி, பொச்சாப்பு, ஊக்கம், மறம், மதம், மறவி என்னும் முப்பத்திரண்டும் மற்றும் உடம்போடு கூடிய உயிர்களினுடைய குணங்கள். துய்த்தல், துஞ்சல், தொழுதல், அணிதல், உய்த்தல் முதலானவை உடம்போடு கூடிய உயிர்களினுடைய தொழிற் குணங்களாம். உயிரல்லாத பொருள்களினுடைய குணங்கள்:

வட்டம், இருகோணம், முக்கோணம், சதுர முதலிய பலவகை வடிவங்களும், நன்மணம் கெட்டநாற்றம் இரு நாற்றங்களும், வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என்னும் ஐந்து நிறங்களும், கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, இனிப்பு என்னும் அறுசுவைகளும், வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, நொய்மை, சீர்மை, இழு மெனல், சருச்சரை என்னும் எட்டூறுகளுமேயாம். தோன்றல், மறைதல், வளர்தல், சுருங்கல், நீங்கல், அடைதல், நடுங்கல், இசைத்தல், ஈதல் முதலியன உயிர்ப்பொருள்களுக்கும் உயிரல்லாத பொருள்களுக்கும் பொதுவாகிய தொழிற் குணங்களாம் என நன்னூலாசிரியர் வகுத்திருக்கின்றனர். காணத்தக்க இவ்விருவகைப்பட்ட எல்லாப் பொருள்களையும் படைத்தவன் அயன் என்னும் பிரமன். அயனுக்கு மண் பொதுத் தந்தையென்றும், படைப்போன் என்றும் பெயர் வழங்குகின்றது. ஒவ்வோர் சமயத்தார் அவ்வச்சமயத் திறைவர் உலகை உண்டாக்கினர் எனவும் கூறுகின்றனர். 'அகர முதல வெழுத்தெல்லா மாதிபகவன் முதற்றே உலகு' என இருத்தலின் காரியமாகிய இவ்வுலகத்துக்கு, கர்த்தா ஒருவர் வேண்டுமே. அப் படைப்புடைக்கடவுள் அயன் என்னும் பிரமனு? மற்றக் கடவுளருள் ஒருவரா? என்னும் ஐயப்பாடு, தன்னில் அறியாமை நீத்துக்காணு மளவும் நின்று வருத்தற்காதாரமாதலின், அவரோ மற்றவரோ வென்னும் ஐயவினுவெழுப்பும் ஓ—அயன் எனலாயிற்று. "தரவு ரியவர் வேறில்லை யிச்சகத்—தரனமைத்தனனே யென்பார் கரிய-செங்கணெடுமால்செய்தனனென்பார்—பங்கயத்தவனே படைத்தனனென்பார்—இந்திரன் முதலா விமையவராலே வந்ததிச் சகமென மதிப்பார் சிந்தை—யாயினிலதாமல்ல துண்டா—மாயை யிச்சகத்து வந்ததென்பார்—முக்குண வடிவா மூலப்பகுதி—யிக்கடலுலக மீன்றதென்பார்—ஒலியே தந்த திவ்வுலகமென்பார்—மலியும் வினையால் வந்ததென்பார்-அணு விவ்வுலகையாக்கிய தென்பார்—கணிகர் புத்தியின் கற்பனையென்பார்—சூனியத் துலகுதோன்றிய தென்பார்-ஆன்றவரொருவரானு மன்று—பூதந்தன்னின் புணர்ச்சியென் பார் — ஏதுமியல்ப தில்லையென்பார் — இப்பரிசளவிலாத வாதிகள்--சொற்பொருளறிந்து மெய்ப்பொருளறியாது--கூவற் பூட்டைக்குண்டிகைபோல—வோவற் றுற்பவத் துழல்பவரா வர்" என்னும் தத்துவராயர் வாக்கையுங்காண்க. [இஃது உலகத்தோற்றத்து ஆக்கியவன் கருதியவழி யெழும் ஐயப் பாட்டினமைதி].

## ஓ—அரன்.

பெயர்ச்சொல்

[உ + அ = ஓ — அ + உ = ஓ]. ஓ = அயன் என்னும் பொருளமைதி. உலகத்தோற்றங் கண்டவன் யாவனென வினவியவழி யெழுந்த ஐயப்பாட்டினமைதியானதுபோலவே, தோற்றம் உண்டானால் மாற்றமும் உண்டென்பது உறுதியாதலின், உலக மாற்ற நிலையில் அழிப்பவன் அரன் ஆதலின், அழிப்பவன் அரனோ? பிறகடவுளரோ என்னும் ஐயவினவெழுச்சிக்கு மூடாயமைதலின், ஓ=அரன் எனல் ஆயிற்று.

## ஓ—மடையில் நீர்தாங்கிவிடும் பலகை, மடையடைக்கும் கதவு

பெயர்ச்சொல்

[உ + அ + உ = ஓவு — அ + உ + உ = ஓவு = ஓ] நீர்பாய் மடையின் உப்பக்கத்ததோ, அப்பக்கத்ததோ நீர்பாய்வதற்கு ஏற்றதாய், இசைத்துப்பாய்ச்சவும், பாய்ச்சலை நீக்கி நிறுத்தவும் ஆதாரப்பட்டு நிற்றலின் ஓ=மடையில் நீர்தாங்கிவிடும் பலகை, மடையடைக்கும் கதவு என்னல் ஆயிற்று.

ஒ—ஒழியிசை இடைச்சொல் ஆக—படிக்கவோ, வந்தாய்—என்பதைப் படிக்க வந்தாயோ, விளையாட வந்தாயோ எனவும்,

ஒ—வினவிடைச் சொல் ஆக—அது குற்றியோ மகனோ? என்பதில் குற்றியா அது, குற்றிக்கு வேறாகிய மகனா? எனவும்,

ஒ—உயர்வுச் சிறப்பிடைச்சொல் ஆக—ஓஒ! பெரியன் என்பதில் அவன் பெருமை சொல்லப்படும் அளவதா? அதற்குட்பட்டதா? மேல் எனவும்,

ஒ—இழிவுச் சிறப்பிடைச்சொல் ஆக ஓஒ! கொடியன் என்பதில், அவன் கொடுமை, சொல்லத் தக்கதா? வேறு பேசத்தக்கதா? சீ எனவும்,

ஒ—எதிர்மறை இடைச்சொல் ஆக—கொண்டானோவெனக் கேட்பார்க்கு, எதிர்மறை விடையாகவே, கொண்டானோ என்னுங்கால், வேறுகொண்டானோ சென்றானோ—இங்கே கொண்டிலே எனவும்,

ஒ—தெரிநிலை இடைச்சொல் ஆக—ஆணோ அதுவுமன்று, பெண்ணோ அதுவும் அன்று என்னுங்கால், அதுவோ, மற்றதோ அன்று; இது வேறென்று எனவும்,

ஒ—கழிவிரக்க விடைச்சொல் ஆக—கெட்டாரை—'ஒஒ தமக்கோருறுதியுணராரோ' என்னுங்கால், அக்காலத்து உறுதி உணர்ந்தார் அன்றிவேறுபட்டா கெட்டார்கள் எனவும்,

ஒ—பிரிநிலை யிடைச்சொல் ஆக—பலருணின்றும் ஒருவனைப் பிரித்து இவனோ கொண்டான் என்னுங்கால், அவன் இல்லை, மற்றவனும் இல்லை எனவும் அமைதிக்கொத்த பொருணிலை விளக்கிற்று.

ஒ—அசைநிலை யிடைச்சொல் ஆக—காணியவம்மினோ என்பதில்—வரவோ, காணவோ செய்யலாம்—என்னும் குறிநிலை கொள்ளல் காண்க.

### கோ - கோத்தலைச்செய், நுழைப்பி

வினைச்சொல்—ஏவல்

[க்+ஒ=கோ] தொடவோ, படவோ கூடிய மணி, நூல் முதலியவற்றைச் சரட்டிலும், ஊசியிலும் அது தான் மற்றது, மற்றதுதான் அதுவெனக் கலந்துநிற்கப் பொருத்தலே கோத்தலாதலின், கோ=கோத்தலைச் செய் எனல் ஆயிற்று.

### கோ - இசை, பின்னு, தொடு

வினைச்சொல்—ஏவல்

[க்+ஒ=கோ] தொடவோ படவோ கூடிய பூ, மலர், குழை முதலியவற்றை நார், இழை முதலியவற்றில் நுழைத்தோ, பின்னியோ, தொடுத்தோ அதுதான் மற்றது வென ஆக்கப்படுதலின், கோ=இசை, பின்னு, தொடு எனல் ஆயிற்று.

### கோ - கதைகட்டு

வினைச்சொல்—ஏவல்

[க்+ஒ=கோ] புலப்படக்கூடிய நிலைமையில் உலக நடப்புக்கு ஒத்த விதத்தில், நடந்த வரலாற்றுகளின்

---

கோ, விழி, பசு, நீர், திக்கு, குலிசம், விண், கிரணம், பூமி,
ஏ, வுரை, சுவர்க்கம், வேந்தன் இரங்கல்வெற் பீரே ழாமே.

—சூடாமணி நிகண்டு.

இடையே நுழைத்தோ, புதிதாகவோ, கதையோ நடந்த வரலாறோவென ஆராயும்படி. இசைக்கப்படுதலின், கோ= கதைகட்டு என்னல் ஆயிற்று. [இது உவமையினுயது.]

### கோ - அம்பு

பெயர்ச்சொல்

[க்+ஓ=கோ] தொடப்படக்கூடிய தன்மையிற் காணப் படும் ஓர் இலக்குப் பொருள்மீது சென்று தைத்துக்கோத் துக்கொள்ளவோ, சென்று கோத்து ஊடுருவிச் செல்லவோ, வில்லில் தொடுத்து ஏவப்படுவதே அம்பாதலின், கோ= அம்பு என்னலாயிற்று.

### கோ - அரசன்

பெயர்ச்சொல்

[க்+ஓ=கோ] யாவர்க்கும் புலப்படக்கூடிய விதத்தில் தனது அரசாட்சிக்குட்பட்ட குடிபடைகளுக்கு எந்த எந்த வேளையில் என்ன என்ன ஆகவேண்டுமோ அவ்வகை எண் ணங்களே குடிகொண்டு நிற்கும் சித்தம் உடையவனும், கண்ணினுற் சொல்லிச் செவியினுல் நோக்கும் இறைமாட்சி, கட்டளையிடவேண்டியவைகளை கண் குறிப்பால் தெரிவித்து முடித்தும் அங்கங்கும் பார்த்து அறிந்து கொள்ளவேண்டிய உண்மைகளை உள்ளவாறுள்ளபடி ஒற்றர்களைக் கொண்டா ராய்ந்தும் நன்கமைக்கும் அரசியன்முறையில் ஒவ்வொரு வர்க்கும் காட்டி நிற்கும் ஆதரவினுலும், எல்லாக் குடிகளி னுடைய வுள்ளத்திலும் தன் அன்பே குடிகொண்டு கோத்து நிற்க நெறிமுறைவழாது, கோத்திறம் புரியும் கோமானே அரசனுதலின்,—கோ=அரசன் என அமையலாயிற்று.

### கோ - ஆகாயம்

பெயர்ச்சொல்

[க்+ஓ=கோ] தொடப்படக்கூடிய விதத்தில் ஓசை கலந்து கோத்திருக்கும்வெளி, உலகிருளை ஒழிக்கும் கதிர்மதி, வான் மீன் முதலியவைகளைக் கோத்துநிற்கும் வெளி, ஒவ் வோர் பொருளின் அகத்தும் புறத்தும் கலந்துகோத்துநிற்கும்

---

அரசனேந்தல் கோவேகுரிசில். —திவாகரம்.

வெளி, உயிர்ப்பொருள் ஒவ்வொன்றும் மூச்சுவிடுதற்காதார மாக ஒத்துக்கலந்து கோத்துநிற்கும், உலகவாழ்க்கைக்கும் எவ்வகை வளங்களுக்கும் இன்றியமையாத மழைக்குப் பிறப்பிடமாய் அத்தகை நலத்தைக் கோத்துநிற்கும் வெளி, மனிதர் கண்ணுக்கு ஒத்தும் ஒவ்வாமலும், கோத்துநிற்கும் வெளி, தன்மை, முன்னிலே, படர்க்கை என்னும் மூவிடங் களுள் ஒன்றென ஓதுங்கற்கின்றி மூவிடங்களினும், அதுபோல் எல்லாத்திசைகளினும் கோத்து நிற்கும் வெளி எனவும் இன்னும் இவைபோல்வனவுமாகிய அமைதிகள் ஒவ்வொன் றும் ஆகாயமென்றே ஆவதால்—கோ=ஆகாயம் என்னல் ஆயிற்று.

## கோ - இடியேறு

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தான் வானத்தெழும் ஓர் முழக்க மாயினும் மண்ணுலகின் உயிர்ப்பொருள்களின் செவிப் புலனைக்கோத்து நின்றியங்கலால், கோ=இடியேறு என்ன லாயிற்று.

## கோ - கண்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தான் ஒருறுப்பாய் முகத்தினிடம் பெற் றமைந்திருந்தாலும், தன்பார்வை எதிர்ப்படும் பொருள்களி லெல்லாம் பற்றிக்கோத்து நிற்றலின், கோ=கண் என்னலா யிற்று.

## கோ - (கிரணம்) கதிர் - ஒளி

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தான் விண்ணில் ஒளியுடைப்பொருளின் இடத்ததாயினும் மண்ணில் மனிதர் கண்ணொளியோடு கலந்து கோத்து நிற்பதால், கோ=கதிரொளி ஆகிய கிரணம் எனலாயிற்று.

## கோ - சந்திரன், மதி, திங்கள்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தான் வானிலெழுந்துலவும் ஓர் குளிர்ந்த வொளியுடைய மதி என்னும் கோளாயினும், பூமியில் நில

வாயும், மனிதர் கண்ணுக்குத் தண்ணொளியாயும், குமுதம், அல்லி முதலியவைகளுக்கு மலர் இதழ்களை விரித்து அலர்த்தும் கருவியாயும், சந்திரகாந்தச் சிலைக்கு நீர் கசியச் செய்விக்கும் ஆற்றலாயும், கலந்து தன் கதிர்களைப் பரப்பி நன்குறக் கோத்து நிற்பது திங்களே யாதலின், கோ=சந்திரன் ஆகிய மதி என்னல் ஆயிற்று.

### கோ - சூரியன், ஞாயிறு

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] வானத்தில் எழும் முதற்கோளாய் நாளும் எழுந்து பூமிக்குப் பகலாயும், தாமரைக்கு மலர்விக்கும் கருவியாயும், சூரியகாந்தச் சிலைக்குத் தீப்பொருத்து கருவியாயும் இசைந்து கோத்துநின்றியங்கலால், கோ=ஞாயிறு (சூரியன்) என்னலாயிற்று.

### கோ - திசை, திக்கு

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] புலப்படத்தக்க விதத்தில் அகலிடத்தின் நாற்கோண் அல்லது எண்கோணில் ஒவ்வோர் கோணைக் குறிக்கொண்டு அந்த அந்தக் கோணினுள்ள எல்லாத் தோற்றங்களினும் கலந்து கோத்து நின்றியல்கின்றமையால், கோ =திசை, திக்கு என வழங்கலாயிற்று.

### கோ - ஆண்மகன், ஆடவன்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] யாவரும் கண்டுமதிக்க ஆளும் தன்மையைக் கோத்துநிற்றலின் கோ=ஆண்மகன் என்னலாயிற்று.

### கோ - நீர்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப் படத்தக்கதாய் மண்ணின் உள்ளினும் புறத்தினும் கலந்து கோத்திருப்பது நீரேயாதலின், கோ=நீர் எனல் ஆயிற்று.

### கோ - நிலம், பார்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] இருவகைப் பொருள்களையும் தன்னில் அமரக்கோத்து இடந்தந்து நிற்றலின், கோ=நிலம் (பூமி) எனல் ஆயிற்று.

### கோ - இலந்தை

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படத்தக்க நிலைமையில் இலந்தை மரத்திற் காய் பழம் ஆகும்போதே இலந்தைப் புழுவைத் தன்னுள் அடங்கக் கோத்துநிற்றலின், கோ=இலந்தைக்கனி எனலாயிற்று.

### கோ - (உரோமம்) புறமயிர்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படக் கூடியதாய் உடம்பின் புறத்தே முளைத்து இடைஇடையே கழிபடுபொருளா யிருப் பினும் உரோமமாகிய புறமயிர் தோலுக்குள் வேரூன்றிக் கோத்து நிற்கும் பொருளா யமைதலின், கோ=புற மயிராகிய உரோமமாயிற்று.

### கோ - எருது

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படக்கூடிய விதம், தன்னில் ஆளுந் தன்மை கலந்து கோத்துறுதலால், கோ=எருது என்னலாயிற்று.

### கோ - பசு

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படத்தக்கதாய்த் தன்னினத்துக் கேயன்றி மக்கட்கும், மக்கட்சுட்டாகிய தென்புலத்தார் தெய் வங்கட்கும் பயன்படுவதாகிய, பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் ஆவினைந்தையும் தன்னுட் கோத்து வைத் துக் கொடுத்து உதவி ஆவினத்துண் முதன்மை பெற்றுச் சிறந்து நிற்றலின், கோ=பசு என வழங்கலாயிற்று (இது மண் ணுலகப் பசு).

---

கோவுங்குரால் தேனும் பசுச்சாதிப் பொதுப்பெயர்—தீவாகரம்
கோக்குடஞ் சுரபியாவே. —சூடாமணி நிகண்டு.




சிலம்பு-கச] தாது—ஆடி [பரல்-கஉ

# திருவாசகம்

## கோயிற்றிருப்பதிகம்

பார்பத மண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதே லரிய நின்மலா
நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரய லுள்ளா
ரானந்த மாக்கு மென்சோதி.

பதவுரை :—

பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்து(உம்)—(இந்த) நில உலகமும் (ஏனைய) உலகங்களுமாகிய பேருலகம் (Universe) முழுவதுமாய்த் தோன்றியும்

பரந்தது(உம்) ஓர் படர் ஒளிப்பரப்பே—(அங்ஙனம் தோன்றியபின்) அவ்வுலகங்களில் பரந்திருத்தலுமாகிய ஒப்பற்று எங்கும் நிறைந்திருக்கின்ற ஒளிப்பரப்பே

நீர் உறு தீயே—வெந்நீர் முழுவதும் பரந்து நிறைந்திருக்கின்ற வெம்மைபோல, புறக்கண்ணுக்குப் புலப்படாமல் உலக முற்றும் பரந்து நிறைந்திருக்கின்ற நுண்ணிய பொருளே

நினைவதேல் அரிய நின்மலா—அங்ஙனம் உலகில் பரந்து நிறைந்திருக்கின்ற உன்னை அவ்வுலகினோடு டத்துவிதமாயும் உன்னின் வேறாயும் நின்று பசுபாசஞானங்களால் ஒருவர் அறியப்புகின்

அவரறிவுக்கு எட்டாது சடந்திருக்கின்ற மலங்களினின்று நீங்கிய அநாதி முத்தனே.

நின் அருள் வெள்ளம் சேர் உறுசிந்தை எழுந்தது ஓர் தேனே—உனது அருள் முழுவதும் பதிந்து தீவிரதர சத்திநிபாதச் சிறப்பு வாய்ந்துள்ள உள்ளத்தினை உடையவர்கள் (உன்னோடத்துவித மாய் நின்று உன்னைப் பதிஞானத்தாலுணர்தல் பற்றி) அவர்களுடைய உள்ளத்தில் எழுவதாயுள்ள தேன்போன்ற இன்பப்பொருளே

திருப்பெருந்துறை உறை சிவனே—திருப்பெருந்துறையில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே

ஆனந்தம் ஆக்கும் என்சோதீ—(எனது உள்ளத்திலும் நீ அங்ஙனம் உன்னுடைய தீவிரதர சத்திநிபாதத்தை நிரம்பச் செய்து திருப்பெருந்துறையில் வைத்து என்னை ஆண்டருளி) என்னைப் பேரின்ப வடிவமாகச் செய்த பேரொளிப் பொருளே

எனக்கு இங்கு உறவு உள்ளார் யார் அயல் உள்ளார் யார்—அவ்வாறு உன்னால் பேரின்ப மளிக்கப் பெற்ற எனக்கு இந்நில உலகில் உறவினராயுள்ளார் யார்? பகைவராயுள்ளார் யார்? (ஒருவருமில்லை என்றபடி).

விளக்க உரை :—

பார்பதம் அண்டம் அனைத்தும் ஆய்த்தோன்றி—பார்=இந்நில உலகம்; பதம்=இடம். அது இங்கே சாதி ஒருமைப் பெயராய் ஏனைய உலகங்களைக் குறிக்கிறது. அண்டம் இந்த நில உலகமும் பிற உலகங்களும் சேர்ந்த பேருலகம் (Universe). பார் என்ற சொல்லுக்கு மண் (பிருதிவி) என்று பொருளும், அண்டம் என்ற சொல்லுக்கு வான் (ஆகாயம்) என்ற பொருளும் கொண்டும், பார்பதம் அண்டம் என்ற சொற்றொடரைப் பார் அண்டம் பதம் என மாற்றியும், மண்முதல் வான்வரையுள்ள அஞ்சு பூதங்களும் நிறைந்திருக்கிற இடங்கள் என்று பொருள் கொள்ளினும் பொருந்தும். "பாரொடு விண்ணாய்ப் பரந்த வெம்பரனே" என்று அடிகள் வாழாப்பத்து முதலாவது பாட்டிற் கூறியிருத்தல் காண்க.

அனைத்தும்=முழுவதும்; எல்லாம். முளைத்து=தோன்றி. உம் தொக்கி நின்றது. மாயை கலந்திருக்கிற தூவெளி (ஞானகாசம்) யிலிருந்து உலகங்கள் முழுவதும் தோன்றியதால் அடிகள் 'பார்பதமண்டம் அனைத்துமாய் முளைத்து' என்ற சொற்களால் சத்திகள் அடங்கியிருக்கிற ஒரு விதையிலிருந்து மரம் ஒன்று தோன்றுதல்போல, சத்தித் தொகுதிகளாயுள்ள தூவெளியிலிருந்து உலகங்கள் தோன்றின என்ற கருத்து குறிப்பிடப்பட்டது.

பரந்தது ஓர் படர் ஒளிப்பரப்பே—பரந்தது வினையாலணையும் பெயர். படர்=எங்கும் நிறைந்திருக்கின்ற பரப்பு=எள்ளில் எண்ணெய் போல் ஓரிடமும் ஒழியாது நிறைந்திருத்தல் (expanse). இந்தத் தூவெளியிலிருந்து மாயையின் காரியமாய் உலகங்கள் தோன்றிய பின்னும் அத்தூவெளி காரணரூபமாய் உலகங்கள் முழுவதிலும் பரந்து நிறைந்திருத்தலால், 'பரந்தது ஓர் படரொளிப்பரப்பே' என்றார்.

நீருறுதீயே—தீ என்பது இங்கே ஆகுபெயராய் அதன் குணமாகிய வெம்மையைக் குறிக்கிறது.

நினைவதேல் அரிய நின்மலா—பின்னே கூறுகிறபடி பதிஞானத்தாலன்றி, சிவபெருமான் பசு பாசஞானங்களால் அறியப்படான் என்பார், 'நினைவதேலரிய நின்மலா' என்றார். நினைவதேல்—ஏல்=வருங்கால வினையெச்ச விகுதி. 'நினைவதே லரிய' என்பதைச் சிந்தை நினைவதேல் நினைவரிய என விரிக்க. "நினைப்பதாகச் சிந்தை செல்லுமெல்லை—நினைத்தனையுமாவதில்லை" என்று அடிகள் திருச்சதகம் 76-வது பாட்டிற் கூறியது காண்க.

சீர் உறுசிந்தை எழுந்தது ஓர் தேனே—சீர்=சிறப்பு; தீவிரதர சத்திநிபாதம் நிரம்பப்பெற்ற சிறப்பு: தீவிரதர சத்திநிபாதம் நிரம்பப்பெற்ற சிந்தை சீவகரணமொழிந்து சிவகரணமாக மாறிச் சிவமே யாதலால் 'சீருறுசிந்தை எழுந்ததோர் தேனே" என்று அடிகள் சிவபெருமானை விளித்தார். "சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை' என்றார் திருமூலரும். தேன் என்பது இங்கே தேன் போன்ற இனிமையைக் குறிக்கிறது. எழுந்தது—வினையாலணையும் பெயர். சீருறு சிந்தை எழுந்ததோர் தேன் என்பது உயிரில் விளங்கும் அருளொளியைக் குறிக்கிறது. மேலே கூறப்பட்ட தூவெளி விளங்கப்பெறுதலால் உலக முழுவதும் தனக்கு வேறாய்த் தன் கண்ணடங்கப்பெற்ற உயிர், பின்னர் தனக்குத் தரிசனமான அருளொளியில் அடங்கி அங்ஙனம் அடங்கின தானுந் தோன்றாதபொழுது அது அவ்வருளொளியில் சிவமாகிய முதலைக் காண்கிறது. இதுவே சிவதரிசனமாம்.

ஆனந்தம் ஆக்கும் என்சோதி—மேலே கூறப்பட்டவாறு அருளொளியில் சிவதரிசனஞ் செய்த உயிர், பின்னர் அச்சிவன் திருவடிகளை அடைந்து அச்சிவனிலடங்கிப் பேரின்பவாழ்வு அடைகிறது. இங்கே கூறப்பட்ட சோதி சிவனுடைய தனி ஒளியாகிய இன்ப ஒளி. இந்த இன்ப ஒளி தம்மிடம் விளங்கப்பெறுதலால் அடிகள் பேரின்பமடைதல்பற்றி 'ஆனந்தம் ஆக்கும் என் சோதி' என்றார்.

எனக்கு இங்கு உறவு உள்ளார் யார் அயல் உள்ளர் யார்—இங்கு=இவ்வுலகம். உள்ளார் என்பதை உறவு என்பதோடும் கூட்டுக.

சிவபெருமான் திருவடிகளை அடையப் பெற்றவர்கள் எல்லா உயிர்களையும் சிவன் எனவே காண்டலால் "யாருறவெனக் கிங்கு யார் அயலுள்ளார்" என்றார்.

அடிகள் இந்தப்பாட்டில் சிவபெருமானைப் "பார்பதமண்ட மனைத்துமாய் முளைத்துப் பரந்ததோர் படரொளிப்பரப்பே" என்று விளித்தலால் தூவெளியும், "நின்னருள் வெள்ளச் சிருறு சிந்தையெழுந் ததோர் தேனே" என்று விளித்தலால் அருளொளியும், "ஆநந்தமாக்கு மென்சோதி" என்று விளித்தலால் சிவனுடைய தனிப் பேரின்ப ஒளியும் கூறப்பட்டன. தூவெளி அருளொளியில் அடங்கி அரு ளொளி சிவனுடைய தனிப்பேரின்ப ஒளியில் அடங்குகின்றது. சிவ னிடத்தில் விளங்குவதாயுள்ள இந்த மூன்று ஒளிகளையும் திரு மூலர்.

> ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை
> ஒண்சுட ராகி யென்னுள்ளத் திருக்கின்ற
> கண்சுட ரோனுல கேழுங் கடந்தவத்
> தண்சுட ரோமத் தலைவனு மாமே.

என்று திருமந்திரம் 221-வது பாட்டிலும்

> தானந்த மாமென நின்ற தனிச்சுடர்
> ஊனந்த மாயுலகாய் நின்ற வொண்சுடர்

என்று திருமந்திரம் 2081-வது பாட்டிலும் கூறியருளியது நோக்குக.

முதலாவது கூறப்பட்ட தூவெளி ஒளி தன்னிடம் விளங்கப் பெறுதலால் உயிர், மல நீக்கம் செய்கிற ஒளிவிளக்கமாகிய அறிவு விளக்கத்தையும், இரண்டாவது கூறப்பட்ட அருளொளி விளங்கப் பெறுதலால் பசுத்துவ நீக்கத்தையும் சிவத்துவ விளக்கத்தையும் அடையச் செய்கின்ற அன்பு விளக்கத்தையும், மூன்றாவது கூறப் பட்ட தனிப்பேரொளி விளங்கப் பெறுதலால் திருவடிப் பேற்றை அடையச் செய்கின்ற செயலாகிய இன்பவிளக்கத்தையும் பெறு கின்றது. அறிவு, அன்பு, செயல் மூன்றும் பேரின்ப அநுபோக இலக்கணங்களாக ஏனைய கோயிற்றிருப்பதிகப்பாட்டுக்களிற் போல இந்தப்பாட்டிலும் கூறப்பட்டன.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# இலக்கணமும் இலக்கியமும் :
# LANGUAGE AND LITERATURE

## கம்பரும் வள்ளுவரும்

[காரை நகர் திரு. சு. அருளம்பலம் அவர்கள்]

(சஙிரு-ஆம் பக்கத் தொடர்ச்சி)

தசரதச் சக்கரவர்த்தியானவர் சூழ்ந்திருந்த அமைச்சர்களை நோக்கி, உலகத்திற் பிறந்தோன் இறப்பது திண்ணம் என்னும் உண்மையினை மறப்பானாயின் அவனுடைய மனமானது நன்னெறியை மேன்மேலும் விரும்பாது மிக்க தீவினையைப் புரிய அதனாற் பெரும்பாவம் விளைந்து நரகத் துன்பத்தை யடைய நேரும். ஆகையினாலே இறப்பென்னும் மெய்ம்மையை மறவாது துறவினை மேற்கொண் டொழுகின் பிறவியாகிய பெருங்கடலைக் கடக்கலாகும்.

"இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கு
மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ"

என்று கூறினர். இங்கே 'இறப்பெனு மெய்ம்மை' எனக் கூறிய யாக்கை நிலையாமையை வள்ளுவர் 'நிலையாமை' என்னும் அதிகாரத்து,

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல"

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு"

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

என்னுங் குறள்களினாற் கூறினர்.

"பிறப்பெனும் பெருங்கடல்" என்று பிறவியைப் பெருங்கடலாகக் கம்பர் உருவகித்தது போலவே வள்ளுவரும்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"

என்னுங் குறளில் பிறவியைப் பெருங்கடலாகக் கூறினர். பிறவியானது காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவியைப் பெருங்கடலாகக் கூறினர். பிறவியைப் பெருங்கடலாக,

" பிறவியென்னும் பெருங்கடல் விடூஉ
மறவி நாவா யாங்குள தாதலின் " (11—24-25)

" நீங்கரும் பிறவிக் கடலிடை நீந்திப்
பிறந்து மிறந்து முழல்வோம் " (26—40-41)

என மணிமேகலையினும்,

...... ......................." வீடுமுதலாம்
புணவன் பிறவிப் பெருங்கடல் நீந்துவார்க்கே "

எனத் திருவாய்மொழியினும் கூறப்பட்டுள்ளது.

" தொல்லைநம் பிறவியெண்ணிற் றொடுகடன் மணலுமாற்றா
வெல்லையவ வற்றுளெல்லா மேதிலம் பிறந்துநீங்கி "

என்னும் சிந்தாமணி யடிகள் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

பிறவிக்குக் காரணமா யிருப்பது அவா ஆகும் என்பதனை,

" அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து "

என்பதால் இனிது புலனாகும். ஆகவே அவாவினைத் துறந்தஞான்று பிறவிப் பெருந்துயரும் நீங்கும் என்பது தோன்றுகிறது. இக்கருத்தினை,

" அற்றது பற்றெனில்
உற்றது வீடுயிர்
செற்றது மன்னுறில்
அற்றது பற்றே "

எனவரும் திருவாய்மொழியும்,

" பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது, பின்னது
அற்றோர் உறுவது அறிகென் றருளி "

எனவரும் மணிமேகலை யடிகளும் வலியுறுத்துகின்றன. இதனைக் கம்பர் "பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கத் துறப்பெனுந் தெப்பமே துணை " எனக் கூறினர். இவ்வாறே வள்ளுவரும் பிறவிக்கடலைக் கடப்பதற்கு இன்றியமையாத்

துணை துறவு என்பதனை 'துறவு' என்னும் அதிகாரத்தால் விளக்கினர்.

"பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு"

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்"

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்"

என்னுங் குறள்களினல் பற்றினல் பிறப்பு ஆவதையும் துறவினல் பிறப்பு நீங்குவதையுங் கூறியமை காண்க.

"ஆர்வவே ரரிந்தச் சணந்தி போய்
வீரன் ருணிழல் விளங்க நோற்றபின்
மாரி மொக்குளின் மாய்ந்து விண்டொடிச்
சோர்வில் கொள்கையான் ஜேற்ற நீங்கினன்"

எனவரும் சிந்தாமணியால் அச்சணந்தி என்போன் ஆசையென்கின்ற பிறவிவேரை யரிந்து வீரன்தாள் நிழலை நோற்றபின், அக்கொள்கையான் விண்டொழ திருமேனியுடன் மறைந்து பிறவி நீங்கினன் என்னும் தவத்தினல் பிறவி நீங்கிய தன்மை ஈண்டு அறியத்தக்கது.

இன்னும் சக்கரவர்த்தியானவர், ஆன்மாவானது பிறவியென்னுஞ் சிறையினின்றும் பிரிந்துசெல்வதற்குத் துறத்தலேயன்றி அத்துறவினை மேற்கொள்ளுதலே நன்று, அதுவே இருணீக்கி இன்பமடைதற்கு இயைந்த நெறி எனக் கருதுகின்ற தெளிந்த அறிவும் வேண்டும் என்ருர். அது,

"அருஞ்சிறப் பமைவருந் துறவு மவ்வழி
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவு மாய்வரும்
பெருஞ்சிறை யுளவெனிற் பிறவி யென்னுமிவ்
விருஞ்சிறை கடத்தலி னினியது யாவதே"

என்பதாகும். நிலையில்லாதனவாகிய பொருள்களிடத்துள்ள பற்று நீங்கிய துணையானே, அப்பொருள்களை இம்மைக்கண் தேடுதலானும் காத்தலானும் இழத்தலானும் வருவனவும், மறுமைக்கட்பாவத்தான் வருவனவுமாய இருவகைத் துன்பங்களும் நீங்கி இன்பமெய்தலாம். ஆகையினல் பொருள்களிடத்துள்ள பற்றினை விடுதல் வேண்டும் என்பதுபற்றி "அருஞ்சிறப் பமைவருந் துறவும்" என்ருர். இவ்வாறே வள்ளுவரும்,

"யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்"

என்று பொருட்பற்றைவிடல் வேண்டுமெனவும் அதுவே இன்பமெனவுங் கூறினர்.

"அருஞ்சிறப்பமைவரும் துறவு" என்பதனுல் அடைதற் கரிதாகிய (வீடுபேற்றை) மோட்சத்தைப் பெறுவதற்குக் காரணமாகிய துறவு என்று துறவினுல் வீடுபேற்றை யடையும் வகையைக் கூறினர். சிறப்பு—மோட்சம் என்னும் பொருளாதலெ,

"சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு"

"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு".

என்னுங் குறள்களிலும் காணலாகும். சிறப்பு என்பதற்கு வீடு என்றும் 'எல்லாப் பொருள்களினும் எல்லாப் பேற்றினுஞ் சிறந்தமையின் வீடு சிறப்பெனப்பட்டது என்றும்' பரிமேலழகர் உரை கூறியமை கவனிக்கற்பால.

வீட்டினைக் கொடுக்கும் துறவு எனக் கம்பர் கூறியது போலவே வள்ளுவரும்,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்"

என்னுங் குறளினல் இருவகைப்பற்றையும் துறந்தார்க்கே வீடுளதென்று கூறினர்.

"தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவும்" என்னும் பொருளைத் திருவள்ளுவனர் 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தாற் கூறினர். தெளிவு-மெய்யுணர்வு. மெய்யுணர்வின்மையினலே பிறப்பு உளதாகும் என்பதனை,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணப் பிறப்பு"

என்னுங் குறளினனும்,

மெய்யுணர்வானது பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும் என்பதனை,

"இருணீங்கி யின்பம பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து".

என்னுங் குறள்களினாலுங் கூறினர். இருள்-பிறப்பு; இன்பம்-வீடு.

கம்பர்,

அருஞ்சிறப் பமைவருந் துறவு மவ்வழி
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவும்

எனத் துறவினை முன்னும் தெளிவினைப் பின்னுங் கூறியது போலவே வள்ளுவரும், 'துறவு' என்னு மதிகாரத்தை முன்னும் 'மெய்யுணர்தல்' என்னு மதிகாரத்தைப் பின்னுங் கூறிய ஒப்புமை இங்குக் கவனிக்கத்தக்கது. இவ்வாறு வள்ளுவரும் கம்பரும் துறவு மெய்யுணர்தல் என்ற முறையிற் கூறினாராயினும் துறவற நெறியே வீட்டினை யடையும் வழி என்னும் தெள்ளுணர்வு பிறந்தாலன்றி துறவினை மேற்கொள்ளுதல் இயலாதாகலின் மெய்யுணர்தல் துறவு என்ற முறையிற் கொள்ளுதல் சாலும்.

ஈண்டுப் பிறவித்துன்பம் நீங்குவதற்கு மெய்யுணர்வும் துறவும் இன்றியமையாதன எனக் கூறியதுபோலவே திருவாய்மொழியிலும்,

"பிறவித் துயரற ஞானத்துள் நின்று
துறவிச் சுடர்விளக்கம் தலைப்பெய்வார்"

எனக் கூறியிருத்தல் கவனிக்கற்பாலது. இன்னும்,

"இழைத்ததீ வினைதனைக் கடக்கு மெண்ணுறத்
தழைத்தபே ரருளுடைத் தவத்தி னாகுமேற்
குழைத்ததோ ரமிர்தினைக் கோடனீக்கிவே
றழைத்ததீ விடத்தினை அருந்த லாவதோ"

என்று, தசரத சக்கரவர்த்தி தான் செய்த தீவினையை நீக்குதல் முதலாய எல்லா நன்மைகளையும் தவத்தினால் எய்தக்கூடியதாயிருக்க, அதனைவிட்டு ஏற்புடைத்தாகாத வேறு தொழில்களைச் செய்ய முயலுதல் அமிர்தத்தினைக் கொள்ளாது நஞ்சினை உட்கொள்ளுவது போலும் எனக் கூறினர். தாம் தாம் விரும்பிய விரும்பிய காரியங்களைப் பெறுதல் தவத்தினால் ஆகும் என்பதனை வள்ளுவர்,

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்"

என்பதனாலும் 'இழைத்த தீவினைதனைக் கடக்கும் ஆற்றல் தவத்தினால் ஆகும்' என்பதனை,

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்"

என்பதனுலுங் கூறினர். தீவினையைக் கடத்தல் தவத்தினல் ஆகும் என்பது இப்பகுதிக்கு,

"அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின் வேருய உடற்கு வருத்தம் வருமென் ருெழியாது தவத்தினைச்செய்ய, பிறப்புப்பிணி மூப்பிறப்புக்களான் அநாதியாகத் துன்ப மெய்தி வருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடுபெறுமாகலின் தவஞ்செய்வாரைத் தங்கருமஞ் செய்வாரென்று எழுதிய பரி மேலழகர் உரையான் விளங்கும்.

இங்கே 'தழைத்த பேரருளுடைத் தவம்' எனத் தவத் திற்கு அருள் இன்றியமையாத குணமாகக் கூறியிருத்தல் போலவே வள்ளுவரும்,

"உற்றநோய் நோன்ற லுயிர்க்குறு கண்செய்யாமை
அற்றே தவத்திற் குரு"

என்னுங் குறளில் உயிர்க்குறுகண் செய்யாமை யாகிய அரு ளுடைமையைத் தவத்தின் வடிவமாகவே கூறியருளினர்.

தவத்தினலே தீவினையைப் போக்குதலை,

"விளக்குப்புக விருண் மாய்ந்தாங் கொருவன்
தவத்தின்முன் னில்லாதாம் பாவம்"

என்னும் நாலடியாராலும் அறியலாகும். இவ்வுண்மை,

'அல்லவை தேய அறம்பெருகும்' எனத் திருக்குறளில் கூறியிருத்தலுங் காண்க. தேய்தல் தன் பகையாகிய அறம் வளர்தலினலே தனக்கு நிலையில்லாமையால் தீவினை மெலிதல்.

"கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழ
னிச்சய மன்றெனில் நெடிது நாளுண்ட
வெச்சிலை நுகருவ தின்ப மாகுமோ"

என்று சக்கரவர்த்தி செல்வம் நிலையில்லாதிருத்தலினலே இதனை விட்டு மறுமையை நாடவேண்டு மென்ருர். இங்கே கூறிய செல்வ நிலையாமையைத் திருவள்ளுவர், "அற்காவியல் பிற்றுச் செல்வம்" எனச் சுருக்கமும் அழகும் பெறக் கூறி னர். ஈண்டு,

"ஒருநாயகமா யோட வுலகுட னுண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்

> பெருநாடு காண விம்மையிலே பிச்சைதாங் கொள்வர்
> திருநாரணன்றாள் காலம்பெறச் சிந்தித் துய்மினோ"

என்னுந் திருவாய்மொழிப்பா நினைவு கூரற் பாலது.

இவ்வாறு செல்வநிலையாமையையும் தவத்தின் மேன்மையையும் கூறிய சக்கரவர்த்தி நற்கதி பெறவேண்டித் தவஞ் செய்வதற்குச் செல்வதற்கு நுங்கருத்து யாது,

> "ஆதலா லிராமனுக் கரசை நல்கி, யிப்
> பேதமைத்தாய் வரும் பிறப்பை நீக்குவான்
> மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணுவேன்
> யாதுநுங் கருத்தென வினைய கூறினன்"

என்று மந்திரிமாரை நோக்கிக் கூறினர். பேதமை—விபரீத உணர்வு. இஃது அவா, வெகுளி முதலாய குணங்களுக்குக் காரணமாதலுடைமையின் பிறப்பிற்குக் காரணமாக்கி "பேதமைத்தாய் வரும்பிறப்பு" எனக் கம்பர் அருளினர். வள்ளுவரும் இவ்வாறே 'பிறப்பென்னும் பேதமை' எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்துக் கூறினர். பேதமையினிலக்கணத்தை,

> "பேதமை யென்பது யாதென வினவின்
> ஓதிய விவற்றை உணராது மயங்கி
> யியற்படு பொருளான் கண்டது மறந்து
> முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளிதல்"

எனவரும் மணிமேகலையால் அறியலாகும்.　　(தொடரும்)

---

## அகப்பாட்டு

[இ. சிவகுருநாதன்—"தமிழ்ச்சேய்"]

அகப்பாட்டு-அகநானூறு. அகநானூறு-பழந்தமிழ் நூல்; அன்புக்காதலரின் இன்பவாழ்வை எடுத்துரைக்கும் இனிய தமிழ் நூல். அதன்கண், யாண்டும் இயற்கை மணம் கமழுகிறது; எங்கணும் இயற்கை அழகு ஒழுகுகிறது; தமிழர் வாழ்வு முறை பொலிகின்றது.

தமிழர்கட்கு, வயல் மணி கொழித்தது; கடல் முத்து வழங்கியது; காடு கொழுத்து நாடு செழித்தது; முகில் தவழ்ந்து மழை பொழிய மலை துணை செய்தது. இங்ஙனம் நானிலமும் தமிழ் நாட்டை மேனிலமாக்கியது. தமிழர் மகிழ்ந்து

வாழ்ந்தனர். அவர்தம் மகிழ்ச்சிப்பொங்கல் அகப்பாட்டின் கண் யாங்கணும் பொங்கி வழிகிறது.

அகப்பாட்டினை இயற்கைக் காட்சி நிலையம் என்கோ? இன்பக் களஞ்சியம் என்கோ? காதற் கடலின் கரை யென் கோ? வாழ்வு முறையின் வைப்பு என்கோ? யாதென்று அறைகுவல்? என்னென்று இயம்புவல்!

அதன் பெருமை பெரிது! பெரிது!! அலைகடலினும் பெரிது! நிலமலையினும் நெடிது! அப்பாட்டுக் காட்டும் ஒரு தொழி லோவியத்தைக் காண்மின்.

### நெய்தல்

நெடுங்கயிறு [1]வலந்த குறுங்கண் ணவ்வலைக்
கடல் [2]பா டழிய வினமீன் முகந்து
துணைபுண ருவகையர் பரத மாக்க
ளிளையரு முதியருங் கிளையுடன் றுவன்றி
[3]யுப்பொய் உமணர் அருந்துறை போக்கு
[4]மொழுகை நோன்பக டொப்பக் குழீஇ
[5]யயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்
பெருங்களந் தொகுத்த உழவர் போல
விரந்தோர் வறுங்கல மல்க வீசிப்
[6]பாடுபல வமைத்துக் [7]கொள்ளை சாற்றி
[8]கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ!

[முடங்கிக் கிடந்த நெடுஞ் சேரலாதன் அக. களிறு 30]

நெய்தல் கடலும் கடல்சார்ந்த இடமும் அல்லவோ! கடலின்கண் வாழ்வார் எவர்? வலைஞர். வலைஞரின் வாழ்க்கை என்னை? மீன் பிடித்தலன்றோ! அவ்வாழ்வை முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரல் எனும் முதுபுலவர் மொழிகிறார். எங்ஙனம் மொழிகிறார்? பாட்டு ஓவியமாகக் காட்டுகிறார். பாட்டாகப் படிமம் எடுத்து விளக்குகிறார்.

அன்பர்களே! இப்பாட்டைக் காணுங்கள். கருதுங்கள். காணக் காணக் கண்குளிரும். கருதக் கருத உள்ளம் உவகை கடந்து மிளிரும்.

---

குறிப்பு:—1. வலந்த-கட்டப்பட்ட. 2. பாடு-பெருமை. 3. உப்பொய்-உப்புச் செலுத்தும். 4. ஒழுகை-வண்டி. 5. அயிர்-மணல். 6. பாடு-கூறு. 7. கொள்ளை-கூட்டமாக. 8. கோடு-கரை.

வலைஞரின் வாழ்வுத் துணை யாது? வலையன்றோ! முன்னர் வலையைக் கூறுகிறார். வலை நெடிய கயிற்றால் கட்டப்பட்ட தாம். குறுகிய கண்ணையுடையதாம். வலைஞர் வலைகொண்டு கடற்கண் புகுகின்றார்கள்; வலை வீசுகிறார்கள். வலையிடை கெண்டை, வரால் முதலிய இனப்பல மீன்கள் நனிப்பல புகுந்தன. வலைகள் மீன்களை வாருவதால் கடலது பெருமை அழிகிறதாம். கடலுக்குப் பெருமை செய்வன மீன்கள் போலும்! என்னே மீனின் மேன்மை! பரிமேலழகர், "நெடுங் கடலுந் தன்னீர்மை குன்றும்" என்னும் குறளுரைக்கண் "தன்னீர்மை குன்றுதலாவது நீர்வாழ் உயிர் பிறவாமையும், மணிமுதலாயின படாமையும்" என்றுரைத்ததும் ஈண்டு அறியற்பாற்று.

அம்மீன்கொண்ட வலையைப் பரதவர் (பரதவர்—வலைஞர்) கரைக்கண் இழுக்கின்றனர். வலையிடை ஒரு மீனுதல், இரு மீனுதல் இருப்பினன்றோ, ஒருவரால் இழுக்க ஒல்லும்! கடல் பெருமை குன்ற வலை பலமீன்களைக் கொண்டதாம். ஆதலின் பலர் கூடுகின்றனர். யார், யார்? இளைஞராம், முதி யராம்; மற்றும் துணையொடு புணர்ந்த உவகையராம்.

அன்பர்களே! கூர்ந்து நோக்குங்கள். வலையிழுக்க எவர் எவர் கூடுகின்றனர்? உற்றாரும் உறவினரும் குழுமுகின்றனர். பரதவருக்கு உவகை ஊட்ட மனைவியரும் உடன்கூடுகின்றனர் போலும். அனைவரும் ஒருங்கே குழீஇ அலைகடலினின்றும் வலைமீன்களை இழுக்கின்றனர்.

இவர்கள் வலையிழுப்பதற்கு ஆசிரியர் ஓர் உவமை கூறு கின்றார். என்னை?

"உப்பொய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பக டொப்ப" உவமையை ஊன்றி உணர்மின். கடற்கரைக்கண் உப்பு விளைகிறதல்லவா? அவ் வுப்பை உமணர் பகடுபூண்ட பண்டிகளில் கொண்டு வருவர். உப்புப் பொதியை மணலில் இழுத்துவரும் பகடு எவ்வளவு ஆற்றலுடையதாய் இருத்தல் வேண்டும். அப்பக டொத்தவ ராம் பரதவர்.

என்னே! நெடுஞ்சேரலின் அறிவுடைமை! நெய்தல் நிலத்தொழிற்கு நெய்தல் நிலத்தொழிலையே கூறும் உவமை யின் உயர்வு!

உப்பு இழுக்கும் பகடொப்பப் பலருங்கூடி வலையைக் கரைக்கண் இழுக்கின்றனர். இழுக்குங்கால் என் செய்கின்

றனர்? அலைகடல் ஒலியும் அவியுமாறு ஒலிக்கின்றனர். பெருஞ்சுமை இழுப்பார் ஆரவாரித்தலை இன்றும் காண்கின்றோமல்லவா!

அங்ஙனம் ஒலிப்ப வாங்கிய மீன்களைக் கரைமணற்கண் குவிக்கின்றனர். கொண்டுவந்து குவித்த மீன்களைப் பரதவர் இரப்பவருக்கு இல்லை யெனாது ஈதல் செய்கின்றனர். இவர்தம் கொடைச்சிறப்புக்குக் கூறும் உவமைச் சிறப்பை உற்றுக் காண்மின்!

" பெருங்களந் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கல மல்கவீசி "

வேளாண் உழவர் வித்திப் பயிரிட்டு, விளைந்த பொருளை, களத்தின்கண் கொண்டுவந்து குவிப்பர்; அவர் வித்தியது ஆயிரமாக விளைந்ததைக் கண்டு கழிபேருவகை கொள்வர்; மகிழ்ச்சி நிகழும் ஞான்று உள்ளம் இனிய இயல்பொடு இருத்தல் இயல்பல்லவா? அம்மகிழ்ச்சி யுள்ளம் அன்பு, அருள், இன்சொல், இரக்கம் முதலிய இன்ப ஊற்றுக்களை இடையறாது சுரக்குமன்றே!

உழவர் மகிழ்ச்சியொடு களத்திருந்த ஞான்று இரவலர் பலர் இரந்து செல்வர். அவ்விரவலர்க்கு இல்லையெனாது ஈத்துவப்பர் உழவர். இவ்வழக்கை இன்றும் கண்டுகொள்ளலாம்.

ஊர்களிலாதல், பிறவிடங்களிலாதல் இருந்து அளிக்கும் ஈகையைச் சுட்டாது, உழவர் களந் தொகுத்த ஈகையைச் சுட்டிய நெடுஞ்சேரலின் நுட்பமதி என்னே! என்னே!! அவர்தம் வியத்தகு அறிவை எக்கண்கொண்டு காண்பல்! எவ்வெழுத்தால் எழுதுவல்!

அப்பெருங் களந் தொகுத்த உழவர் போல வலைஞரும் மீன் வழங்கி மேன்மை யுறுகின்றனர். யாங்ஙனம்? மீன் வேட்ட இரவலர் கடலருகே குவிந்துவந்தனர். வலைஞரைக் கண்டு இரந்தனர். வலைஞர் மீன்பல கொண்ட மகிழ்ச்சியால் அவரது வறியகலம் நிறையுமாறு வழங்கினர்.

இரவலர்க்கு இல்லையெனாது ஈத்துவந்த வலைஞன் பின் என்செய்கிறான்? ஏனை மீன்களைக் கூறுகூறாக வைக்கின்றான். கூட்டம் கூட்டமாகக் கூடுகிறான். "மீனோ மீன்! மீனோ மீன்" என்று கூவி விலைகூறி விற்கின்றான். விலையிட்டு விற்ற வலைஞன் அக்கரைக்கண் துயில்கின்றனனும்.

கடுமழையினும், கொடுவெயிலினும், நெடும்பனியினும் நீர்நின்று தவஞ்செய்யும் நிமலர் போல, இரவும் பகலும் என்

றும்நீர்நின்று மீன்பிடிக்கும் வலைஞர் கடற்கரைக்கண் துயிலுதலும் இயல்பல்லவோ!

ஓவாப் பற்றுடை நற்றமிழ்ச் செல்வரீர்!

இத்தாவா நல்லிசைத் தண்டமிழ்ப் புலவரின் நுண்ணிய மதியை நுனித்து நோக்குமின்! ஒரு தொழிற்கூற்றை ஓவியமாக வரைந்துகாட்டும் வாலறிவை வாயார வாழ்த்துமின்! நெஞ்சார நினைமின். பண்டைப்பாவலர் பெருமை பகரற் பாற்றோ! பழந்தமிழ் நூலின் விழுப்பம் எழுத்தால் எழுதல் எளிதோ!

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்தையடிகள் வித்துவான் இரா. சிவ சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### குறிஞ்சி

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் வாராமையால் நலனழிந்து வேறுபாடுற்ற தலைவியை நற்றாயும் செவிலியும் கண்டு இஃதெதனாலாயிற்றோ எனக் கட்டுவிச்சியை வினவிக் குறிகேட்ட போது, தலைவியின் வேறுபாட்டிற்குக் காரணம் பிறிதோர் தெய்வம் என்று கட்டுவிச்சி கூற, அதனைக்கேட்டு "அஃதன்று; யானறிவன் உண்மையை", எனத் தோழி அறத்தொடு நிற்றல்.

இதனை, வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் பிரிவு நீட்டித்த வழித் தலைவி தன் தோழி வினவாக்காலத்துப் புலந்து கூறியது என்றும் கூறுவர்.

இச்செய்யுளை முற்கூறிய துறைக்கு உதாரணமாக்குதலே பொருந்தும்; பின் கூறியதுமாகும்.

வெள்ளி வீதியார் பாடியது

26. அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்றீது மொழியினும்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே;

# மதிப்புரை

## அகநூல்

அக நூலாவது மனிதனுடைய வாழ்க்கையைப்பற்றிக் கூறும் நூல். இவ்வாழ்க்கைக்கு முக்கிய சாதனம் மனமாதலால் இந்நூல் அக நூல் எனப்பட்டது.

நூல்களின் பயன் கற்போருக்கு அறிவைக்கொடுத்து அவர்களுடைய ஆற்றலை ஏற்றுதலாம். அகநூலானது வாழ்க்கைத் துறைக்கு வேண்டிய அறிவைக் கொடுத்து நல் வாழ்க்கைக்கு வேண்டிய ஆற்றலை ஏற்றுதற்குத் துணையாகத்தக்கது. மனிதன் தனிமையாக வாழாமற் பிறரோடு கலந்து வாழ வேண்டியிருத்தலால் தனக்கும் பிறருக்கும் நன்மை யுண்டாக வாழ்தலே நல்வாழ்க்கை யெனப்படும். அங்ஙனம் ஒருவன் நல்லவனாக வாழவேண்டுமாயின் அவன் தன்னுடைய தன்மையையும் பிறருடைய தன்மையையும் அறிதல் அவசியம். இவற்றைப் பிழையின்றி அறிதற்கு அக நூலறிவு வேண்டியது.

அக நூலுணர்ச்சியின்மையால் சிலர் மனிதருடைய தன்மையிலுள்ள வேறுபாடுகளைச் சிந்தியாமல் மற்றவர்களுந் தங்களைப் போன்றவர்கள் என்று கருதி இடர்ப்படுகின்றனர். சீவனத் தொழிலை நிச்சயித்தற்கும் அக நூல் துணைபுரியும். அக நூல் முறையினாலே மனிதருடைய ஆற்றல்களை ஒருவாறு அளவிடலாம். அளந்தபின்பு அந்தந்த ஆற்றலுக்குத் தக்க தொழிலைத் துணிந்து கொள்ளலாம் அப்படித் துணிந்து கொண்டால் ஒவ்வொருவனும் தன் தன் தொழிலைச் சோர்வின்றிச் செய்வான்; தொழிலினாற் பெரும்பலனையும் பெறுவான். அநேகர் தமது ஆற்றலுக்குத் தகாத தொழிலை மேற்கொண்டு துன்பப்படுகின்றனர்.

எல்லாவற்றிலும் மேலானதாய் அக நூலின் முக்கிய பயனாயுள்ளது மனிதன் தன்னை அறிதலாம். சந்திர சூரியர்களின் தன்மையையும் காற்று மழைகளின் காரணங்களையும் முக்கோண விருத்தங்களின் இயல்பையும், அனல் ஒளி மின்களின் தர்மங்களையும், சடப்பொருள்களின் தோற்றத்தையும், புல் பூண்டு விலங்கு பறவை முதலியவற்றின் சுபாவங்களையும் அறிதலினும்பார்க்கத் தன்னுடைய தன்மைகளை அறிதல் மனிதனுக்கு மிக முக்கியமானது. எமது எண்ணங்கள் இச்சைகள் சுவைகள் வேதனைகள் எப்படியுண்டாகின் என்றன பதை அறிதல் எமக்குப் பெரும் பயனைத் தருதலு

மன்றி மிகத் திருப்திகரமாயு மிருக்கும். நாம் எண்ணத்தகாத வற்றை எண்ணுதற்கும் 'விரும்பத்தகாதவற்றை விரும்புத ற்கும் செய்யத்தகாதவற்றைச் செய்தற்கும் காரணமென்ன என்பதை நாம் அறிதல் அவசியம். ஆதலால்ஒவ்வொருவரும் அகநூலைக் கற்க வேண்டியது அத்தியாவசியமாம்.

இத்தகைய நூல் தமிழில் இதுகாறும் இல்லாக் குறையை நீக்கக்கருதி இந்நாள் வளர்ச்சிக் கேற்றவாறு ஆங்கிலக் கொள்கைகளைத் தழுவி இந்நூல் எளிய வசனநடையில் ஸ்ரீமான் சு. சிவபாத சுந்தரம் பிள்ளையவர்களால் எழுதி அச்சிடப்பட்டுள்ளது. ஆசிரியர்க்கு வேண்டும் போதனுமுறை கள் ஆங்காங்கே காட்டப்பட்டிருத்தலால் இந்நூல் அவர் களுக்கு முக்கியமாக வேண்டற் பாலது. இலங்கை அரசின ரால் இது ஆசிரியன்மார்களுக்குப் பாடபுத்தகமாக நிய மிக்கப் பட்டுளது. இதன் விலை ரூ.1—6—0. வேண்டுவோர் எமக்கெழுதிப் பெறலாம்.

---

## அண்ணுமலைப் பல்கலைக் கழக அறிவிப்பு

கல்லூரிக் கல்விக்குப் பயன் படும் வகையில் பல்கலைக் கழகத்தார் வகுத்துள்ள திட்டப்படி "பொருள் நூல்" (Physics) ஒன்றைத் தமிழில் இயற்றித் தருபவர்களில் சிறந்தவருக்கு ரூ. 1000 பரிசு கொடுக்கப்படும். திட்டம் பல்கலைக் கழக நிலையத்திற் கிடைக்கும்.

பரிசு கொடுக்கும் வகையில், தொகை முழுவதையும் கொடுப் பதோ, குறைவாகக் கொடுப்பதோ கொடுக்காமலே நிறுத்தி விடுவதோ ஆகிய இவையெல்லாம் பல்கலைக் கழகச் செயலாளர் குழு வைப் பொறுத்தது. அக்குழுவினர் முடிபு முடிந்த முடிபாகும். ஏற்றுக் கொள்ளப்பட்ட நூல் பல்கலைக் கழகத்தாரின் உரிமைக்குள் ளாகிவிடும்.

நூல் 1938-ம் ஆண்டு ஜுலை 31-ம் நாளுக்குள் பல்கலைக் கழக ரெஜிஸ்ட்ராருக்கு ரெஜிஸ்டர் செய்து அனுப்பப்படவேண்டும். நூலெ ழுதுவோர் அதன்கண் தம் பெயரை எழுதக்கூடாது; புனை பெய ரொன்றையே எழுதவேண்டும். முத்திரையிட்ட ஓர் உறையுள் அப்புனைபெயரையும், இயற் பெயரையும் முகவரிக் குறிப்பு விவரங்களை யும் தனிப்பட எழுதியனுப்பவேண்டும்.

---

## கோ - பசுப்போது, தெய்வப் பசு, (மண்ணுலகப் பசு), ஆண், பெண் இருவகைப் பசு, பசுப்போது

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] மேற்கண்டபடி, கோ=பசுவென்பதன் அமைதிக்குப் பொருந்தி, ஆவென்னும் விலங்கின் பெண் பொதுவுட் சிறந்தது, காட்டின் ஆவினமாகிய மரையென்றும், அக்காட்டாவினமாகிய மரையினும் சிறந்தது நாட்டாவினத்தினுள் கீழதாகிய காரா வென்னும் பெண் எருமை யென்றும், அக்காரா வென்னும் நாட்டாவினத்தி னிழிந்த பெண் எருமையினும் சிறந்தது நாட்டாவினத்துள் உயர்ந்த சேதா வென்னும் பசுவென்றும் கொண்ட முறைப்படியே இம்மண்ணுலகப் பசுவினும் சிறந்தது விண்ணுலகப் பசுவானதால், அவ்விண்ணுலகப் பசுக்களென மண்ணுலகத்து மக்கட் சுட்டான் மதிக்கப்பட்டு, மண்ணுலகக் கீழ்த்திசைக் காவலனுயும், மருதநிலத்துக் கடவுளாயும், விண்ணுலகத் ததிபனுயுமுள்ள தேவேந்திரனுக் குரிமையாக விண்ணுலகப் பசுக்கள் என்னப்படும், நந்தை, பத்திரை, சுரபி, சுசீலே, சுமனே என்னும் ஐந்தும் இத்தகைய மேம்பாட்டைக்கோத்து, நிற்பதாயுள்ள மரபினல், கோ=தெய்வப் பசுவெனவும், ஆண், பெண் இருவகையும், பசு, ஆன் என்னப்படுவதன்றிப் பொருளமைதியும் பொருந்தி நிற்றலின், கோ=பசுப்பொதுவெனவும்கூறல் ஆயிற்று. [இவற்றுள் முன்னேயது சிறப்பு, பின்னேயது பொது].

## கோ - கோமேத யாகம், கோமகம்

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] மண்ணுலகமாந்தர் விண்ணுலக போகப்பேறு காரணமாக இயற்றக்கருதிக் கோவைக் கொண்டே இயற்றும் வேள்வியாதலினுலும், மண்ணவர் ஊட்டும் அவியை விண்ணவர் கொள்ளவும், விண்ணவர் நாட்டின்பத்தை மண்ணவர் கொள்ளவும் கோத்துப் பொருத்துமோர் நற்செயலென்னப்படுதலானும், கோ=கோமகம் என்னல் ஆயிற்று.

## கோ - (தேவலோகம்), விண்ணுலகு

பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] புலப்படத்தக்க விதத்து விண்ணென்னும் ஆகாயம் மண்ணிலிருந்தும் எவ்வளவோ அகன்று நின்று

லும் மண்ணுலகத்தாரும் இன்பநலங்களெல்லாம் விண்ணே ஆதாரப்பட்டுக் கோத்து நின்று பொருந்தல் போலவே, மண்ணுலகத்தார் போகம் வேண்டிப் புரியும் வேட்கை நிறைவேற்றம் தன்னிடத்ததாகக் கோத்து நிற்றலின், கோ= விண்ணுலகு என்னலாயிற்று.

### கோ - ஐம்பொறி

#### பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படத்தக்க நிலைமையில் பொறிகளைந்தும் ஐம்புலன்களால் உலகத்துள் தனித்தனி ஒவ்வொன்றும் ஆளத்தக்க பொருள்களைக் கோத்து நின்றியங்கலாற், கோ=ஐம்பொறி எனலாயிற்று.

### கோ - மலை

#### பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படக்கூடிய நிலைமையில் தன்னில் அமையும் பொருள்கள் யாவையும் கோத்துக்கொண்டியங்கலால், கோ=மலை என்னல் ஆயிற்று.

### கோ - தாய்

#### பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] தொடப்படத்தக்க நிலைமையில் வயிற்றிற் குழவியாய் இருந்தபொழுது தானே அதுவோவெனக் கண்டறியக் கூடாவிதத்துக் கோத்து நிற்கக் கருப்பங்கொண்டும், பின் பிறந்து வெளிப்பட்டதுமுதல் அதுவோ தானேவென வேற்றுமை காணுவண்ணம் அணைத்துக் கொடுங்கையிற் கோத்து நின்றும் வளர்த்து ஆளாக்கி விட்டவள் தாயே ஆதலின், கோ=தாய் என்னல் ஆயிற்று.

### கோ - மேன்மை

#### பெயர்ச்சொல்

[க்+ஒ=கோ] புலப்படக்கூடிய விதத்தில், கேட்டறிந்த யாவரும் அத்தன்மையுடையவனு மற்றவன், அத்தன்மையுடையவனு மற்றவன் என எங்கும் வினவும் வண்ணம் திக்குத் திக்கு வியப்பை விளைத்துக் கோத்து நிற்கும் குணமே மேலாதலின், கோ=மேன்மை என்று வழங்கல் ஆயிற்று.

## கோ - வச்சிரப்படை

பெயர்ச்சொல்

[க் + ஒ = கோ] தான் ததீசி என்னும் முனிவரன் முதுகெலும்பாய் உடலிற் கோத்து நின்று, வலிமை குன்றாத விருத்திரனுக் காற்றாத விண்ணவரும் இந்திரனும் அத் ததீசி முனிவனிடம், விருத்திரனைக் கொல்லத்தக்க வச்சிரப்படை உண்டாக்குதற்கு உமது முதுகெலும்பே தக்கதாதலின் வழங்கியருளல் வேண்டுமென இரந்து நிற்க, அம் மாதவன் 'அன்பிலாரெல்லாந் தமக்குரிய ரன்புடையார், என்பு முரியர் பிறர்க்கு' என்னும் தகைமை தோன்ற அம் முதுகெலும்பை யுதவவே அதனால் உண்டாக்கப் பெற்று, பகைவருடலத்துக் கோத்தொழித்து வெற்றி விளைத்து நின்றதோர் தனிப்படையெனப் புராணங்களிற் கூறியுள்ளதே வயிரப்படை யாதலின், கோ = வச்சிரப்படை என்னலாயிற்று.

## கோ - வாணி

பெயர்ச்சொல்

[க் + ஒ = கோ] தான் ஞானமூர்த்தி என்ன மெய் அறிவுத் தெய்வமாய் நின்று, உண்மை விளக்கியும் அதற்குத் தக்க வாக்கை யுதவியும், உள்ளம், வாக்கு இரண்டிலும் கோத்து நின்று காத்தருள்பவளும், தைத்திரியோபநிடதத்தில் வாக்பவகூட மென்னும் கண்டத்தின் மேலதாகிய முகத்தில் சாவித்திரி எனவும், காமாலய கூடமாகிய உடம்பில் காயத்திரி யெனவும், சத்திகூடமென்னும் உள்நிலையில் சரசுவதி எனவும் கலந்து கோத்து நின்று விளங்குபவளே வாணியென ஏற்படுதலின், கோ = வாணி எனலாயிற்று.

## கோ - வெளிச்சம், ஒளி

பெயர்ச்சொல்

[க் + ஒ = கோ] உலகத்துள் சந்திரன், சூரியன், அக்கினி யென்னும் வெங்கதிர், தண் கதிர் கனலாகிய முச்சுடர்களுள் ஒன்றின் ஒளியாய்ப் புலப்படத்தக்க விதத்தில் உருக்கொண்டெழுந்து உயிர்ப்பொருள்களின் கண்ணொளியுட் கோத்து நின்று துணைப்பட்டு உலகப்பொருளை விளக்கி நிற்கும் பண்பே வெளிச்சம் எனப்படுதலின் கோ = வெளிச்சம் என வழங்கலாயிற்று.

கோ வென்பது நிலைமை தெரியாத மருணிலை யிரக்கப் பொருண்மை இடைச்சொல்லாய் நிகழுங்கால் கோ வென்ப தற்கு அதுதானோ வேறொன்றோ வென்னும் குறிப்புநிலைய றிதன்க.

## சோ - அரண், அரணுறுப்புக்களாகிய சுவர், மதில்

### பெயர்ச்சொல்

[ச்+உ+அ+உ=சுவவு=சுவ=சோ] தன்னிலமைந்த ஒலியைத் தனதோ வேறனதோவென ஐயமுற எதிரொலி எழுப்பத் தக்கதும், தன்னகத் தமைந்த குளிர்ச்சி நயமுத லிய நலங்களில் வேற்று நிலையார் சாராதபடிக்குத் தடுக்கத்தக் கது மாகிய நடுக்கொண்டுறுதலும் உடையதுமென அமைத லின்; சோ=அரண், அரணுறுப்பாகிய மதில் என அமைந்தது.

## சோ - உமையவள், சத்தி

### பெயர்ச்சொல்

[ச்+ஒ=சோ] ச்—உண்ணிலை நலமாகிய வலிமை— ஒ=இசைத்து நிற்கும் ஓர் இறைவி என அமைதலின் சோ= சத்தி - உமையவள் எனலாயிற்று.

## சோ - சோபுரி என்னும் வாணாசுரன் நகரம்

### பெயர்ச்சொல்

[ச்+உ+அ+உ=சுவவு=சுவ=சோ] மேற்கூறிய சோ =அரண் என்னும் அமைதிப்படிக்கே, நல்லரணியல் வாய்ப் பும் வேற்றுநிலைப் பகைவரணுகாவண்ணம் ஒழித்து நிற்பதற்கு அழிப்புடைக் கடவுளாகிய உருத்திரன் காப்பும் கொண்டதே வாணாசுரன் நகரமென்னப் புராணங்கள் நன்கு விளக்குகின் றனவாதலால், சோ=சோபுரி யென்னும் வாணாசுர நகரமென லாயிற்று. 'இலங்கையிலாதவ னைங்கரன்மோடி யெரிசுரத் தோன், இலங்கையிலாத மலையான வீசனிரிய வெம்போர், இலங்கையிலாதபடி வாணனைச் செற்றவென் னரங்கன், இலங் கையிலாதவன் போகக் கண்டான் என்னிதயத்தனே' என் னும் திருவரங்கத் தந்தாதிச் செய்யுளால், சோபுரிக்கோட்டை உருத்திரன் காவலுக்குள் இருந்தமை உணர்க. சோபுரியைச் சோணிதபுரமெனவுங் கூறுவர். வாணாசுரன்=மெய்ப்பொருள் அறிவற்றுப் பொருள் வேட்கை மயக்கங்கொண்டு, நான்

என்னு மயக்க வாழ்க்கையைக் கொண்டிருக்கும் நிலையில், சிவனுக்கு அன்பு பூண்டொழுகும் சிவபத்தியை யுடையவன். அப்பத்திப் பயன் அச்சிவபெருமானும், ஐங்கரன், வீரபத்திரன் முதலியோர் காவல் செய்ய நிகழும். சோ=சோபுரி என்னும் கோட்டைக்குச் சோணிதபுரம் என்னும் பெயரிருத்தலால், சோணிதம் - இரத்த ஊற்றம் என அமைதலின் அக்கோட்டையே தேகமாயும் அதை முற்கூறிய சிவபெருமான், ஐங்கரன் முதலியோர் காவல் செய்திருக்க வுள்ளதென்பது சிவனருள் வரத்தாலும் சிவ கவசம் முதலிய மந்திரங்களாலும், காப்புச் செய்யப்பட்டிருந்த தென்றும், இத்தகைய தேகமென்னும் கோட்டைக் காவலைத் திருமால் வென்றனர் என்பது எவ்வளவு வரமும் வலியும் பெற்றிருந்தாலும் அகங்காரமும் மகாரமும் இருந்தால் எவ்வலியும் ஒழிந்து கெடுமென்றும், பத்தி கன்மத்தை அதிகரிக்கச் செய்து பதவிக்கேற்றவியலும், நிரகங்கார ஞானமே முத்தியாமென்பது, வாணசுரன் எண்ணிறந்த கைகளைக் கொண்டு சிவகணத் தலைமை பெற்றான் முத்தி சித்திக்கவில்லை யென்றும், ஆகமத்தின் அசம்பவ வகையில் இப்புராணக் கோட்பாட்டெழுச்சி உண்டாயிற்றென்னும் தத்துவநிலை அறியற்பாலது.

சோ - என்பது ஒலிக்குறிப்பிடைச் சொல்லாய்ச் சோவென மழை பெய்தது என்பதில் அவ்வொலிப் பெருக்கத்தெழுச்சி மழையோ அல்லது வேறு இரைச்சலோ என்னும் குறிநிலை கொண்டது.

சோ - என்பது வியப்புக் குறிப்பிடைச்சொல், உண்ணயமாகிய மகிழ்ச்சி ஒருவாறு கருதியபடிக்குள்ளதா வேறு வழியின் எழுந்ததா வென்னும் வியப்புக்குறி நிலைகொள்வது.

## தோ - நாயழைக்

## குறிப்புணர்த்தும் ஓரிடைச் சொல்

[த் + அ + உ = தோ = த் + ஊ + அ + உ = தூவவு = தோ]
த் - தனது தோற்றத்தை, அ - தொலையிற் காணத்தக்க ஓர் நிலையதாகவோ, உ - வேறு நிலைபதாகவோ கொண்டு நிற்கும் ஒன்றே வா எனவும், தூவுபொருளை உட்கொண்டு உயிர் வளரும் தன்மைத்தாகிய 'அலையுயிர்ப் பொருளே வா' எனலின், தோ = நாயழைப்பு - என அமைந்தது.

### நோ - கெடு

வினைச்சொல் - ஏவல்

[ந்+அ+உ=நோ] ஆன்மாவின் மெய்த்திறம் அது தானோ, வேறோ என வெழும் ஐயுறவே கேட்டுக்கு வித்தாகலின், நோ=கெடு, எனல் ஆயிற்று.

### நோ - கலங்கு, துக்கி

வினைச்சொல் - ஏவல்

[ந்+ஓ=நோ] கெடாத இன்பம் ஆன்மாவின் மெய்த்திறமேயாதலின், அது அந்நிலையதா அல்லது வேற்று நிலையதாவென ஐயுறுவதே இன்ப நிலையிலிருந்தும் கலங்குவதாதலின் நோ=துன்புறு எனல் ஆயிற்று.

### நோ - துன்புறு

வினைச்சொல் - ஏவல்

[ந்+ஓ=நோ] ஆன்மநிலைக்குரிய தேற்றமாகிய இன்பத்தை விட்டு, அது அதுவோ, மற்றதோவெனத் தயங்குவதே துன்பமாதலின், நோ=துன்புறு என்னல் ஆயிற்று.

### நோ - நோவுறு

வினைச்சொல் - ஏவல்

[ந்+ஓ=நோ] ஆன்மநிலைத்தேற்றமே மகிழ்ச்சியும் பிணியின்மையுமாயிருக்க அதனைவிட்டு ஒன்றைப்பற்றி அதுவோ வேறொன்றோவென நிலைகுலைவதில் மனப்பிணியும், உடற்பிணியுமே பொருந்துமாதலின், நோ=பிணிகொள், நோவுறு எனல் ஆயிற்று.

### நோ - வலுக்குறை, பலவீனங்கோள், மனந்தளர்

வினைச்சொல் - ஏவல்

[ந்+ஓ=நோ] ஆன்மநிலைக்குரிய உறுதி, தேற்றம், மகிழ்ச்சி, மனவலி முதலியனவை நிலைகுலைய ஒன்றைக் குறித்திதுவோ வேறோவெனக் கலங்கிக் கவலித்துழல்வதிற் காணத்தக்கது தளர்ச்சியே ஆதலின், நோ=வலுக்குறை, பலவீனப்படு, மனந்தளர் எனலாயிற்று.

## நோ - இன்மை, பாழ்

பெயர்ச்சொல்

[ந் + ஒ = நோ] ஆன்மாவுக்காவதாகிய உண்மை நிலை மேற்கொண்டொழுகும் முறைமையை விட்டொழிந்து ஒவினுற் கிட்டும் பலன் ஒன்றும் இல்லையெனவே தீருமாதலின், ஒ=இன்மையெனல் ஆயிற்று.

## நோ - சிதைவு

பெயர்ச்சொல்

[ந் + ஒ = நோ]'ஆன்மீக நலமாகிய இன்பத்தையோவில் விளைவது சிதைவேயாதலின் நோ என்பது சிதைவின் பெயராம் அமைதி பெற்றது,

## நோ - துயர், துக்கம்

பெயர்ச்சொல்

[ந் + ஒ = நோ] ஆன்மீக நலத்துக்காவதை விட்டொழிந்து வேறு நிலைகளிலாளுல் விளைவனவெல்லாம் அடுத் தடுத்துத் துக்கமேயன்றி வேறொன்று மில்லையாதலின், நோ = துயர், துக்கம் என்னல் ஆயிற்று.

## நோ - துன்பம் *

பெயர்ச்சொல்

[ந் + ஒ = நோ] ஆன்மாவுக்குரிய தற்சுட்டாய் நிகழும் நன்னிலை விட்டொழிந்து பொருந்தும் மற்றெல்லா வினைகளும் வருத்தமும் அழிவும் உண்டாக்கத்தக்கவைகளே யாதலின், நோ = துன்பம் எனலாயிற்று.

## நோ - தளர்ச்சி, மெலிவு

பெயர்ச்சொல்

[ந் + ஒ = நோ] ஆன்மாவின் நிலைகண்டு கவலையை நீக்கித் திடப்படும் தன்மை ஒழிந்து படப்படத் தீராத்துயரம் தரும் தொழிற்பாட்டுப் பெருங்கவலைக் காளாகித் தவித்துழல்வது மெலிவே யாதலின், நோ = மெலிவு என்னல் ஆயிற்று

---

* அயர்வொடு நொசிவே நோவே.

— சூ - நிகண்டு.

## நோ - பிணி, (வியாதி)

பெயர்ச்சொல்

[ந்+ஒ=நோ] மேற்கூறிய வண்ணம் உயிர்க்குறுதி நாடிக்கொள்வதை ஒவி உடலுக்குப்பாடுபட்டுச் சுழன்று திரிவதில் மனப்பிணியும் உடம்புப்பிணியுமே கூடுமாதலின், நோ=பிணி, வியாதி எனல் ஆயிற்று.

## போ - ஏகு

வினைச்சொல் - ஏவல்

[ப்+உகு+அ=புக=போ] பகரம் - மேற்பொதிவை, உக - சிந்துக - விலக, ஒழிக்க - புகுந்து, கடந்து, கழித்தொதுக்குக—தம்மிற் கவிந்து சூழ்ந்து நிற்கும் இடவெளிக்குட் புகுந்து சென்று புறத்துக் கழித்தொதுக்குதலே போதல் எனவும், மேற்பரந்தும் உள்ளகத்தும் புறத்தும் கவிந்து ஒத்தும் இருக்கவும் வளரவும் இடங்கொடுத்து நிற்கும் ஆகாய வெளிக்குள் நுழைந்து சிறிதுசிறிதாகக் கழித்தொதுக்குதலே போதலாதலின், போ=ஏகு எனலாயிற்று.

## போ - சேல்

வினைச்சொல் - ஏவல்

[ப்+அ—உ+உ+அ=போ] மேற்பொதிவாகிய ஆகாயத்தினுள் எதிராவதை அங்கதாக்கி நடத்தலே செல்லுதலாதலின் போ=செல் எனலாயிற்று. இவ்வாறு செல்லுகை மேற்செல்=உயரப்போ, கீழ்ச்செல்=பள்ளம்போ, நடுச்செல் ஒதுங்காது நேரேசெல் எனப் பலவகைப் போக்குகட்குமாம்.

## போ - அகல், விலகிப் போ

வினைச்சொல் - ஏவல்

[ப்+ஒ=போ] முற்செல்வோனைப் பிற்செல் போ—உள்ளில்போக எண்ணின இடத்தை அங்காக்கிக்கொண்டு கழித்தலே அகல்—என அமைதலின், போ=அகல், விலகிச் செல் எனலாயிற்று.